ஸ்ரீமத்

# கம்ப ராமாயணம்

## அயோத்தியா காண்டம்

[பதவுரை விளக்கவுரை முதலியவற்றுடன்]

## இரண்டாம் பகுதி



மகாமகோபாத்தியாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

திருவான்மியூர் :: சென்னை-41

1972

உ

ஸ்ரீமத்

# கம்பராமாயணம்

## அயோத்தியா காண்டம்

[பதவுரை விளக்கவுரை முதலியவற்றுடன்]

இரண்டாம் பகுதி



மகாமகோபாத்தியாய
டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்
திருவான்மியூர் : : சென்னை-41

1972

# முன்னுரை

திருவான்மியூரில் அமரர் டாக்டர் மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையரவர்கள் திருப்பெயருடன் விளங்கும் இந்த நூல் நிலையத்தின் சார்பில் ஐயரவர்கள் பல்லாண்டுகளாகச் சேகரித்து வைத்துள்ள ஓலைச்சுவடிகளையும், பிரதி பண்ணி வைத்திருக்கும் கடிதப் பிரதிகளையும், அவ்வப்போது குறித்து வைத்திருக்கும் பலவகைக் குறிப்புக்களையும் பயன்படுத்தித் தமிழ் மொழியை வளம்படுத்தும் வகையில் பல நூல்களை வெளியிட வேண்டும் என்ற எண்ணம் உண்டாகி அதற்குரிய முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. இதுகாறும் வெளிவராத நூல்கள் சில வெளியாகி இருக்கின்றன. சில பழைய நூல்கள் முன்பு வெளியாகியிருந்தும் நல்ல முறையில் குறிப்புரை, ஆராய்ச்சி உரைகளுடன் இந் நூல் நிலையப் பதிப்பாக மலர்ந்துள்ளன.

ஐயரவர்கள் இறுதிக் காலத்தில் கம்ப ராமாயணத்தையும், தேவாரத்தையும் தமக்கே உரிய முறையில் வெளியிட வேண்டும் என்ற ஆர்வத்தை உடையவர்களாக இருந்தார்கள். இந்த நூல் நிலையத்தைத் தொடங்கியபொழுது இதன் அமைச்சராக இருந்தவரும் ஐயரவர்களுடைய புதல்வருமாகிய அமரர் கல்யாண சுந்தரையரவர்கள் கம்பராமாயணப் பதிப்பை இந்நூல் நிலைய வெளியீடாக வெளியிட வேண்டுமென்று வற்புறுத்தி அதற்கு ஆவன செய்தார்கள். பால காண்டமும் அயோத்தியா காண்டமும் குறிப்புரையுடன் முதலில் வெளியாயின.

பாடல்களின் முழுப் பொருளும் தெளிவாக விளங்கும்படி பதவுரை இருந்தால் படிப்பவர்களுக்கு உதவியாக இருக்கும் என்று பல அன்பர்கள் கருதினர். அதன்படி ஆரணிய காண்டம் முதலியவற்றைப் பதவுரை, கருத்துரை, விசேடவுரை முதலியவற்றுடன் வெளியிடும் முயற்சி தொடங்கியது. தக்க புலவர்களைக் கொண்டு விரிவான வகையில் உரை எழுதச் செய்து அந்தக்

காண்டங்களை இந் நூல் நிலையம் வெளியிட்டது. அப்பால் அந்த முறையில் பால காண்டமும் வெளியாயிற்று. இப்போது அயோத்தியா காண்டம் வெளியாகிறது.

சுந்தர காண்டம், அயோத்தியா காண்டங்களைத் தவிர மற்றைக் காண்டங்களை வெளியிடுவதற்கு அரசினருடைய பொருளுதவி கிடைத்தது. அந்த அந்தக் காண்டத்தின் முகவுரையில் அந்த உதவி பற்றிய செய்திகள் காணப்படும்.

அயோத்தியா காண்டம் உரையுடன் ஒரே புத்தகமாக வெளியிட்டால் அளவிற் பெரியதாக இருக்கும் என்ற எண்ணத்தால் இரண்டு தொகுதிகளாக வெளியிடப்படுகிறது. முதல் தொகுதியில் ஆறு படலங்களும், இரண்டாவது தொகுதியில் ஏழு படலங்களும் உள்ளன. காண்டம் முழுவதற்கும் அமைந்த செய்யுள் முதற்குறிப்பகராதி, அரும்பதம் முதலியவற்றின் அகராதி என்னும் இரண்டும் இரண்டாம் தொகுதியில் இணைக்கப்பட்டுள்ளன.

ஐயரவர்கள் தாம் வாழ்ந்த காலத்தில் அவ்வப்போது கம்பராமாயண சம்பந்தமாகப் பல குறிப்புக்களைக் குறித்து வந்தார்கள். பல ஏட்டுச் சுவடிகளைப் பார்த்துப் பாட பேதங்களைக் குறித்து வைத்தார்கள். எப்போதுமே ஏதேனும் தமிழ்ப் பணியில் ஈடுபட்டிருந்த அவர்களுக்குக் கம்ப ராமாயணத்தில் சிந்தை செலுத்திப் பாட நிச்சயம் செய்து குறிப்பு எழுதும் பணியைத் தொடங்கும் வாய்ப்பு உண்டாகவில்லை. பல பல நூல்களைப்பற்றிய குறிப்புக்களைச் சமயம் நேரும்போதெல்லாம் குறித்து வைப்பதும், பாட பேதங்களைக் குறித்து வைப்பதும், ஒப்புமைப் பகுதிகளை எழுதி வைப்பதும் அவர்கள் வழக்கம். ஒரு நூலை ஆராயப் புகும்போது முதன் முதலில் அதற்கு ஒரு அகராதி எழுதி வைத்துக் கொள்ளுவார்கள். பிறகு ஓலைச் சுவடிகளைப் பார்த்துப் பாட பேதங்களையெல்லாம் தொகுப்பார்கள். எந்தப் பாடம் சிறந்தது என்பதை நிர்ணயிக்க அந்த அகராதி துணை புரியும். ஒரு சொல்லை எத்தனை இடங்களில் எந்த எந்தப் பொருளில் கவிஞர் ஆள்கிறார் என்பதை அறிய அந்த அகராதி உதவும். அதன் துணையினால் கவிஞனுடைய சொல்லாட்சியைத் தெரிந்து கொள்ளலாம். சில சொற்களைச் சில கவிஞர்கள் அடுத்தடுத்து ஆள்வார்கள். ஒரே சொல்லைச் சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி பொருள் அமையும்படி அமைப்பார்கள். நூல் முழுவதிலும் உள்ள சொற்களையும் தொடர்களையும்

தொகுத்து அகராதி செய்து வைத்துக்கொண்டு பார்த்தால் இந்த நெறி முறை தெரியவரும்.

ஐயரவர்கள் தாம் பதிப்பிக்காத நூல்களுக்கும் அகராதிகளைச் சித்தம் செய்து வைத்திருந்தார்கள். தேவாரம், திவ்யப் பிரபந்தம், பெரியபுராணம், திருக்கோவையார், திருக்குற்றாலத் தலபுராணம் முதலிய நூல்களில் உள்ள சொற்களையும் கருத்துக்களையும் தொகுத்து அகர வரிசைப்படுத்தி அகராதியைச் சித்தம் செய்து வைத்தார்கள். கம்ப ராமாயணத்தை ஆராயும் வாய்ப்பு நேர்ந் திருந்தால் முதலில் கம்ப ராமாயணம் முழுவதற்கும் ஓர் அகராதி யைத் தொகுத்து வைத்துக்கொண்ட பிறகே அந்த நூலை ஆராயப் புகுந்திருப்பார்கள். தேவாரத்துக்கு அகராதி அமைத்த அவர்கள் கம்பராமாயண அகராதியைத் தொகுக்கவில்லை. பின்பு செய்ய லாம் என்று எண்ணியிருந்தார்கள்.

அவர்களுடைய பதிப்பாகக் கம்பராமாயணம் வெளிவரும் பேற்றைத் தமிழகம் பெற்றிருக்கவில்லை. கம்ப ராமாயணத்துக்குப் பல பதிப்புகள் இருந்தாலும் ஐயரவர்களுடைய பதிப்பு இல்லையே என்ற குறை புலவர் பெருமக்களின் உள்ளத்தினின்றும் என்றும் நீங்காது.

ஐயரவர்கள் குறித்துவைத்திருந்த குறிப்புக்களைப் பயன் படுத்திக்கொள்ளும் வாய்ப்பு இந்தப் பதிப்பினால் ஏற்பட்டது. கம்பராமாயணக் கருப்பொருள் என்ற ஓர் ஏட்டுச்சுவடி இந்த நூல் நிலையத்தில் இருக்கிறது. அதையும் இந்தப் பதிப்புக்கு பயன் படுத்திக் கொண்டோம். ஐயரவர்கள் பதிப்பித்த நூல்களில் அடிக் குறிப்பில் ஒப்புமைப் பகுதியாகக் கம்பராமாயணப் பாடல்களும், பாடற் பகுதிகளும் இருக்கின்றன. அவை பாட நிச்சயம் செய்யவும் பொருளைத் தெரியவும் பயன்பட்டன. இந்த அயோத்தியா காண்டப் பதிப்புக்குப் பயன்பட்டவை:

1. இந்த நூல் நிலையத்தில் உள்ள கம்பராமயண ஓலைச்சுவடிகள் 9
2. கம்பராமாயணக் கையெழுத்துக் கடிதப் பிரதிகள் 2
3. கம்பராமாயணக் கருப்பொருள் சுவடிகள் 2
4. வசனமாக உள்ள சுவடிகள் 2
5. பல அச்சுப் பிரதிகள்

பெருக வழங்கும் பழைய அச்சுப் பிரதிகளில் உள்ள படலப் பெயர்கள் பாடல்களின் எண்கள் ஆகியவை சில மாற்றங்கள் பெற்று இப் பதிப்பில் அமைந்துள்ளன.

வால்மீகி ராமாயணத்திலிருந்து வேறுபடும் இடங்கள் அங்கங்கே குறிக்கப் பெற்றுள்ளன. பாட பேதங்களை அந்த அந்தப் பாடலின் உரையின் பின்னே காணலாம்.

கம்ப ராமாயணத்தைப்பற்றிய சொற்பொழிவுகளும், கம்பன் விழாக்களும், கம்ப ராமாயணப் பட்டிமண்டபங்களும் இப்போது தமிழ் நாடெங்கும் நடைபெறுகின்றன. காரைக்குடியில் பல ஆண்டுகளாக நடைபெற்றுவரும் கம்பன் திருநாள் பெரிய தமிழ்த் திருவிழாவாகவே அமைந்து சிறப்புப் பெற்று விளங்குகிறது. கம்ப ராமாயணத் திறனாய்வு ஓரளவுதான் நடைபெற்றிருக்கிறது. எத்தனையோ வகையாகக் கம்ப ராமாயண ஆராய்ச்சியை நடத்தலாம். வ. வெ. சு. ஐயரவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய நூல் நல்ல முறையில் இந்தக் காப்பியத்தின் திறனாய்வாக அமைந்திருக்கிறது. இந்தக் காப்பியத்தைத் தெலுங்கில் மொழி பெயர்த்திருக்கிறார்கள். வடமொழியில் சில பகுதிகள் வெளியாகியுள்ளன. ஹிந்தி மொழி பெயர்ப்பும் உண்டு.

இருப்பினும் கம்பராமாயணத்தை இன்னும் பல பல கோணங்களில் ஆராய்ந்து பல பல நூல்களை எழுத இடம் உண்டு. டாக்டர் பட்டம் பெறுகிறவர்களில் சிலர் கம்பராமாயண ஆராய்ச்சியில் ஈடுபடுகிறார்கள். கம்பனுடைய காப்பிய நெறியையும், பாத்திரப் படைப்பையும், சொற்பொருட் சுவையையும், அணி வகைகளையும், சுவை விரிவையும், இவைபோன்ற பிறவற்றையும் ஆராய இனிமேல் பல புலவர்கள் முந்துவார்கள் என்றே நம்புகிறோம்.

கம்பராமாயணப் பணியில் ஓரளவு இந்த நூல் நிலைய வெளியீடுகள் துணையாக இருக்கும் என்பது எங்கள் எண்ணம். ஐயரவர்கள் இந்தப் பெருங்காப்பிய ரத்தினத்தைப் பதிப்பித்திருந்தால் எப்படி இருந்திருக்கும்! ஆம்! அந்தப் பதிப்பை இமயமென்று யாவரும் வாழ்த்தியிருப்பார்கள்.

அவர்கள் பெயரால் நிலவும் இந்த நூல் நிலையத்தில் ஏதோ ஒரு வகையில் இந்தப் பதிப்பை வெளியிட முடிந்ததே என்று ஆறுதல் பெறுகிறோம். வெவ்வேறு காண்டங்களுக்கு வெவ்வேறு

புலவர்கள் உரை எழுதினார்கள். இந்தக் காண்டத்துக்குப் புலவர் திரு. கோ. சேஷாத்திரி ஐயரவர்கள் உரை எழுதினார்கள். அவர்களுக்கு இந்த நூல் நிலையத்தின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த நூல் நிலையத்தின் தலைவியாக விளங்கும் ஸ்ரீமதி ருக்மிணி தேவி அம்மையாருக்குக் கம்பராமாயணம் முழுவதும் விரிவுரையுடன் வெளி வரவேண்டுமென்ற ஆவல் மிகுதியாக இருந்தது. அவர்கள் பொருளுதவியும் ஊக்கமும் இந்தப் பணியை நிறைவேற்றத் துணையாக இருந்தன.

இந்த நூல் நிலைய ஆட்சிக் குழுவின் தலைவர் ஸ்ரீ டி. வி. விசுவநாதையரவர்களின் ஆதரவும் தூண்டுதலும் இந்தப் பதிப்பை உருவாக்கப் பெரிதும் காரணமாக இருந்தன. இந்த நூல் நிலையத்தைத் தமிழ் நாட்டின் சுடர்மணி விளக்காக ஆக்க வேண்டும் என்பது அவர்களுடைய வேணவா. தமிழ் மக்களின் ஆதரவும் அரசியலாரின் உதவியும் கிடைத்தால் அவர்கள் அவா நிறைவேறும்.

தமிழ் மக்கள் இந்த நூல் நிலையத்துக்குப் பல வகையில் உதவி செய்யலாம். இதுகாறும் வெளியாகியுள்ள நூல்களை வாங்கி ஆதரவு தரலாம். நூற்றுக்கணக்கான சிறு நூல்கள் இன்னும் ஏட்டுச் சுவடிகளுக்குள் மறைந்து வெளிப்படாமல் இருக்கின்றன. செல்வர்களில் ஒவ்வொருவர் ஒவ்வொரு நூலை வெளியிடப் பொருள் வழங்கி உதவி புரியலாம். நூலகங்கள் இந்த வெளியீடுகளை வாங்கி நலம் செய்யலாம்.

அரிய நூல்கள் பலவற்றைக்கொண்ட பெருங்கருவூலமாகிய இந்த நூல் நிலையத்தில் உள்ள செல்வங்கள் தக்க வகையில் வெளி வருமானால் தமிழகம் பெருமைப்படும் வகையில் தமிழ் மொழியின் இலக்கிய வளம் பெருகும் என்பது திண்ணம்.

திருவான்மியூர்,
20—6—1972

நூல் நிலையத்தார்

# உள்ளுறை

# 7. குகப்படலம்

குகனைப்பற்றிக் கூறும் படலம் என இதன் பொருள் விரியும். இராமபிரான், பிராட்டியோடும், இலக்குவனோடும் கங்கையின் வட கரையில் முனிவர்கள் ஆசிரமத்தில் தங்கியிருந்தபோது, அதனைக் கேள்வியுற்ற குகன் அங்கு வந்து, இராமபிரானைக் கண்டு, அளவளாவி அப்பிரான்பால் மிக்க ஈடுபாடுடையவனாகி, அம்மூவரையும் ஓடத்தில் ஏற்றிக் கங்கையின் தென்கரை சேர்த்துத் தன்னை அடிமையாக ஏற்றுக்கொண்டு, எப்போதும் பிரியாது உடனிருந்து உதவத் திருவுள்ளம் பற்றும்வண்ணம் இராமபிரானை வேண்டுதலும், அவனது அன்பின் ஆழத்தைக் கண்ட இராமபிரான், அவனைத் தோழனாக ஏற்றுக்கொண்டு, அவன் தன்னுடன் வருதல் கூடாதென்றும், அங்கேயே இருந்து தன் கிளைகளைக் காத்தல் அவன் கடமையென்றும், திரும்பி வருங்கால் தப்பாது அவனைச் சந்திப்பதாகவும் கூறி, அவன்பால் விடைகொண்டு மேலே வனத்துட் சென்ற செய்தி இப்படலத்துட் கூறப்படும்.

குகன் இயல்பு

(கலிவிருத்தம்)

647. ஆய காலையி னாயிர மம்பிக்கு
நாய கன்போர்க் குகனெனு நாமத்தான்
தூய கங்கைத் துறைவிடுந் தொன்மையான்
காயும் வில்லினன் கற்றிர டோளினான்.

ஆய காலையின் - (இராமபிரான் விருந்துண்டு மகிழ்ந்திருந்த) அத்தருணத்தில், ஆயிரம் அம்பிக்கு நாயகன் - அளவிறந்த ஓடங்களுக்குத் தலைவனும், தூய கங்கை துறை - தூயதாகிய கங்கை ஆற்றின் துறையில், விடும் தொன்மையான் - (அவ்வோடங்களை) விடும் பழமையான உரிமையுடையவனும், காயும் வில்லினன் - (பகைவரையும் விலங்குகளையும்) அழிக்கும் வில்லைக் கொண்டவனும், கல் திரள் தோளினான் - மலைபோலத் திரண்ட தோள்களை உடையவனும், போர் - போரில் வல்லவனுமான, குகன் எனும் நாமத்தான் - குகன் என்னும் பெயருடைய வேடர் தலைவன்—.

இதுமுதல் ஒன்பது பாடல்கள் ஒரு தொடர்; குகனுடைய இயல்புகளையும் ஆற்றலையும் விரித்துரைத்து, அவன் இராமபிரானைக் காண வந்தான் என்ற செய்தி கூறுவன. 655-ஆம் பாடலில் 'வள்ளலைக் காணவந் தெய்தினான்' என்பதனோடு முடியும். இப்பாட

லுள் 'ஆயிரம்' என்றது அளவிறந்த என்ற பொருளில் வந்தது. ''கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்'' என்று மேலே வருவதும் காண்க. விடுதல் - செலுத்துதல்; ''விடுநதி கடிதென்ருன்'' (683).

(பி - ம்.) 2. பொற்குகனென்னும், குகனென்றுயர்.
3. விடுதொன்மையான், விடுதன்மையான், விடுந்தன்மையான்.
4. வில்லினன், நெஞ்சினன்; கற்றிரள் மேனியான், மேனியன், மெய்யினன். (1)

648. துடிய ஞயினன் றேற்செருப் பார்த்தபேர்
அடிய னற்செறிந் தன்ன நிறத்தினன்
நெடிய தானை நெருங்கலி னீர்முகில்
இடியி னேடெழுந் தாலன்ன வீட்டினன்.

துடியன் - துடி என்னும் பறையை உடையவன்; நாயினன் - பல நாய்களை உடையவன்; தோல் செருப்பு ஆர்த்த பெரு அடியினன் - தோலாலான செருப்பைத் தொடுத்த பெரிய கால்களை உடையவன்; அல் செறிந்த அன்ன நிறத்தினன் - இருள் திணிந்தது போன்ற கருநிறம் உடையவன்; நெடிய தானை நெருக்கலின் - பெரிய சேனை (எப்போதும்) சூழ்ந்திருத்தலால், நீர் முகில் - நீருண்ட மேகமானது, இடியினேடு எழுந்தால் அன்ன ஈட்டினன் - இடியோடு கூடித் திரண்டு வருவது போன்ற தன்மையை உடையவன்.

வேடர்கள், காட்டினூடே செல்லுதற்கேற்றவாறு காலில் எப்போதும் செருப்பு அணிந்திருப்பர். வேட்டை நாய்கள் பல அவர்களுடன் இருக்கும். வேட்டைக்குச் செல்வோர் அவர்களுக்குள்ளே சங்கேதமாகவும், விலங்குகளை இடம் பெயர்த்தற்பொருட்டும் துடியென்னும் பறையினை முழக்குவர். அவர்கள் கூட்டமாக ஆரவாரித்தெழுவது, மேகம் திரண்டு இடியோசையோடு வருதல் போன்றிருக்கும். இவற்றைத் தொகுத்துக் கூறினர்.

(பி - ம்.) 1. துடியினுயினன், துடிய நாவினன்; செருப்பார்ந்த பேர், செருப்பார்ந்ததோர்.
2. அடியனற்சிறந்தன்ன; மிறத்தினன். 1—2. தோற் செருப்பார்கழற், பொடியனற்செறி கண்ணினன் பூந்திரை.
3. நெருக்கலின், நெருக்கினன்; எழுந்தாலென, எழுந்தாலென்ன. (2)

649. கொம்பு துத்தரி கோடதிர் பேரிகை
பம்பை பம்பு படையினன் பல்லவத்
தம்ப னம்பிக்கு நாத னழிகவுள்
தும்பி யீட்டம் புரைகிளர் சுற்றத்தான்.

கொம்பு - ஊது கொம்பும், துத்தரி - சிறு சின்னமும், கோடு - சங்கும், அதிர் பேரிகை - முழங்கும் பேரிகையும், பம்பை - பம்பை

யென்னும் பறையும், பம்பு - செறிந்த, படையினன் - படைத் தொகுதியை உடையவன்; பல்லவத்து அம்பன் - இலைவடிவான அம்புகளை உடையவன்; அம்பிக்கு நாதன் - ஓடங்களுக்குத் தலைவன்; அழிகவுள் - மதம் வடியும் கன்னத்தையுடைய, தும்பி ஈட்டம் புரை - யானைக் கூட்டம் போன்ற, கிளர் சுற்றத்தான் - பொங்கி யெழும் சுற்றத்தாரை உடையவன்.

கொம்பு, துத்தரி, கோடு - ஊது கருவிகள்; பேரிகை, பம்பை - அடிக்கும் தோற்கருவிகள்; துத்தரி - சிறு சின்னம்; இரட்டையாகச் சேர்த்து ஊதப்படுவது என்பர் தக்கயாகப்பரணி உரைகாரர்; கொம்பு விசேட மென்பர் பிறர்; இது, துத்திரி எனவும் வழங்கும். கொம்பும், சங்கும் பல இடங்களில் இணைத்துச் சொல்லப்படும். (முருகு: 120, அடிக்குறிப்பு).

(பி - ம்.) 1. கொம்பு கைத்துடி; தித்துடி, துத்துமி, வெந்துடி; கொட்டுமுறைமையன்.
2. பம்பும் படையினன், பறையினன்; பல்கலம், பல்கலன், பல்சன.
3. அம்பினம் பிக்கு, அம்பு நம்பிக்கு, நம்ப நம்பிக்கு; நாயகனழிகவுட், நாயகனுய்கவுட், ஆழ்கவுட்.
4. புரை கிளை சுற்றினுன், கிளைசுற்றத்தான், கிளைச்சுற்றத்தான், புரைதரு சுற்றத்தான், புரைகின்ற சுற்றத்தான். (3)

650. காழ மிட்ட குறங்கினன் கங்கையின்
ஆழ மிட்ட நெடுமையி னுனரைத்
தாழ விட்டசெந் தோலன் றயங்குறச்
சூழ விட்ட தொடுபுலி வாலினுன்.

காழம் இட்ட குறங்கினன் - சல்லடம் அணிந்த துடைகளை உடையவன்; அரை தாழவிட்ட செம் தோலன் - அரையினின்றும் தொடங்க உடுத்த சிவந்த தோலுடை உடையவன்; தயங்கு உற - (அத் தோல் உடையின்மேல்) விளங்குதலுற, சூழவிட்ட - அரையைச் சுற்றிக் கட்டப்பட்ட, தொடு புலி வாலினன் - (ஒன்றோடொன்று) பிணைக்கப் பெற்ற புலி வாலை உடையவன்; கங்கையின் ஆழம் இட்ட நெடுமையினுன் - கங்கையின் ஆழத்தை அளவிட்டறிந்த பெருமை உடையவன். (ஆழத்தை அளந்தறியத் தக்க நெடிய உருவமுடையவன் என்றலுமாம்.)

காழம் - சல்லடம்; அரைக் காற்சட்டை; காழகம் என்றும் வழங்கும்; இது கரிய நிறமுடையது.

(பி - ம்) 1. வேழமிட்ட; வேலையின்.
2. ஆழவிட்ட; நெடுமையனுமரைத், நெடுமையினுன்றரைத். நெடுமையினுழ்ந்தெனத், நெடுமையினுளெலாம்.
3. தோலன்றயங்கரைச், தோலினன்றங்குறச், தோன்றயங்குறச்.
4. தொடும்புலி வாலினுன், தொடும்புலியாயினுன். (4)

651. பற்றொ டுத்தன பல்கு கவடியன்
கற்றொ டுத்தன போலுங் கழலினன்
அற்றொ டுத்தன்ன குஞ்சியி னாய்கதிர்
நெற்றொ டுத்து நெரிந்த புருவத்தான்.

பல் தொடுத்த அன்ன - பற்களைத் தொடுத்தாற்போன்ற; பல்கு கவடியன் - நிறைந்த பலகறையணிகளைப் பூண்டவன்; கல் தொடுத் தனபோலும் கழலினன் - கற்களை இணைத்துக் கட்டினாற்போன்ற வீரக் கழல் அணிந்தவன்; அல் தொடுத்த அன்ன - இருட் பிழம்புகளை இணைத் தாற் போன்ற, குஞ்சியின் - தலைமயிரிலே, ஆய் கதிர் நெல் தொடுத்து - தேர்ந்தெடுத்த நெற்கதிர்களைச் செருகிக்கொண்டு, நெரிந்த புருவத் தான் - (சினம் தோன்ற) மேலேறிய புருவங்களை உடையவன்.

வேடர்கள் கவடிகளை (சோழி) மாலையாகக் கோத்து உடல் உறுப்புக்களில் அணிதலுண்டு; கவடிகள் பற்களைப் போன்றிருக்கும். அதனைக் கூறுவது முதலடி. பருமனாக இரும்பாற் செய்த வீரக்கழலைக் 'கற்றொடுத்தனபோலும் கழல்' என்றார். மயிர் முடியில் நெற்கதிரைச் செருகிக்கொள்ளுதலும் வேடர் செயல். குஞ்சியன் என்று பாடங் கொண்டு, தலைமயிரை உடையவன், நெற்கதிர் போன்ற புருவம் உடையவன் எனவும் உரைப்பர். தொடுத்தன்ன: தொகுத்தல். பல்குதல் - நிறைதல். வேடர்கள் கவடியணிதல்: "கவடி மெய்க் கலன்கள் பூண்டு" (பெரிய. கண்ணப்ப. 37); "வெய்ய ஊனுணத் தந்தங்கள் மேனியும், கையுங் காலுமொய்த் தன்ன கவடியான்" (திருக்குற்றாலத் தலபுராணம், வேடன் வலம் வந்த சருக்கம்.11).

(பி - ம்.) 1. பற்றொடுத்தன்ன, பற்றொடுத்தெனப்; பல்சூற் கவடியன், பல்பூட் கவடியன், பற்றொடுத்த பலசூற் கவடியன், பலபூண் கவடியன்.
2. கற்றொடுத்தன்ன; கழலினன்.
3. அற்றொடுத்தன, அற்றொடுத்தமர்; குஞ்சியனொளியின், குஞ்சியனொளி யன், குஞ்சியனாய்கதிர், ஆழ்கதிர், ஆள்கதிர், குஞ்சியினொள்கதிர், குஞ்சியினொளியின்.
4. நெற்றொடுத்த, நெற்றெடுத்த, நெற்றெடுத்து; நெரிபுருவத்தினன், நெரித்த புருவத்தான், நிறைந்த புருவத்தான், நெளி புருவத்தினன். (5)

652. பெண்ணை வன்செறும் பிற்பிறங் கிச்செறி
வண்ண வன்மயிர் வார்ந்துயர் முன்கையான்
கண்ண கன்றட மார்பினுங் கல்லினன்
எண்ணெ யுண்ட விருள்புரை மேனியான்.

வன் பெண்ணை செறும்பில் பிறங்கி - வலிய பனஞ் சிறும்பு போல விளங்கி, செறி - அடர்ந்த, வல் மயிர் - கருநிறமுடைய வலிய மயிர்கள்,

வார்ந்து - உயர் - நீண்டு வளர்ந்துள்ள, முன் கையான் - முன் கைகளை உடையவன்; கண் அகல் - இடமகன்ற (பரந்த), மார்பு எனும் கல்லினன் - மார்பு என்கிற பாறையை உடையவன்; எண்ணெய் உண்ட இருள்புரை மேனியான் - எண்ணெய் ஊட்டப்பட்ட இருள் போன்ற (கருநிறம் வாய்ந்த) உடம்பை உடையவன்.

மார்பெனும் கல்: உருவகம்; கற்போன்ற மார்பு என்றபடி. குகனது உடம்பின் கருநிறத்தை, 'அற்செறிந்தன்ன நிறத்தினன்' (648) என முன்னே கூறியவர், அக்கருமை மினுமினுப்புடையது என்பார் 'எண்ணெயுண்ட இருள்புரை மேனி' என்றார். செறும்பு - சிரும்பு; சிலாம்பு எனவும் வழங்கும். பெண்ணை - பனை: வலிய உரோமத்துக்குப் பனஞ் செறும்பு: முருகு. 312 - 3; அகநா. 277 : 7 - 8. இவை முறையே கரடி, பன்றி ஆகியவற்றின் வன்மயிரைக் குறிக்க வந்தன. "பனஞ் செறும் பன்ன பன்மயிர் முன்கை" (பெருங் : 2. 8. 107). கல் - மலையுமாம். "மலையார் மணி மார்பன்" (சீவக : 216).

(பி - ம்.) 2. வண்ண வார்மயிர்; வான்மயிர், வான்றுணை; முன் கையன்.
3. தடமார்பினன், திடமார்பெனும், கொடுமார்பெனும், கொடு மார்பகன்; கல்லினன், கல்வியன்; மு. கண்ணகன்றன்ன போலுங் கழலினன்.
4. எண்ணெய் வெல்லும்; இருள்புனை; மேனியன். (6)

653. கச்சொ டார்த்த கறைக்கதிர் வாளினன்
நச்ச ராவி னடுக்குறு நோக்கினன்
பிச்ச ராமன்ன பேச்சின னிந்திரன்
வச்சி ராயுதம் போலு மருங்கினன்.

கச்சொடு ஆர்த்த - அரைக்கச்சோடு பிணித்த, கறை - குருதிக் கறை படிந்த, கதிர் வாளினன் - ஒளி பொருந்திய வாளை உடையவன்; நஞ்சு அராவின் - நஞ்சுள்ள கொடும் பாம்பு போல, நடுக்கு உறும் நோக்கினன் - (கண்டோர்) நடுங்கத்தக்க பார்வையை உடையவன்; பிச்சர் அன்ன பேச்சினன் - பித்தர் போன்ற (இயைபற்ற) பேச்சுடைய வன்; இந்திரன் வச்சிராயுதம் போலும் மருங்கினன் - இந்திரனது வச்சிராயுதம் போன்ற (உறுதியை உடைய) இடையை உடையவன். ஆம் - உரையசை.

நச்சராவின் நடுக்குறு நோக்கு: "நச்செயிற் றரவி னோக்கின் மன்னரை நடுங்க நோக்கி" (சீவக. 2494).

வச்சிராயுதம் போலு மருங்கு : சிலப். 2 : 48.

(பி - ம்.) 1. கச்சொடொத்த; கனற்கதிர் வாளினன்.
2. நச்சராவு நடுக்குறும்; நோக்கினன்.
3. பிச்சராமென்ன.
4. வச்சிராயுதமன்ன மனத்தினன்; வச்சிரம் புரைகின்ற வலியினன் (7)

654. ஊற்ற மேய்நற வூனொடு மீனுகர்
நாற்ற மேய நகையின் முகத்தினன்
சீற்ற மின்றியுந் தீயெழ நோக்குவான்
கூற்ற மஞ்சக் குமுறுங் குரலினன்.

ஊற்றம் ஏய் - ஊக்கந் தருகின்ற, நறவு - கள்ளையும், ஊனொடு மீன் - ஊனையும் மீனையும், நுகர் - உண்ணுதலால் (உண்டாகிற), நாற்றம் மேய - முடை நாற்றம் மிக்க, நகை இல் முகத்தினன் - விளக்கமில்லாத முகமுடையவன்; சீற்றம் இன்றியும் - கோபம் இல்லாமலேயும், தீ எழ நோக்குவான் - தீப்பொறி பறக்கப் பார்ப்பான்; கூற்றம் அஞ்ச - யமனும் அஞ்சும்படி, குமுறும் குரலினன் - அதிரும் குரலை உடையவன்.

கள்ளுண்போர், அஃது ஊக்கம் தருவதென்பராகலின் 'ஊற்றம் ஏய் நறவு' என்றார். மேய - மேவிய; ஏய எனப் பிரித்துரைத்தலுமாம். நகை - சிரிப்பும் ஆம். கூற்றமும் என உயர்வு சிறப்பும்மை விரித்துரைக்கப்பெற்றது.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

(பி - ம்.) 1. ஊற்றுமொய்நறவு, மொய்ந்நறவு, மென்னறவு, மென்னறை, ஊற்றுமென்றுற, ஊற்றுமென்ன, ஊற்றமேமிக, ஊற்றுமேமிக, ஊற்றுமேனறை, ஊற்று மொண்ணறவு.
2. நாற்றமெய்தி, நாற்றமெய்யன்; முகத்தினன்.
3. சிற்றமன்றியும்.
4. குமிறும். (8)

## இராமன் இருந்த ஆச்சிரம வாயிலைக் குகன் அடைதல்

655. சுற்ற மப்புற நிற்கச் சுடுகணை
விற்று றந்தரை வீக்கிய வாளொழித்
தற்ற நீத்த மனத்தின னன்பினன்
நற்ற வப்பள்ளி வாயிலை நண்ணினன்.

(வள்ளலைக் காணப் பரிவாரங்களுடன் வந்த குகன்), சுற்றம் அப்புறம் நிற்க - பரிவாரத்தார் ஒருபுறமாக நிற்க, (தானும்) சுடுகணை - அழித்தற்குரிய அம்புகளையும், வில் - வில்லையும், துறந்து - நீக்கிவிட்டு, அரை வீக்கிய வாள் ஒழித்து - அரையிற் கச்சோடு கட்டிய வாளையும் அகற்றிவிட்டு (ஆயுதம் ஏதும் இன்றி), அற்றம் நீத்த மனத்தினன் - களங்கமற்ற மனமுடையனாகவும், அன்பினன் - (இராமபிரான்பால்) பேரன்புடையனாகவும், நல் தவம் பள்ளி வாயிலை நண்ணினன் - (இராமபிரான் தங்கியிருந்த) நல்ல தவச் சாலையின் வாயிலைக் குறுகினன்.

முனிவர்கள் தங்கும் தவச்சூழலில், கொலைக்குரிய கருவிகளின்றி அடக்கத்தோடும், மனத் தூய்மையோடும் செல்லவேண்டுமாகலின்,

குகன், ஆரவாரத்துக்கு இடமான பரிவாரங்களையும், சேய்மையில் நிறுத்தி, தன் ஆயுதங்களையும் அகற்றிவிட்டுக் கையுறைப் பொருளோடும், உள்ளன்போடும் இராமபிரான் இருந்த இடத்தை அணுகினான். கணைவில் - கணையும் வில்லும்; உம்மைத் தொகை; சுடுகணை - பழுக்கக் காய்ச்சிய அம்பு என்றலுமாம். தவப்பள்ளி - தவம் செய்தற்குரிய இடம்.

சில பிரதிகளில் இவ்விடத்துக் கீழ்க்காணும் பாடல் ஒன்று உளது:

நின்ருனெஞ்சி னிரம்புறு மன்பால்
இன்றே நின்பணி செய்திட விறைவா
நன்றே வந்தன ஞயடி யேன்யான்
என்றே கூவின னெயினரி னிறையோன்.

'கூவினன்' என இதனுள் வருவது, 'கூவ' என்று தொடங்கும் பாடலோடு தொடர்புக்கேற்றதாயினும், இப்பாடலின் நடையை நோக்கும்போது இதன் தன்மை புலப்படும்.

(பி - ம்.) 1. நிற்கச் சுடுங்கணை, நிற்கத் தொடுகணை, நீக்கிச் சுடுகணை.
2. விற்றுறந்தனன்; வாளொழிந்து, வாளொரீஇ.
4 வாயிலின், வாயலை. (9)

656. சிருங்கி பேர மெனத்திரைக் கங்கையின்
மருங்கு தோன்று நகருறை வாழ்க்கையன்
ஒருங்கு தேனொடு மீனுப காரத்தன்
இருந்த வள்ளலைக் காணவந் தெய்தினன்.

சிருங்கிபேரம் என - சிருங்கிபேரம் என்று (பெயருடையதாய்), திரை கங்கையின் மருங்கு தோன்றும் - அலைகளை உடைய கங்கையின் பக்கத்தில் விளங்கிய, நகர் உறை வாழ்க்கையன் - நகரத்தில் வாழும் வாழ்க்கையை உடையவன் (அவன்), இருந்த வள்ளலை காண- முனிவராச்சிரமத்தில் தங்கி இருந்த இராமபிரானைக் காணும் பொருட்டு, தேனொடு மீன் ஒருங்கு உபகாரத்தன் - தேனையும் மீனையும் ஒருங்கே கையுறையாகக் கொண்டவனாய், வந்து எய்தினன் - வந்து சேர்ந்தான்.

(647) அம்பிக்கு நாயகன், தொன்மையான், வில்லினன், தோளினன், (648) துடியன், நாயினன், அடியன், நிறத்தினன், ஈட்டினன், (649) படையினன், அம்பன், அம்பிக்கு நாதன், சுற்றத்தான், (650) குறங்கினன், நெடுமையினன், தோலன், புலிவாலினன், (651) கவடியன், கழலினன், புருவத்தான், (652) முன்கையான், கல்லினன், மேனியான், (653) வாளினன், நோக்கினன்; பேச்சினன், மருங்கினன், (654) முகத்தினன், நோக்கு

வான், குரலினன், (655) வாழ்க்கையன் (ஆன), (647) குகனெனும் நாமத்தான், (655) வள்ளலைக் காண உபகாரத்தனாய் வந்தெய்தினன் எனக் கூட்டி முடிக்க. அரசன், குரு, தெய்வம் ஆகியோரைக் காணச் செல்லும்போது வெறுங்கையுடன் செல்லலாகாதென்பது விதியாகலின், குகன், தன் கையிற் கிடைத்த தேனையும் ஊனையும் காணிக்கைப் பொருளாகக் கொண்டு, சக்கரவர்த்தி குமாரனைக் காணவந்தான். உபகாரம் - காணிக்கைப் பொருள். குகனை, 'சிருங்கிபேரியர் கோன்' (1048) எனலால் அவன் அந்நகரத்தரசன் என்பது பெறப்படும்.

குகனைப்பற்றி இத்துணை விரிவான வருணனை வான்மீகத்துள் இல்லை. கங்கைக்கரையில் உள்ள சிருங்கிபேரபுரத்து அரசனும் வேடனுமான குகன் என்பவன், சக்கரவர்த்தி குமாரனான இராம பிரான் வந்திருத்தலைக் கேள்வியுற்றுத் தன் சுற்றத்தாருடன் அவனைக் காண வர, அஃதுணர்ந்த இராமபிரான் இலக்குவனோடு எதிர் சென்று அக்குகனைச் சந்தித்தனன் என்று அது கூறுகின்றது.

(பி - ம்) 1. சிருங்கபேரம், சிருங்கிபேரி, சிருங்கிவேரி, சிருங்கவேரி, சிருங்கு பேரம், சிருங்குவேரி, சிரிங்கவேரி, சிரிங்குவேரி, சிரிங்கிபேரி; எனத்திகழ், எனத்திரி, எனத்திருக்.
2. மருங்குதோன்றி; நகருடை வாழ்க்கையான்.
3. மீனுபகாரத்தான், மீனுபகாரத்தின்.
4. இருந்த நாயகற்காண. (10)

## இலக்குவன் குகனை வினவுதல்

657. கூவ முன்ன மிளையோன் குறுகிநீ
யாவன் யாவென வன்பி னிறைஞ்சினன்
தேவ நுங்கழல் சேவிக்க வந்தனென்
நாவ வேட்டுவ னாயடி யேனென்றான்.

(வாயிலை நண்ணிய குகன்), கூவ - (தன் வருகையைத் தெரிவிக்கும் வகையில்) கூப்பிட, (குரல் கேட்டு) முன்னம் இளையோன் குறுகி - முதலில் இலக்குவன் குகனைக் கிட்டி, நீ யாவன் - நீ யார்? யா - வந்த காரியம் என்ன? என - என்று வினவ, அன்பின் இறைஞ்சினன் - (குகன்) அன்போடு வணங்கி, தேவ - ஐயனே, நாவம் வேட்டுவன் - ஓடங்களையுடைய வேடனாகிய நான், நாய் அடியேன் - (நுமக்கு) நாய் போல் அடிமையாக இருப்பவன், நும் கழல் சேவிக்க வந்தனென் - நும் திருவடிகளைச் சேவிக்க (இங்கே) வந்தேன்; என்றான்—.

தாழ்ந்தோர் மிக உயர்ந்தோரைக் காணவந்தவிடத்து, எட்டி நின்றுகொண்டு தம் வருகையைத் தெரிவிக்க, 'சாமீ தண்டம்! சாமீ அடியேன்!' எனக் கூவுதலை இக்காலத்தும் காணலாம். அம்முறையில் குகன் கூவ, அதுகேட்டு இலக்குவன் வெளியே வந்து அவனை விசாரிக்கலானான்; அவனும் தன்னைத் தாழ்வோடு தெரிவித்துக்

கொண்டான். யாவன், யா என்ற வினவுக்கேற்றவாறு இன்னுன், இன்னதற்காக வந்தேன் என விடையிறுத்தான். நண்ணினுன், கூவ என இயைக்க. இறைஞ்சினுன் : முற்றெச்சம்.

(பி - ம்.) 1. கூவா முன்னம், முன்னர், கூவுமுன்ன மிளையோன், கூவமுன்னிளை யோனுங்; குறுகனீ, குறுகிவா.
2. ஆவான்யாரென, ஆவாயாரென, ஆவாய்யாரென, யாவன்யாரென, யாவனியாரென; இறைஞ்சினுன், அன்பிறைஞ்சினுன், அன்றிறைஞ் சினுன்.
3. தேவாநின்கழல், நின்கழற், நீள்கழல்.
4. நாவாய்வேட்டுவன், நாவாயேற்றிடும், நாவாவ்வேடுவன்; நானடி யேன். (11)

இலக்குவன் இராமனுக்குக் குகன் வரவுணர்த்தல்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

658. நிற்றியீண் டென்று புக்கு நெடியவற் றொழுது தம்பி
கொற்றவ நின்னைக் காணக் குறுகின னிமிர்ந்த கூட்டச்
சுற்றமும் தானு முள்ளந் தூயவன் றாயி னல்லன்
எற்றுநீர்க் கங்கை நாவாய்க் கிறைகுக னொருவனென்றான்.

தம்பி - (குகன் கூறியவை கேட்ட) இலக்குவன், ஈண்டு நிற்றி என்று - இங்கே (சற்று) நில் என்று (குகனைச்) சொல்லி, புக்கு - உள்ளே போய், நெடியவன் தொழுது - இராமபிரானை வணங்கி, கொற்றவ - அரசே, உள்ளம் தூயவன் - மனத் தூய்மையானவனும், தாயின் நல்லன் - தாய் போல் அன்புடைய நல்லவனும், எற்றும் நீர் கங்கை - கரையை மோதும் நீர்ப் பெருக்குடைய கங்கையில் (விடப்படுகிற), நாவாய்க்கு இறையவன் - ஓடங்களுக்குத் தலைவனும் (ஆகிய), குகன் ஒருவன் - குகன் என்னும் ஒருவன், நிமிர்ந்த கூட்டம் - பெருங்கூட்ட மான, சுற்றமும் தானும் - பரிவாரங்களும் தானுமாக, நின்னை காண குறுகினன் - தேவரீரைக் காண வந்துள்ளான், என்றான் - என்று தெரிவித்தான்.

குகனைச் சந்தித்து உரையாடும்போதே அவன் தன்மைகளை உய்த்துணர்ந்த இலக்குவன், அவனைக் குறித்து, 'உள்ளம் தூயவன்', 'தாயின் நல்லன்' என அறிவித்தான். தாயின் நல்லன் - தாயினும் நல்லவன் என்றலுமாம்.

(பி - ம்.) 1. நிற்றி யாண்டென்று சென்று; நம்பி.
2. கொற்றவனின்னைக், கொற்றவா நின்னைக்; நிமிர்ந்த கூட்டம், நிம்ருங் கூட்டச், நிரந்த கூட்டச், நிறைந்த கூட்டச், சுற்றச்.
3. தாயினல்லான், நல்லோன்.
4. நாவாய்க் கிறையவன், நாவாயிறையவன். நாவாயேற்றுவான், நாவா நாயகன்; ஒருவன் வந்தான். (12)

### குகன் வந்து இராமனைப் பணிதல்

659. அண்ணலும் விரும்பி யென்பா லழைத்திநீ யவனை யென்னப்
பண்ணவன் வருக வென்றான் பரிவினன் விரைவிற் புக்கான்
கண்ணனைக் கண்ணி னோக்கிக் கனிந்தன னிருண்ட குஞ்சி
மண்ணுறப் பணிந்து மேனி வளைத்துவாய் புதைத்து நின்றான்.

அண்ணலும் - இராமபிரானும், விரும்பி - (குகனைக் காண) விருப்பங்கொண்டு, நீ அவனை என்பால் அழைத்தி என்ன - நீ அவனை என்னிடம் அழைத்து வருக என்று பணிக்க, பண்ணவன் - நற்குணங்கள் அமைந்த இலக்குவன், வருக என்றான்-(குகனை அணுகி) உள்ளே வருக என்றான்; பரிவினன் - அன்பு மிக்கவனான குகன், விரைவில் புக்கான் - விரைவாக உள்ளே போய், கண்ணனை - (யாவர்க்கும்) கண் போன்ற இராமபிரானை, கண்ணின் நோக்கி - தன் இரு கண்களாரக் கண்டு, கனிந்தனன் - மனம் உருகினவனாய், இருண்ட குஞ்சி மண் உற பணிந்து - இருள் போலக் கறுத்த தன் தலைமயிர் தரையிலே பட வணங்கி எழுந்து, மேனி வளைத்து - உடம்பு (நிமிர்தலின்றிக்) குனிந்து, வாய் புதைத்து - (ஒரு கையால்) வாயைப் பொத்திக் கொண்டு, நின்றான் - (தன் பணிவு தோன்ற) நின்றான்.

அண்ணலும் என்ற உம்மை, முன்னே இலக்குவன் குகனை விரும்பினமை குறித்தது; இறந்தது தழுவிய எச்சமாகும். பண்ணவன் - பண்புகள் நிறைந்தவன். புக்கான் : முற்றெச்சம். கண்ணன் - கண்ணழகுடையவன் எனலுமாம். கண்ணின் நோக்கி - (அருள் நிறைந்த) கண்களால் அவன் தன்மையை உணர்ந்து என்றலுமாம். பெரியோர்பால் மரியாதை காட்டவேண்டிய முறையைக் குகன் செயலால் உணரலாம். இராமபிரான் கைகேயிமுன் நின்ற முறையைக் கூறுமிடம் (289) இங்கே நோக்கற் பாலது. கண்ணனை : "தன்னை யாவர்க்குங் கண்ண னென்றே, ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருளுணர்த்தி விட்டான்" (பால. 1145) என்பதும் அதன் விசேடக் குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 1. எம்பாலழைத்தியால், அன்பாலழைத்திநீ; அவனையென்றான், என் பாலவனை நீயழைத்தியென்ப.
2. வருகவென்னப்; பரிவினின், பரிவினில்.
3. கண்ணவன் கண்ணின்; களித்தனனிருண்ட, களித்தனன் சுருண்ட.
4. மேனி வளைந்து, வணங்கி. (13)

### குகனுடைய வணக்கமும் வேண்டுகோளும்

660. இருத்திநீ யென் றெண்ணலோடு மிருந்தில னெல்லை நீத்த
அருத்தியன் றேனு மீனு மமுதினுக் கமைந்த வாகத்
திருத்தினென் கொணர்ந்தே னென்கொ றிருவுள மென்ன வீரன்
விருத்தமா தவரை நோக்கி முறுவலன் விளம்ப லுற்றான்.

(வணங்கி நின்ற குகனை இராமபிரான்), ஈண்டு இருத்தி என்னலோடும் - இங்கே இரு என்று (ஓர் இடத்தைச் சுட்டிக்) கூறவும், இருந்திலன் - உட்காராதவனாய், எல்லை நீத்த அருத்தியன் - அளவு கடந்த அன்போடு, (இராமபிரானை நோக்கி), அமுதினுக்கு அமைந்த ஆக - தேவரீர் அமுது செய்தருளுதற்கேற்றவாறு, தேனும் மீனும் திருத்தினென் கொணர்ந்தேன் - தேனையும் மீனையும் தூயனவாக்கிக் கொண்டு வந்துள்ளேன்; திருவுளம் என்கொல் என்ன - தேவரீர் திருவுளம் யாதோ என்று கூற, வீரன் - இராமபிரான், விருத்தர் மாதவரை நோக்கி - முதியோரான பெருந்தவமுடைய முனிவர்களைப் பார்த்து, முறுவலன் - புன்னகை பூத்தவனாகி, விளம்பல் உற்றான் - சொல்லலானான்.

இராமபிரான் அன்போடு குகனை அமரும்படி கூறினாலும், தவசியர்க்கும் அரச குமாரனுக்கும் சமமாகத் தான் அமர்தல் தகுதியன்று என்று கருதிக் குகன் உட்காரவில்லை. தேனும் மீனும் தவவொழுக்கம் பூண்டுள்ள தான் உண்ணுதற் கேற்றனவல்ல என்பதை உணராமல், அன்பு மேலீட்டால் உண்ணும்படி வேண்டுகின்றானே என்று, பிரான் முனிவர் முகம் நோக்கி முறுவல் பூத்துக் குகனுக்குக் கூறலுற்றான்.

(பி - ம்.) 1. இருத்தி நீ யென்ன லோடும், என்றலோடும், இருக்தி யீண்டென்ற லோடும், இருத்தியாண்டென்றலோடும், இருத்தி யென்றையன் சொல்ல; இருந்தனன்.
2. அருத்தியிற் றேனு மீனும், அருத்தியென்றேனு மீனும், அருத்தியன் றேனு மூனும்; அமுதினுக் கமைவதாகத், அமைந்தவாக்கித், அமுதுக் கென்றமைவதாகத்.
3. திருவுள்ள மென்ன வீரன், திருவுள்ள மென்னத் திரன்.
4. நோக்கி முறுவலின், மேலவன், நோக்கு முறுவலின்; விளம்புகின்றான். (14)

இராமன் கூறுதல்

661. அரியதா முவப்ப வுள்ளத் தன்பினா லமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த வென்றா லமுதினுஞ் சீர்த்த வன்றே
பரிவினிற் றழீஇய வென்னிற் பவித்திர மெம்ம னோர்க்கும்
உரியன வினிதி னாமு முண்டனெ மன்றோ வென்றான்.

அரிய - அருமையானவையாய், தாம் உவப்ப - (பெறுவோர்) தாம் மன மகிழும்படி, உள்ளத்து அன்பினால் அமைந்த - மனத்தின் மெய்யன்பினால் உண்டான, காதல் தெரிதர-பெரு விருப்பம் வெளிப்பட, கொணர்ந்த என்றால் - (காணிக்கையாகக்) கொண்டு வந்தனவானால், அமுதினும் சீர்த்த அன்றே -(அவை) தேவாமிர்தத்தினும் சிறந்தன அன்றோ? பரிவினில் தழீகிய -(அவை) அன்போடு(நம்மால்) ஏற்றுக் கொள்ளப் பெற்றன; என்னின் - அவ்வாறாயின், பவித்திரம் - தூய்மை உடையனவே; எம் அன்னோர்க்கும் உரியன - எம்மைப் போன்ற

இம்முனிவர்க்கும் (உண்ணுதற்கு) உரியனவே; நாமும் இனிதின் உண்டனெம்-நாமும் (அவற்றை) இனிதாக உண்டவர்போல் ஆனோம், என்றான் - என்று கூறினான் இராமபிரான். அன்று, ஓ : அசை.

குகனது உள்ளன்பைக் குறிப்பால் உணர்ந்த இராமபிரான், அவன் கொணர்ந்த பொருள்கள் அப்போது தான் அங்கீகரித்தற்குரியன அல்லவாயினும், அவனது அறியாமை குறித்துச் சிறிது முறுவல் கொண்டு, அவன் மன நிறைவெய்துமாறு அவற்றைப் பாராட்டி அங்கீகரித்துக் கொண்டான்.

(பி - ம்) 1. *அரியதாய்; உவப்பதுள்ளத்து; அன்பினான்; அமைத்த.*
2. *கொணர்ந்தது; சீர்த்ததன்றே, சீர்த்ததன்றோ, சீரிதன்றே, சிறந்தவன்றே,*
3. *பரிவினிற்றழிய, பரிவினிற்றந்த, பரிவினிற்றந்தது, பரிவினுற்றந்தது, பரிவினினிந்தது, பரிவினுற்றழிஇய.*
4. *உரியன வினித, உரிதென வினிதின், உரியன வென்று வாங்கி; உண்டனமெனவுவந்தான்.* (15)

662. சிங்கவே றனைய வீரன் பின்னருஞ் செப்பு வான்யாம்
இங்குறைந் தெறிநீர்க் கங்கை யேறுது நாளை யாணர்ப்
பொங்குநின் சுற்றத் தோடும் போயுவந் தினிது னூரில்
தங்கிநீ நாவா யோடுஞ் சாருதி விடிய லென்றான்.

சிங்கம் ஏறு அனைய வீரன் - ஆண் சிங்கம் போன்ற இராமபிரான், பின்னரும் செப்புவான் - மேலும் சொல்லுகின்றவன், யாம் இங்கு உறைந்து - நாங்கள் (இன்று) இங்கே தங்கி, எறி நீர் கங்கை - அலை யெறியும் நீரையுடைய கங்கையை, நாளை ஏறுதும் - நாளைக் கடப்போம்; நீ—, யாணர் பொங்கும் நின் சுற்றத்தோடும் போய் - அழகு மிக்க உன் பரிவாரங்களுடன் (உன் ஊருக்குப்) போய், உவந்து இனிது உன் ஊரில் தங்கி - மகிழ்ச்சியோடு இனிதாக (இன்று) உன் ஊரில் தங்கி இருந்து, விடியல் - (நாளை) விடியலில், நாவாயோடும் சாருதி -( நாங்கள் ஏறிச் செல்லுதற்கேற்ற) ஓடத்துடன் இங்கே வருக, என்றான்—.

இராமபிரான் தன்னோடு மற்றிருவரையும் உளப்படுத்தி, 'நாங்கள் இன்று இங்கே தங்கி, நாளை விடியலில் கங்கையைக் கடந்து அப்பால் செல்ல நினைக்கின்றோமாதலால், நீ இப்போது உன் பரிவாரங்களுடன் உன் ஊருக்குப் போய் இன்பமாக இருந்து, நாளைக் காலையில் தக்க படகுடன் இங்கே வந்து சேர்க' என்று குகனைப் பணித்தான்.

செப்புவான் : வினையாலணையும் பெயர். யாணர் - அழகு; புது வருவாயும் ஆம்.

(பி - ம்.) 2. *இங்கிருந்த; நாளை யாணர், நாளையின்னே, இதுவே நாளைப்.*
3. *நும் சுற்றத்தோடும்; போயுறைந்தினிதுன்னூரில், போவந்தினிதினூரில்.*
4. *தங்கிய நாவாயோடும், தங்கியே நாவாயோடு, தங்கிநாவாயினோடும்; விடியவென்றான்.* (16)

குகனது அன்பு மொழி

663. கார்குலா நிறத்தான் கூறக் காதலா னுணர்த்து வானிப்
பார்குலாஞ் செல்வ வுன்னை யிங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வ னேனு னின்னலி னிருக்கை நோக்கித்
தீர்கிலே னான தைய செய்குவெ னடிமை யென்றான்.

கார் குலா(வு)ம் நிறத்தான் கூற - மேகம் போலும் (அழகிய) நிறமுடைய இராமபிரான் இவ்வாறு கூற, காதலான் - அன்பு மிக்க குகன், உணர்த்துவான் - (தன் கருத்தைத்) தெரிவிப்பவனாய், இ பார் குலா(வு)ம் செல்வ - இவ்வுலகம் முழுமைக்கும் உரிமை பூண்ட செல்வமுடையீர், உன்னை இங்ஙனம் பார்த்த கண்ணை - நும்மை இந்தக் கோலத்தில் பார்த்த என் கண்களை, ஈர்கிலா(த) - பெயர்த் தெறியாத, கள்வனேன் நான் - கள்வனான நான், இன்னலின் இருக்கை நோக்கி-பலதுன்பங்களுக்கு இடமான எனது இருப்பிடத்தை நோக்கி, தீர்கிலேன் - (நும்மைப் பிரிந்து) செல்ல மாட்டேன்; ஐய - என் ஐயனே, ஆனது அடிமை செய்குவென் - (என்னால்) ஆன அடிமைத் தொழிலை நுமக்குச் செய்துகொண்டு (இங்கேயே) இருப்பேன், என்றான்—.

தவக் கோலத்தில் இராமபிரானைக் கண்ட குகன் தன் மனத்தில் மூண்டெழுந்த துயரத்தால், 'ஐயனே, நும்மைப் பிரிந்து என்னுயிர் சேர்ந்தால் அஃது எனக்கு இன்பந்தருவதன்று; ஆதலால் நுமக்கு என்னால் இயன்ற குற்றேவல்களைச் செய்துகொண்டு இங்கேயே இருக்க விரும்புகின்றேன்' என்றான். 'நான் உண்மை அன்புடைய வனானால், நும்மை இங்ஙனம் கண்டவுடன் அவ்வாறு கண்ட என் கண்களை அகழ்ந்திருக்க வேண்டும்; அது செய்யாததனால் நான் பொய்யனே' என்று தன்னைக் குறைத்துக் கூறுகின்றான். இவற்றால், இராமபிரான் திறத்தில் குகனது ஈடுபாடு நன்கு புலனாகும். அன்பு மிகுதியால் ஆன விருப்பை(பக்தியை)க் 'காதல்' என்றார். அன்பு உள்ள வனைப் போல நடிப்பவனென்பதைக் குறிக்கக் கள்வனேன் என்றான்.

(பா. ம்.) 1. காதலன், காதலின், காதலால்.
2. செல்வநின்னை செல்வனின்னை, செல்வவுன்னை, செல்வாவுன்னை; இங்கனம்.
3. ஈர்கலாக்; கள்வனேன் யான், கள்வனே யான், கள்வனேகான்; இன்னியல், கின்னயல், இங்கிலே.
4. திர்கிலேன் ஆனதையா, ஈண்டிதைய; ஆண்டு மீண்டு, மீண்டுச், மீண்டும், ஈண்டதைய; திர்கிலே னனிதைய. (17)

இராமன் குகனை அன்று தம்மோடு இருக்கச் சொல்லல்

664. கோதைவிற் குரிசி லன்னான் கூறிய கொள்கை கேட்டான்
சீதையை நோக்கித் தம்பி திருமுக நோக்கித் தீராக்
காதல னாகு மென்று கருணையின் மலர்ந்த கண்ணன்
யாதினு மினிய நண்ப விருத்தியின் றெம்மோ டென்றான்.

கோதைவில் குரிசில் - மாலை சூட்டிய வில்லேந்திய இராமபிரான், அன்னான் கூறிய கொள்கை கேட்டான் - அக்குகன் சொன்ன கோட்பாட்டைக் கேட்டு, சீதையை நோக்கி - பிராட்டியைப் பார்த்து, தம்பி திருமுகம் நோக்கி - தம்பியின் முகத்தையும் பார்த்து, தீரா காதலன் ஆகும் என்று - (இவன்) நீங்காத உள்ளன்பு உடையவனே ஆவான் என்று துணிந்து, கருணையின் - (அவன்பால் உண்டான) கருணையால், மலர்ந்த கண்ணன் - மலர்ச்சி பெற்ற கண்களை உடையவனாகி, (அவனை நோக்கி) யாதினும் இனிய நண்ப - எவற்றினும் இனிமையான நண்பனே, இன்று எம்மோடு இருத்தி - (நின் விருப்பத்தின்படி) இன்று எம்மோடு இருப்பாயாக. என்றான்—

இராமபிரான், குகனை அங்கீகரித்தலில் மற்ற இருவருடைய கருத்தையும் அறிதற் பொருட்டு அவர்களை நோக்கி, அவர்கள் முகக் குறிப்பால் அவர்கள் உடன்பாடு உணர்ந்து, அதன்மேல் அவன் விருப்பப்படி தங்கியிருக்க இசைந்தான். ஒருவனுக்கு யாதினும் இனியது அவன் உயிர்; அவ்வுயிர்போல் இனியன் குகன் என்பான், 'யாதினு மினிய நண்ப' என்றான். "என்னுயி ரனையாய்நீ" (691) எனப் பின்னர்க் கூறுதலும் காண்க. குரிசில் - ஆடவருட் சிறந்தோன். கேட்டான்: முற்றெச்சம். தீராக்காதலன் - நாம் கைவிடுதற்கரிய அன்பன் என்றலுமாம்.

(பி - ம்.) 1. கோதைவேற்குரிசில், கோதிலாதவனை நோக்கிக்.
2. நம்பி திருமுகம், நோக்கி நீங்காக்.
3. ஆகுமென்னும்.
4. நண்பா, நப்ப, நம்பி; இருத்தியின்று, இருத்தியிங்கு, ஈங்கு. (18)

குகன் காவலுக்கு அமைதல்

665. அடிதொழு துவகை தூண்ட வழைத்தன னாழியன்ன
துடியுடைச் சேனை வெள்ளம் பள்ளியைச் சுற்றவேவி
வடிசிலை பிடித்து வாளும் வீக்கிவா யம்பு பற்றி
இடியுடை மேக மென்ன விணையடி யெய்தி நின்றான்.

(உடனிருக்க இசைவுபெற்ற குகன்) உவகை தூண்ட - மகிழ்ச்சி தன்னை உந்த, அடிதொழுது - (இராமபிரானுடைய) திருவடிகளை வணங்கி, ஆழி அன்ன - கடல் போன்ற, துடி உடை(ய) சேனை வெள்ளம் - துடி முழக்கமுடைய தன் சேனைப் பெருக்கை, அழைத்தனன் - அழைத்து, பள்ளியை சுற்ற ஏவி - தவப் பள்ளியைச் சூழ்ந்து காக்குமாறு ஏவி, வடி சிலை பிடித்து - (தானும்) எய்தற் கமைத்த வில்லைக் கையில் பிடித்து, வாளும் வீக்கி - (அரையில்) உடைவாளையும் பிணித்து, வாய் அம்பு பற்றி - கூரிய வாயையுடைய அம்பையும் (எய்தற்குச் சித்தமாகக்) கைக்கொண்டு, இடி உடை(ய) மேகம் என்ன - இடி முழக்கமுள்ள மேகம் போல (வந்து), இணை அடி எய்தி -

இராமபிரான் திருவடிகளை யணுகி, நின்றான் - (காவலுக்கு ஏற்றவாறு) நின்றான்.

குகன், அன்று அங்கே தங்கியிருக்க இசைவு பெற்றவுடன், மகிழ்ச்சியுற்று, முன்னே ஒருபுறமாக நிறுத்திய சேனையைக் கூவித் தவப் பள்ளியைச் சூழ்ந்து நின்று காக்கக் கட்டளையிட்டு, தானும் காவலுக்கு ஏற்றவாறு ஆயுதங்கள் தாங்கிச் சித்தமாக நின்றான்; இரவில் பாதுகாப்புக்காக இவற்றைச் செய்தான். இணையடி யெய்தி என்றது உபசார வழக்கு. அமைத்தனன் : முற்றெச்சம். துடி - (தலைவன் கட்டளையை எதிர்நோக்கிய) துடிப்பு என்றலுமாம்.

(பி - ம்.) 1. உவகை தூண்டி, தோன்ற; ஆழியென்னத், ஆளியென்னத், அமைத்தனனாழி யன்ன, ஆழியென்னத், ஆளியெனனத், அமைந் தனணுகியன்ன.
2. துடியிடைப் பள்ளியைச் சூழ, பள்ளியிற் சுற்ற.
3. அடுசிலை, வடுசிலை; மடித்து; வாயம்பும் பற்றி, வாயம்பு மாற்றி, வீக்கினனம்பு பற்றி, பற்ற.
4. இடியுடையுருமே ரென்ன, இடியுடை முகிலிதென்ன, இடியுமிழுருமேறென்ன, இடியிடை மேகமென்ன: இணையடியிறைஞ்சி ஏத்தி, தொழுது, போற்றி, இவனடி தொழுது, இரைத்தவண் சாத்து. (19)

குகன் இராமன் வனம் போந்த வரலாறுணர்ந்து வருந்தல்

666. திருநகர் தீர்ந்த தன்மை மானவ தெரித்தி யென்னப்
பருவர றம்பி கூறப் பரிந்தவன் பையு ளெய்தி
இருகணீ ரருவி சோரக் குகனுமாண் டிருந்தானென்னே
பெருநிலக் கிழத்தி நோற்றும் பெற்றிலள் போலு மென்றா.

(குகன்) மானவ - மனுகுலத்து ஐயனே, திரு நகர் தீர்ந்த தன்மை தெரித்தி என்ன - செல்வ மிக்க அயோத்தி நகரைவிட்டு (இவ்வாறு) வந்த வகையைத் தெரிவிக்க என்று வேண்ட, தம்பி - இலக்குவன், பருவரல் கூற - துன்ப விளைவுபற்றிச் சொல்ல, (அது கேட்டு), பரிந்தவன் - இரங்கினவனான குகனும், பையுள் எய்தி -(மிக்க) துன்பமுற்று, என்னே - ஈதென்ன வியப்பு, பெருநிலம் கிழத்தி - பெரிய பூமிப் பிராட்டி, நோற்றும் - தவம் செய்தும், பெற்றிலள் போலும் - அதன் பயனை முழுதும் பெறவில்லை போலும்! என்றா - என்று சொல்லி, இருகண் நீர் அருவி சோர - இரண்டு கண்களிலும் நீர் அருவி போலச் சொரிய, ஆண்டு இருந்தான் - அங்கே நின்றிருந்தான்.

இராமபிரான் திருவவதாரம் செய்ய நோற்ற பூமிதேவி, அவன் ஆளும் பேற்றினைப் பெறவில்லையே என வருந்துகின்றான்.

(பி- ம்.) 1. தீர்ந்தவண்ணம்; மானவன் இளையவன், இளையவ, சேவக.
2. பருவரற்றம்பி; பரிந்தனன், பரிந்தன, பிரிந்தவன, கேட்டனன்; பையுளேந்தி.

3. குகனுமாடினிதி னென்னே, குகனுமாண்டிரங்கி நைந்தான், குகனுமாண்டிருந்தானென்னப்.
4. நோற்றுப்; போலுமென்றான். (20)

### கதிரவன் மறைதல்

667. விரியிருட் பகையை யோட்டித் திசைகளை வென்று மேனின்
றொருதனித் திகிரி யுந்தி யுயர்புகழ் நிறுவி நாளும்
இருநிலத் தெவர்க்கு முள்ளத் திருந்தருள் புரிந்து வீந்த
செருவலி வீரனென்னச் செங்கதிர்ச் செல்வன் சென்றான்.

விரி - பரந்த, இருள் - இருள் போன்ற, பகையை ஓட்டி - பகைவரை யெல்லாம் தொலைத்து, திசைகளை வென்று - பத்துத் திக்குக்களிலும் தேர் செலுத்தி வெற்றிகொண்டு, மேல் நின்று - (எவர்க்கும்) மேலாக விளங்கி, ஒரு தனி திகிரி உந்தி - ஒப்பற்ற ஓராணைச் சக்கரத்தை எங்கும் செலுத்தி, உயர் புகழ் நிறுவி - உயர்ந்த புகழை நிலைநிறுத்தி, நாளும் - எந்நாளும், இரு நிலத்து எவர்க்கும் - இப்பெரிய உலகத்தில் உள்ள யாவருக்கும், உள்ளத்து இருந்து - அவரவர் உள்ளத்தில் இடம் பெற்றிருந்து, அருள் புரிந்து - (உயிர்களுக்கெல்லாம்) மிக்க அருளைச் செய்து, வீந்த - இறந்துபோன, செருவலி வீரன் என்ன - போரில் வல்ல வலிமை மிக்க வீரனான தசரதனைப் போல, செம் கதிர் செல்வன் - சிவந்த கிரணங்களையுடைய சூரியனும், சென்றான் - அத்த மித்தான்.

இப்பாடல், சூரியனுக்கும் தசரதனுக்கும் செம்மொழிச் சிலேடை யாக அமைந்தது. தசரதனுக்குரியவாறு மேலே கூறப்பெற்றது. சூரியனுக்கு அமையுமாறு : பரந்த இருளாகிய பகையை அழித்து, எல்லாத் திக்குக்களையும் (தன் ஒளி பரப்பி) வெற்றிகொண்டு, ஆகாயத் தில் விளங்கித் தன்னுடைய ஒற்றை யாழித் தேரைச் செலுத்தி, மேலான புகழை நாட்டி, எக்காலத்தும் உலகத்து உயிர்களெல்லாம் தன்னை நினைத்துப் போற்றுமாறு அவரவர் மனத்தில் வீற்றிருந்து அருள் செய்து என்க. சூரிய உதய அத்தமனங்களைச் சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு கூறும் முறையில், இங்கே, விண்ணுலகெய்திய தசரத னோடு ஒப்பிட்டுக் கூறுகின்றார். ஒரு தனித் திகிரி உந்துதல் - ஏக சக்ராதிபத்யம். ''வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தான், நல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் தான்செய்த, தொல்வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம் வேட்டெழுந்தாற்போற், பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர'' - கலி. 118: 1 - 4 என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும்.

(பி - ம்.) 1. விரியிடை பகையை.
3. இருநிலத்தவர்க்கும், இருநிலத்தோர்க்கும், விரிநிலத்தெவர்க்கும்; உள்ளம் இருந்தன னென்ன வீந்த, வீய்ந்த, இருந்தன னென்பதி

யாரும், இருந்தன னென்ன வந்தச், திருத்தின னென்ன விந்தச், இருந்தன னுகையாலிச்.

4. செருவலி வீரர் நோக்கும், வீரனேய்க்கும், செருவிலி வீரனென்னச், வீரனேய்க்கும், செருமலி வீரனென்னச், தெரிதரவீரனென்ன. (21)

இரவில் இலக்குவன் காவல் புரிதல்

668. மாலைவாய் நியமஞ் செய்ய மரபுளி யியற்றி வைகல்
வேலைவா யமுத னுளும் வீரனும் விரித்த நாணற்
பாலவாம் பாரின்பாயல் வைகினர் பருவி லேந்திக்
காலைகாண் பளவுந் தம்பி யிமைப்பிலன் காத்து நின்றுன்.

மாலைவாய் நியமம் - மாலைக் காலத்திற் செய்தற்குரிய கடன்களை, செய்ய மரபு உளி இயற்றி - செப்பமான முறைப்படி செய்து, வைகல் - பகல் கழிந்த (இராப்) பொழுதில், வேலைவாய் அமுது அன்னுளும்-பாற் கடலில் தோன்றிய அமுதம் போன்ற சீதா பிராட்டியும், வீரனும் - இராமபிரானும், விரித்த நாணல் பால ஆம் - நாணற்புல் பரப்பப் பெற்றதான, பார் இன் பாயல் - தரையாகிய இனிய படுக்கையில், வைகினர் - துயின்றனராக, தம்பி - இலக்குவன், பரு வில் ஏந்தி - பருத்த வில்லைக் கையில் தாங்கி, காலை காண்பு அளவும் - (மறுநாள்) காலைப் பொழுதைக் காணுமளவும் (விடியுமளவும்), இமைப்பு இலன் - கண் இமைத்தல் இல்லாதவனுய், காத்து நின்றுன் - காவல் செய்து கொண்டு நின்றுன்.

உளி : இடைச்சொல். வைகல் - கழிதல்; ஆகுபெயராய்ப் பகல் கழிந்த இராப்பொழுதை உணர்த்தியது. இராமன் இப்போது புல் பரப்பிய தரையையே இனிய படுக்கையாகக் கொண்டான்.

இதன்பின் உள்ள மூன்று பாடல்கள் இந்நூல் நிலையத்தின் முந்தைய பதிப்பிலும், ஆழ்வார் திருநகர்ப் பதிப்பிலும், வை. மு. கோ. உரைப் பதிப்பிலும், பல ஏடுகளிலும் காணப்படுகின்றன; பிற பழைய பதிப்புக்களில் அவை இல்லாததோடு, ஈண்டைக்கு இன்றியமையா தனவும் அல்லவாகலின், மிகைப் பாடலாகக் காட்டப்படுகின்றன.

1. வெயில்விரி கனகக் குன்றத் தெழில்கெட விலகு சோதிக்
கயில்விரி வயிரப் பைம்பூண் கடுந்திறன் மடங்க லன்னுன்
துயிலெனு மணங்கு வந்து தோன்றலு மவளை நாமே
எயிலுடை யயோத்தி மூதூ ரெய்துநா ளெய்து கென்றுன்.

2. மறக்கண்வா ளிளைய வீர னுணையை மறுத்தல் செல்லா
உறக்கமா மாது மண்ண லுபயபங் கயங்கள் போற்றித்
துறக்கமா மென்ன லாய தூமதி லயோத்தி யெய்த
இறுக்குநா ளெந்தை பாத மெய்துவ னென்னப் போனுள்.

3. மற்றவ ளிறைஞ்சி யேக மாமலர்த் தவிசி னீங்காப்
பொற்றொடி யோடு மையன் றுயிறரு புன்மை நோக்கி
இற்றதோர் நெஞ்ச ளுகி யிருகணீ ரருவி சோர
உற்றவோ வியம தென்ன வொருசிலை யதனி னின்றான்.

(பி - ம்.) 1. மாலையாய்; செய்து; மரபுழி; இயற்றுவைகல், இயற்றிவங்க.
2. அமிர்தன்னாளும்; விரித்த நாளம், நான; இருந்த ஞான்று.
3. மாலைவாய்ப், மாலைவான், வாலவாம்; பள்ளிப்; புல்விற்; பரலவாம் பான்மைப்; வைகினன்; வரிவிலேந்திக், வைவிலேந்திக்.
4. காலைவாயளவும்; இமைக்கிலன், இமைத்திலன். (22)

குகன் வருந்துதல்

669. தும்பியின் குழாத்திற் சுற்றுஞ் சுற்றத்தன் றொடுத்த வில்லன்
வெம்பிவெந் தழியா நின்ற நெஞ்சினன் விழித்த கண்ணன்
தம்பிநின் றானை நோக்கித் தலைமகன் றனிமை நோக்கி
அம்பியின் றலைவன் கண்ணீ ரருவிசோர் குன்றி னின்றான்.

தும்பியின் குழாத்தின் - யானைக் கூட்டம்போல, சுற்றும் சுற்றத்தன் - (தன்னை எப்போதும்) சூழ்ந்திருக்கும் பரிவாரங்களை உடையவனும்; தொடுத்த வில்லன் - (எய்தற்குச் சித்தமாக) அம்பு தொடுத்த வில்லை உடையவனும், வெம்பி வெந்து அழியா நின்ற நெஞ்சினன் - வெப்பமேறிக் கொதித்து அழிகின்ற மனம் உடையவனும், விழித்த கண்ணன் - (இமையாது) விழித்த கண்களை உடையவனும், அம்பியின் தலைவன் - ஓடங்களுக்குத் தலைவனுமான குகன், தம்பி நின்றானை நோக்கி - (இமைத்தலின்றியும் சோர்வின்றியும்) நின்றவனான இலக்குவனைப் பார்த்தும், தலைமகன் - இராமபிரானது, தனிமை நோக்கி - (உடனிருத்தற்குரிய பரிவாரத்தார் ஒருவரும் இல்லாத) தனியான நிலையைக் கண்டும், கண்நீர் அருவி சோர் குன்றின் நின்றான் - கண்ணீராகிய அருவியைச் சொரியும் மலைபோல (அசைவற்று) நின்றான்.

தம்பி நின்றானை - நின்றான் தம்பியை என மாறிக் கூட்டுக. நிறம், தோற்றம், புடைபெயராமை ஆகியவற்றால் குகனுக்கு மலை உவமை. சுற்றும் - தவப்பள்ளியைச் சூழ்ந்து இருந்த எனவுமாம். குகனை, "தும்பியீட்டம் புரைகிளர் சுற்றத்தான்" (649) என்றார் முன்னும். தலைமகன் - எவற்றிலும் தலைமை உடையவன்.

(பி - ம்.) 1. குழாத்துச் சுற்றும், குழாத்திற் சுற்றம்; சுற்றத்தான்; வில்லான்.
2. வெம்பிவந்து; எரியாநின்ற.
3. தம்பிதன்றன்மை, தம்பிதன்றனிமை; தலைமகன்றகைமை, தலைமகன் றன்மை, தலைமகன்றன்னை, தலைமகன்றினிமை; பார்த்த.
4. அம்பியினிறைவன், அம்பினன்றலைவன்; அருவிசேர். (23)

### கதிரவன் தோற்றம்

670. துறக்கமே முதல வாய தூயன யாவை யேனும்
மறக்குமா நினைய லம்மா வரம்பில தோற்ற மாக்கள்
இறக்குமா றிதுவென் பான்போன் முன்னை நாளிறந்தான்பின்னாட்
பிறக்குமா றிதுவென் பான்போற் பிறந்தனன்பிறவாவெய்யோன்.

பிறவா வெய்யோன் - (உலகத்துயிர்கள் போலப்) பிறத்தல் இல்லாத சூரியன், வரம்பு இல தோற்றம் மாக்கள் - அளவற்ற பிறப்புக்களையுடைய உயிர்கள் எல்லாம், இறக்கும் ஆறு இது என்பான் போல் - இறக்கும் வகை இதுதான் என்று உலகத்தார்க்குக் காட்டுவான் போல, முன்னை நாள் இறந்தான் - முன் நாள் (மாலையில்) மறைந்தவன், பின் நாள் - வழிநாள் காலையில், பிறக்கும் ஆறு இது என்பான் போல் - (இறந்த உயிர்கள் மீண்டும்) பிறக்கும் வகை இது என்று (உலகுக்குக்) காட்டுவான் போல, பிறந்தனன் - உதித்தான்; (ஆதலால்) துறக்கம் முதல ஆய - சுவர்க்கம் முதலான, தூயன யாவையேனும் - நல்ல உலகங்கள் எவையாயினும், மறக்கும் ஆறு நினையல் - (அவற்றை அடைதலை) மறக்கும் வழியை நினைக்கக் கடவர். அம்மா : அசை; வியப்புணர்த்தியதுமாம்.

சூரியன் உலகத்து உயிர்கள் போலப் பிறத்தல் இல்லாதவன்; எனவே, இறத்தலும் இல்லாதவன். ஆயினும் அவன், 'உயிர்கள் எத்தகைய நல்லுலகெய்தினும், ஒரு குறித்த கால அளவுக்குப்பின் இறத்தலும் மீண்டும் பிறத்தலும் உண்டு' என்பதைத் தன் செயலால் உலகுக்கு உணர்த்துகின்றான். தன்னால் பகலும் இரவும் மாறி மாறி வருதல் போலவே உயிர்கட்குப் பிறப்பும் இறப்பும் வரும் என்பதைத் தன் உதய அத்தமனங்களால் காட்டுகின்றான்; எனவே, மீண்டு வந்து பிறத்தல் இல்லாத முத்தியையே எவரும் நாடவேண்டும். பிற நல்லுலகங்கள் எவையாயினும் அவற்றையடைய நாடுதல் தகாது என்பது புலனாகின்றது. நினையல் - நினைக்க; அல்லீற்று வியங்கோள்; "மக்கட்பதடியெனல்" என்றதனுட்போல உடன்பாடு குறித்தது. நினைக்குமாறு: இறுதி விகாரப்பட்டது. இறந்தான், பிறந்தனன் என்பன முறையே மறைதலையும் தோன்றுதலையும் குறித்தன. "தேய்த லுண்மையும் பெருக லுண்மையும், மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும், அறியா தோரையும் அறியக் காட்டித், திங்கட் புத்தேள் திரிதரு முலகத்து" (புறநா. 27 : 11 - 14) என்பது இங்கே நோக்கத் தக்கது.

(பி - ம்.) 1. முதலவான, துறக்குமெய் முதலவாய; தூயவர்யாவர் தம்மை, யாருஞ் சிந்தை.
2. மறக்குமானிலையரம்மா, மறக்குமோ நினைமினம்மா, மறக்குமா நினைமினம்மா, நிலையாமம்ம, மறக்கவே நினைமினம்மா, நினையலம்மா; வரம்பில தோற்றுமாக்கள், மக்கள், வரம்பிலர் நோக்குமாக்கள்

தோற்றுமாக்கள், வரம்பிலாத் தோற்றமாக்கள், வரம்பில தோன்றும் மாக்கள்.

3. முன்னர் நாள்; இறந்தான் மீளப்.

4. பிறக்கு நாள்; என்பார்போல்; பிறங்குவெய்யோன். (24)

671. சேஞ்செவே சேற்றிற் றேன்றுந் தாமரை தேரிற்றேன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன் மேனி நோக்கிய விரிந்த வேறேர்
அஞ்சன நாயி றன்ன வையனை நோக்கிச் செய்ய
வஞ்சிவாழ் வதன மென்னுந் தாமரை மலர்ந்த தன்றே.

சேற்றில் தோன்றும் தாமரை - சேற்றில் தோன்றும் செந்தாமரையின் மலர்கள், தேரில் தோன்றும் - ஆகாயத்தில் ஒற்றையாழித் தேரிலே வருகின்ற, வெம் சுடர் செல்வன் மேனி நோக்கிய - வெப்பமான கதிர்களையுடைய சூரியனது தோற்றத்தைக் கண்டனவாய், செம் செவ்வே விரிந்த - மிக அழகாக (செக்கச்செவேலென்று) மலர்ந்தன; வேறு ஓர் - (அச்செங்கதிர்ச் செல்வனினும்) வேறான ஒப்பற்ற, அஞ்சனம் ஞாயிறு அன்ன - கருஞாயிறு போன்ற, ஐயனை நோக்கி - இராமபிரானைக் கண்டு, செய்ய வஞ்சி - செவ்விய வஞ்சிக்கொடி போன்ற பிராட்டியின், வாழ் வதனம் என்னும் தாமரை மலர்ந்தது—. அன்று, ஏ : அசை.

தாமரை மலர்கள் தமக்கு நாயகனான கதிரவனைக் கண்டு மலர, பிராட்டியின் முகத் தாமரையும் தன் நாயகனைக் கண்டு மலர்ந்தது. கற்புடை மகளிர் காலையில் எழும்போது கடவுளான தம் கணவன் மாரைத் தொழுதெழல் முறையாகும். இராமபிரான், செஞ்ஞாயிற்றின் வேறாகத் தண்ணொளி பரப்பும் கருஞாயிறுபோல்வானாகலின், 'வேறேர் அஞ்சன ஞாயிறு' எனப்பட்டான். வஞ்சி : ஆகுபெயர். செஞ்செவே - செவ்வனே என்ற பொருளும் உடையது; "செஞ்சவே கமலக் கையால் தீண்டலும்" (பால. 973); "செஞ்செவேநெடு மரகதப் பாறையிற் றெரிவ" (759); "செஞ் சவே முனிவரன் செப்ப" (949) "செஞ் சவே யாண்டாய் சிவபுரத் தரசே" (திருவாசகம்: 28: 6). அஞ்சன நாயிறன்னவையன் : "கருநாயிறு போல்பவர்" (பால. 1240): "செந்தண் கமலக்கண் கைகால் சிவந்த வாயோர் கருநாயிறு, அந்த மில்லாக் கதிர்பரப்பி யமர்ந்த தொக்கு மம்மானே" (திருவாய்மொழி. 8 . 5 : 7).

(பி - ம்.) 1. செஞ்செவ்வே, செஞ்சவே.

2. நோக்கின, நோக்கினன், நோக்கியே; பிரிந்த வேறேர், விரிய வேறேர், விரிந்தவென்றேர், விரிந்தவென்றே.

3. நாயிற்றன்ன, நாயறன்ன, ஞாயிறன்ன; நோக்கி வெய்ய.

4. வஞ்சியாள், வஞ்சிவாள், வஞ்சியா; என்னுமரவிந்தம். (25)

### இராமன் படகுகொண்டுவரக் குகனை ஏவுதல்

672. நாண்முதற் கமைந்த யாவு நயந்தன னியற்றி நாமத்
தோண்முதற் கமைந்த வில்லான் மறையவர் தொடரப்போனான்
ஆண்முதற் கமைந்த கேண்மை யன்பனை நோக்கி யைய
கோண்முதற் கமைந்த நாவாய் கொணருதி விரைவி னென்றான்.

தோள் முதற்கு அமைந்த - தோளிலே பொருந்திய, நாமம் வில்லான் - அச்சந்தரும் வில்லையுடைய இராமபிரான், நாள்முதற்கு அமைந்த யாவும் - நாளின் முற்பகுதியில் (காலையில்) செய்தற்குரிய கடமைகளையெல்லாம், நயந்தனன் இயற்றி - விரும்பிச் செய்து, மறையவர் தொடர - வேதம் வல்ல முனிவர் தொடர்ந்துவர, போனான் - அங்கிருந்து போதற்கு ஒருப்பட்டவனாகி, ஆள்முதற்கு அமைந்த கேண்மை அன்பனை நோக்கி - ஆளாக முதலிலேயே அமைந்த நட்புரிமையுடைய மெய்யன்பினனான குகனைப் பார்த்து, ஐய —, கோள் முதற்கு அமைந்த நாவாய் - (எம்மைக்) கொண்டு செல்ல முதன்மையாக அமைந்ததோர் ஓடத்தை, விரைவின் கொணருதி என்றான் - விரைவாகக் கொண்டுவருக என்று பணித்தான்.

குகன், இராமபிரானைக் கண்ட அளவிலேயே அவனுக்கு அடிமை செய்ய உறுதி பூண்ட உள்ளன்பு உடையவனாகலின், 'ஆள் முதற் கமைந்த கேண்மை அன்பன்' என்றார். அயோத்தியிலிருந்து மீண்டும் எவரேனும் வருதல் கூடும் என்ற அச்சத்தால், இராமபிரான் விரைவில் கங்கையைக் கடந்து அப்பால் செல்லவேண்டுமென்ற கருத்துடன், 'நாவாய், விரைவின் கொணருதி' என்றான்; நாவாயும், இடையே பழுதேதும் நேராதவாறு சிறந்ததாக இருத்தல் வேண்டும் என்பான் 'முதற்கமைந்த' என்றான்.

நாள்முதற்கு - நாளின் முதலில்; உருபு மயக்கம்; ஆள் முதற்கு என்றதும் அது. தோள் முதற்கு: முதல், ஏழனுருபு.

(பி - ம்.) 1. அமைத்த; நயந்தனர்; இயற்றித்தாமத், இயற்றி ஏமத்.
2. தோண்முதற்றொடர்ந்த, முதற்கிடந்த; வில்லார், வில்லர்; போனார், போகி, போக்கி.
3. அமைந்தகேள்வியண்ணலை, ஐயனை; நோக்கி. (26)

### குகனுடைய வேண்டுகோள்

### (கலிவிருத்தம்)

673. ஏவிய மொழிகேளா விழிபுனல் பொழிகண்ணான்
ஆவியு முலைகின்றா னடியிணை பிரிகல்லான்
காவியின் மலர்காயா கடன்மழை யனையானைத்
தேவியொ டடிதாழாச் சிந்தனை யுரைசெய்வான்.

ஏவிய மொழி கேளா - (நாவாய் கொணருமாறு இராமபிரான்) பணித்த சொல்லைக் கேட்டு, அடி இணை பிரிகல்லான் - பெருமான் திருவடிகளைப் பிரியமாட்டாதவனான குகன், இழி புனல் பொழி கண்ணன் - கண்ணினின்றும் வழியும் நீர் சொரிந்தவனாய், ஆவியும் உலைகின்றான் - உயிரும் தடுமாறுகின்றவனாய், காவியின் மலர் காயா கடல் மழை அனையானை - கருங்குவளை மலர் காயாம்பூ கடல் மேகம் ஆகியவை போன்ற (இனிய) நிறம் அமைந்த திருமேனியையுடைய இராமபிரானை, தேவியொடு - சீதா பிராட்டியுடனே, அடி தாழா - திருவடிகளில் வணங்கி, சிந்தனை உரை செய்வான் - தன் கருத்தைச் சொல்வானானான்.

இராமபிரானைப் பிரிய மனமில்லாத குகன், அப்பிரான் கங்கையைக் கடந்தபின் அங்கே தங்காது சென்றுவிடக்கூடுமே என்று அஞ்சி, தன்னோடு தன் ஊரிலேயே தங்கி இருக்குமாறு பெரிதும் இறைஞ்சி வேண்டுகிறான். அதனை மேலே நான்கு பாடல்களிற் கூறுவார்.

கேளா: செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். பிரிகல்லான் - பிரி + கு + அல் + ஆன்; கு: சாரியை.

காவிரியின்......அனையானை: ஒப்பு: "பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற, காவிமலர்......எல்லாம் பிரானுருவே" (இயற்பா. பெரிய திருவந்தாதி: 73).

(பி - ம்.) 1. ஏவின; பொழிகண்ணன், சொரிகண்ணன்.
2. ஆவியும் அலைகின்றான், உருகின்றான், நலிகின்றான், நைகின்றான்.
3. காவியினலர், காவியுமலர்க்; காசா, கார்சாக், காமர்க்.
4. அடிதாழச், இனிதாழாச்; உரைசெய்தான். (27)

674. பொய்ம்முறை யலராவெம் புகலிடம் வனமேயாம்
கொய்ம்முறை யுறுதாரோய் குறைவிலெம் வலியேமால்
செய்ம்முறை குற்றேவல் செய்குது மடியோமை
இம்முறை யுறவென்னு வினிதிரு நெடிதெம்மூர்.

கொய் முறை உறுதாரோய் - பூவைக் கொய்து முறையாகத் தொடுக்கப் பெற்ற மாலையை அணிந்த பெருமானே, பொய்முறை அலரா(த) - பொய்யொழுக்க மில்லாத, எம் புகல் இடம் - எங்கள் இருப்பிடம், வனமே ஆம் - காடே ஆகும்; குறைவு இலெம் - (வாழ்க்கைக்கு உரிய பொருள்களில்) ஒரு குறைவும் இல்லாதேம் (நாங்கள்); வலியேம் - (தீங்குகளை எதிர்த்துத் தொலைக்கும்) வலிமையுடையேம்; குறு ஏவல் - (நுமக்குச் செய்தற்குரிய) குற்றேவல்களை, செய்முறை செய்குதும் - செய்யவேண்டிய முறைப்படி செய்வோம்; (ஆதலால்), அடியோமை - நும் அடித் தொண்டர்களாகிய எங்களை, இ முறை உறவு என்னு - இவ்வடிமை முறையில்

(நுமக்கு) உறவு என்று கருதி, இனிது - இனிதாக, எம் ஊர் - எங்கள் ஊரிலேயே, நெடிது இரு - நெடுங்காலம் தங்கியிருப்பீராக.

இதுமுதல் நான்கு பாடல்கள் தொடர்ந்து முடியும்.

குகனுடைய தன்மைகளை இராமபிரான் உணர்ந்து அவனை நண்பனாக ஏற்றுக்கொண்டான். அப்பேறு பெற்ற குகன், 'என்னைச் சார்ந்தோரும் என்னைப் போலவே உண்மையுடையோர்; நும் திருவடித் தொண்டில் சிறிதும் குறையின்றிச் செய்வர்' என்று அவர் தன்மை கூறி, 'நீவிர் சென்று தங்கக் கருதுவது வனம்; எங்கள் இருப்பிடமும் வனமே யாதலால் இங்கே பதினான்காண் டென்பதின்றி எத்துணைக் கால மேனும் இனிதாகத் தங்கியிருக்கலாம்; அடிமை முறையால் எங்களை யும் உறவினராகக் கொண்டு, என் வேண்டுகோளை அங்கீகரிக்க வேணும்' என்கின்றான்.

(பி - ம்.) 1. பொய்முறை; இலராலெம், இலரேமெம், இலதாலெம், இலதாலென் இலதாலே, அலராலெம், இலிராலெம்; வனமேயால்.
2. கொய்முறை; உறுதாரீர், அணிதாரீர், மலர்தாராய், மலர்தாரீர், அலர்தாராய், அலர்தாரீர், உறைதாரீர்; குறையிலம், குறைவில; வலியெம்மால்.
3. செய்முறை, செய்குவம்; அடியேமை; அடியேம்யாம்.
4. உறவென்ன, உறைவென்று; கெடிதம்மா, மு: உய்முறை பெறவும்மால் இனிதிருநெடிதும்மூர். (28)

675. தேனுள தினையுண்டாற் றேவரு நுகர்தற்காம்
ஊனுள துணைநாயே முயிருள விளையாடக்
கானுள புனலாடக் கங்கையு முளதன்றே
நானுள தனையுந்நீ யினிதிரு நாடெம்பால்.

தேன் உள - (எங்கள் வனத்தில்) தேன் வகைகள் மிக வுள; தினை உண்டு - தினையும் (நிறைய) உண்டு; தேவரும் நுகர்தற்கு ஆம் - அவை தேவர்களும் உண்ணுவதற்கு ஏற்ற பரிசுத்தமுடையனவாம்; விளையாட- உடனிருந்து குலாவ, ஊன் உள துணை - உடல் உள்ளளவும், நாயேம் உயிர்உள-நாய்போல் அடிமைப்பட்ட எங்கள் உயிர்கள் உள்ளன; கான் உள - (அழகிய) காடுகள் உள்ளன; புனல் ஆட கங்கையும் உளது அன்றே - நீராடுதற்குக் கங்கையும் உள்ளதன்றே? (ஆதலால்), நான் உளதனையும் - நான் உள்ளவரையில், நீ இனிது இரு - நீரும் (எம்மோடு) இனிதாகத் தங்கியிருப்பீராக; எம்பால் நாடு - எம்மிடம் நாட்டங் கொள்க. ஆல்: அசை.

'இனிதாக வாழ்தற்குரிய எல்லாப் பொருள்களும் எம்மிடம் உள்ளன; நாங்களும் உடன் இருந்து குலாவுவோம். ஆதலால் எம்மோடிருத்தலை மனங்கொள்க' என்று வேண்டுகின்றான். இவ்வாறே மேலும் கூறுதல் அடுத்த பாடலிலும் வரும். நான் உளதனையும் - தான் உயிரோடிருக்கும் வரையில்.

(பி - ம்.) 1. தினையுண்டாம்.
2. துணைநாயோம், நாயேன்; விளையாடும், வினையாடக்.
3. புனலாடும்.
4. நானுளதனையுநீ, தனைநீயும், யானுளதனையுந்நீர்; இனிதிரு நட வெம்பால், நட்பெம்பால், நலமெம்பால், நாளெல்லாம், நெடிதெம்பால், கடமெம்பால், இனிதுள நண்பாமால். (29)

676. தோலுள துகில்போலுஞ் சுகமுள தொடர்மஞ்சம்
போலுள பரண்வைகும் புரையுள கடிதோடும்
காலுள சிலைபூணுங் கையுள கலிவானின்
மேலுள பொருளேனும் விரைவொடு கொணர்வேமால்.

(எம்மிடம்) துகில்போலும் தோல் உள - மெல்லிய நல்லாடை போன்ற தோலாடைகள் உள்ளன; சுகம் உள - இன்பமுள்ள, தொடர் மஞ்சம்போல் பரண் உள - தூங்குமஞ்சம் போன்ற பரண்கள் உள்ளன; வைகும் புரை உள - தங்கும் இலைக்குடில்கள் உள்ளன; கடிது ஓடும் கால் உள - விரைவாக ஓடத்தக்க வலிய கால்கள் (எமக்கு) உள்ளன; சிலை பூணும் கை உள - வில்லைப் பிடித்த கைகள் உள்ளன; (அதனால்) கலிவானின் மேல் உள பொருளேனும் - ஒலித்தற் பண்புடைய வானத்தில் உள்ள (அரிய) பொருள்களாயினும், விரைவொடு கொணர்வேம் - விரைவில் கொணர்ந்து தருவோம். ஆல்: அசை.

முன்செய்யுளிற் போலவே, தம்மிடம் உள்ள பொருள்களையெல்லாம் கூறி, அவற்றின்மேலும், அங்கே கிடைத்தற்கரிய பொருள்கள் தேவையெனின், அவை எங்கிருப்பினும் விரைவில் கொணர்ந்து தரும் ஆற்றல் எம்மில் எல்லோருக்கும் உண்டு என்கின்றான். பரண் - தினை முதலியவற்றைக் காத்தற் பொருட்டு உயர்ந்த கால்களை நாட்டி, அவற்றின்மேல் குறுக்கு நெடுக்காகக் கோல்களைப் பிணைத்து இருப்பிடமாக்கி, மேலே புல்லால் வேயப் பெற்றவை. புரை - சிறு குடில். ஆகாயத்தின் பண்பு ஒலியாகலின், 'கலி வான்' என்றார்; கலித்தல் - ஒலித்தல்.

(பி - ம்.) 1. துயில்போதும், துயில்போலும்; சுதையுள, சுவையுள, துகளறு; சுடர்மஞ்சம்.
2. வைகப்; புனலுள.
3. கனிவானின்.
4. பொருளேலும், பொருள்யாவும், பொருடானும், பொருளானும். (30)

677. ஐயிரு பத்தோடைந் தாயிர ருளராணை
செய்குநர் சிலைவேடர் தேவரின் வலியாரால்
உய்குது மடியோமெங் குடிலிடை யொருநாணீ
வைகுதி யெனின்மேலோர் வாழ்விலை பிறிதென்றான்.

ஆணைசெய்குநர் - (என்) ஏவல் செய்வோரான, சில வேடர் - விற்பிடித்த வேடர்கள், தேவரின் வலியார் - தேவர்களினும் வலிமை மிக்கவராய், ஐ இருபத்தோடு ஐந்து ஆயிரர் உளர் - ஐந்நூறுயிரவர் உள்ளனர்; எம் குடில் இடை - எங்கள் குடிலில், நீ ஒருநாள் வைகுதி எனின் - தேவரீர் ஒருநாள் தங்கினலும், அடியோம் உய்குதும் - அடியோங்கள் கடைத்தேறுவோம்; மேல் ஓர் வாழ்வு - அதனினும் மேலானதொரு பேறு, பிறிது இலை என்றான் - வேறில்லை (எமக்கு) என்றான். ஆல்: அசை.

'பொய்முறை' (677) என்று தொடங்கிய குகன்கூற்று 'பிறிதென்றான்' என்ற இதனோடு முடிவுறுகின்றது.

'இனிதிரு நெடிதெம்மூர்' என்றும், 'நானுளதனையும் இனிதிரு' என்றும் வேண்டிய குகன், இராமபிரான் விரைதற் குறிப்பை நோக்கி, 'ஒருநாளேனும் தங்கினல் அதுவே எங்களுக்குப் பெரும் பேறாகும்' என்கின்றான். ஐ இருபது=நூறு; நூற்றோடு ஐந்து=நூற்றோடு உறழ்ந்த ஐந்து=ஐந்நூறு; ஐந்நூறுயிரம்; ஐந்திலட்சம். 'இத்துணைப் பெருந் தொகையினரும் வில்லில் வல்லவர்; என் ஆணைக்குட்பட்டவர் நும் ஏவல் செய்தற்குரியவர்' என்றான். தேவரின் வலியார் என்றது மிகுத்துக் கூறியது. நூற்றையாயிரவர் என்றும், இருபத்தையாயிரவர் என்றும் உரை கூறுவாருமுளர். ''காலன்றான் ஐயைந்நூ றுயிர முருவ மாயின மெய்யுறு தானையான்'' (1005) என ஐந்திலக்கம் என்ற பொருள்பட ஆசிரியர் மேலே கூறுதலால், இங்கும் அவ்வாறு கொண்டு உரைக்கப் பெற்றது. விற்பிடித்த வேலையினான் (1022) என்பதும் நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. பத்தைந்தோடு; ஆயிர முளதானை.
2. செய்குனர் சிலவேலர்; தெரிவரின்; வலியோரால், வலியேமால், வலியோமால்.
3. உய்குவம்; அடியேம்; ஒருநாணீர், நெடுநாணீர்.
4. வைகுதியெனின் மேலும், வைகுதிரெனில் மேலும், வைகுதிரிதன் மேலோர், இதின்மேலோர், வைகுதிரெனின்மேலோர்; வாழ்வில; மலைவிலை; பிறிதென்பான், பெரிதென்பான், பெரிதென்றான். (31)

இராமபிரான் கூறுதல்

678. அண்ணலு மதுகேளா வகநிறை யருண்மிக்கான்
வெண்ணிற நகைசெய்தான் வீரநின் னுழையாமப்
புண்ணிய நதியாடிப் புனிதரை வழிபாடுற்
றெண்ணிய சிலநாளிற் குறுகுது மினிதென்றான்.

அண்ணலும் - இராமபிரானும், அதுகேளா - குகன் கூறியவற்றைக் கேட்டு, அகம் நிறை அருள் மிக்கான் - திருவுள்ளத்தில் நிறைந்த பேரருளுடையவனாய், வெள்நிறம் நகை செய்தான் - வெள்ளிய முறுவல் பூத்து, (குகனை நோக்கி) வீர - வீரனே, யாம் - நாங்கள், அ புண்ணியம் நதி ஆடி - அந்தப் புண்ணிய நதிகளில் நீராடி, புனிதரை

வழிபாடு உற்று - தூயவரான முனிவர் பலரை வழிபடுதல் செய்து, எண்ணிய சில நாளில் - அறுதியிட்ட சில நாட்களில் (மீண்டு), இனிது நின்னுழை குறுகுதும் - இனிதாக உன்னிடம் வந்து சேர்வோம், என்றான்—.

குகனது அன்பு மேம்பாடு முற்றும் உணர்ந்த இராமபிரான், அவனிடம் மிக்க கருணையோடு, "நீ எங்களை இப்போது இங்கே தங்கும்படி வற்புறுத்தல் தகாது; குறித்த கால அளவினிறுதியில், நாங்கள் மீண்டு வரும்போது, இங்கே வந்து தங்குவோம்" என்று அவனுக்கு ஆறுதலாகக் கூறினான். 'ஆண்டவை பத்தும் நாலும் பகலலவோ'' என முன்னே கூறியதுபோல, இங்கும் 'எண்ணிய சில நாளில்' என எளிதாகக் கூறுகின்றான். மிக்கான்; முற்றெச்சம்.

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை.

(பி - ம்.) 1. அகனிறை, அகனிடை, அவனிடை.
2. நகைசெய்தென்; நின்னுழையாமிப், வீரனின் னுழையாமிப், வீரநு முழையாமப், வீரனுமுழையாமப், வீரதமு மழியாமல்.
3. புனிதனை.
4. சிலநாளுட், சின்னாளில். (32)

## குகன் கொண்டுவந்த படகில் மூவரும் ஏறுதல்

679. சிந்தனை யுணர்கிற்பான் சென்றனன் விரைவோடும்
தந்தன னெடுநாவாய் தாமரை நயனத்தான்
அந்தணர் தமையெல்லா மருளுதிர் விடையென்னா
இந்துவி னுதலாளோ டிளவலொ டினிதேறா.

சிந்தனை உணர்கிற்பான் - (இராமபிரானது) கருத்தை உணர்ந்த குகன், விரைவோடும் சென்றனன் - விரைவாகச் சென்று, நெடு நாவாய் தந்தனன் - பெரியதொரு படகைக் கொணர்ந்தான்; தாமரை நயனத் தான்-தாமரை இதழ்போலும் கண்களையுடைய இராமபிரான், அந்தணர் தமை எல்லாம் - (உடனிருந்த) அந்தணர்களையெல்லாம், விடை அருளுதிர் என்னா - எனக்கு விடை தந்தருளுங்கள் என்று சொல்லி (அஞ்சலி செய்து), இந்துவின் நுதலாளோடு - பிறைச் சந்திரன் போன்ற நெற்றியையுடைய சீதாபிராட்டியோடும், இளவலொடு - தம்பியோடும், இனிது ஏறா - மகிழ்ச்சியுடன் (ஓடத்தில்) ஏறி அமர்ந்து.

இதுவும் அடுத்த பாட்டும் குளகம். ஏறா, விடுநதி கடிதென்றான் என முடியும். அந்தணர் - அழகிய தண்ணளியுடையார்; முனிவர்கள். இந்து - எட்டாநாட்பிறை. இன்: உவமவுருபு.

(பி - ம்.) 1. சிந்தனையதுகொண்டே; விரைவோடு.
2. தந்தனநெடு.
4. இளவலும்; இனிதென்றான். (33)

### படகின் செலவும் மறையோரின் நிலையும்

680. விடுநனி கடிதென்றான் மெய்யுயி ரனையானும்
முடுகின னெடுநாவாய் முரிதிரை நெடுநீர்வாய்க்
கடிதினின் மடவன்னக் கதியது செலநின்றார்
இடரறு மறையோரு மெரியுறு மெழுகானார்,

நனி கடிது விடு என்றான் - (ஓடத்தை) மிக விரைந்து செலுத்துக என்றானாக, மெய் உயிர் அனையானும் - (இராமபிரானுக்கு) உண்மையான உயிர்போன்ற (நட்புடைய) குகனும், முரி திரை நெடுநீர் வாய் - மடங்கி வரும் அலைகளையுடைய மிக்க நீர்ப்பெருக்கிலே, நெடுநாவாய் - பெரிய அவ்வோடத்தை, முடுகினன் - விரைந்து செலுத்தினன்; அது - அவ்வோடம், கடிதினில் - விரைவாக, மட அன்னம் கதி செல - இளவன்னநடைபோல (அழகாக)ச் செல்ல, நின்றார் - (கரையில்) நின்றவர்களான, இடர்அறு மறையோரும் - துன்பமற்ற முனிவர்களும், எரி உறும் மெழுகு ஆனார் - நெருப்பிற் சேர்ந்த மெழுகுபோல ஆனார்கள் (உருகினார்கள் என்றவாறு).

விடு - கடந்துவிடு என்றலுமாம். முடுக்கினன் எனற்பாலது ஓசை நோக்கி முடுகினன் என நின்றது. முரிதல் - மடங்குதல். ஓடம் விரைந்து சென்றாலும், அதன் செலவு அன்னநடை போல அழகாயிருந்தது. நின்றார்: வினையாலணையும் பெயர். நின்றார் வேடுவரெனினும் ஆம். இடர் அறு: (இன்ப துன்பங்களை ஒரு படித்தாகக் கருதுவோராகலின்) துன்பவுணர்ச்சி யற்ற. அத்தகையவரும் இராமபிரான் பிரிவால் வருந்தியுருகினர். உம்மை: உயர்வு சிறப்பு. "பருவரல் இன்பமென் றிரண்டும், ஒக்க நோக்கிய யோகரும் அருந்துயருழந்தார்" (509). நாவாயின் செலவிற்கு அன்னநடை: 1049, 1073.

(பி - ம்.) 1. விடுகதி; கடிதென்றா.
2. முடுகின நெடுநாவாய், முடுகிய நெடுநாவாய், முடுகினன் விட நாவாய்; முதிர்திரை, முதுதிரை; மொய்ம்பொடு.
3. கடிதினினிடையோடக், கடிதினின் மடனேகக், கடுகினன் மடவன்னக்; கதியிது; கருணையுள்ளவர் போனார்.
4. இடருற, இடருறு; எரியுறு மெழுகொத்தார், எரியிடை மெழுகானார். (34)

### படகு செல்லுதல்

681. பாலுடை மொழியாளும் பகலவ னனையானும்
சேலுடை நெடுநன்னீர் சிந்தினர் விளையாடத்
தோலுடை நிமிர்கோலிற் றுழவிய நெடுநாவாய்
காலுடை நெடுஞெண்டிற் சென்றது கடிதம்மா.

பால் உடை மொழியாளும் - பாலும் தன் இனிமைக்குத் தோற்கத் தக்க இனிய சொற்களையுடைய பிராட்டியும், பகலவன் அனையானும் - சூரியனைப் போன்ற இராமபிரானும், சேல் உடை(ய) நெடு நல் நீர் - சேல் மீன்களையுடைய மிக்க நல்ல (கங்கை) நீரை, சிந்தினர் விளையாட - (அள்ளித்) தூவி விளையாட, தோல் உடை(ய) - (நுனியில்) தோல் இணைக்கப்பெற்ற, நிமிர் கோலின் துழவிய - நேரான தள்ளுகோலால் (நீரைத்) துழாவிச் செலுத்தப்பட்ட, நெடு நாவாய் - நெடிய படகு, கால் உடை(ய) நெடு ஞெண்டில் - பல கால்களையுடைய பெரிய நண்டு போல, கடிது சென்றது - விரையச்சென்றது. அம்மா: அசை.

இருபுறமும் நீரைத் துழாவித் தள்ளும் உந்து கோல்கள் நண்டின் கால்கள் போல் இருக்க, ஓடம் பெரியதொரு நண்டுபோல் இருந்தது என்ற கற்பனை அழகு நோக்கத்தக்கது. கோல், துடுப்பும் ஆம். தோல் உடைய - செலுத்தலுடைய என்று பொருள் கொள்வாரும் உளர்; தோலுட - ஓட்டுதல்; தெலுங்குச் சொல்.

படகிற் செல்லும்போது, இராமபிரான் வனவாசத்தை இனிது முடித்துக்கொண்டு சேமமாகத் திரும்பி வருகை குறித்துப் பிராட்டி கங்காதேவியைத் தொழுதனளென்று வான்மீகம் கூறுகின்றது.

(பி . ம்.) 1. பகலவன் மரபோனும்.
2. சேலுடை நெறிநன்னீர், சேலிடை நெடுநன்னீர், சேலுக நெடு நன்னீர்; விளையாடித்.
3. தோலிடை; துழவிடவெழு, துழவிடநெடு, துழவிடநடு, துழவின நெடு, துழவினனெடு; மு. கோலுடைமரமூன்றிக் கொண்டிட நெடுநாவாய்.
4. நெடுநண்டிற், தண்டிற், வலிதண்டிற்; சென்றன. (35)

## மூவரும் கரையேறுதல்

682. சாந்தணி புளினத்தின் றடமுலை யுயர்கங்கை
காந்தின மணிமின்னக் கடிகமழ் கமலத்தின்
சேந்தொளி விரியுந்தெண் டிரையெனு நிமிர்கையால்
ஏந்தின ளொருதானே யேற்றின ளினிதப்பால்.

சாந்து அணி - சந்தனத்தை அணிந்த, புளினம் தடமுலை - மணற் குன்றுகளாகிற பெரிய தனங்களையுடைய, உயர் கங்கை-(பெருமையால்) உயர்ந்த கங்காதேவி, காந்தின மணிமின்ன - ஒளிவீசும் மாணிக்க மணிகள் மின்னுதலால், கடிகமழ் கமலத்தின் சேந்த ஒளி விரியும் - நறுமணம் வீசும் தாமரை மலர் போலச் சிவந்து ஒளி பரவப்பெற்ற தெண்திரை எனும் நிமிர் கையால் - தெள்ளிய அலைகளென்னும் நீண்ட கைகளால், ஒரு தானே ஏந்தினள் - ஒப்பற்ற தானே (இராமபிரான் முதலியோர் சென்ற) ஓடத்தை ஏந்தி, அப்பால் - அக்கரையில், இனிது ஏற்றினள் - இனிதாகச் சேர்ப்பித்தாள்.

கங்கை, மிக்க ஆழமும் வேகமும் சுழிகளும் உடைமையால், தோணிகளைச் சேமமாகச் செலுத்தி மறுகரை சேர்த்தலின் அருமை குறித்துத் தானே இவர்கள் சென்ற தோணி, சேமமாக மறுகரை சேர்தற்குத் துணைபுரிந்தாள் என்கின்றார். சந்தனம், தனங்களுக்கு விசேடணம்; மணற்குன்றுகளுக்குக் கங்கை யீர்த்துவந்து ஒதுக்கிய சந்தன மரங்கள் அணி செய்தன என்க. அத்து, இன்; சாரியைகள். செவ்வொளி விரிந்த திரை என்றமையால், மணி மாணிக்கம் என்று கொள்க. கடிகமழ்தல், தாமரைக்கு விசேடணம்.

(பி - ம்.) 1. சாந்தனை, சாந்தனோ; புளினத்திற்றடமுலை, புளினத்தின் றடமலை; புரைகங்கை, புரைகொள்கை.
2. காந்தியின்; மணியின்னும், மணிசோதிக்; கடிகமழகலல்குற், கடிகமழ்கரையல்குற், கடிகமழ் சுழியல்குல், கருணையின் வடி வோரைச்.
3. சேர்ந்தெரளி, சேர்ந்தொளிர்; விரியுந்தண், விரியுந்திண், விரையுந் தண்; திரைகையால், கையாள், நுரைக்கையால்.
4. ஏந்தினளொருநாளே; ஏற்றினன், ஏறினன்; இனிதன்பால், இனி தின்பால், இனிதிப்பால், இனிதம்மா, அளிதன்பால், எளிதப்பால், எளிதன்பால். (36)

### இராமன் கேட்கக் குகன் கூறுதல்

683. அத்திசை யுற்றைய னன்பனை முகநோக்கிச்
சித்திர கூடத்திற் சென்னெறி புகலென்னப்
பத்தியி னுயிரீயும் பரிவின னடிதாழா
உத்தம வடிநாயே னோதுவ துளதென்றான்.

ஐயன் அ திசை உற்று - இராமபிரான் (கங்கையின்) தென் கரை யைச் சேர்ந்து, அன்பனை முகம் நோக்கி - பேரன்பனான குகனைப் பார்த்து, சித்திர கூடத்தில் செல் நெறி புகல் என்ன - சித்திர கூடத் துக்குச் செல்லும் வழியைச் சொல்லுக என்று கேட்க, பத்தியின் - (இராமபிரான்பால் உள்ள) பத்தியினால், உயிர் ஈயும் பரிவினன் - (அவன் பொருட்டு) உயிரையும் கொடுக்கும் உள்ளன்புடைய குகன், அடி தாழா (பெருமானுடைய) திருவடிகளை வணங்கி, உத்தம - புருஷோத்தமா, அடிநாயேன் - உன் அடித் தொண்டனான நாயேன், ஓதுவது உளது என்றான் - விண்ணப்பித்தல் ஒன்றுண்டு என்றான்.

இராமபிரானைப் பிரிய மனமில்லாத குகன், இன்னமும் அப் பெருமானிடம் தன் ஆசையை விண்ணப்பிக்கக் கருதி, "அடிநாயேன் ஓதுவது உளது" என்றான்.

சித்திரகூட மலைக்குச் செல்லும் வழியைக் குகனிடம் கேட்டதாக வான்மீகத்துள் இல்லை. இராமபிரான் தங்குவதற்கு ஏற்றவிடம் அது என்று பரத்துவாச முனிவர் கூறியதாக அங்கே கூறப்பட்டுள்ளது.

(பி - ம்.) 1. உறவையன்; முகனேக்கிச்.
2. சித்திர கூடத்தின்; புகலென்னுப் பகரென்னப்.
3. பத்தியினுயிருய்யும், பத்தியினுயிர்ரும்; அடிதாழ, அடிதாழ்ந்தே.
4. அடியேனுன், வடிவன்னுய்; கூறுவதுளதென்னு. (37)

### குகன் விண்ணப்பம்

684. நெறியிடு நெறிவல்லே னேடினென் வழுவாமல்
நறியன கனிகாயு நறவிவை தரவல்லேன்
உறைவிட மமைவிப்பே னெருநொடி வரையும்மைப்
பிறியல னுடனேகப் பெறுகுவெ னெனிநாயேன்.

நாயேன் உடன் ஏகப் பெறுகுவென் எனின் - அடியேன் உம்முடன் வரப் பேறு பெறுவேனுனல், (காட்டில்) நெறி - பெருவழிகளையும், இடு நெறி - சிறு (கிளை) வழிகளையும், வல்லேன் - (அறிந்து கூற) வல்லவனுவேன்; வழுவாமல் - பழுது படாமல், நறியன - நல்லனவான, கனி காயும் நறவு இவை - பழங்களும் காய்களும் தேனுமாகிய இவற்றை, நேடினென் தரவல்லேன் - (அவ்வப்போது) தேடிக் கொணர்ந்து தர வல்லவனுவேன்; உறைவு இடம் அமைவிப்பேன் - (அங்கங்கே) தங்குதற்குரிய குடில்களை (ஏற்றவாறு) அமைப்பேன்; ஒரு நொடிவரை - ஒரு நொடிப்பொழுதும், உமை பிறியலன் - உம்மைப் பிரிய மாட்டேன்.

இதுமுதல் நான்கு பாடல்களில் குகனது விண்ணப்பம் கூறப்படும். அவை நான்கும் ஒரு தொடர். தன் வேண்டுகோளின்படி தன்னூரில் தங்க இராமபிரான் மனங்கொள்ளாமை உணர்ந்தான், தன்னை உடனழைத்தேகுமாறு விண்ணப்பிக்கின்றுன். இடுநெறி=இடுகுநெறி - ஒடுக்கமான வழி. நெறி இடும் நெறி வல்லேன் - (வேண்டிய இடங்களில் புதிதாக) வழி அமைக்கும் வகையில் வல்லேன் என்றலுமாம். நேடினென் : முற்றெச்சம். நறியன : வினையாலணையும் பெயர். கனி, நறவு என்றவற்றின்பின் எண்ணும்மை விரிக்க. பிறியலன் : எதுகை பற்றிய விகாரம். பெறுகுவன் : கு, சாரியை. உடனேகப்பெறின் என்றது உடன்வர அருள் புரிதல் வேண்டும் என்னும் குறிப்பு.

(பி - ம்.) 1. நெறியிடுநெறி செல்வேன், நெறியறி குறிவல்லேன், நெறியிடை நெறிவல்லேன், நெறியெனில் நெறிவல்லேன், நெறிசெல்வேன்; நேடின, நேடிய, நெடியவன், நெடியன், நொடியினில், ஏவிய.
2. கறிகாயும், கறியாவும், காயுகல்; நறியன, நறுவிய, நன்றவை.
3. உறைவிடன், அமைவிப்பன், ஒரு நொடியளவும்மைப், நொடியவரை யளவும்மைப்; நொடிவரை வரையும்மைப், ஒருநொடிவரையளவு.
4. பிறிகிலென், பிறிகலென், பிறிவிலன்; பெறுகுவெனினி நாயேன், இனியானே, பெறுகுவனினிநாயேன். (38)

685. தீயன வகையாவுந் திசைதிசை செலநூறித்
தூயன வுறைகானந் துருவினென் வரவல்லேன்
மேயின பொருணாடித் தருகுவென் வினைமுற்றும்
ஏயின செயவல்லே னிருளினு நெறிசெல்வேன்.

தீயன வகை யாவும் - தீய விலங்கு முதலியவற்றின் வருக்கங்களை யெல்லாம், திசை திசை செல்ல நூறி - பல திசைகளிலும் சென்று (தேடி) அழித்து, தூயன உறை கானம் - நல்லன வாழும் காடுகளை, துருவினென் வரவல்லேன் - ஆராய்ந்துவர ஆற்றலுடையேன்; மேயின பொருள் நாடி தருகுவென் - தேவரீர் விரும்பிய பொருள் (எது வாயினும்) தேடிக் கொணர்ந்து தருவேன்; ஏயின வினை முற்றும் செய வல்லேன் - தேவரீர் ஏவும் தொழில்களை முழுதும் செய்து முடிப்பேன்; இருளினும் நெறி செல்வேன் - (வேண்டும்போது) இருளிலும் வழி அறிந்து நடப்பேன்.

'தங்கும் இடங்களில் தீய விலங்கு முதலியவற்றால் தீங்கு நேராதவாறு அவற்றையெல்லாம் துருவித் தேடி அழித்துவிடுவேன்; இனிதாகத் தங்குதற்கேற்றவாறு நல்லுயிர்கள் வாழும் இடங்களை நாடியறிந்து வருவேன்' என்கின்றான். தீயன, தூயன, அவ்வவ்வகை உயிர்களைக் குறித்தன. வகை யாவும் என்பதனைத் தூயவற்றோடும் ஒட்டுக. தீயன - சிங்கம், புலி, கரடி, பாம்பு முதலியன. தூயன - பசு, மான், மயில் முதலியன. செல - சென்று; எச்சத் திரிபு. ஏயின வினை முற்றும் என மாறுக.

(பி - ம்.) 1. தீயென; அவையாவும், உளயாவும், வயமாவும், வனமாவும்.
3. மேயன, மேவின; வினைமற்றும்.
4. ஏயன; செலவல்லேன், நெறிசெல்வன், நெறிசெய்வேன், நெறி வல்லேன், எறிவல்லேன். (39)

686. கல்லுவென் மலையேனுங் கவலையின் முதல்யாவும்
செல்லுவெ னெறிதூரஞ் செறிபுன றரவல்லேன்
வில்லின முளெனொன்றும் வெருவலெ னிருபோதும்
மல்லினு முயர்தோளாய் மலரடி பிரியேனால்.

மல்லினும் உயர் தோளாய் - மற்போரிலும் வல்ல உயர்ந்த தோள்களையுடைய ஐயனே, மலையேனும் கல்லுவென் - (நீர் பெறுதற் பொருட்டு) மலைப்பாங்கான இடமாயினும் (அங்கே) தோண்டுவேன்; கவலை முதல் நெறி யாவும் செல்லுவேன் - கவர்த்த வழி முதலான மலைப் பாதைகள் எவற்றிலும் செல்லுவேன்; (அவ்வாறு சென்று), தூரம் செறி புனல் தரவல்லேன் - நெடுந்தூரத்தில் உள்ள நீரையும் கொணர்ந்து தரவல்லேன்; வில் இனம் உளென் - வில் பலவற்றை உடையேன் (விற்பிடித்த சுற்றத்தார் பலரை உடையேன்); ஒன்றும் வெருவலென் - ஒன்றுக்கும் அஞ்சமாட்டேன்; இருபோதும் - (பகல், இரவு என்ற) இரண்டு காலங்களிலும், மலர் அடி பிரியேன் - (தேவரீருடைய) தாமரை மலரைப்போன்ற திருவடிகளைப் பிரிந்திரேன். ஆல்: அசை.

நீர் இன்றியமையாததாகலின், 'அஃதரிதான இடங்களில் அதனைப் பெறும் பொருட்டு மலையைக் கல்லி ஊற்றுண்டாக்கியோ, இடைஞ்ச

லான வழிகளில் நெடுந்தூரம் சென்ளுே, நல்ல நீரைக் கொணர்ந்து தருவேன்; அம்முயற்சியில் வரும் துன்பங்களுக்குச் சிறிதும் சலியேன்' என்கின்ருன். இராமபிரான் விற்போரில் வல்லவனென்பது பிரசித்தம்; அவன் தோள்கள், அவன் மற்போரிலும் வல்லவனென்பதைத் தெரிவிக்கின்றன என்பான், 'மல்லினும் உயர்தோளாய்' என்ருன். உம்மை, இறந்தது தழுவியது. கவலையின்: இன், வேண்டா வழிச் சாரியை. கவலையின் முதல் - கவலைக்கிழங்கு என்பாரும் உளர்; அதனைக் கொணர்தலை ஓர் அருஞ் செயலாகக் குறித்தல் அத்துணைச் சிறப்புடையதன்று.

(பி - ம்.) 1. கல்லுவன்; மலைமேலும்; கயிலையின்.
2. செல்லுவன், செல்லுவம், செல்குவன்.
3. வில்லின முளதொன்றும், வில்லினு முளதொன்றும், வில்லினு முளனென்றும், வில்லினுமுளனென்றும், வில்லினு முன்னென்றும், வில்லியல்படையாகி, படையாதி, வில்லிறு முளனென்றும், வெல்லினுமுளனென்றும், வெருவலெனெருபோதும், வெருவலுனிரு போதும், மிகவுளேனெருபோதும், மிகவுளேனெருபோதும்.
4. பிரியேனுன், பிரியாதேன். (40)

687. திருவுள மெனின்மற்றென் சேனையு முடனேகொண்
டொருவலெ னொருபோது முறைகுவெ னுளராஞர்
மருவல ரெனின்முன்னே மாள்குவெ னழிகல்லேன்
பொருவரு மணிமார்பா போதுவெ னுடனென்ருன்.

பொருவு அரு மணி மார்பா - உவமை வேறு கூறுதற்கரிய அழகிய திருமார்புடைய ஐயனே, திருவுளம் எனின் - தேவரீர் திருவுளச் சம்மதமானுல், என் சேனையும் உடனே கொண்டு - என் படைகளையும் என்னுடன் அழைத்துக்கொண்டு, ஒருபோதும் ஒருவலென் உறைகுவென் - ஒரு பொழுதும் நும்மைப் பிரியாது தங்கியிருப்பேன்; மருவலர் உளர் ஆனுர் எனின் - பகைவர் எவரேனும் (எப்போதாவது) உண்டானுல், அழிகல்லேன் - அவர்களுக்கு அஞ்சிப் பின்னிடாமல் (பொருது), முன்னே மாள்குவென் - (வெற்றி கிட்டாவிடில்) நுமக்கு முன்னே நான் மாள்வேன்; (இக்காரணங்கள்பற்றி), உடன் போதுவென் - உம்முடன் வருவேன் (வர அருள் புரிதல் வேண்டும்); என்ருன் —. குகன் என்பது அதிகாரத்தால் கொள்க. மற்று: அசை.

குகன், எங்ஙனமேனும் இராமபிரானைப் பிரியாதிருத்தல் வேண்டுமென்று கருதி ஆராமையால் கூறியவை இதுகாறும் நான்கு பாடல்களில் கூறப்பெற்றன. புண்ணியப் புனலாடிப் புனிதரை வழிபட்டுத் தூய வாழ்வு கொள்ளக் கருதும் ஐயனுக்குப் படைகளின் ஆரவாரம் பொருந்துமோ என்ற ஐயத்தால், 'திருவுளமெனின் என் சேனையையும் உடனே கொண்டு வருவேன்' என்ருன்.

(பி - ம்.) 2. ஒருவலெனிருபோதும், ஒருவலெனெப்போதும், ஒருவிலனிரு போதும்; உறைகுவர்; உளராஞேர்.
3. மருவலருளராஞல், மருவலரவரெல்லாம்; மாள்குவென் மிகையல லேன், மிகையில்லேன், வசையில்லேன், வசையல்லேன், மாயிகு வென் வசையில்லேன், மடிவுறு மறம்வல்லேன், மாள்குவெஞெழி கல்லேன், மிகைவல்லேன். (41)

இராமபிரான் குகனைத் தோழனென்றல்

688. அன்னவ னுரைகேளா வமலனு முரைநேர்வான்
என்னுயி ரனையாய்நீ யிளவலுன் னிளையானிந்
நன்னுத லவணின்கே ணளிர்கட னிலமெல்லாம்
உன்னுடை யதுநானுன் றொழிலுரி மையினுள்ளேன்.

அன்னவன் உரை கேளா - அக்குகன் வார்த்தைகளைக் கேட்டு, அமலனும் - குற்றமற்ற இராமபிரானும், உரை நேர்வான்-(அவனுக்கு) மறுமொழி கூறுவானாகி, நீ என் உயிர் அனையாய் - நீ என்னுயிர் போல் வாய் (நான் வேறு நீ வேறு அல்லேம்); இளவல் உன் இளையான்- இந்தத் தம்பி உன் தம்பியாவான்; இ நல்நுதலவள் நின் கேள் - அழகிய நெற்றியை உடைய இந்தச் சீதை உனக்கு உறவினளாவாள்; நளிர் கடல் நிலம் எல்லாம் உன்னுடையது - குளிர்ந்த கடல் சூழ்ந்த இந்நாடாட்சி முழுதும் உன்னுடையதாகும்; நான் உன் தொழில் உரிமையின் உள்ளேன் - நானும் உன் தொழிலுக்குரிமையுடையவனு யிருக்கின்றேன்.

இதுமுதல் நான்கு கவிகள் ஒரு தொடர். குகன் தன்னுடன் வருதலைத் தவிர்த்து அங்கேயே இருத்தல் வேண்டுமென்பதனைத் தக்க காரணங்களுடன் இராமபிரான் கூறுவதை அவற்றிற் காணலாம். 'நமக் குள் வேற்றுமையின்றிக் கலந்து ஒன்றுபட்டு விட்டோமாதலால், என் னுடையனவும் உன்னுடையன, உன்னுடையவும் என்னுடையனவே; நமக்குள் யார் யாருக்குப் பணிசெய்வது என்பதில்லை; நீயும் எனக்குச் செய்யவேண்டியவன்; அங்ஙனமே நானும் உனக்குரியவன்; ஆதலால், மேல் நிகழ வேண்டியவற்றை நாம் கலந்து செய்வோம்' எனச் சாதுரிய மாகக் குகன் மனங்கொளக் கூறுகின்ருன் அண்ணல். 'நான் உன் தொழிலுரிமையினுள்ளேன்' என்றது, 'நீ செய்யும் பணிகளை நான் ஏற்றற்குரிமையுடையேன்; அங்ஙனமே நான் உனக்குத் தொழில் செய்தற்கும் நீ உரியாய்' என்ற இருபொருள் படுமாறு அமைந்துள்ளது. நம்மில் வேற்றுமையில்லை என்றதற்கேற்ப, உறவு முறைகளையும் குறித்தான். 'நின் கேள்' என்றது, உன் சகோதரன் மனைவி, கொழுந்தி என்பது குறித்தது. இதன் விளக்கம்போல் அமைந்துள்ளது, சுந்தர கண்டத்துள் பிராட்டி கூற்ருக வரும், "ஆழ நீர்க்கங்கை அம்பி கடாவிய, ஏழை வேடனுக் கெம்பியுன் றம்பிநீ, தோழன் மங்கை கொழுந்தி யெனச்சொன்ன, வாழி நண்பினை யுன்னி மயங்குவாள்" (சுந்தர. 352)

என்பது: இந்நட்பினை வியந்து திருமங்கை மன்னன், "ஏழை யேதலன் கீழ்மக னென்னா, திரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து, மாழை மான்மட நோக்கியுன் தோழி உம்பி யெம்பியென் றொழிந்திலை யுகந்து, தோழ னீயெனக் கிங்கொழி யென்ற சொற்கள் வந்தடி யேன்மனத் திருந்திட, ஆழி வண்ணநின் னடியிணை யடைந்தேன்" (பெரிய திருமொழி. 5. 8: 1.) என்று மனமுருகிப் போற்றுகிறார்.

(பி - ம்.) 1. உரை செய்வான்.
2. என்னுயிரனையானீ, என்னுயிரனையாயிவ், இன்னுயிரனையாய்நீ, அனையாயிவ்; இளவலுமிளையானிந், இளவனின்னிளையானிந்த.
3. நன்னுதலிவள் நின்கேள், நன்னுதலிவளுன்கேள்; நளிகடல் நிலமெல்லாம், உலகெல்லாம், நளிர்கடலுலகெல்லாம்.
4. நானின்; தொழிலுரிமையில், தொழிலுரிமையும், நானுன்னுரிமையினுளனென்றான், உரிமையினுளனென்னா, உரிமையிலுளனென்றான், உரிமையுமுளனென்ன, தோழமையினிலுள்ளேன். (42)

689. துன்புள தெனினன்றோ சுகமுள ததுவன்றிப்
பின்புள திடைமன்னும் பிரிவுள தெனவுன்னேல்
முன்புளெ மொருநால்வே முடிவுள தெனவுன்னா
அன்புள வினிநாமோ ரைவர்க ளுளரானோம்.

(இராமபிரான் பின்னும் கூறுவான்:) துன்பு உளது எனின் அன்றோ சுகம் உளது - துன்பம் உளதானாலன்றோ (அங்கே) சுகமும் உளதாகும்? அது அன்றி - அவ்வாறு எண்ணுதலன்றி, பின்பு உளது இடை - பின்னே உளதாகும் நம் இன்பக் கூட்டத்திற்கிடையில், பிரிவு மன்னும் உளது என உன்னேல் - பிரிவாகிய துன்பம் மிகவும் (நெடுங் காலம்) உள்ளதே என்றெண்ணாதே; முன்பு - உன்னைக் கண்டு கூடுமுன், ஒரு நால்வேம் உளெம் - (உடன்பிறந்தாராய்) நால்வர் உள்ளோம்; இனி - இப்போது, முடிவு உளது என உன்னா அன்பு உள நாம் - எல்லையுண்டென்று நினைத்தலாகாத (அளவுகடந்த) அன்புடைய நாம், ஓர் ஐவர்கள் உளர் ஆனோம் - ஐந்து பேர் அவ்வாறு (உடன் பிறந்தவராய்) உள்ளவராகிவிட்டோம்.

இராமபிரான், குகன்பால் கொண்ட சகோதரபாவத்தை மீண்டும் வலியுறுத்துகின்றான். 'வெயில் இருந்தால்தான் நிழலின் அருமை தெரியும்; அதுபோலத் துன்பமிருந்தால்தான் இன்பமும் சிறப்புறும். இது உலக நியதி. எனக்கு வனவாசம் துன்பமென்றோ, என் பிரிவு உனக்குத் துன்பமென்றோ எண்ணாதே; நம் அன்புப் பிணிப்பு எப்போதும் உளதாகும்' என்கின்றான்.

துன்புளதெனினன்றோ சுகமுளது: "துன்பமுற்றவர்க் கல்லால் இன்பமில்லை" (சீவக. 579.) ஐவர்கள் உளரானோம்: "குகனொடும் ஐவரானோம் முன்பு" (யுத்த. 449).

(பி - ம்.) 1. துன்புள; எனிலன்றே, எனிலொன்றே, ஒன்றே, உண்டே, என லொன்றே, அது வன்றே; சுகமுள, சுகமெனல், சுகமெனில்; அதுவன்றிப்.
2. பின்புளதினி, பின்புளதினில், பின்புளதினும், இன்புளதெனின்; விரிவுளது எனவுன்னேன்.
3. முன்புளவொரு, முன்புளதொரு; நால்வோம், நால்வர்; எனவுன்னல்,
4. அன்புளதினி, அன்புளமினி; உளரானேம். (43)

690. படருற வுளனும்பி கானுறை பகலெல்லாம்
இடருறு தகையாயோ யானென வுரியாய்நீ
சுடருறை வடிவேலாய் சொன்முறை கடவேனன்
வடதிசை வருமந்நா ணின்னுழை வருகின்றேன்.

சுடர் உறை வடிவேலாய் - ஒளிதங்கிய கூரிய வேலை உடையவனே, படர் உற - (என்னோடு) வருவதற்கு, உம்பி உளன் - உன் தம்பியாகிய இலக்குவன் உள்ளான்; கான் உறை பகல் எல்லாம் - நான் காட்டில் வசிக்கும் காலமுழுதும், யான் என உரியாய் நீ - நான் இருந்து காப்பது போலக் காத்தற்கு உரியவன் நீ; (ஆதலால்), இடர் உறு தகையாயோ - (என்னுடன் வந்தோ, அன்றி என் பிரிவு குறித்தோ) துன்புறத் தக்காயோ? (அல்லை); சொல் முறை கடவேல் - நான் சொல்லும் முறையை மீறாதே; நான் வடதிசை வரும் அ நாள் - நான் (மீண்டு) வடக்கு நோக்கி (நாட்டுக்கு) வரும் அந்நாளில், நின் உழை வருகின்றேன் - உன்னிடம் (நிச்சயமாக) வருவேன்.

'எனக்குத் துணையும் பாதுகாப்புமாக உடன் வருதற்கென்றே இலக்குவன் இருக்கின்றான்; அவனொருவனே போதும். வேற்றுமையில்லாத நம்மில் ஒருவர், இங்கிருந்து நாடு காத்தல் வேண்டும்; அதற்குரியவன் நீ; ஆதலால் என் சொல் கடவாது இங்கிரு; நானும் சொன்ன சொல் கடவாது மீண்டு வரும்போது இங்கு வந்து தங்குவேன்' என்றான் இராமபிரான். தான் வருதலின் உறுதி குறித்தும், வருங்காலம் அண்மையிலுள்ளது போலத் தோற்றுதற்குமாக 'வருகின்றேன்' என நிகழ்காலத்தாற் கூறுகின்றான். தகையாயோ என்றதில் ஓகார வினா எதிர்மறை குறித்தது. கடவேல் நான், கடவேன் நான் என இருவகையாகப் பிரித்தற்கேற்றவாறு அமைந்துள்ளதும் காணத் தகும். இப் பாடற் கருத்தின் விளக்கம் போன்றமைந்துள்ளது அடுத்த பாடல்.

(பி - ம்.) 1. படருறவுளனும்பி, படருறவுன்னும்பி; யானுறை.
2. இடருறல், இடரறு, இடர்படு, இடையுறு; பகையாபோய், பகையாய்போய், பகையாய்போ, பகையாய்நீ, பகையோய் நீ, படையாய் நீ, தகையாய் நீ.
3. சுடருறு வடிவேலோய்; தொன்முறை; கடவேனல், கடவேனே, கடவேன்யான்.
4. வருநாளில். (44)

691. அங்குள கிளைகாவற் கமைதியி னுளனும்பி
இங்குள கிளைகாவற் காருள ரிசையாய்நீ
உன்கிளை யெனதன்றோ வுறுதுய ருறலாமோ
என்கிளை யிதுகாவென் னேவலி னினிதென்றான்.

அங்கு உள கிளை காவற்கு - அங்கே (அயோத்தியில்) உள்ள சுற்றத்தாரைக் காத்தற்கு, அமைதியின் - ஏற்ற தகுதியோடு, உம்பி உளன் - உன் தம்பி பரதன் இருக்கின்றான்; இங்கு உள கிளை காவற்கு - இங்குள்ள சுற்றத்தாரைக் காத்தற்கு, ஆர் உளர் - (நீ என்னுடன் வந்துவிட்டால்) இங்கே யார் இருக்கின்றார்கள்? நீ இசையாய் - நீ சொல்; உன்கிளை எனது அன்றோ - உன் சுற்றமெல்லாம் என் சுற்ற மன்றோ? உறு துயர் உறல் ஆமோ - (அச்சுற்றத்தார் காப்பவரின்றி) மிக்க துன்புறுதல் தகுமோ? (ஆதலால்) என் ஏவலின் - என் கட்டளையால், என் கிளை இது - என் சுற்றமாகிய இதனை, இனிது கா - (இங்கிருந்து) இனிது காப்பாயாக; என்றான் - என்று கூறி முடித்தான் இராமபிரான்.

'நான் இருந்து காத்தற்குரிய அயோத்தியில் பரதன் இருந்து காப்பான்; அவன் எல்லாத் தகுதியும் உடையவன். இங்குள்ள உன் ஊரும் சுற்றமும் எனக்கும் உரியனவாகலின், என் கட்டளையின்படி நீ இங்கிருந்து காத்தல் வேண்டும்; இங்கே காப்பாரின்றி மக்கள் துன்புற லாகாது' என்று கூறி முடித்தான் இராமபிரான். இவை நான்கு பாடல்களால், இராபிரான், குகன் தன்னுடன் வருதலைத் தவிர்த்தற்குத் தக்க காரணம் காட்டி அவனைத் தெருட்டினமை கூறப்பெற்றது.

(பி - ம்.) 1. அமைதியினுளனம்பி, அமைதியனுளனும்பி, அமையியவுளனும்பி.
2. காவற்கியாருளர், இங்குள காவற்கும் யாருளர்; உரை செய்யாய், உரைசெய்வாய், அரசையா.
3. உங்கிளை.
4. எங்கிளை யிதுகா, என்கிளையதுகா; ஏவலினின்றென்றான், ஏவலினில் லென்றான், ஆணையினின்றென்றான். (45)

குகன் விடைகொள்ள மூவரும் மேலே செல்லுதல்

692. பணிமொழி கடவாதான் பருவர லிகவாதான்
பிணியுடை யவனென்னும் பிரிவினன் விடைகொண்டான்
அணியிழை மயிலோடு மையனு மிளையோனும்
திணிமர நிறைகானிற் சேணுறு நெறிசென்றார்.

பிணி உடையவன் என்னும் பிரிவினன் - (இவன் ஏதோ) நோயுடையவன் என்று கண்டோர் கூறுமாறு பிரிவுத் துன்பமுற்றவனான குகன், பருவரல் இகவாதான் - அத்துன்பத்தினின்றும் நீங்காதவனும், பணிமொழி கடவாதான் - இராமபிரானின் கட்டளை மொழிகளைக் கடக்கமாட்டாதவனும் (ஆகி), விடை கொண்டான் - (இராமபிரான்

பால்) விடை பெற்றுக்கொண்டான்; (இப்பால்) அணி இழை மயிலோடும் - அழகிய ஆபரணங்கள் பூண்ட மயில் போலும் சாயலையுடைய பிராட்டியோடு, ஐயனும் - இராமபிரானும், இளையோனும் - இளையவனான இலக்குவனும், திணி மரம் நிறை கானில் - செறிந்த மரங்கள் நிறைந்த காட்டில், சேண் உறு நெறி - நெடுந்தூரம் செல்லுதற்குரிய வழியில், சென்றார் - நடந்து போனார்கள்.

இராமபிரானுடைய கட்டுரை வன்மையால், குகன் ஏதுங் கூற வகையின்றித் துயரோடு பிரியாவிடை பெற்று நிற்க, மூவரும் மேலே வழி நடக்கலாயினர் என்றவாறு.

பிரிவினன்: வினையாலணையும் பெயர். கடவாதான், இகவாதான்: முற்றெச்சம்.

(பா - ம்.) 1. பணிமொழி இகவாதான், இகவார்தாள், இகழாதான், இழவாதான்.
2. பிணியுடையன்னென்னும், பிணியுடையவரென்னும், பிணியுடைமனனென்னும், மனனென்னும் பேதினன், பேரினன்.
3. மயிலாளும், மகளோடும், அணியிழை யவளோடும்; இளையானும்.
4. திணிமரனணி, திணிமரனிறை; சேணுறநெறி. (46)

குகப் படலம் முற்றும்.

# 8. வனம் புகு படலம்

வனத்துட் புகுந்து சென்றமை கூறும் படலம் என இதன் பொருள் விரியும். இராமபிரான் முதலிய மூவரும், கங்கையின் தென்கரையில் குகனை விட்டுப் பிரிந்து மேலே செல்லத் தொடங்கி, காடும் மலையுமான சில பகுதிகளைக் கடந்து, பரத்துவாசாச்சிரமம் சேர்ந்து, அங்கே அம்முனிவரால் உபசரிக்கப்பெற்று, அவர்பால் விடைகொண்டு, மேலும் தெற்கு நோக்கிச் சித்திரகூட மலையை அடையக் கருதிச் செல்லும் வழியில், ஒரு பாலைவனத்தைக் கண்டு, அதனைக் கடப்பது குறித்துச் சிந்தித்தபோது, அந்நிலம் குளிர்ந்து மருதம் போலாக, அதனையும் எளிதில் கடந்து சித்திரகூட மலையைக் கண்டனர் என்ற செய்தி இப்படலத்துட் கூறப்படும்.

இனிய காலம்

(கலிவிருத்தம்)

693. பூரியர் புணர்மாதர் பொதுமன மெனமன்னும்
ஈரமு முளதில்லென் றறிவரு மிளவேனில்
ஆரியன் வரவோடு மமுதள வியசீதக்
காருறு குறிவானங் காட்டிய தவணெங்கும்.

பூரியர் புணர் - கீழ்மக்கள் சேர்கின்ற, பொது மாதர் மனம் என - பொதுமகளிர் மனம்போல, ஈரமும் உளது இல் என்று அறிவு - சிறிதளவு ஈரமும் உள்ளதோ இல்லையோ என்று அறிதல், மன்னும் அரும் இளவேனில் - மிகவும் அரிதாகிய அவ்விளவேனிற் பருவத்தில், ஆரியன் வரவோடும் - இராமபிரான் (வனத்துள்) வந்தவுடன், அவண் எங்கும் - அவ்விடமெங்கும், அமுது அளவிய சீதம் கார் உறு குறி - (உயிர்களுக்கு) அமுதமாகிய நீருண்ட குளிர்ந்த மேகங்கள் வரும்(கார் காலத்தின்) குறியை, வானம் காட்டியது - ஆகாயம் தோற்றுவித்தது.

சிறிதளவு ஈரப்பசையுமின்றித் தரையெங்கும் வறளுதற்குக் காரணமான இளவேனிற் பருவத்தில், இராமபிரான் புகுந்த வனப்பகுதி, கார்ப்பருவம் வந்ததுபோலக் குளிர்ந்து காட்டியது. பசையற்ற தன்மைக்குப் பொதுமகளிர் மனத்தை உவமித்தார்; "பொன்விலைப், பாவையர் மனமும்போற் பசையு மற்றதே" (பால. 354) என்றதும் காண்க. 'ஈரம்' என்றது, இரக்கம், ஈரப்பசை என்ற இரு பொருள்படச் சிலேடையாக அமைந்தது. பொது மாதர் மனம் எனவும், அறிவு மன்னும் அரும் இளவேனில் எனவும் இயைக்க. இராமன் வனம்புகுந்த காலம் இளவேனிற் பருவமென்பது இதனாற் பெறப்படும். நல்லோர்

புகுமிடம் குளிர்ச்சியும் வளமும் உடையதாகும் என்பதை, "அறன் காலை யுறைகாடுகார், மின்னேற்று மழையுண்டு விளைவுண்டெனத் தேடும் விரகோதினன்" (வி. பா. நிரைமீட்சி. 5) என்பதனாலும், நளன் கான் புகுந்தபோது அங்குற்ற நிலையை நைடதம் கூறும் வகையாலும் (கான்புகு படலம். 1-3) அறியலாம்.

(பி - ம்.) 1. பொதுமன மெனமண்ணும், பொதுமன நலமென்னும், புதுமண மெனமன்னும், புதுமணமிதுவென்னும், புதுமன மெனமன்னும், புது வன மெனமன்னும், புலமண மென்னும், புலமனமெனமன்னும்.
2. ஈரமு முளதிலதென்று, ஈரமுமுளதென்றல், ஈரமதலதென்று, ஈர மிதிலனென்றன்று; இளவேனல், முதுவேனில், முதிர்வேனில்.
4. குறிமானக், குறிமாணக்; காட்டிய வனமெங்கும், காட்டியவல ணெங்கும், காட்டினவனமெங்கும். (1)

மூவரும் செல்லுதல்

694. வெயிலிள நிலவேபோல் விரிகதி ரிடைவீசப்
பயின்மர நிழலீனப் பனிபுரை துளிவானப்
புயறர விளமென்கால் பூவள வியதெய்த
மயிலின நடமாடும் வழியினி யனபோனார்.

வெயில் - சூரியன், விரி கதிர் - (தன்) பரந்த கிரணங்களை, இள நிலவேபோல் இடை வீச - இள நிலாப்போல மரங்களினிடையே வீசவும், பயில் மரம் நிழல் ஈன - அடர்ந்த மரங்கள் நிழலைத் தரவும், வானம் புயல் - வானத்திலுள்ள மேகங்கள், பனிபுரை துளி தர - பனி போன்ற (குளிர்ந்த) நீர்த்துளிகளைச் சிந்தவும், இளம் மென்கால் - மெல்லிய தென்றற் காற்று, பூ அளவியது எய்த - பூக்களில் அளாவி (நறுமணத்துடன்) வரவும், மயில் இனம் நடம் ஆடும் - மயிற்கூட்டம் ஆடுதற்கு இடமான, இனியன வழிபோனார் - இனியனவான (காட்டு) வழிகளிலே (நடந்து மூவரும்) போனார்கள்.

இவர்கள் போகும்போது, வறண்ட வெப்பமான காடும் குளிர்ந்த தாக, இன்னாத காட்டு வழிகளும் இனியனவாயின என்கின்றார். கார்ப்பருவத் தோற்றம் காண்டலின், மயிலினம் காட்சிக்கினிதாக ஆடு தலையும் கூறினார். இப்பாடல், "குறித்தமுகில் பந்தரிட்டுக் குறுந்துளி தூற் றிட ஆயர், தறித்தமர மத்தனையும் தழைத்தலர்ந்து பழுத்துதவ" என்ற அழகர் கலம்பகச் செய்யுளடிகளை நினைப்பூட்டுகின்றது.

(பி - ம்.) 1. விரிவுள கதிர்வீசப்.
2. பயன்மரம்; பரிபுரை, பலபுரை, பால்புரை, பலதளிர்; துளிமேகம், துளிவானில், துயில்மேகப்.
3. துயிறர, துயிறரா; பூவளவிய கந்தம், கெந்தம், தெய்வ, தேமா, பூவளவியதந்தம், பூவளவியதாக.
4. வழியினி யனபோனன், வழியினி லவர்போனார், வழியினினயல் போனார், வழியினி னயல்போனார், வழியினி னியல்போனார். (2

### இராமன் சீதைக்கு வனத்திலுள்ள காட்சிகளைக் காட்டுதல்

695. மன்றலின் மலிகோதை மயிலியன் மடமானே
இன்றுயில் வதிகோபத் தினம்விரி வனமெங்கும்
கொன்றைகள் சொரிபோதின் குப்பைகள் குலமாலைப்
பொன்றிணி மணிமானப் பொலிவன பலகாணாய்.

மன்றல் இன் மலிகோதை - நறுமணம் இனிதாக மிக்க கூந்தலையும், மயில் இயல் - மயில்போன்ற சாயலையும் (உடைய), மடமானே - இளமான் போன்றவளே, இன் துயில்வதி - இனிய துயில் கொள்கிற, கோபத்து இனம் விரி - இந்திரகோபப்பூச்சிகள் பரந்த, வனம் எங்கும் - இக்காடெங்கும்,கொன்றைகள் சொரி போதின் குப்பைகள் - கொன்றை மரங்கள் சொரிந்த பூக்குவியல்கள் (கலந்து தோன்றுதல்), பொன் குலம் மாலை — பொன்னாலியன்ற சிறந்த மாலையில், திணி - செறிக்கப் பெற்ற, மணி மான - மாணிக்க மணிகள் போல, பொலிவன பல — விளங்குகின்ற பலவற்றை, காணாய் - நீ பார்.

இதுமுதல் பதினாறு பாடல்கள் ஒரு தொடர்.

பொன்னிறமுடைய கொன்றை மலர்களின்மேல் செந்நிறமுடைய இந்திரகோபப் பூச்சிகள் துயிலும் காட்சி, மாணிக்கக் கற்கள் பதித்த பொன்னாரம் போலக் காணப்படுகின்றது. கோபம்-இந்திரகோபம்; தம்பலப்பூச்சி; கார்காலத்தில் பல இடங்களிலும் காணப்படுவது. ''கொண்டலெழ மின்னுடங்கக் கொடுஞ்சாபம் வளைவுறச்செங் கோபந் தோன்ற...கார்கால மானதெனக் களிக்கு மாலோ'' (வி. பா. வசந்த.5) கொன்றை மலர்களைப் பொன்னிறம் பெற்றது எனல் கவி மரபு. அத்து: சாரியை. ஒப்பு : ''நன்னெடுங் காந்தட் போதி னறைவிரி கடுக்கை மென்பூத், துன்னிய கோபத் தோடுந் தோன்றிய தோற்றந் தும்பி, இன்னிசை முரல்வ நோக்கி யிருநிலம் மலர்க்கை யேந்திப், பொன் னெடுங் காசை யீட்டிக் கொடுப்பதே போன்ற தன்றே'' (கிட்கிந்தா.461.)

(பி - ம்.) 1. மலிகோதாய், மயில்கோதை; மயிலின மடமானே, மயிலியவிள மானே, மயிலிய வியன்மானே, மயிலியன் மடமாதே, மயிலியவிள மாதே.
2. கோபத்தினம் விரவின வெங்கும், விரிவன வெங்கும், அவிர்வன மெங்கும், அவிர்வனவெங்கும்.
3. குப்பைகொள் குலமாலை, குப்பைகள் குவிமாலை, குவிமாமை, குப்பைகளணிமாலைப், குப்பைகளினமாலைப், குப்பைகளென மாலைப். (3)

696. பாணின மிஞிருகப் படுமழை பணையாக
நாணின தொகுபீலி கோலின நடமாடல்
பூணிய வினசாயற் பொலிவது பலகண்ணிற்
காணிய வெனலாகுங் களிமயி லிவைகாணாய்.

களி மயில் இவை-(கார்கண்டு) களிக்கும் இம்மயில்கள், இள மிஞிறு பாண் ஆக - இளவண்டு பாணனாகவும், படுமழை பணை ஆக-முழங்கும் மேகம் மத்தளமாகவும் (கொண்டு), நாணின தொகு பீலி கோலின – சாய்ந்து குவிந்த (தம்) தோகைகளை விரித்துக்கொண்டு, நடம் ஆடல்-நர்த்தனம் பண்ணுதல், பூண் இயல் நின சாயல் பொலிவு அது-ஆபரணங்களணிந்த உன் சாயலின் விளக்கத்தை, பல கண்ணில் காணிய எனல் ஆகும் - (தோகையில் உள்ள இமையாத) பல கண்களாற் காணும் பொருட்டென்னலாம்; காணாய் – (அந்தக் காட்சியைக்) காண்பாயாக.

மயிலின் தோகையில் அமைந்த பீலியைக் கண் என்பர். அவை குவிதலும் விரிதலும் இல்லாதன. கார் வரவு கண்டு களித்துத் தோகை விரித்து ஆடுதல் மயில்களின் இயல்பு; அவ்வாறு இயல்பாக மயில்கள் ஆடியதைப் பிராட்டியின் அழகைத் தம் இமையாத பல கண்களாற் காணும் பொருட்டு அவை தோகை விரித்தாடின எனத் தற்குறிப்பேற்றமாக்குகிறார். மயில்கள் ஆடுதலுக்கு அங்கமாக, வண்டுகளின் இசையும் மேக முழக்கமாகிய முழவும் அமைந்தன. மிஞிறு - வண்டின் ஒரு வகை; இது ஞிமிறு எனவும் வழங்கும். பிராட்டியின் அழகைக் காணப் பற்பல கண்கள் வேண்டுமெனல்: "கமையாள் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணார், இமையா நாட்டம் பெற்றில மென்றார் இருகண்ணால், அமையா தென்றார் அந்தர வானத் தவரெல்லாம்" (பால. 581).

(பா-ம்) 1. பாணின ஞிமிருகப், பாணிள ஞிமிருகப், பாணின மிஞிருகப், பாணிநன் ஞிமிருகப்; படுபணை, பணைகழை, பனிமுகில்; மழையாக, முழவாக.
2. தொடுபீலி; கோலின நடமாடும், நடமாட, நடமாடப், காலின நடமாடப், கேகைய நடமாடப், தோகைகள் நடமாட, நடமாடல், தோலின நடமாடும்.
3. பூணிய நினசாயல், பூணின நினசாயல், சில சாயல்; பொலிவுறு பல கண்ணில், பொலிவுறு மதுகண்ணில், பொலிவுறு வதுகண்ணில்.
4. களிமயிலவை. (4)

697. நெய்ஞ்ஞிறை நெடுவேலி னிழலுறு திறமுற்றிக்
கைஞ்ஞிறை நிமிர்கண்ணாய் கருதின வினமென்றே
மெய்ஞ்ஞிறை விரிசாயல் கண்டுநின் விழிகண்டு
மஞ்ஞையு மடமானும் வருவன பலகாணாய்.

நெய்ஞ்ஞிறை நெடுவேலின் - நெய் மிகப் பூசப்பெற்ற நீண்ட வேல் போல, நிழல் உறு திறம் முற்றி - ஒளியும் மிக்க திறமையும் நிரம்பி, கைஞ்ஞிறை நிமிர் கண்ணாய் - உள்ளங்கை யளவினும் மிக்க (பெரிய) கண்களையுடையவளே, மஞ்ஞையும் மடமானும் - மயில்களும் இளமான் களும் (முறையே), நின் மெய்ஞ்ஞிறை விரி சாயல் கண்டும் - உன் மேனியில் நிறைந்துள்ள மிக்க எழிலைக் கண்டும், நின் விழி கண்டும் - உன்

(மருண்ட) கண்களைக் கண்டும், இனம் என்றே கருதின-தம் இனம் என்றே எண்ணினவாய், வருவன பல - (உன்னை நோக்கி) வருபவை பலவற்றை, காணாய் - நீ பார்ப்பாயாக.

பிராட்டியை மயில்கள் சாயலால் தம் இனம் என்றும், மான்கள் மருண்ட பார்வையால் தம் இனமென்றும் முறையே கருதின என நிரல் நிறையாகக் கொள்க. வேல் கண்களுக்கு ஒளியாலும் செயலாலும் உவமை. அவற்றின் பரப்பளவு, உள்ளங்கையிலும் அடங்காதது; இங்ஙனம் கூறுதல் கவிமரபு; சீவக. 342, 1290, 2006, 2535, 3139 பார்க்க. "குடங்கையி னகன்று.........வாட்கண்" (சூளா. சுயம். 72); "குடங்கையி னெடியவாட்டடங்கண்" (கூர்ம. கண். மணம். 250); "குடங்கையி னகன்றவிழி" (நைடத. நளன் றூது. 4) என்பனவும் காண்க. முதல் மூன்றடிகளின் முதற் சீர்களும் - நகர ஞகரப்போலி.

(பி - ம்.) 1. நெய்நிறை, நெய்ந்நிறை; நிறம் வேலினினிழலுற, நெடுவேலின் நிழலுற, நிறமுற, நிறனுற, நிரைமுத; திறன் முற்றிக், நிறமுற்றிக், நிறைமுற்றிக்.
2. கைஞ்ஞிறன், கைநிறம், கைநிறை, கைந்நிறை, கைமுறை, கைம்முறை; நிமிர் கண்ணுற்; கருதினமினமென்றே, இனமன்றே, கருதியுள்ளுறு மன்பால், கருகினவின மென்றே.
3. மெய்நிறை, மெய்ந்நிறை, மெய்நிற.
4. மைஞ்ஞையும், மையற; மயில் மானும்; அவைகாணாய், இவை காணாய். (5)

698. பூவலர் குரவோடும் புடைதவழ் பிடவீனும்
மாவலர் சொரிசூழற் றுயிலெழு மயிலொன்றின்
தூவியின் மண நாறத் துணைபிரி பெடைதானச்
சேவலொ டுறவூடித் திரிவத னியல்காணாய்.

குரவு அலர் பூவோடும்-குரா மரத்தில் மலர்ந்த பூக்களோடு, புடை தவழ் பிடவு ஈனும் மா அலர் சொரி சூழல் - பக்கங்களில் (தழைத்துப்) பரந்த பிடவமரம் பூத்த மிக்க பூக்களும் சிந்திய இடத்தில், துயில் எழும் மயில் ஒன்றின் தூவியில் - உறங்கியெழுந்த ஆண் மயிலொன்றின் தோகையில், மணம் நாற - (அப்பூக்களின்) நறுமணம் வீச, துணைபிரி பெடை - தன் துணையாகிய அச்சேவலைப் பிரிந்த பெண்மயில், அ சேவலொடு - அந்த ஆண்மயிலோடு, உற ஊடி திரிவதன் இயல்-மிகவும் ஊடல்கொண்டு (அதனை அணுகாது) திரியும் தன்மையை, காணாய் - நீ பார்ப்பாயாக.

குரா, பிடா என்பன மரவிசேடங்கள்; இவை முறையே குரவு, குரவம் எனவும் பிடவு, பிடவம் எனவும் வழங்கும். இம்மரங்கள் கார்காலத்தில் பூக்கும் என்பர். துயிலெழும் மயில், பின் வந்த குறிப் புக்களால் ஆண் எனப்பட்டது. அது வேறொரு பெடையைக் கூடிய தால் அதன் தோகையில் மணம் வீசுவதாகக் கருதிப் பெண்மயில்

ஊடிற்று என, மக்கள் இயல்பை அதன்மேல் ஏற்றிக் கூறுகின்றார். குரவலர் பூ என மாறுக. மா அலர் - மிக்க பூக்கள்; பெரிய பூ எனினும் அமையும். தூவி - தோகை. தான்: அசை.

(பி - ம்.) 1. குரவோடு; புடையுறு பிடவினும், புடைகிழலிடவினும்.
3. தூவியின் மணனுறத், தூவியன் மணநாறத், மணனுறத், மண நாணத், தூவிய மணநாறத்; பெடைகாணச், காணுச்
4. உறவாடித், உற்றேடித்; திரிவதனில்லை, திரிவதினியல், திரிவனவியல், திரிவனபல. (6)

699. அருந்ததி யனையாளே யமுதினு மினியாளே
செருந்தியின் மலர்தாங்கும் செறியித ழினசோகம்
பொருந்திய களிவண்டிற் பொலிவன பொன்னூதும்
இருந்தையி னெழுதீயொத் தெழுவன விவைகாணாய்.

அருந்ததி அனையாளே - (கற்பில்) அருந்ததி போன்றவளே, அமுதினும் இனியாளே - அமிர்தத்தினும் இனிய இயல்புடையவளே, செருந்தியின் மலர் தாங்கும் - செருந்திப் பூவைத் தன்னிடத்தே கொண்ட, செறி இதழ் இன் அசோகம்-அடர்ந்த இதழ்களையுடைய இனிய அசோக மலர்கள், பொருந்திய களிவண்டின் பொலிவன - தம்மிடத்தே மொய்த்த மதுமயக்கமுள்ள வண்டுகளோடு விளங்குவன, பொன் ஊதும்-பொன்னை (உள்ளே வைத்து) ஊதுதற்குரிய, இருந்தையின் எழு - கரியினிடையே எழுகின்ற, தீ ஒத்து எழுவன-தீயைப் போலத் தோன்றுவன; இவை காணாய் - இவற்றைக் காண்பாயாக.

அசோகின் பூ, தீயைப்போன்ற செந்நிறமுடையது; செருந்திப்பூ, பொன் போன்ற மஞ்சள் நிறமுடையது. அசோக மலரில் படிந்த செருந்தி மலர் தீயில் வைத்த பொன் போன்றது; அதன்மேல் மொய்த்த வண்டுகள் கரிபோன்றன. பொற்கொல்லர், தீயில் பொன்னையிட்டு மேலே கரியால் மூடி ஊதும்போது, கரியிடையே தீ மேலெழுந்து தோன்றுவதுபோல, அசோக மலரின் செவ்வொளி வண்டுகளிடையே தோன்றியது என்க.

பிராட்டிக்கு அருந்ததி: "சீல மின்னதென் றருந்ததிக் கருளிய திருவே" (762). செருந்தி பொன்னிறமுடையதென்பது: "தலைநாட் செருந்தி தமனிய மருட்டவும்" (சிறுபாண். 147; "செருந்தி பொன் சொரிதருந் திருநெல் வேலியுறை செல்வர்" (தே. திருஞான.) அசோக மலர் செந்நிறம்: "செந்தீ, ஒண்பூம் பிண்டி" (மதுரைக். 700-701), (குறிஞ்சிப். 118-9); "அணிமல ரசோகம் பூத்தன...அழற்கணை தரித்த போன்றவே" (நைடத. அன்னத்தைக். 36. பி - ம்.)

(பி - ம்.) 2. மலர் தாங்கிச், தங்கும், தங்கிச்; செறியிதழ் வனசோகம், செறி யிதழன சோகம், செறிவிதழ்வன சோகம். செறியிதழன கோங்கம், இதழின கோங்கம், இதழுறுகோங்கம், செறியிதழ்புனை கோங்கம், வனைகோங்கம், செறியிழை வனகோங்கம்.

3. பொருந்தின; களிவண்டைப்; பொதிவன, போலின, பொழிவன.
4. இருந்தையிலெழு, இருந்தையிலெரி, இருந்திரினெழு; எழுவ தொரியல், எழுவனவியல், எழுவனபற, எழுவனவவை, எழுவ தனியல்; பாராய். (7)

700. சேந்தொளி விரிசெவ்வாய்ப் பைங்கிளி செறிகோலக்
காந்தளின் மலரேறிக் கோதுவ கவினாரும்
மாந்தளிர் நறுமேனி மங்கைநின் மணிமுன்கை
ஏந்தின வெனலாகு மியல்பின விவைகாணாய்.

மா தளிர் நறு மேனி மங்கை - மாந்தளிர் போலும் நல்ல மேனியை உடையவளே, சேந்து ஒளி விரி செவ்வாய் பைங்கிளி - சிவந்து ஒளி பரவும் செவ்விய வாயையுடைய பச்சைக் கிளிகள், செறி - இதழ்கள் அடர்ந்த, கோலம் - அழகிய, காந்தளின் மலர் ஏறி - செங்காந்தட் பூவில் தங்கி, கோதுவ - (அதன் இதழை அலகால்) கோதுகின்றவை, கவின் ஆரும் - அழகு மிக்க, நின் மணி முன்கை ஏந்தின எனல் ஆகும் - இயல்பான உனது அழகிய முன்கையில் நீ தாங்கியவை என்று கூறத்தகும் தன்மை வாய்ந்தன; இவை காணாய் - இவற்றைப் பார்ப்பாயாக.

செங்காந்தட் பூவை மங்கையர் கைக்கு உவமை கூறுவராகலின், காந்தட் பூவில் தங்கிய கிளியைப் பிராட்டி வளர்த்துத் தன் கையில் அமர்த்தி அழகு பார்க்கும் கிளி எனலாம் என்கின்றான் எம்பெருமான். மங்கை: அண்மை விளி.

பெரும்பான்மையான அச்சுப் பிரதிகளில் இப்பாடல் முன்னே, "பாணினமிஞிருக" என்பதனை அடுத்துள்ளது.

(பி - ம்.) 1. சேந்தொளிர், சேர்ந்தொளி செங்கோலக்; விரிகோலக்.
2. மலரேறிப் பொலிவது.
3. மடமுன்கை, மலர்முன்கை; அவை காணாய். (8)

701. ஏந்திள முலையாளே யெழுதரு மெழிலாளே
காந்தளின் முகைகண்ணிற் கண்டொரு களிமஞ்ஞை
பாந்தளி தெனவுன்னிக் கவ்விய படிபாராத்
தேந்தள வுகள்செய்யுஞ் சிறுகுறு நகைகாணாய்.

ஏந்து இளம் முலையாளே - நிமிர்ந்த இளங்கொங்கைகளை உடையவளே, எழுத அரும் எழிலாளே - எழுதுதற்கரிய அழகுடையவளே, ஒரு களி மஞ்ஞை - களிப்புற்ற மயில் ஒன்று, காந்தளின் முகை கண்ணில் கண்டு - காந்தள் அரும்பைக் கண்ணாலே கண்டு, இது பாந்தள் என உன்னி - இது பாம்பு என்று நினைத்து, கவ்வியபடி பாரா - (அதைப் பிடிக்கக்) கௌவியதைக் கண்டு, தேம் தளவுகள் செய்யும்

சிறு குறுநகை காணாய் - இனிய முல்லை மலர்கள் செய்யும் சிறு புன்னகையைப் பார்ப்பாயாக.

காந்தள் அரும்பு பாம்பின் தலைபோலக் காணப்படும். மயில் பாம்பைக் கண்டால் கொல்லும் இயல்புடையதாகலின் தன் கண்ணில் பட்ட காந்தளரும்பைப் பாம்பென்று கருதி அதனைக் கொத்தியதெனவும், பக்கத்தில் இயல்பிலே மலர்ந்த முல்லை மலர்கள் அந்த மயிலின் செயலைக் கண்டு நகைத்தன எனவும் கற்பனை செய்து, அதனை இராமபிரான் கூற்றாகக் கூறுகின்றார் ஆசிரியர்.

காந்தளரும்பு பாம்பு போல்வது: "காந்தளும் பாந்தளைப் பாரித் தலர்ந்தனவே" (திருக். 324); குறுந்: 185, 239; கலி: 45: 2-3; அகநா: 108: 12 - 15 : 138: 17 - 19; கார் நாற்பது 11; திணைமாலை. 107; திணைமொழி: 3,29, பார்க்க. பாம்பு மயிலுக்குப் பகை: "மஞ்ஞை...... பாம்பைப் பிடித்துப் படங்கிழித்தாங்கு" (திருக்: 21). முல்லை நகுதல்: "பூங்கொடி முல்லை, தொகுமுகை யிலங்கெயி றாக,நகுமே தோழி" (குறுந். 126: 3 - 5) "இருண்மகள் கொண்ட குறுநகை போல, முல்லையின் மௌவலு முருகுயிர்த் தவிழ"(கல்லாடம்). எழுதரும்: தொகுத்தல் விகாரம். எழுதரும் - எழுகின்ற; புதிது புதிதாகத் தோற்றுகின்ற எனலுமாம்.

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை; ஒரு பிரதியில் இதன் ஈற்றடி முதலடியாகவும், முதலடி ஈற்றடியாகவும் மாறியுள்ளன.

(பி - ம்.) 1. ஏந்தின; எழுதருமியலாளே, மயிலாளே.
2. கண்டதொர்.
3. கவ்விய படிபாராய்.
4. திந்தளவுகள்; சிறுநகை பல, பாராய். (9)

702. குன்றுறை வயமாவின் குருளையு மிருள்சிந்திப்
பின்றின தெனலாகும் பிடிதரு சிறுமாவும்
அன்றில பிரிவொல்லா வண்டர்த மனையாவின்
கன்றொடு முறவாடித் திரிவன பலகாணாய்.

குன்று உறை வய மாவின் குருளையும் - மலையில் வாழும் சிங்கத்தின் குட்டிகளும், இருள் சிந்தி பின்றினது எனல் ஆகும் - இருட் பிழம்பைத் துண்டித்துப் பிணைத்து உருவாக்கியது என்று சொல்லத்தக்க, பிடி தரு - பெண்யானை ஈன்ற, சிறு மாவும் - யானைக் கன்றுகளும், அன்று இல - பகைத்தல் இல்லாதனவாயும், பிரிவு ஒல்லா -(ஒன்றையொன்று) பிரியாதனவாயும், அண்டர் தம் மனை ஆவின் கன்றொடும் - இடையர் வீடுகளில் உள்ள பசுவின் கன்றுகளுடன், உறவு ஆடி திரிவன பல - உறவாடி விளையாடித் திரியும் பலவற்றை, காணாய்—.

சிங்கமும் யானையும் மலைக் காடுகளில் வாழ்வன; இயல்பாகவே, தம்முள் பகையுள்ளன. இவை கலந்து உறவாடுதலுடன், முல்லை

நிலத்தில் வாழும் இடையர் வீடுகளில் உள்ள பசுவின் கன்றுகளோடும் உறவாடுகின்றன என்றது வியப்புக்குரியது. முனிவர்கள் வாழும் சூழலாதலால் இது நிகழ்ந்ததெனலாம். வயமா - சிங்கம். குருளை - குட்டி. பின்றுதல் - பின்னுதல்; பிணைத்தல். சிறு மா - கன்று. அன்றுதல் - பகைத்தல்.

(பி - ம்.) 1. குன்றுறு.
2. பின்றின வெனலாகும்.
3. அன்றல, அன்றலர், அன்றிவில்; பிறிவெல்லா, பிறிவெல்லாம், பிறிகில்லா, பிறிவொல்லா.
4. கன்றொடும் இனிநாடும், உடனுகும், உடனுடும், கன்றொடு விளையாடுங் களியன, களியது. (10)

703. அகில்புனை குழன்மாதே யணியிழை யெனலாகும்
நகுமலர் நிறைமாலைக் கொம்புக ணதிதோறும்
துகில்புரை திரைநீரிற் றோய்வன துறையாடும்
முகிழிள முலையாரின் மூழ்குவ பலகாணாய்.

அகில் புனை குழல் மாதே - அகிற்புகையை ஊட்டிய கூந்தலை உடையவளே, அணி இழை எனல் ஆகும் நகும் மலர் நிறை - பூண்ட அணிகலன்கள் என்று சொல்லத்தக்க (பலவண்ணத்துடன்) விளங்கும் பூக்கள் நிறைந்த, மாலை கொம்புகள் - வரிசையான பூங்கொம்புகள், நதிதோறும் - நதியின் பலவிடங்களிலும், துகில் புரை திரை நீரில் தோய்வன - வெள்ளாடை போன்ற அலைகளையுடைய நீரில் படிவன, துறை ஆடும் - நீர்த் துறைகளில் நீராடுகிற, முகிழ் இள முலையாரின் - அரும்பிய இளங்கொங்கைகளையுடைய மங்கையரைப்போல, மூழ்குவ பல - (நீரில்) முழுகுவன பலவற்றை, காணாய்—.

பல நிறப் பூக்களையுடைய பூக்கொம்புகளுக்குப் பலநிறம் வாய்ந்த அணிகலன்களைப் பூண்ட மகளிர் உவமை. ஆற்றோரமாக மலர்ச் செடிகளின் கொம்புகள் சாய்ந்து நீரில் படிவது, மகளிர் நீராடுவது போலத் தோற்றுகின்றதென்றவாறு. மாலை - வரிசை.

(பி - ம்.) 1. அகில்புரை; குழன்மானே.
2. கொம்பர்கள்.
3. நுரைநீரில், நறுநீரில், தருநீரில், திரைதோறும், நிரைதோறும், நுரையோடும். (11)

704. முற்றுறு முகைகிண்டி முரல்கில சிறுதும்பி
விற்றரு நுதன்மாதே மென்மலர் விரிகோங்கின்
சுற்றுறு மலரேறித் துயில்வன சுடர்மின்னும்
பொற்றகை டுறுநீலம் புரைவன பலகாணாய்.

வில் தரு நுதல் மாதே - வில்லைப்போன்ற நெற்றியை யுடையவளே, சிறு தும்பி பல - சிறிய வண்டுகள் பல, முற்று உறு முகை கிண்டி

முரல்கில - முற்றிய பேரரும்புகளைக் கிளறி ஒலியாதனவாய், மெல்மலர் விரி கோங்கின் - மெல்லிய பூக்கள் மலர்ந்துள்ள கோங்க மரத்தில், சுற்று உறும் மலர் ஏறி துயில்வன - சுற்றிலும் உள்ள மலர்ந்த பூக்களில் அமர்ந்து தேனை உண்டு உறங்குவன, சுடர் மின்னும் - ஒளிவீசுகின்ற, பொன் தகடு உறு நீலம் புரைவன - பொன் தகட்டிலே பொருந்திய (பதிக்கப்பெற்ற) நீலமணி யொத்துத் தோன்றுவனவற்றை, காணுய் - காண்பாயாக.

சிறுதும்பி பல, கிண்டி முரல்கில, ஏறித் துயில்வன, நீலம் புரைவன காணுய் எனக் கூட்டி முடிக்க.

வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டு, மலரும் பருவத்திலுள்ள அரும்புகளைக் கால்களாற் கிளறி மலர்வித்துப் புதிய தேனைப் பருகுதல் இயல்பு. இவை சிறுவண்டுகளாதலின், அரும்புகளை மலர்த்தும் முயற்சியில் ஈடுபடாமல், மலர்ந்த பூக்களிற் கிடைத்த தேனைப் பருகி, அம்மலர்களிலேயே உறங்கிவிட்டன. கோங்க மலர் பொன்னிறமும் தட்டை வடிவும் உடையது; வண்டுகள் நீலமணி போன்றவை. ஆதலால், பொற்றகட்டிற் பதித்த நீலமணி போலத் தோற்றின; அவற்றைப் பிராட்டிக்குக் காட்டினுன் இராமபிரான். தரு : உவமவுருபு.

கோங்கம் பூவின் தன்மை: ''பூங்கட் பாவைக்குப் பொற்கல மிவை யெனத், தேங்கட் சாரற் சிறுசினை மலர்ந்த, கோங்கந் தட்டம் வாங்கினர் வைத்தும்'' (பெருங். 2.14: 22 - 4).

(பி - ம்.) 1. முகைகண்டே, முகைதீண்டி, முறைகிண்டி, பண்கொண்டு; முயல்கில சிலதும்பி, முரல்கில சிலதும்பி, முரலசில தும்பி, முழுமுதல் செய்தும்பி; (மு). முற்றுறு மண்கொண்டிம் முழுமுதல் செயல்தும்பி.
2. விற்றிரு நுதல்மாதே, மானே; அம்மலர், இனமலர்.
3. சுற்றுற.
4. உறைநீலம்; பொழிவன. (12)

705. கூடிய நறைவாயிற் கொண்டன விழிகொள்ளா
மூடிய களிமன்னி முடுகிய நெறிகாணு
ஆடிய சிறைமாவண் டந்தரி னிசைமுன்னம்
பாடிய பெடைகண்ணு வருவன பலகாணுய்.

ஆடிய சிறை - அசைகின்ற சிறகுகளையுடைய, மா வண்டு பல - கரிய பல வண்டுகள், கூடிய நறை - அளவிறந்த தேனை, வாயில் கொண்டன - உட்கொண்டனவாய், (அதனுல்) களி மன்னி - களிப்பு (மயக்கம்) மிக்கு, விழிகொள்ளா மூடிய - கண்கள் திறக்க மாட்டாது மூடினவாகி, முடுகிய - விரைந்து செல்லுதற்கு, நெறி காணு - வழியறியாமல், அந்தரின் - குருடரைப்போல், முன்னம் - (தமக்கு) முன்னே, இசை பாடிய பெடை கண் ஆக - ரீங்காரம் செய்துகொண்டு பறக்கும் பெடைவண்டுகளே (தமக்குக்) கண்ணுக, வருவன காணுய் - வருவனவற்றைப் பார்.

ஆண் வண்டுகள் பல, தேனை மிகப் பருகியதனுல் களிப்பு மிக்குக் கண்களைத் திறக்கமாட்டாமலும், பறந்து செல்ல வழியறியாமலும் இடர்ப்பட்டு, முன்னே ரீங்காரம் செய்துகொண்டு பறக்கும் பெண் வண்டுகளின் ஒலி வரும் திசையைக் குறிக்கொண்டு குருடர்போலச் செல்கின்றன என்றபடி. வாயிற்கொள்ளுதல் - வாயாற் பருகுதல், மன்னி - மிக்கு, மேலிட்டு. முடுகிய : செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

மதுமயக்கத்தால் கண்கள் மூடிய நிலைகொள்ளல்: "ஒருத்தி, இறந்த களியான் இதழ்மறைந்த கண்ணள்" (கலி. 92: 48). மா என்பது பலபொருளொரு சொல்லாதலின், பெரிய வண்டு என்று உரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 1. விழிகொள்ள.
2. களிமன்னு முடுகின, முடுகிய, மன்ன முடுகின, மன்னி முடுகின, மன்னி முடுகிய, மன்னு முறுகின.
3. இசை முன்னுப், முன்னுய்ப்.
4. பெடைகண்ணுய், இசைகண்ணுய். (13)

706. கன்னிய ரணிகோலங் கற்றறி குதுமென்னப்
பொன்னணி நிறவேங்கை கோங்குகள் புதுமென்பூ
அன்னமெ னடையாய்நின் னளகநன் னுதலப்பும்
சின்னநன் மலர்மானச் சிந்துவ பலகாணுய்.

அன்னம் மெல் நடையாய் - அன்ன நடைபோலும் மெல்லிய நடை உடையவளே, வேங்கை கோங்குகள் - (இங்குள்ள) வேங்கை மரங்களும் கோங்க மரங்களும், கன்னியர் அணிகோலம் கற்று அறிகுதும் என்ன-பெண்களை அலங்கரிக்கும் வகையை நாம் கற்றறிந்து கொள்வோமென்று கருதி, பொன் அணி நிறம்- பொன் போன்ற அழகிய நிறத்தையுடைய, புது மென் பூ - புதிய மெல்லிய பூக்களை, நின் நல் நுதல் அளகம் அப்பும் - உனது அழகிய நெற்றியில் படியும் முன் மயிரில் அணிதற்குரிய, நல் சின்னம் மலர்மான - நல்ல விடுபூக்கள் போல, பல சிந்துவ காணுய் - பலவாக உதிர்ப்பவற்றைப் பார்.

செல்லும் வழியிலுள்ள வேங்கை, கோங்க மரங்களினின்றும் பொன்னிறப் பூக்கள் உதிர்தலை, அம்மரங்கள் கன்னியர்க்குக் கோலஞ் செய்தலைக் கற்றுணர்வனபோல, அவர்களணிதற்குரிய விடு பூக்களைச் சிந்துகின்றன எனக் கற்பித்து, அதனை இராமபிரான் கூற்ருகக் கூறுகின்ருர். சின்னம் - விடுபூ; "சின்னத்தின் அளக பந்தி" (பால. 1011;) 978, 1210ஆம் பாடல்களும் பார்க்க.

(பி - ம்.) 1. அறிகுநரென்னப், அறிகுவரென்னப், அறிகுனரொப்பப், அறிகில ரென்னப்.

2. பொன்னணி நறவேங்கை, நிறவேங்கைக், நிறக்கொங்கைக், நிறை கொங்கைக், பொன்னிற நறவேங்கைக்; கொம்பர்கள், கொம்புகள்; கொங்குறை, கோங்குளர்.
3. அன்னமென்னடையாய்நின்; அளிவளரளகப்பூம், அணிவளரளகப் பூம், அளகப்பூச்.
4. சின்னமென் மலர். (14)

707. மணங்கிளர் மலர்வாச மாருதம் வரவீசக்
கணங்கிளர் தருசுண்ணங் கல்லிடை யனகானத்
தணங்கினு மினியாயுன் னணிவட முலைமுன்றிற்
சுணங்கின மவைமானத் துறுவன பலகாணாய்

கானத்து அணங்கினும் இனியாய் - வனதேவதையினும் மிக்க அழகுடையவளே, மாருதம் வர வீச - காற்று மிக வீசுதலால், மணம் கிளர் மலர் - மணம் மிக்க பூக்களிலுள்ள, கணம் கிளர் தரு வாசம் சுண்ணம் - திரண்டு மிக்க நறுமணப் பொடிகள் (மகரந்தங்கள் உதிர்ந்து), கல் இடையன - குண்டுக் கற்களில் படிந்தவை, உன் வடம் அணி முலை முன்றில் - உன்னுடைய முத்துமாலை அணிந்த தனங்களில் (படர்ந்துள்ள), சுணங்கு இனம் அவை மான - அழகுத் தேமற் கூட்டம் போல, துறுவன பல - செறிந்து தோன்றும் பலவற்றை, காணாய்—.

காற்றினால் பூக்களினின்றும் உதிர்ந்த மகரந்தப்பொடி, கீழே உள்ள உருண்டையான கற்களில் படிந்து தோன்றும் இயற்கைக் காட்சி தனங்களில் படர்ந்துள்ள பொன்னிற அழகுத் தேமல்போலக் காணப் படுகின்றது என்றது அழகிய உவமை. வர - மிகுதியாக. முலை முன்றில் - முலையினிடத்து. மலர்தரு என்றியைத்துப் பூக்கள் உதிர்த்த என்றுரைத்தலுமாம்.

ஒரு பிரதியில் இப்பாடல் இல்லை.

(பி - ம்.) 1. மலர்வாரும்; வரவாசக், அயர்வாசக், அவிர்வாசக், அவைவாசக், அவைவீசக்; மாதருமவர்வாசக்.
2. தருசுண்ணக், சுடுசுண்ணம்; கல்லுடையன, கள்ளுடையன, கல்லிடையழ; தானத்து, கல்லிடையன கண்டால், கண்டார்.
3. இனியாய்நின்; முலைமுன்னச், முன்னர்ச், அணிமுலை வடமுன்றிற்.
4. சுணங்கினமிவைகாணத்; துறுவனவவை. (15)

708. அடியிணை யுறைகல்லா வென்றுகொ லதரெங்கும்
இடையிடை மலர்சிந்து மினமர மிவைகாணாய்
கொடியினொ டிளவாசக் கொம்புகள் குயிலேயுன்
துடிபுரை யிடைமானத் துவள்வன விவைகாணாய்.

குயிலே - குயில்போலுங் குரலுடையவளே. (உன்) அடி இணை - உன் இரு பாதங்களும், உறை கல்லா என்று - (கல் முதலியன) உறுத்துதலை (முன்பு) கற்றறியாதனவென்று கருதி, அதர் எங்கும் -

வழி நெடுகிலும், இடை இடை மலர் சிந்தும் - இடையிடையே (தம்) பூக்களை உதிர்க்கின்ற, இனம் மரம் இவைகாணுய் - கூட்டமான இந்த மரங்களைப் பார்; இள வாசம் கொடியினொடு - மெல்லிய நறுமணம் பொருந்திய பூங்கொடிகளும், கொம்புகள் இவை-பூங்கொம்புகளுமாகிய இவை, உன் துடிபுரை இடை மான - உடுக்கை போன்ற உனது மெல்லிய இடையை ஒப்ப, துவள்வன காணுய் - துவளுதலையும் பார். கொல் : அசை.

மரங்களினின்றும் இயல்பாக மலர்கள் உதிர்தலை, பிராட்டியின் பாதங்கள் பரலுறுத்தலைப் பொரு என்று கருதி, அம் மரங்கள் பூக்களைச் சொரிந்து வழியை மெத்தென்ருக்குவதாகக் கூறியது தற்குறிப்பேற்றம். 'உன்' என்பது முன்னும் கூட்டி உரைக்கப்பெற்றது.

(பி - ப்.) 1. பொறைகல்லா; கல்லாது, உறுகல்லா, உறைகல்லாது, பிரிகல்லா, புரைகல்லா, என்று கல்லதர்தோறும்.
2. இடைமிடை; இளமரமிவை, இனமிவைபல.
3. கொம்பர்கள்; குயிலாயுன், குயிலேசின், குயிலாயின்.
4. இடைநாணித், இடைநாணத்; அவைகாணுய், பலகாணுய். (16

709. வாள்புரை விழியாயுன் மலரடி யணிமானத்
தாள்புரை தளிர்வைகுந் தகைஞிமி றிவைகாணுய்
கோள்புரை யிருள்வாசக் குழல்புரை மழைகாணுய்
தோள்புரை யிளவேயின் தொகுதிக ளிவைகாணுய்.

வாள் புரை விழியாய் - வாள் போலுங் கண்களை உடையவளே, உன் மலர் அடி அணி மான - (அழகு) விரிந்த உன் பாதங்களையும் அவற்றில் அணிந்த அணிகலன்களையும் போல, தாள் புரை தளிர் வைகும் தகைஞிமிறு இவை - காம்பு பொருந்திய தளிர்களும் அவற்றில் தங்கும் அழகிய வண்டுகளுமாகிய இவற்றை, காணுய்—; கோள் புரை இருள் - (பொருள்களைக் காணவொட்டாது மறைக்கும்) குற்றம் பொருந்திய இருள் போன்ற (மிகக் கரிய), வாசம் குழல் புரை - நறுமணம் பொருந்திய (உன்) கூந்தலை யொத்த, மழைகாணுய் - மேகங்களைக் காண்பாயாக; தோள் புரை - உன் தோள்களை யொத்த, இளவேயின் தொகுதிகள் இவை காணுய் - இந்த இளைய மூங்கிற் கூட்டங்களைக் காண்க.

தளிர்கள் - பாதங்கள் ; தளிர்களில் தங்கிய வண்டுகள், பாதத்தில் அணியும் மணி அணிகள். தாள் - காம்பு. தகை - அழகு (புறநா. 59 : 2). அடியும் அணியும் எனவும், தளிரும் ஞிமிறும் எனவும் உம்மைகள் விரிக்க. 'புரை' என்பது சொற்பின் வருநிலையணியாக ஐந்திடங்களில் வந்தது. அவற்றுள் 1, 4, 5 ஆகிய மூன்றும் உவமவுருபுகள். ஏனையிரண்டும் 'பொருந்திய' என்ற பொருளில் வந்தன.

(பி - ம்.) 1. உன் மலர்புரையடிமானத், மலரடியவைமானத், மலர்வடிவடிமானத், மலர்செறியடிமானத், மின்மலரடியணிமானத், பொன்மலர்களனை யாயுன்.
2. ஞிமிறவைகாணுய், ஞிமிறுகள்பாராய், மிஞிறிவைகாணுய்.
3. மலர்காணுய்.
4. இனவேயின்; தொகுதிகளவை, தொகுதிரளவை. (17)

710. பூநனை சுனைதுன்றிப் புள்ளிடை யிடைபம்பி
நானிற நளிர்வல்லிக் கொடிநவை யிலபல்கி
மானின மயின்மாலைக் குயிலினம் வதிகானம்
தீநிகர் தொழிலாடைத் திரைபொரு வனகாணுய்.

பூ நனை சினை துன்றி - பூவும் அரும்பும் கிளைகளில் மிகுந்து, இடை இடை புள் பம்பி - இடையிடையே பறவைகள் நிரம்பி, நால் நிறம் நளிர் வல்லி கொடி - பல நிறங்களையுடைய குளிர்ந்த வல்லி என்னும் கொடிகள், நவை இல பல்கி - குற்றமில்லாதனவாய்ப் பெருகி, மான் இனம் - மான்கூட்டமும், மயில் - மயில்களும், மாலை குயில் இனம் - வரிசையான குயிற் கூட்டமும், வதி - தங்குகின்ற, கானம் - (இந்தக்) காட்டுப் பகுதிகள், தீ நிகர் தொழில் - தீப்போலும் (சிவந்த) சித்திர வேலைப்பாடமைந்த, ஆடை திரை பொருவன காணுய் - திரைச் சீலைகளை ஒத்திருப்பவற்றைக் காண்பாயாக.

செந்நிறப் பூக்களையும் தளிர்களையும் மிகக் கொண்டு, பறவைகளும் மான் முதலியனவும் தங்கப்பெற்று, அழகாகத் தோன்றும் காட்டுப் பகுதிகள், ஓவிய வித்தகர் அழகுறத் தீட்டிய சித்திரத் திரைச் சீலை போன்றன, அவற்றைப் பார் என்கின்றுன். துன்றி, பம்பி, பல்கி: ஒருபொருட் பல சொற்கள். வதி கானம்: வினைத்தொகை. புள் - பறவை; வண்டும் ஆம். நானிறம்: பன்மை கருதியது. "வித்தகரியற்றிய விளங்கிய கைவினைச், சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே, ஒப்பத் தோன்றிய வுவவனம்" (மணி. 3 : 167 - 9) என்றது இங்கே ஒப்பு நோக்கத்தகும்.

மன்றலின் மலிகோதை என்று தொடங்கும் பாடல்முதல் இது காறும் பதினறு பாடல்களால், வழிநடையில் கண்ட பல இனிய காட்சிகளை இராமபிரான் பிராட்டிக்குக் காட்டிக் கூறினமை பேசினர்.

(பி - ம்.) 1. சினைதுன்னிப், துள்ளிப், சிறைமுன்றிப்; இடையிடைபம்பி, இடையிடைகொம்பின், புள்ளடையிடைபம்பி, புள்ளிடையிறைபம்பி, புள்ளினமிடைகொம்பின், தள்ளிடையிடைபம்பித்.
2. நானிறநளிர்வள்ளி, நாணினநளிர்வல்லிக், நானளிர்வனவல்லிக்; கொடியளவிலமல்கி, கொடியளபலதங்கி, நவையிலமல்கி, கொடியயல்பலதங்கி, கொடிபலபலதங்கி, கொடி நகையிலமல்கி.
3. வருகானம், கானித்.
4. துகிலாடைத்; திரைபொருது, பொருவுவ, பொருமவை, புரைவன, புரள்வன, திரள்பொருமவை, பாராய். (18)

711. என்றனன் மடவாளோ டினிதினின் விளையாடிப்
பொன்றிணி திரடோளான் போயின னெறிபோதும்
சென்றது குடபாலத் திருமலை யிதுவன்றே
வென்றிரு வினைவென்றோர் மேவிட மெனநின்றார்.

என்றனன் - என்று இவ்வாறு பல கூறினவனாக, பொன் திணி திரள் தோளான் - அழகுமிக்க திரண்ட தோள்களையுடைய இராமபிரான், மடவாளோடு - இளையவளான பிராட்டியுடன், இனிதினின் விளையாடி, இனிதாக விளையாடிக்கொண்டு, நெறி போயினன் - வழி நடந்தான்; போதும் குடபால் அ திருமலை சென்றது - சூரியனும் மேற்கிலுள்ள அந்த அழகிய அத்தமன கிரியை அடைந்தான்; (அவ்வமயம் அருகில் ஓர் முனிவராச்சிரமம் கண்டு) இது - இதோ தோன்றுவது, வென்று - (ஐம்புலன்களையும்) வென்று, இருவினை வென்றோர் - (கடத்தற்கரிய) இரு வினைகளையும் கடந்த முனிவர்கள், மேவு இடம் அன்றே என - தங்குமிடம் அன்றோ என்று சொல்லி, நின்றார் - அவ்விடத்தே நின்றார்கள்.

மூவரும் வழி நடந்து செல்லுங்கால், சூரியாத்தமன வேளையான போது, ஓரிடத்தில் ஓராச்சிரமத்தைக் கண்டு, இது முனிவர் வாழுமிடமாதல் வேண்டும் என்று சொல்லிக்கொண்டு அங்கே சற்று நின்றார்கள் என்றவாறு. அவ்வமயம், அவர்கள் வருகை உணர்ந்து, அவ்வாச்சிரமத்தில் வாழும் பரத்துவாச முனிவர் அவர்களை எதிர் கொள்ள வந்தார் என்பது அடுத்த பாடலுட் கூறப்படும். "இடர் காணாள், பொருப்பேந்திய தோளானொடு விளையாடினள் போனாள்" (627) என முன்னே கூறி, இங்கும், "திரடோளான் விளையாடி நெறி போயினன்" என்றதனால், அவர்கள் வழிநடை வருத்தமுணராது சென்றனர் என்பது பெறப்படும். போது : ஆகுபெயராய்ச் சூரியனைக் குறித்தது.

(பி - ம்.) 1. என்றுகன், என்றன, ஒன்றின, என்றுறு; இனிதினில்; விளையாடப்.
2. பொன்றிணிதணிதோளான், தருதோளான், திரைதோளான்; போயினநெறி.
3. சென்றன, சென்றனன், என்றனன், என்றனர்.
4. வினைவென்றார்; மேவிடமெனலோடும், மேவிடமெனலாடும், மேவிருமெனலோடும். (19)

### பரத்துவாச முனிவரின் வருகை

712. அருத்தியி னகம்விம்மு மன்பின னெடுநாளில்
திருத்திய வினைமுற்றிற் றின்றெனத் தெரிகின்றான்
பரத்துவ னெனுநாமப் பரமுனி பவநோயின்
மருத்துவ னனையானை வரவெதிர் கொளவந்தான்.

அருத்தியின் - (இராமபிரானைக் காணும்) ஆசையோடு, அகம் விம்மும் அன்பினன் - மனம் நிறைந்த அன்புடையவனும், நெடு நாளில் திருத்திய வினை - நெடுநாளாக (நாம்) நன்கு செய்த நல்வினை (தவம்), இன்று முற்றிற்று என தெரிகின்றான் - இன்று பயன் தருவதாயிற் றென்று உணர்பவனும் ஆன, பரத்துவன் எனும் நாமம் பர முனி - பரத்துவாசன் என்னும் பேருடைய மேலான முனிவன், பவம் நோயின் மருத்துவன் அனையானை - பிறவிப் பிணிக்கு மருத்துவன் போன்ற இராமபிரானை, வரவு எதிர் கொள வந்தான் - நல்வரவு கூறி எதிர் கொள்ளும்படி வந்தான்.

இராமபிரான் திருமாலாகலின் பிறவிப்பிணி மருத்துவன் என்றார்; "எருத்துக் கொடியுடை யானும் பிரமனு மிந்திரனு மற்றும், ஒருத்தரு மிப்பிறவி யென்னு நோய்க்கு மருந்தறி வாரு மில்லை, மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணா" (பெரியாழ்வார் திருமொழி, 5. 3 : 6).

பரத்துவாச முனிவன் இராமபிரானை எதிர் கொண்டதாக முதனூலில் இல்லை.

(பி - ம்.) 1. அருத்தியன், அருத்தினன்; அன்பினினெடு.
2. திருத்தியதவம், திருத்தியமுனை, திருத்தவவினை, திருத்தவர்வினை, திருத்தினவினை, திருத்தினதவம்; முற்றிற்று இன்றெனல், என்றனன், என்றுநல், என்றனர், இன்றென, முந்திற்றின்றெனல், முற்றித் திருந்தனல், முற்றித்திருந்தனன், முற்றித்தினகரன்; தெரிகின்றேன், தெளிகின்றான், எனநின்றான்.
3. பழமுனி.
4. மருத்துவனிவண்வந்தான் எனவெதிர். (20)

### அம்முனிவரின் தோற்றமும் சிறப்பும்

713. குடையின னிமிர்கோலன் குண்டிகை யினன்மூரிச்
சடையின னுரிமானின் சருமனன் மரநாரின்
உடையினன் மயிர்நாலு முருவின னெறிபேணும்
நடையினன் மறைநாலு நடநவி றருநாவான்.

(அப்பரத்துவாச முனிவன்), குடையினன் - (கையில்) குடையுடையான்; நிமிர் கோலன் - நீண்ட முக்கோலுடையான்; குண்டிகையினன் - கமண்டலமுடையான்; மூரி சடையினன் - பெரிய சடையை உடையான்; மானின் உரி சருமன் - மானினது உரித்த தோல் உடையவன்; நல் மரம் நாரின் உடையினன் - நல்ல மரநாரால் இயன்ற (மரவுரி) ஆடையுடையயன்; மயிர் நாலும் உருவினன் - மயிர் நீண்டு தொங்குகின்ற வடிவுடையவன்; நெறி பேணும் நடையினன் - முத்தி நெறியை விரும்பும் தவவொழுக்கமுடையவன்; மறை நாலும் - நான்கு வேதங்களும், நடம் நவில் தரு நாவான் - நடனம் புரியும் நாவினை உடையவன்.

இதுவும் அடுத்த பாடலும் ஒரு தொடர்; பரத்துவாச முனிவர் பெருமைகளைக் கூறுவன. இப்பாடலுள் முதலில் அவர் தோற்றத்தைக் கூறி, மேலே வேத பாரங்கதர், முத்தி நெறியை நாடும் தவவொழுக்க முடையவர் என்ற சிறப்புக்களைக் கூறினார்; அடுத்த பாடலுள் ஏனைச் சிறப்புக்களைக் கூறுகின்றார். குடை முதலியன முனிவர்க்குரிய அங்கங்கள். மானின் உரி சருமம் - கிருஷ்ணாஜினம். மயிர் மழித்த லின்மையால் நீண்டு வளர்ந்து தொங்குதலை 'மயிர் நாலும் உருவினன்' என்றார். "பயிலு மாதவ, முசுக்குல மனையமெய்ம் முனிவர்" என்பது வில்லிபாரதம். (குருகுலச். 65).

(பி - ம்.) 1. உரிமானின் தோலினன்; மரநாணின், உழைமானின் சருமனன், சன்மனன், மரையினருரின், உழையிஞசனன் மரையினருரின், உழைமானின்ருலினன் மரைநாரின், உழையசினத் தரைவனன்மர நாரின், கானின்சால்மரையினன் மரநாரின்.
3. உருவன னுயிர்பேணும்.
4. நடநவிறிருநாவான், நவின்றனதருநாவான். (21)

714. செந்தழல் புரிசெல்வன் றிசைமுக முனிசெவ்வே
தந்தன வுயிரெல்லாந் தன்னுயி ரெனநல்கும்
அந்தண னுலகேழு மமையெனி னமரேசன்
உந்தியி னுதவாமே யுதவிடு தொழில்வல்லான்.

(இன்னும் அம்முனிவன்), செம்மை தழல்புரி செல்வன் - செவ்விய தீயோம்புதலையே செல்வமாக உடையவன்; திசைமுகம் முனி - நான்கு திக்கும் நோக்கிய முகங்களையுடைய பிரமன், செவ்வே தந்தன உயிர் எல்லாம் - செவ்வையாகப் படைத்த சீவராசிகளையெல்லாம், தன் உயிர் என நல்கும் அந்தணன் - தன்னுயிர் போலக் கருதி அருள் செய்யும் அழகிய தண்ணளி உடையவன்; உலகு ஏழும் அமை எனின் - ஏழுலகங்களையும் படைத்திடுக என்றால், அமர ஈசன் உந்தியின் உதவாமே - தேவதேவனான திருமால் தன் திருவுந்தியிடத்து (முதலில்) தோற்றுவிக்காமல், உதவிடு தொழில் வல்லான் - (தானே) படைக்க வல்ல தொழிலாற்றல் உடையவன்.

முதல் இரண்டடிகளால், பரத்துவாச முனிவரது ஒழுக்கச் சிறப்பும் அருட் சிறப்பும் கூறி, பின் இரண்டடிகளால் அவர் பிரமனினும் ஆற்றல் மிக்கவர் என அவரது ஆற்றலைச் சிறப்பித்தார்; இதனால், வேண்டின் ஆக்கலும் அழித்தலும் வல்லவர் என்பதாயிற்று. திருமால் தன் சங்கற்பத்தால் தன் திருவுந்தியில் அண்டங்களைத் தோற்றுவித்தபின், பிரமதேவன் சராசரங்களைப் படைத்தமைப்பான் என்பராகலின், 'அமரேசன்......தொழில் வல்லான்' என்றார். உந்தியில் தோற்றுவிக்காத பிரமன் போல்வார் என்றலுமாம். "உயிரெல்லாம் தன்னுயிரென நல்கும் அந்தணன்" என்றது, "அந்தண ரென்போர்

அறவோர்மற் றெவ்வுயிர்க்கும், செந்தண்மை பூண்டொழுக லான்'' (குறள். 30) என்பதனைத் தழுவி அமைந்தது.

(பி - ம்.) 1. செந்தழல்பரி, செந்தழல்தரு, செந்தழலருள், செந்தழல்வரு; திசைமுகனருள்செவ்வே.
2. தந்தனனுயிர், கந்தலினுயிர்.
3. உலகெல்லாம்; அமைதியின்.
4. உந்தியில்; வல்லோன். (22)

வணங்கிய இராமனை முனிவர் தழுவிக்கொண்டு விம்முதல்

715. அம்முனி வரலோடு மழகனு மலர்தூவி
மும்முறை தொழுதானம் முனிவனு மெதிர்புல்லி
இம்முறை யுருவோநான் காண்குவ தெனவுள்ளம்
விம்மின னிழிகண்ணீர் விழிவழி யுகநின்றான்.

அ முனி வரலோடும் - அத்தகைய சிறப்புடைய பரத்துவாச முனிவர் (எதிரே) வந்த அளவில், அழகனும் - இராமபிரானும், அலர் தூவி - (முனிவர் திருவடிகளை) மலர்களால் அருச்சித்து, மூன்று முறை தொழுதான்—; அ முனிவனும்—, எதிர் புல்லி - (தொழுதவனை) எதிரே எடுத்துத் தழுவி, இ முறை உருவோ நான் காண்குவது என - இக்கோலம் அமைந்த (நின்) வடிவையோ நான் காண்பது என்று, உள்ளம் விம்மினன் - மனத்துள் துயரம் மிக்கவராகி, விழி வழி இழி கண் நீர் உக - கண்களிலிருந்து பெருகிய கண்ணீர் சொரிய, நின்றான்—.

அம்முனி என்றது, முன்னிரண்டு பாடல்களிலும் கூறிய அத்தகு சிறப்புடைய முனிவர் என்றவாறு. இராமபிரானை 'அழகன்' என்றல் பிரசித்தம். உயர்ந்தோரையும், கடவுளரையும் மும்முறை வலம் வந்து தொழுதல் முறை. வணங்கினவரை எடுத்துத் தழுவுதல் உயர்ந்தோர்க்குரியது. அரசக் கோலத்தில் காணவேண்டிய இராமபிரானைத் தவக் கோலத்தில் கண்டமையின், 'இம்முறையுருவோ நான் காண்குவது' என வருந்தினர் முனிவர். ''பார்குலாம் செல்வ வுன்னை யிங்ஙனம் பார்த்த கண்ணை, ஈர்கிலாக் கள்வ னேனான்'' (665) என்று குகன் கூறியது காண்க.

(பி - ம்.) 1. அனகனும்.
2. தொழுதானை; முதல்வனும்.
3. நானெய்துவது, நான்காண்குவன், நாம் காண்குவது.
4. அழிகண்ணீர், விழுகண்ணீர். (23)

வனம் வந்ததன் காரணத்தை முனிவர் கேட்டல்

716. அகலிட நெடிதாளு மமைதியை யதுதீரப்
புகலிட மெமதாகும் புரையிடை யிதுநாளில்
தகவில தவவேடந் தழுவினை வருவானேன்
இகலடு சிலைவீர விளையவ னொடுமென்றான்.

(முனிவன் இராமபிரானை நோக்கி) இகல் அடு சிலை வீர - பகையை அழிக்கவல்ல வில்வீரனே, அகல் இடம் நெடிது ஆளும் அமைதியை - இப்பூமி முழுதும் நெடுங்காலம் ஆளும் தகுதியையுடைய நீ, அது தீர - அவ்வாட்சி நீங்க, இது நாளில் - இவ்விளமைப் பருவத்திலேயே, தகவு இல தவவேடம் தழுவினை - (உனக்குத்) தகுதியில்லாத தவக் கோலத்தைக் கொண்டு, எமது புகல் இடம் ஆகும் புரை இடை - என் போன்றார் இருத்தற்குரிய இடமான காட்டில், இளையவனொடும் வருவான் ஏன் - தம்பியோடும் வர நேர்ந்ததேன்? என்றான் - என்று வினவினான்.

'முதுமையில் அரசை மக்களிடத்து ஒப்புவித்துத் தாம் தவம் மேற் கொள்ளுதல் இட்சுவாகு குலத்தரசர் முறையாகும். அங்ஙனம் இருக்க, நீ இப்போதே இவ்வாறு தவக்கோலம் பூண்டு, தம்பியையும் உடன் கொண்டு கானகம் வரக் காரணம் என்ன? அஃது உனக்குத் தகாத தன்றோ?' என்று வினவினர் முனிவர். 'நீ அரசாளுதற்குரிய எல்லாத் தகுதியும் இளமையும் உடையாய்' என்பார், 'அகலிடம் நெடிதாளும் அமைதியை' என்றார். 'உனக்கு இந்நிலை பகைவரால் நேர்ந்திராது' என்பார், 'இகலடு சிலை வீர' என்றார். தகவிலது எனற்பாலதன் இறுதி தொக்கது. புரை - இடம். அமைதியை: வினையாலணையும் பெயர். தழுவினை : முற்றெச்சம்.

(பி - ம்.) 1. அமைதியதது, அமைதியினது.
2. எனதாகும், எமதாளும்; புரையிடைஇனநாளில், இனநாளின், இந்நாளில், எனநாளின், புரையிடமிந்நாளில்.
3. தகவிலை, தகைவில; வருவானென்.
4. இகலிடு சிலைவீரா. (24)

உற்றதை இராமன் சொல்லக் கேட்டுப் பரத்துவாசர் வருந்துதல்

717. உற்றுள பொருளெல்லா முணர்வுற வுரைசெய்தான்
நற்றவ முனியந்தோ விதிதரு நவையென்பான்
இற்றது செயலுண்டோ வினியென விடர்கொண்டான்
பெற்றில டவமந்தோ பெருநில மகளென்றான்.

(முனிவனுக்கு விடையாக இராமபிரான்), உற்று உள பொருள் எல்லாம் - நேர்ந்துள்ள காரியங்களையெல்லாம், உணர்வு உற உரை செய்தான் - விளங்கச் சொன்னானாக, நல் தவம் முனி - நல்ல தவத்தை உடைய அப் பரத்துவாச முனிவர், அந்தோ - ஐயோ, விதி தரு நவை என்பான் - விதியால் விளைந்த தீங்கு இது என்று கருதி, இற்று அது - அந்தத் தீங்கு இத்தகையது; இனிச் செயல் உண்டோ என - இனி (இதை மாற்றும்) வகை உண்டோ என்று, இடர் கொண்டான் - துன்ப முற்றவராகி, அந்தோ—, பெருநிலம் மகள் - பெருமையுடைய பூமிதேவி, தவம் பெற்றிலள் - (நீ ஆளுதற்குரிய) தவப்பேறு பெறாதவ ளானாள்; என்றான்—.

பொருள் - காரியம். விதி தரும் நவை : 456 பார்க்க. நிலமகள் தவம் பெற்றிலள் : 666-பார்க்க.

(பி - ம்.) 1. உற்றுறு, உற்றன.
2. முனிகேளா; கவையுன்பால், கவையென்னின்.
3. இற்றிது; செயலுண்டேயினி, செயலுண்டோவிசை, விதி, பிறிது.
4. தவமாதோ; மகளென்பான். (25)

718. துப்புறழ் துவர்வாயின் றூய்மொழி யிவளோடும்
அப்புறு கடன்ஞால மாளுதி கடிதென்ன
ஒப்பரு மகனுன்னை யுயர்வன முறவேகென்
றெப்பரி சுயிருய்ந்தா னென்றுணை யவனென்றான்.

என் துணையவன் - என் நண்பனான தசரதன், ஒப்பு அரு மகன் உன்னை - இணைவேறில்லாத புதல்வனான உன்னை, துப்பு உறழ் துவர் வாய் - பவளம் போன்ற சிவந்த வாயினையும், இன் தூய் மொழி - இனிய தூய சொற்களையுமுடைய, இவளோடும் - இச் சீதையுடனே (இருந்து), அப்பு உறு கடல் ஞாலம் - நீர் மிக்க கடல் சூழ்ந்த நிலவுலகத்தை, கடிது ஆளுதி என்ன - விரைந்து ஆளுதலை மேற்கொள்க என்று (முதலில்) கூறி, (பின்பு அந்த வாயாலே), உயர் வனம் உற ஏகு என்று - மரங்கள் ஓங்கிய காட்டை அடைய செல் என்று சொல்லி, எ பரிசு உயிர் உய்ந்தான் - எங்ஙனம் உயிர் வாழ்ந்திருக்கின்றான்? என்றான்—.

'தசரதன், அரசை உன்னிடம் ஒப்புவிப்பதாகக் கூறினவன், உடனே அதை மாற்றி நீ வனம் செல் என்று சொல்ல எவ்வாறு வாயெழுந்தது? அவ்வாறு சொல்லி, உன்னை வனத்துக்கு அனுப்பிய பின்னும் உயிரோடிருக்கின்றானே?' என்று வியக்கின்றார் பரத்துவாச முனிவர். எழுவாய் முன் பாட்டிலிருந்து வருவிக்க. சக்கரவர்த்தியை 'என் துணையவன்' என்றதனால், முனிவரோடு அவனுக்குத் தொடர்புண்மையும், இராமபிரான் முதலியவர்களைப்பற்றி முனிவர் அறிந்திருந்தாரென்பதும் பெறப்படும். அரசர்கள் முடிசூடும்போதும், பின்னர் அவர்களது நாளோலக்கத்திலும் பட்டத்தரசியர் உடனிருத்தல் மரபு; "சிவந்தவாய்ச் சீதையும் கரிய செம்மலும், நிவந்தவா சனத்தினிருப்ப" (152) என்பதும், சோழவரசர் மெய்க்கீர்த்திகளுள், அவர்கள் பட்டத்தரசியருடன் சிங்காதனத்து வீற்றிருத்தல் கூறப்படுதலும் காண்க.

(பி - ம்.) 1. துப்புறுதுவர்வாயிற்றூமொழி, வாயின்றூமொழி, துப்புறமிதழ் வாயின்றூய்மொழி; அவளோடும், மயிலோடும்.
2. ஆளுதி கடிதென்றது, ஆளுதிர்கடிதென்ன.
3. ஒப்பருமரசுன்னை, மகனின்னை, மகவின்னை, ஒப்பருமரசுன்னை; உயர்வனமுறைகென்றான், உறைகென்றே, உறையென்றான்.
4. உரைசெய்தானென், அரசுய்ந்தானென், அவனுய்ந்தானென். (26)

**பரத்துவாசர் அவர்களைத் தம் ஆசிரமத்துக்கு அழைத்துச் செல்லுதல்**

719. அல்லலு முளவின்ப மணுகலு முளவன்றே
நல்லவு முளசெய்யு நவைகளு முளவன்றே
இல்லையொர் பயனுனிங் கிடருறு மிதிலென்னுப்
புல்லின னுடனேகொண் டினிதுறை புரைபுக்கான்.

(எவர்க்கும் வாழ்க்கையில்) அல்லலும் உள - துன்பங்களும் உள்ளன; இன்பம் அணுகலும் உள - இன்பம் வருதலும் உள்ளன; அன்றே-இஃது இயல்பே அன்றே?(இவற்றிற்குக் காரணமாக),செய்யும் நல்லவும் உள - (அவரவர்) செய்யும் நல்ல காரியங்களும் உள்ளன; நவைகளும் உள அன்றே - தீங்குகளும் (பாவ காரியங்களும்) உள்ளன அன்றே? (ஆதலால்), நான் இங்கு இடர் உறும் இதில் ஓர் பயன் இல்லை - நான் இப்போது துன்பப்படுவதில் ஒரு பயனும் இல்லை, என்னு - என்று (தம் மனத்தைத் தேற்றிக்கொண்டு), புல்லினன் - (இராம பிரானைத்) தழுவியவராக, உடனே கொண்டு - (அவர்களைத்) தம்முடன் அழைத்துக்கொண்டு, இனிது உறை புரை புக்கான் - (தாம்) இனிதாக வாழும் ஆசிரமத்தை அடைந்தார்.

முனிவன் என்ற எழுவாய் வருவிக்க.

உலகத்தில் யாவரும் புண்ணியம், பாவம் என்ற இரண்டையும் செய்தலும், அவற்றின் பயனுக இன்பம், துன்பம் என்ற இரண்டும் மாறி மாறி வருதலும் இயல்பே யாதலால், இப்போது இராமனுக்கு நேர்ந்த இத்துன்பம்பற்றி நான் துன்பப்படுவதில் பயனில்லை என்று முனிவர் முடிவு செய்துகொண்டு, அவர்களைத் தம்முடன் ஆசிரமத்துக்கு அழைத்துச் சென்றுர் என்றவாறு.

(பி - ம்.) 1. அல்லதும்; அணுகலுமுளவந்தோ.
2. நல்லன, நல்வினை; உளவந்தோ, உளதன்றே, உளவென்றுல், உளவென்றுன்.
3. பயனுனின்று, பயனுலிங்கு, பயனீயிங்கு; இதிலென்னுப், அதிலென்னுப், அதுவென்னுப்.
4. உறையுமை, உறைவிடம். (27)

720. புக்குறை யிடநல்கிப் பூசனை முறைபேணித்
தக்கன கனிகாயுந் தந்துரை தருமன்பால்
தொக்கநன் முறைகூறித் தூயவ னுயிர்போலும்
மக்களி னருளுற்றுன் மைந்தரு மகிழ்வுற்றுர்.

தூயவன் - பரத்துவாச முனிவர், புக்கு - (இராமன் முதலியோருடன் ஆசிரமத்தினுள்ளே) புகுந்து, உறை இடம் நல்கி - அவர்கள் தங்குதற்குரிய இடத்தைக் கொடுத்து, பூசனை முறை பேணி - விருந்தினர்க்குரிய உபசாரங்களை முறையாகச் செய்து, தக்கன -

நல்லனவான, கனி (உம்) காயும் தந்து - பழங்களையும் காய் முதலிய வற்றையும் (விருந்துணவாகத்) தந்து, உரை தரும் அன்பால் - பாராட்டிச் சொல்லத்தக்க அன்போடு, தொக்க நல்முறை கூறி - மிகுதி யான நல்ல ஒழுக்க முறைகளை எடுத்துச் சொல்லி, உயிர்போலும் மக்களின் - தம் உயிர் போன்ற மக்களாக(அவர்களை)க் கருதி, அருள் உற்றான் - அருள் புரிந்தார்; மைந்தரும் - இராம இலக்குவரும், மகிழ்வு உற்றார் - மிக்க மகிழ்ச்சி அடைந்தனர்.

இராமபிரான் முதலிய மூவரும், பரத்துவாச முனிவரால் நன்கு உபசரிக்கப்பெற்று மகிழ்ச்சியுடன் அவரது ஆசிரமத்தில் தங்கியிருந் தனர் என்க. 'மக்களின் அருளுற்றான்' என்பதனோடு 632-ஆம் பாடலை ஒப்பிடுக.

(பி - ம்.) 1. புக்குறைவிடம், உறைவிடன்.
2. தந்துறைதரும், உறைதலும்.
3. தொக்கனமுறை.
4. மைந்தனு மகிழ்வுற்றான். (28)

தம்முடன் வசிக்குமாறு முனிவர் இராமனை வேண்டுதல்

721. வைகின ரினிதன்னா ரவ்வழி மறையோனும்
உய்குவெ னிவனோடு முடனுறை தலினென்பான்
செய்தன னினிதெல்லாஞ் செல்வனை முகமுன்னாக்
கொய்குல மலர்மார்ப கூறுவ துளதென்றான்.

அன்னார் - (இராமபிரான் முதலிய) அம்மூவரும், அவ்வழி - அவ் வாசிரமத்தில், இனிது வைகினர் - இனிதாகத் தங்கினர்; மறையோனும் - வேதம் வல்ல முனிவரும், இவனோடும் உடன் உறைதலின் - இவ்விராம னோடு சேர்ந்து வசித்தலால், உய்குவென் என்பான் - நான் நற்கதி பெறுவேன் என்று கருதியவராய், எல்லாம் இனிது செய்தனன் - அவர் களுக்கு (வேண்டிய) எல்லாவற்றையும் நன்கு செய்தமைத்து, செல்வன் முகம் முன்னா - இராமபிரானிடம் அணுகி, கொய் குலம் மலர் மார்ப - கொய்யப்பெற்ற சிறந்த மலர்மாலை அணிந்தவனே, கூறுவது உளது என்றான்-நான் சொல்வதொன்று உண்டு என்றுசொல்வாராகி...

இதுவும் மேலே இரண்டு பாடல்களும் தொடர்ந்து, "இருத்தி யீண்டென்றான்" (728) என்பதனோடு முடியும். பரத்துவாச முனிவர், இராமபிரான் தம்முடன் இருந்தால், தமக்கும் அவர்களுக்கும் நன்மையாமென்று கருதி, அதனை இராமபிரானிடம் தெரிவித்தல் மேல் இரண்டு பாடல்களாற் கூறப்படும். செல்வனை; ஐ, அல்வழிச் சாரியை. முன்னா: செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். முதலடியில், 'வைகினர் கதிர் நாறுமளவையின்' என்றுள்ள பாடம் சிறக்கும். மூவரும் முனிவர்பால் விடை கொண்டு ஆசிரமத்தினின்றும் புறப்

பட்டது காலைப்பொழுது என்பது மேலே 731-ஆம் பாடலால் தெரியவரும்.

(பி - ம்.) 1. வைகினனினிதன்னுன்; அவ்வயின், இவ்வழி; மு. வைகினர் கதிர் நாறு மளவையின் மறையோரும், மறையோனும்.
2. உய்குவெனிவனெடியான், உய்குவம், உய்குவெம், உய்குவனி வனெடியான், உய்குவமிவனேடும், உய்குவனெடும், உய்குவனி வனெடியாம்; உடனுறைகுவனென்பான், உடனுறையென வந்தச், உறைதலிலெனவந்தச், உறைதலினெனவன்பாற், உறை தலிதெனவான, யானுறைதலினென்பான்.
3. செய்தனமினிதென்னுச், செய்தவனினிதெல்லாம், செய்தவனி தெல்லாம், செய்குவனினிதெல்லாம், இனிதென்னுச், செய்குவ தேவர்க்கும், செய்குனனினிதெல்லாம்.
4. மலர்மார்பா, கொய்மலர் மார்பாகான், கொய்மலர் தருமார்பா, கொய்மலரணிமார்பா, கொய்முறை மலர்மார்ப; கூறுவகேட் கென்ருன். (29)

(கலிநிலைத்துறை)

722. நிறையு நீர்மலர் நெடுங்கனி கிழங்குகாய் கிடந்தோர்
குறையு மற்றன தூய்மையாற் குலவிய தெம்மோ
டுறையு மிவ்வழி யுயர்தவ மொருங்குடன் முயல்வார்க்
கிறையு மீதலா தினியதோ ரிடமரி தின்னும்.

எம்மோடு உறையும் இ வழி - எங்களோடு (நீங்கள்) தங்கியுள்ள இவ்விடம், ஓர் குறையும் அற்றன - ஒரு குற்றமும் இல்லாதனவாகிய, நிறையும் நீர் - நிறைந்த நீரும், மலர் - பூக்களும், நெடு கனி - மிக்க பழங்களும், கிழங்கு - கிழங்குகளும், காய் - காய்களும், கிடந்து - கிடைக்கப்பெற்று, தூய்மையால் குலவியது - தூய்மையோடு விளங்குவ தாகும்; உயர் தவம் ஒருங்கு முயல்வார்க்கு - உயர்ந்த தவத்தை ஒருங்கே செய்ய விரும்புமவர்க்கு, ஈது அலாது - இதனையன்றி, இனியது ஓர் இடம் இறையும் - நல்லதான (வேறு) ஓரிடம் சிறிதும், அரிது - இல்லை; இன்னும் - மேலும்.

இதுவும் அடுத்த பாடலும் குளகம்.

இராமபிரான், தவவொழுக்கத்தோடு காட்டில் தங்கக் கருதியது உணர்ந்த பரத்துவாச முனிவர், அதற்கேற்ற இடம், தாம் இருக்கும் அந்தச் சூழலே என்று காரணங் காட்டிக் கூறி, இராமபிரானை அங்கே இருத்த முயலுகின்ருர். நெடுமை - மிகுதி. ஒருங்குடன் : ஒரு சொல் விழுக்காடு. அரிது, இன்மை குறித்தது. இறை - சிறிது.

(பி - ம்.) 1. காய்கிடந்த, நேர்ந்த.
2. குறையுந்தூயவை, தூயவை குறைவிலவெம்மோடு, குறைவில வெம்மோடு, குறைவிலதெம்மோடு, குறைவிலமெய்யோடு, குறை விலமெம்மோடு, குறையிலவெம்மோடு.

3. உறையுமவ்வழி; ஒருங்கினினுயர்தவம், ஒருங்கினியுயர்தவம், உயர்தவ மொருங்கினி, ஒருங்கினின், முயங்கினும், முயங்கினா; முயல்வோர்க்கு, உயர்தவ முயலுவான் ஒழுக.
4. ஈதலால், ஈதலது, ஈதியாது; இடமரிதென்னும், இடமரிதென்றும், இறையுமீதலதிடமரிதென்னுய மின்னும். (30)

723. கங்கை யாளொடு கரியவ ணுமகள் கலந்த
சங்க மாதலிற் பிரியலென் ருமரைச் சரணச்
செங்க ணுயக வயனுக்கு மரும்பெறற் றீர்த்தம்
எங்கள் போலியர் தரத்ததன் றிருத்தி ரீண்டென்ருன்.

தாமரை சரணம் - செந்தாமரை போன்ற திருவடிகளையும், (தாமரை) செம் கண் - அத்தாமரையே போன்ற செவ்விய கண்களை யும் உடைய, நாயக - தலைவா, (இவ்விடம்) கங்கையாளொடு - கங்கா நதியுடன், கரியவள் - யமுனையும், நாமகள் - சரசுவதியும், கலந்த சங்கம் ஆதலின் - கூடுகிற சங்கமத் துறையாதலால், அயனுக்கும் பெறல் அரும் தீர்த்தம் - பிரமனுக்கும் கிடைத்தற்கரிய தீர்த்த விசேடம் உடையது; (எனவே), எங்கள் போலியர் தரத்தது அன்று - எங்களைப் போன்றவர் எளிதில் அடையத் தக்கதன்று; (ஆதலால்) பிரியலென் - நான் (ஒருபோதும்) இங்குநின்றும் நீங்கேன்; ஈண்டு இருத்திர் - (நீங்களும்) இங்கேயே இருப்பீர்களாக; என்ருன்—.

'இன்னும்' என நின்ற முன் பாட்டின் இறுதியோடு, அரும்பெறல் தீர்த்தம், தரத்ததன்று, பிரியலென், இருத்திர் எனக் கூட்டி முடிபு கொள்க.

தவஞ் செய்வார்க்குத் தக்கவிடம் இதனினும் சிறந்தது வேறில்லை என்று கூறி, 'இன்னும்' என்று தொடர்ந்த முனிவர், அவ்விடம் தீர்த்தத்தாலும் தனிச் சிறப்புடையது என்பதனை எடுத்துக் கூறி, 'நான் ஒருபோதும் இங்கிருந்து பிரியமாட்டேன்; உங்களுக்கு வேண்டுவன வெல்லாம் செய்தமைப்பேன்; ஆதலால், நீங்கள் இங்கேயே தங்குங்கள்' என்கின்ருர். ஆறுகளைப் பெண்களாகக் கூறுதல் மரபா கலின், கங்கையாள், கரியவள், நாமகள் என்ருர். சங்கம் - சங்கமம்; கூடுமிடம். இந்த நதிகள் கூடுமிடம் 'திரிவேணீ சங்கமம்' எனப்படும். இத்தலம் பிரயாகை. பிரமனுக்கும் அரியதான இவ்விடத்தில் தங்கும் பேறு எனக்கு வாய்த்ததனுல் நான் இங்கிருந்து பிரியேன் என்கின்ருர்.

(பி - ம்.) 1. கங்கையாளொடும்; காளிந்தியெனுநதி.
2. பிரியலம், பிரியலர், பெரிதிவண்; தாமரைச்செங்கண், தாமரை போன்ற, தாமரைவடித்த.
3. அங்கணுயக, அங்கநாயக, அங்கநாயகன், செங்கணுயகன்; அரும் பெறறீர்த்தம்.
4. தரத்ததின்; இருத்திமீண்டு, இருத்தியிங்கு. (31)

இராமபிரான் கூறுதல்

724. பூண்ட மாதவ னம்மொழி விரும்பினன் புகல
நீண்ட தன்றிது நிறைபுன னாட்டுக்கு நெடுநாள்
மாண்ட சிந்தைய விவ்வழி வைகுவெ னென்றால்
ஈண்ட யாவரு நெருங்குவ ரென்றன னிராமன்.

பூண்ட மா தவன் - பெருந்தவம் பூண்ட பரத்துவாசர், அ மொழி விரும்பினன் புகல - அந்த வார்த்தையை விரும்பிக் கூற, இராமன் - இராமபிரான், (முனிவரை நோக்கி) மாண்ட சிந்தைய - மாட்சிமைப் பட்ட மனமுடையீர், இது - இவ்விடம், நிறைபுனல் நாட்டுக்கு நீண்டது அன்று - நிறைந்த நீர்வளமுடைய கோசல நாட்டுக்கு நெடுந்தூரத்தில் உள்ளதன்று; நெடுநாள் - நெடுங்காலம், இ வழி வைகுவென் என்றால் - இவ்விடத்தில் நான் தங்குவேனானால், யாவரும் - நாட்டு மக்கள் அனைவரும், ஈண்ட நெருங்குவர் - விரைவில் (இங்கு வந்து) கூடுவார்கள், என்றனன்—.

அம்மொழி என்றது, 'இருத்திர் ஈண்டு' என்றதனை. இராமன் அங்கேயே தங்கவேண்டுமென்ற விருப்பத்தோடேயே முனிவர் சொன்னாலும், தன் கருத்துக்கு அது தக்கதன்று எனக் காரணங் காட்டிக் கூறுகின்றான் இராமபிரான். "சீதை மணவாளன் றன்னோடுந் தீக்கானம், போது மதுவன்றேற் புகுதுமெரி", "பிறந்துலகம், முற்றுடைய கோவைப் பிரியாது மொய்த்தீண்டி, உற்றுறைதும் யாரும் உறையவே சின்னாளில், புற்றுடைய காடெல்லாம் நாடாகிப் போம்" (400, 404) என்று தன்னை விடாது தொடர்ந்த மக்களின் மனக் கருத்தை நன்கு உணர்ந்தவனாகலின், மீண்டும் அவர்கள் அவ்வாறு திரண்டு வரின், தன்னோடு அங்குள்ள முனிவர்க்கும் இடையூறு உண்டாமென்று குறிப்பிக்கின்றான். இது, தன் கருத்துக்கு ஏற்றதாக வேறோர் இடத்தை முனிவர் கூறவேண்டுமென்பது குறித்தவாறு.

(பி - ம்.) 1. மாதவனவ்வழி; விரும்பினன் புனித, விளம்பினன் புனிதன்.
2. நீண்டவன்றிது, நீண்டவன்னது, நீண்டவன்னிது; நாட்டிற்குள், நிகழ்த்தினனாட்டினுக்கு; நடுவாம், அணித்தாம், அணித்தாய், நேரே.
3. சிந்தையர், சிந்தையன்; வைகுவன், வைகுவத், வைகினன், ஆகுவன்.
4. ஈண்டியாவரும், ஈண்டையாவரும்; நெருக்குவர். (32)

பரத்துவாசர் கூறுதல்

725. ஆவ துள்ளதே யையகே ளீரிரண் டமைந்த
காவ தப்பொழிற் கப்புறங் கழிந்தபின் காண்டி
மேவு காதலின் வைகுதி விண்ணினு மினிதாத்
தேவர் கைதொழுஞ் சித்திர கூடமென் றுளதால்.

(இராமபிரான் கூறியது கேட்ட முனிவன், அவனை நோக்கி) ஐய - ஐயனே, ஆவது உள்ளதே-(நீ சொல்லியவாறு) நேர்வது உண்மையே; (அங்ஙனமாயின்) கேள் - (நான் சொல்வதைக்) கேட்பாயாக; ஐ இரண்டு காவதம் அமைந்த பொழிற்கு - பத்துக் காத அளவினதாய் அமைந்துள்ள இந்த வனத்துக்கு, அ புறம் கழிந்தபின் - அப்பால் சென்ற பிறகு, விண்ணினும் இனிது ஆக - சுவர்க்கத்தினும் இனியதாக, தேவர் கைதொழும் - தேவர்களும் வணங்குதற்குரிய பெருமையுடைய, சித்திரகூடம் என்று உளது காண்டி - சித்திரகூடம் என்று பேருடைய தோர் இடத்தை(மலையை)க் காண்பாய்; மேவு காதலின் - உனக்கு அமைந்த விருப்பத்தின்படி, வைகுதி - (அங்கே) தங்குவாயாக.

'என்று காதலின் ஏயினன்' என மேல் வருவதனோடு தொடர்ந்து முடியும். ஆல் : அசை. பொழில் - வனம்.

இராமபிரானது கருத்தை உணர்ந்த பரத்துவாச முனிவர், சித்திரகூட மலையின் பெருமையைக் கூறி, அவர்கள் தங்குதற்கு ஏற்ற இடம் அதுவே, அங்கே இனிதாக எவ்வளவு காலமாயினும் தங்கலாம் என்றனர். பரத்துவாச முனிவரது ஆசிரமத்திலிருந்து பத்துக்காத தூரத்தில் உள்ளது சித்திரகூடமென்பது இதனால் பெறப் படுகின்றது. பத்துக் குரோசம் என்று வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. ஆயது; ஐயிரண்டமைத்த.
2. காவதன், காவதர்ப், காவிடைப், கூவுதண்; கூயதன், அப்புறம் போயபின், போனபின்; குறுகி, குறுகும்.
3. மேவுகாதலை, காதல; கானத்தில், கானத்தின், கானத்துள்; வைகுதிர், ஏகுதி, வெஃகுதி; பல்வளம்; விண்ணிலுமினிதால்.
4. கைதொழு; கூடமென்றுளதே, ஒன்றுளதால். (33)

### மூவரும் விடைபெற்று யமுனை தீரத்தை அடைதல்

726. என்று காதலி னேயின னடிதொழு தேகிக்
கொன்றை யங்குழற் கோவலர் முல்லையங் குறிஞ்சி
சென்று செங்கதிர்ச் செல்வனு நடுவுறச் சிறுமான்
கன்று நின்றுகள் கரையுடைக் காளிந்தி கண்டார்.

என்று—, காதலின் ஏயினன் - அன்போடு (முனிவர்) விடை கொடுத்தாராக, அடிதொழுது - (மூவரும் முனிவருடைய) பாதங்களில் வணங்கி, ஏகி - (அங்கு நின்றும்) புறப்பட்டு, கொன்றை - அம் குழல் கோவலர் முல்லை - கொன்றைப்பழக் குழலினையுடைய இடையர் வாழும் முல்லைநிலப் பகுதியையும், அம் குறிஞ்சி - அழகிய குறிஞ்சி நிலப் பகுதியையும், சென்று - கடந்துபோய், செம் கதிர் செல்வனும் நடு உற - சூரியனும் உச்சியை அடைய, (அவ்வேளையில்) சிறுமான் கன்று நின்று உகள் கரை உடைய - சிறியமான் கன்றுகள் நின்று

துள்ளுதற்கிடமான கரைகளையுடைய; காளிந்தி கண்டார் - யமுனை யாற்றைக் கண்டனர்.

'என்று' என்றது முன் பாடலின் தொடர்ச்சி; வைகுதி என்று காதலின் ஏயினன் என இயையும். முனிவர்பால் விடைகொண்டு மூவரும் புறப்பட்டு வழிநடந்து, உச்சிப் போதில் யமுனையாற்றை அடைந்தனர் என்றதனால், இவர்கள் புறப்பட்டது காலைப் போதாதல் பெறப்படும்; அஃதாவது, பரத்துவாசரின் ஆசிரமத்தில் தங்கின இராப் பொழுது கழிந்த மறுநாட் காலை யென்க. கொன்றை நெற்றால் குழல் அமைத்து ஊதுதல் கோவலர்க்கு உரியது. கொன்றையங் குழல்: அம், சாரியை; "கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ" (சிலப். 17: 19). இராமபிரான் முதலியோர் வழிநடையில் மருதம், முல்லை, குறிஞ்சி என்ற மூன்று நிலங்களை இதுகாறும் கூறினர்.

(பி - ம்.) 1. என்ற; காதலினேவலும், காதலினேவினன், காதலனடிதொழுது, காதலன்கூறிட, காதலனேயினன், மாதவனேகினன், மாதவனேகலும், மாமுனியியம்பினன், இயம்பலும், ஏவினன்; அடிதொழுதேத்திக், அடிதொழுதிறைஞ்சிக், இருமையினிறைஞ்சிக், இனியன வேத்திக், இராகவன் முதலோர்.

2. கொன்றைவெங்குழற், வேய்ங்குழற்; முல்லையுங்குறுகிச், முல்லையுங் குறிஞ்சி, முல்லையங்குடுமி.

3. செல்வனுமுடியுறச்.

4. கரையுடைக்கானதி, காளிந்தியெனுநதி; கண்டான். (34)

### நீராடி உணவருந்தி யமுனையைக் கடத்தல்

727. ஆறு கண்டன ரகமகிழ்ந் திறைஞ்சின ரறிந்து
நீறு தோய்மணி மேனியர் நெடும்புனல் படிந்தார்
ஊறு மென்கனி கிழங்கினோ டுண்டுநீ ருண்டார்
ஏறி யேகுவ தெங்ஙன மென்றலு மிளையோன்.

ஆறு கண்டனர் - யமுனையாற்றைக் கண்டவர்களான, நீறு தோய் மணி மேனியர் - (வழிநடையால்) புழுதி படிந்த திருமேனியுடைய அம்மூவரும், அகம் மகிழ்ந்து - மனமகிழ்ந்து, அறிந்து - (அதன் பெருமையை) உணர்ந்து, இறைஞ்சினர் - (அதனை) வணங்கி, நெடு புனல் படிந்தார் - (அதன்) ஆழ்ந்த நீரில் முழுகி (நீராடி), ஊறும் மென்கனி - சுவையூறிய மென்மையான பழங்களை, கிழங்கினோடு உண்டு - (நல்ல) கிழங்குகளுடன் புசித்து, நீர் உண்டார் - (அந் நதியின்) நீரையும் அருந்தியபின், ஏறி ஏகுவது எங்ஙனம் என்றலும் - (இதனைக்) கடந்து செல்வது எவ்வாறு என்று ஆலோசிக்குமளவில், இளையோன் - இளைய பெருமாள்....

இதுவும் அடுத்த பாடலும் குளகம். இளையோன், அமைத்து, நீந்தி நீங்கினான் (733) என இயைந்து முடியும். வழிநடந்து வருந்திய

வர்க்கு, ஆற்றைக் கண்டது மகிழ்ச்சி அளித்தது. யமுனை தெய்விக மான பெருமை உடையதாகலின் அதனை வணங்கி, அதில் நீராடி, (நாட்கடன்களை முடித்துக்கொண்டு) கையில் கொணர்ந்த பழம் முதலியவற்றைப் புசித்து நீரும் அருந்திச் சிறிது இளைப்பாறியபின், நதியைக் கடந்து மேலே செல்வது எவ்வாறு என்று சிந்திக்கையில் இலக்குவன், இன்னது செய்தான் என்பதை மேல் வரும் பாடலுட் காண்க. கண்டனர், மேனியர்: வினையாலணையும் பெயர். ஏனை மூன்று முற்றுக்கள் எச்சப் பொருளில் வந்தன. நீராடிப் புசித்தனர் என்றதனால் நாட்கடன் கழித்தமையும் பெறப்படும்.

(பி - ம்.) 1. கண்டகமகிழ்ந்தினிது, கண்டனர்மகிழ்ந்தனர், கண்டனரவ்வயின்; இறைஞ்சினர்வணங்கி, அறிந்தனரிறைஞ்சி, அடைந்தனரறிந்து, அவ்வயினடைந்தார்.
2. நீறுதோய்பனி, மாறிலாதொளிர்; மணிப்புனல்படிந்தே.
3. ஊறுதேன்கனி.
4. எங்கனமென்றலும், எங்கனமென்றனன், எங்ஙனமென்றிட; இளையான். (35)

728. வாங்கு வேய்ங்கழை துணித்தனன் மாணையின் கொடியால்
ஓங்கு தெப்பமொன் றமைத்தத னும்பரி னுலம்போல்
வீங்கு தோளண்ண றேவியோ டினிதுவீற் றிருப்ப
நீங்கி னனந்த நெடுநதி யிருகையா னீந்தி.

வாங்கு வேய் கழை துணித்தனன் - வளையும் தன்மையுடைய மூங்கிற் கழிகளை வெட்டி, மாணையின் கொடியால் - மாணை என்னும் ஒருவகைக் கொடியால் (பிணைத்து), ஓங்கு தெப்பம் ஒன்று அமைத்து- உயர்ந்த தெப்பம் ஒன்றைக் கட்டி, அதன் உம்பரின் - அதன்மேல், உலம்போல் வீங்கு தோள் அண்ணல் - திரண்ட கல்லைப் போலத் திண்ணிதான தோள்களையுடைய இராமபிரான், தேவியோடு இனிது வீற்றிருப்ப - சீதாபிராட்டியுடனே இனிதாக ஏறியிருக்க, அந்த நெடு நதி - அந்த ஆழமான யமுனையாற்றை, இரு கையால் நீந்தி நீங்கினன்- (தன்) இரு கைகளாலும் (தெப்பத்தைக் கடத்தியவாறே) நீந்திக் கடந்தான்.

'இளையோன்' என்ற எழுவாய் முன் பாட்டின் இறுதியில் உள்ளது.

யமுனையைக் கடப்பதெப்படி என்று ஆலோசிக்கையில், இலக்குவன், அங்கே கிடைத்த மூங்கிற் கழிகளை ஒத்த அளவினவாகத் துண்டித்து, மாணையென்னும் ஒருவகைக் கொடியைக் கயிருகக் கொண்டு நல்ல தெப்பம் ஒன்று கட்டி, அதில் இருவரையும் அமரச் செய்து, அதனை உந்தியவாறே தான் ஆற்றை நீந்திக் கடந்தான். இராம இலக்குவர் இருவருமாகத் தெப்பத்தை அமைத்து இலக்குவனும் அதில் இருக்க, இருவரும் அதனைச் செலுத்தி அக்கரை சேர்ந்தனர் என்று வான்மீகம் கூறும்.

வேய் - மூங்கில். கழை - கழி; கோல். மாணைக்கொடி: "துறுக் கலயலது மாணை மாக்கொடி" (குறுந். 36).

(பி - ம்.) 1. வெங்கழை, வேய்ங்கழி, மென்கழை; மாணையங் கொடியாள்.
2. ஏங்குதெப்பமொன்று, ஓங்குதெப்பமென்று; அமைத்ததின், அமைத்தனன், இழைத்ததன், இழைத்தனன்; உம்பரினிலம்போல், உம்பரினகம்போல், உம்பரினுலகம், உம்பர்தம்பதிபோல்.
3. வீற்றிருக்க.
4. நீந்தினனந்த; நெடுங்கரை, இருகதி; இருகையால்கிமிர. (36)

இலக்குவன் நீந்திச் சென்றது

729. ஆலை பாய்வய லயோத்திய ராண்டகைக் கிளையான்
மாலை மால்வரைத் தோளெனு மந்தரந் திரியக்
காலை வேலையை யுற்றது கழிந்தநீர் கடிதின்
மேலை வேலையிற் பாய்ந்தது மீண்டநீர் வெள்ளம்.

ஆலை பாய் வயல் - கரும்பாலையிலிருந்து சாறு நீர்போலப் பாயும் வயல்களையுடைய, அயோத்தியர் ஆண் தகைக்கு - அயோத்தியிலுள்ளார் தலைவனான இராமபிரானுக்கு, இளையான் - இளையவனான இலக்குவனுடைய, மாலை - மாலை யணிந்த, மால் வரை தோள் எனும் மந்தரம்-பெரிய மலை போன்ற தோள்களாகிற மந்தர மலை, திரிய - (நீந்தும்போது) சுழலுதலால், மீண்ட நீர்வெள்ளம் - (தொடர்ந்து வர முடியாமல் எதிர்த்துத்) திரும்பிய நீர்ப்பெருக்கு, மேலை வேலையில் பாய்ந்தது - மேல் கடலில் போய்ப் புகுந்தது; கழிந்த நீர் - எஞ்சிய நீர், கடிதின் காலை வேலையை உற்றது - விரைந்து கீழ்கடலை அடைந்தது.

இலக்குவன், தெப்பத்தோடு ஆற்றின் குறுக்கே நீந்திச் சென்றதனால், மேற்கே இருந்து வரும் நீரோட்டம் தடைப்பட்டுத் திரும்பி மேற்கு நோக்கி எதிர்த்துச் சென்று மேல் கடலை அடைந்தது; மிகுந்த நீர் கீழ்கடலை அடைந்தது என்றது உயர்வுநவிற்சி. நீர்மேல் வருதல் இல்லாமையால் தெப்பம் ஆற்றைக் கடத்தல் எளிதாயிற்றென்ற குறிப்பும் இதில் உள்ளது. காலை வேலை, காலையில் கதிரவன் உதயமாகும் கீழ்கடலைக் குறித்தது. ஆண்தகை - ஆண்களிற் சிறந்தோன் புருஷோத்தமன்.

(பி - ம்.) 1. ஆலையேய்வயல்; அயோத்தியார்; இளையோன்.
3. வேலையைக்கடந்தது, கடைந்தது; களிந்திநீர்.
4. மேலவேலையில்; பரந்தது, உற்றது; மீண்டநீர்வேலை, நீண்டநீர் வெள்ளம். (37)

மூவரும் ஒரு சுரத்தை அடைதல்

730. அனைய ரப்புன லேறின ரகன்கரை யணைந்தார்
புனையும் வற்கலைக் கோலத்தர் நெடுநெறி போனார்
சினையு மூலமு முகடும்வெந் திருநிலந் தீய்ந்து
நினையு நெஞ்சமுஞ் சுடுவதோர் நெடுஞ்சுர நேர்ந்தார்.

புனையும் வற்கலை கோலத்தர் - உடுத்த மரவுரியால் உளதாகிய அழகினையுடைய அவர்கள், அனையர் - அத்தன்மையினராய், அ புனல் ஏறினர் - அந்த யமுனையாற்றைக் கடந்து, அகன் கரை அணந்தார் - பரந்த (தென்) கரையைச் சேர்ந்து, நெடு நெறி போனர் - நெடு வழியை நடந்து போய், சினையும் மூலமும் முகடும் வெந்து - (மரங்களின்) கிளைகளும் வேரும் உச்சியும் வெந்து கருக, இருநிலம் தீய்ந்து-தரையும் (பசையின்றித்) தீய்ந்து போகப் பெற்று, நினையும் நெஞ்சமும் சுடுவது - நினைக்கும் மனத்தையும் தீய்க்கவல்லதான, ஓர் நெடு சுரம் - ஒரு பெரும் பாலை நிலத்தை, நேர்ந்தார் - அணுகினர்.

அனையர், வற்கலைக் கோலத்தராகவே நெடுநெறி போனர் என இயைத்துரைத்தலும் ஆம். இதில் அனையர் என்பது எழுவாய். ஏறினர், அணந்தார், போனர் என்பன முற்றெச்சம். சுரத்தின் கொடுமை: பால. 344, 345 - ஆம் பாடல்களும் அவற்றின் விசேடக் குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 1. அனையவப்புனல்கடந்தனர்; அக்கரை அணைந்தார், உற்றார், புக்கார், அதன்கரை அணைந்தார், அகன்சுனையுற்றார்.
2. வற்கலைப்பொற்பினர், பொறியினர், கோலத்தார், பொற்பினர்.
3. மூலமுமகடும், மூலமும்வேரும், மூலமுமுருடும், மூலமுஞ்சிலையும்; நிலந்தீந்து.
4. நெஞ்சையும்; தீய்வதோர்; நெடுநெறி; சேர்ந்தார், சென்றார், நின்றார். (38)

இராமபிரான் நினைவால் பாலை மாறிய பரிசு

731. நீங்க லாற்றலள் சனகியென் றிராகவ னினைந்தான்
ஓங்கு வெய்யவ னுடுபதி யெனக்கதி ருகுத்தான்
தாங்கு வெங்கடத் துலவைகள் தழைகொண்டு தழைத்த
பாங்கு வெங்கனல் பங்கய வனங்களாய்ப் பரந்த.

(பாலையை அணுகியபோது), இராகவன் - இராமபிரான், சனகி நீங்கல் ஆற்றலள் என்று நினைந்தான் - சீதை இக் கொடுவனத்தைக் கடத்தலாற்றாள் என்று எண்ணினான்; (அவ்வளவில்) ஓங்கு வெய்யவன் - வெம்மை மேலிட்டுநின்ற கதிரவன், கதிர் - தன் சுடு கதிர்களை, உடுபதி என உகுத்தான் - சந்திரனைப் போலத் (தண்மையாக) வீசினான்; தாங்கு - (அத்தன்மையை) ஏற்ற, வெம் கடத்து உலவைகள் - கொடிய சுரத்தின்கண் உள்ள பட்ட மரங்கள், தழை கொண்டு தழைத்த-தழைகளை ஏற்றுத் தளிர்த்தன; வெம் கனல் பாங்கு-கொடுந் தீப்போன்ற இடங்கள், பங்கயம் வனங்களாய் பரந்த-தாமரைத் தடாகங்கள் போல் (குளிர்ந்து) பரவின.

மூவரும் யமுனையைச் சார்ந்தது உச்சி வேளை என்பது முன்னே சொல்லப்பட்டது. அவர்கள் ஆற்றைக் கடந்து மறு கரை சேர்ந்து, வழி

நடந்து, சுடுவெயில் உள்ளபோதே சுரத்தைக் குறுகினராதல் வேண்டும்; அப்போது, மெல்லியலாகிய பிராட்டி அதனைக் கடப்ப தெங்ஙனம் என்று இராமபிரான் எண்ணவே, எங்கும் குளிர்ந்து இன்ப மயமாயிற்று என்கிறார் கவி. இப்படலத்தின் தொடக்கத்தில் இரண்டு பாடல்களுட் கூறியவற்றையும் நோக்குக. உடு - விண்மீன்; உடுபதி - விண்மீன்களுக்குத் தலைவன்; சந்திரன். வெம் கனல் பாங்கு என மாறுக. கனல் பாங்கு - தீப்போலச் சுடுமிடம். வனம் - நீர்; வனங்கள்: ஆகுபெயராய் நீர்நிலைகளைக் குறித்தது. பங்கய வனம் - தாமரைக்காடு என்றலுமாம்.

(பி - ம்.) 1. அண்ணலுநினைந்தான், நினைத்தான், நினையா, அன்னவா நினையா, நினைந்தார், அன்னவன் நினைந்தான், அன்னவனுற்றான், அண்ணலுள் நினைந்தான், இனையனநினைந்தான்.
2. ஓங்க.
3 தாங்க; வேங்கடத்து, வெங்கனல்; வளைகொண்டு, தழைப்படி துளைத்த.
4. பாங்கர்; வெங்கனல்; பசுங்கய, வெங்கனற்பங்கய, வேங்கனல் பங்கய; வனங்களாப்பரந்த, வனங்களாற்பசைந்த. (39)

732. வறுத்து வித்திய வனையன வல்லயிற் பரல்கள்
பறித்து வித்திய மலரெனக் குளிர்ந்தன பசைந்த
இறுத்தெ ரிந்தன வல்லிக ளிளந்தளி ரீன்ற
கறுத்த வாளர வெயிற்றினூ டமுதுகக் களித்த.

வறுத்து வித்திய அனையன - வறுத்துப் பரப்பிவைத்தாற் போன்ற, வல் அயில் பரல்கள் - வலிய கூரிய பருக்கைக் கற்கள், பறித்து வித்திய மலர் என - பறித்துப் பரப்பின பூக்களைப் போல, குளிர்ந்தன பசைந்த - குளிர்ந்து பசைகொண்டன; இறுத்து எரிந்தன வல்லிகள் - ஈரம் உலர்ந்து இற்றுத் தீய்ந்து போன கொடிகள், இளம் தளிர் ஈன்ற - இளந்தளிர் விட்டன; கறுத்த வாள் அரவு - சினமுள்ள கொடிய பாம்பு களும், எயிற்றின் ஊடு அமுது உக - (தம் நச்சுப்) பற்களினின்றும் அமுதம் சிந்த, களித்த - (சினம் மாறி) மகிழ்ந்தன.

வித்துதல் - பரப்புதல்; சீவக. 1611.ந. அரவும் என இழிவு சிறப் பும்மை விரிக்க.

(பி - ம்.) 1. வித்தியவனையதோர், அனையவாம், அணையவாய், வித்தியதனைய தோர், வீக்கியவனையன, வல்லயிற்பரற்கள், வில்லியிற்பரற்கள்.
2. பறித்துவீக்கிய, வீசிய, வீழ்த்திய, நீக்கிய, நீங்கிய; பசந்த, பசைந்தது.
3. இறுத்தரிந்தென, இறுத்தரித்தென, இறுத்தரிந்தன, இறுத்தரித்தன. இறுத்தரக்கென; வல்லிகளந்தளிர், வில்லிகளினந்தளிர்.
4. வாளரவெயிற்றினுள், வாளரவயிற்றிடு, வாளரா வெயிற்றினூடு; களித்தார், கனிந்த. (40)

733. குழுமி மேகங்கள் குமுறின குளிர்துளி கொணர்ந்த
முழுவில் வேடரு முனிவரின் முனிகில ருயிரைத்
தழுவி நின்றன பசியில பகையில தணிந்த
உழுவை யின்முலை மானிளங் கன்றுக ளுண்ட.

மேகங்கள் குழுமி - மேகங்கள் திரண்டு, குமுறின - முழங்கின வாகி, குளிர்துளி கொணர்ந்த - குளிர்ந்த - மழைத்துளிகளைக் கொண்டு வந்தன; முழு வில் வேடரும் - நிறைந்த விற்களையுடைய வேடர்களும், முனிவரின் - (ஆறின) முனிவர்களைப் போல, முனிகிலர் - சினமுருதவ ராயினர்; உயிரை தழுவி நின்றன பசி இல - உயிர்களை (விடாது) பொருந்துதலுடைய பசியும் இல்லாதாயிற்று; பகை இல தணிந்த - (இயல்பிலே பகையுடையனவும்) பகை இல்லாதனவாய் அடங்கி யிருந்தன; (அதனால்) மான் இளம் கன்றுகள்—, உழுவையின் முலை உண்டன - புலிகளிடத்து முலைப்பாலை உண்டன.

வேடரும்: உம்மை, இழிவு சிறப்பு. உழுவை - இங்கே பெண் புலி. பசியும் பிணியும் பகையும் நீங்கி வளஞ் சுரந்திருத்தல் நல்ல நாட்டின் இலக்கணம்; அஃதிங்கே உளதாயிற்றென்க.

(பி - ம்.) 1. குழுவி, குழுவின்; குமிறின; நறுந்துளி, கொணர்ந்து.
2. மழுவில்; முனைவரின், மு. வேடருமுனிகில.
3. தழுவிநின்றனர்; பசியிலதணிந்தன, பசியிலமிகையில, பசிசில மிகையில, பரிவுடன் பகையில, பகையில பசியில; தவறு.
4. கன்றுகளூட்ட. (41)

734. கல்ல ளைக்கிடந் தகடுவெந் தயர்கின்ற கதழ்பாம்
பல்ல லுற்றில வலைபுனற் கிடந்தன வனைய
வல்லை யுற்றவேய புற்றொடு மெரிவன மணிவாய்ப்
புல்லெ யிற்றிளங் கன்னியர் தோளெனப் பொலிந்த.

கல் அளை கிடந்து - கல்லிடுக்குகளிலே கிடந்து, அகடு வெந்து - (பசியால்) வயிறு வெந்து, அயர்கின்ற - சோர்கின்ற, கதழ் பாம்பு - சின முள்ள (கொடும்) பாம்புகளும், அல்லல் உற்றில - அத் துன்ப மொன்றும் இல்லாதனவாய், அலைபுனல் கிடந்தன அனைய - அலைகள் அலையும் நீரில் கிடந்தன போல ஆயின; வல்லை உற்ற வேய் - பெருங் காடாக மண்டியுள்ள மூங்கில்கள், புற்றொடும் எரிவன - (அவை முளைத்துள்ள) புற்றுக்களுடனே எரியுந் தன்மை யுள்ளவை, (அத் தன்மை நீங்கி) மணி வாய் - பவளம் போன்ற வாயையும், புல் எயிறு - சிறிய பற்களையுமுடைய, இளம் கன்னியர் தோள் என - இளம் பெண் களின் (பசிய) தோள்களைப் போல, பொலிந்த - (பசுமையோடு) விளங்கின.

அளை - இடுக்கு; பொந்து. கதழ் - விரைவு எனலுமாம். வல்லை உற்ற - வலிய தன்மையையுடைய எனவுமாம்.

(பி - ம்.) 1. கல்லிடைக்.
3. வேய்ம்புற்றொடும், வேய்முத்தொடும், வெம்புற்றொடும், பெய்புற்றொடும்; மணிவாழ்; மணிவான்.
4. மல்லெயிற்று; தோளென மலர்ந்த, தோளொடும் பொலிந்த, குயமெனப் பொலிந்த. (42)

735. படர்ந்தெ ழுந்தபுற் பசுநிறக் கம்பளம் பரப்பிக்
கிடந்த போன்றன கேகயந் தோகைகள் கிளர
மடந்தை மாரென நாடகம் வயின்றொறு நவின்ற
தொடர்ந்து பாணரிற் றூங்கிசை முரன்றன தும்பி.

படர்ந்து எழுந்த புல் - பரவித் தோன்றிய புற்கள், பசுமை நிறம் கம்பளம் பரப்பி கிடந்த போன்றன - பச்சைநிறம் வாய்ந்த கம்பளங்களை விரித்தாற் போன்றன; கேகயம் - மயில்கள், தோகைகள் கிளர - (அழகிய) தோகைகள் விளங்க, மடந்தைமார் என - நாடக மகளிர் போல, வயின்தொறும் நாடகம் நவின்ற - இடங்கள்தோறும் நடனம் ஆடின; தொடர்ந்து - அவற்றைத் தொடர்ந்து, தும்பி - வண்டுகள், பாணரின் - பாடுவார் போல, தூங்கு இசை முரன்றன - இனிய கீதத்தை ஒலித்தன.

தூங்கு இசை - சுருதியோடு ஒன்றிய (லயித்த) கீதம்.

(பி - ம்.) 1. புற்பாங்குறக்; கம்பலம் பரப்பிக், பரப்பக்.
2. கேகயத்தோகைகள், மஞ்ஞையந் தோகைகள்; கிளரா.
3. மடந்தைமாரொடு; வயின்றொறும் பயின்ற, நடித்த.
4. தொடர்ந்த; பாணிசை, துளங்கிசை; முரன்றது. (43)

736. கால மின்றியுங் கனிந்தன கனிநெடுங் கந்த
மூல மின்றியு முகிழ்த்தன நிலனுற முழுதும்
கோல மங்கைய ரொத்தன கொம்பர்க ளிம்பர்ச்
சீல மன்றியுஞ் செய்தவம் வேறுமொன் றுளதோ.

(அந்தப் பாலையில்) கனி - பழங்கள், காலம் இன்றியும் - (பழுத்தற்குரிய) காலமில்லாமலேயும், கனிந்தன - பழுத்தன; நெடு கந்தம் மூலம் இன்றியும் - மிக்க கிழங்குகளும் வேர்களும் இல்லாமலேயும், நிலன் முழுதும் உற முகிழ்த்தன - அந்நிலப் பரப்பு முழுவதிலும் (தாவரங்கள்) மிகத் தோன்றின; கொம்பர்கள் - பூங்கொம்புகள், கோலம் மங்கையர் ஒத்தன - அலங்கரித்த பெண்களைப் போலக் காணப்பட்டன; இம்பர் - இவ்வுலகத்தே, சீலம் அன்றியும் - (சிறந்த) ஒழுக்கத்தை யன்றியும், செய்தவம் வேறு ஒன்றும் உளதோ - செய்தற்குரிய தவம் வேறொன்றும் இருக்கின்றதோ! (இல்லை யென்றபடி).

பாலையின் தன்மை முழுதும் மாறி, அது வளமுள்ள முல்லை போலாயிற்றென்று சொல்லி வருகின்ற கவி, இங்கே அதற்குக் காரணம், தவத்தினும் மேம்பட்டதாகிய பிராட்டியின் சீலம் என்கின்ருர்; இராமபிரானுடைய எண்ணமும் இதற்குத் துணையாயிற்றென்னலாம். எனவே, சீலம் இருவருடையதும் என்றலும் இழுக்காது; "சீல மின்ன தென் றருந்ததிக் கருளிய திருவே"[2] (755) என்பதும் காண்க.

இராம இலக்குவர் முன்னமே விசுவாமித்திர முனிவர்பால் பலை, அதிபலை என்ற மந்திரங்களைப் பெற்றுள்ளமையாலும், நிகரற்ற ஆற்ற லுடைமையாலும் அவர்கள் பாலையைக் கடத்தல் அரிதாகாது. இங்கே பிராட்டியைக் குறித்தே இராமபிரான் சிந்தித்தானுகலின், அவள் பொருட்டு இது நிகழ்ந்ததென்றல் சிறப்புடைத்தாம். பாலை மாறிய சிறப்புப் பொருளைச் சீலம் எதையும் செய்விக்கும் என்ற பொதுப் பொருளாற் பெறவைத்தமையின், இது வேற்றுப்பொருள் வைப்பணி. காலமின்றியுங் கனிதல்: "தீங்கனி, கால மின்றிக் கனிவது காண்டிரால்" (கிட்கிந்தா. 737); மலைபடு. 134; புறநா. 116: 13; பெருங். 2. 20: 61-3-ம் பார்க்க. வேறும் என்றதில் உம்மை பிரித்துக் கூட்டப்பெற்றது.

(பி - ம்.) 1. காலமன்றியும்; கழிநெடுங்.
2. மூலமன்றியும்; முளைத்தன, முழங்கின; நிலமுற, நிலத்துற, நலனுற, நிலத்துரு, நிலத்துற்ற, நெடுநிலம்.
3. இன்பச், கொம்புகளிம்பர், வளரிளங்கொம்பர்.
4. சிலமின்றியும்; வேறுமொன்றுண்டோ. (44)

737. எயினர் தங்கிட மிருடிக ளிருப்பிட மேய்ந்த
வயின்வ யின்ருெறு மணிநிறக் கோபங்கண் மலர்ந்த
பயின்ம ரந்தொறும் பேடையைப் பரிந்தன பயிரும்
குயிலி ரங்கின குருந்தின மரும்பின முருந்தம்.

எயினர் தங்கு இடம் - வேடர்கள் தங்கும் இடங்கள், இருடிகள் இருப்பு இடம் ஏய்ந்த - முனிவர்கள் தங்கும் இடங்கள் போல் ஆயின; வயின் வயின் தொறும் - இடங்கள்தோறும், மணி நிறம் கோபங்கள் மலர்ந்த - மாணிக்க மணி போன்ற செந்நிறம் வாய்ந்த இந்திரகோபப் பூச்சிகள் பரவின; பயில் மரம் தொறும் - நெருங்கிய மரங்களில், பேடையை பரிந்தன பயிரும் குயில் இரங்கின - பெடைகளை அன்போடு அழைக்கும் (ஆண்) குயில்கள் கூவின; குருந்து இனம் - குருந்தமரக் கூட்டம், முருந்தம் அரும்பின - மயிலிறகின் அடிக் குருத்துப் போன்ற அரும்புகளை அரும்பின.

வேடர் பாலைநிலத்துக்கு உரியோர். கொலைத் தொழிலுடைய வன் கண்ணராகலின், அவர்கள் இருப்பிடங்களில் கொலைக் கருவிகளும் ஊன் முடை நாற்றமும் இருத்தல் இயல்பு; அத்தன்மை நீங்கிப் பூவும் கனியும் கிழங்கும் பூக்களின் நறுமணமும் அவ்விடங்களில் உள

வாயின. "முழுவில் வேடரும் முனிவரின் முனிகிலர்" (738) என வேடரைக் கூறியதற்கேற்ப, இங்கே அவர்கள் இருப்பிடத்தைக் குறித்தார். இந்திரகோபம் கார்காலத்தில் தோன்றுவது; 700 பார்க்க.

(பி - ம்.) 1. இருப்பிடமொத்த, இருப்பிடம் வேய்ந்த.
2. மணிநிறக் கொம்பர்கள், கொம்புகள்.
3. பிரிந்தனபேடையைப், பரிந்தனபேடையைப், பரந்தனபேடையைப், பேடையைத் தழுவின; பயிலும்.
4. குருந்தநின்று, குந்தநின்று, குருந்துநின்ற, முருகுநின்று, முருந்தினின்று; இயம்பின குருந்தம், அரும்பின மலர்ந்த, குளிர்ந்த. (45)

738. பந்த ஞாட்புறு பாசறை பொருள்வயிற் பருவம்
தந்த கேள்வரை யுயிருறத் தழுவினர் பிரிந்த
கந்த வோதியர் சிந்தையிற் கொதிப்பதக் கழலோர்
வந்த போதவர் மனமெனக் குளிர்ந்ததவ் வனமே.

பந்தம் - (தமக்குத்) தொடர்புடைய, ஞாட்பு உறு - போருக்குரிய, பாசறை (வயின்) - பாடிவீடு குறித்தும், பொருள் வயின் - பொருள் குறித்தும் (பிரிதலுற்று), பருவம் தந்த கேள்வரை - (தாம் மீண்டுவரும்) காலத்தைக் குறித்த கணவன்மாரை, தழுவினர் பிரிந்த - உயிருறத் தழுவி (விடை தந்து) பிரிதலுற்ற, கந்தம் ஓதியர் சிந்தையின் - மணங் கமழுங் கூந்தலை உடைய மங்கையரின் மனம்போல, கொதிப்பது - அ வனம் - கொதிக்குந் தன்மையுள்ள அப்பாலைவனம், அ கழலோர் வந்தபோது - வீரக்கழலை அணிந்த அந்த நாயகர் திரும்பிவரக் கண்ட போது, அவர் மனம் என - அம்மங்கையரின் மனம் (குளிர்தல்) போல, குளிர்ந்தது - குளிர்ச்சி உடையதாயிற்று. ஏ : ஈற்றசை.

பாலைவனம் தன் இயல்பு மாறிய பரிசைப் பலபடியாகக் கூறி வந்தவர், அதன் இருவகை நிலைக்கும் ஏற்ற உவமை தந்து முடித்தார். இசையெச்சமாக நின்ற சொற்கள் வருவித்து உரைக்கப்பட்டன. வயின் என்பது பாசறையோடும் கூட்டப்பெற்றது. உற்றுழிப் பிரிவைப் பாசறை எனக் குறித்தார். பருவம் தருதல் - தாம் மீண்டு வரும் காலத்தைக் குறித்தல்; அது கார்காலம். பாலைக்குரிய பெரும் பொழுது முதுவேனில்; இங்கே கார்போல் ஆயிற்று. பந்தம் - தொடர்பு. தழுவினர் ! முற்றெச்சம். அக்கழலோர் என்றது பிரிந்த தலைவரைச் சுட்டியது. பால. 706 ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

(பி - ம்.) 1. பந்தருட்புரை, பந்தருட்படர், பந்தரிற்புரை, பந்தஞாட்புறும், ஞாட்புரை, பந்தர்ஞாட்புறு, பந்தநாட்புறு, பரந்தஞாட்புறு; பாசறைப்; வயின்பருவம்.
2. உயிரெனத்; பரிந்த.
3. கொதித்ததக், கொதிப்பவக், மனமெனக் கொதிப்பதக்.
4. குளிர்ந்தது வனமே. (46)

### மூவரும் சித்திரகூடத்தைக் காணுதல்

739. வெளிறு நீங்கிய பாலையின் மெல்லெனப் போனார்
ஒளிறு வான்மதிக் குழவிதன் சூல்வயிற் றுதைப்பப்
பிளிறு மேகத்தைப் பிடியெனப் பெரும்பனைத் தடக்கை
களிறு நீட்டுமச் சித்திர கூடத்தைக் கண்டார்.

வெளிறு நீங்கிய பாலையில் - பயனற்ற தன்மை நீங்கப்பெற்ற (வளமுண்டாகிய) அப்பாலை நிலத்தில், மெல் என போனார் - (மூவரும்) மெல்லென நடந்து சென்று, ஒளிறு - பிரகாசிக்கிற, வால் மதி குழவி - வெள்ளிய பிறைச் சந்திரன், தன் சூல் வயிறு உதைப்ப - தனது கருக் கொண்ட வயிற்றில் (புகுந்து) உதைத்தலால், பிளிறும் மேகத்தை - முழங்குகின்ற மேகத்தை, பிடி என - (தன்) பெண்யானை என்று கருதி, (மயங்கி), களிறு - ஆண்யானை, பெரும் பனை தட கை நீட்டும் - பெரிய பனைமரம் போன்ற நீண்ட (தன்) துதிக்கையை (அம்மேகத்தினிடம்) நீட்டுதற்கு இடமான, அ - அத்தகைய, சித்திரகூடத்தை கண்டார் - சித்திரகூட மலையைக் கண்டனர்.

மூவரும் பாலையைக் கடந்து சென்று, அதற்கு அப்பால் தோன்றிய சித்திரகூட மலையைக் கண்டனர் என்று கூறிய கவி, அம்மலை மேக மண்டலமளவு உயர்ந்துள்ளதென உயர்வு நவிற்சியாகக் கூறுகின்றார். இயல்பாக இடிமுழக்கம் செய்யும் மேகத்தை, சூல் முதிர்தலால் வருந்திப் பிளிறும் பெண்யானை என்று மயங்கி, அவ்வருத்தம் தணிய அதனைத் தடவிக் கொடுக்கக் கருதி ஆண்யானை தன் துதிக்கையை நீட்டுவதாகவும், மேகத்தினிடையே பிறைச் சந்திரன் மறைதலைத் திங்கட்குழவி மேகத்தின் வயிற்றினுட் புகுந்து உதைப்பதாகவும், அவ்வுதையால் உளதாகும் நோவைப் பொறாமல் அது பிளிறுவதாகவும் செய்துள்ள கற்பனை நயம் காண்க. காலுதைத்தல் குழவிக்கியல்பு. வெளிறு - பயனின்மை; குற்றமும் ஆம். குற்றமாவது, வெப்பமிகுதி. மதிக்குழவி - பிறைச் சந்திரன்.

(பி - ம்.) 1. பாலையை.
2. குளிறு வான்மதிக், வான்மதி, வாழ்மதிக், குளிறும் வான்மதிக், ஒளிறுவாண் மதிக், வாழ்மதிக், வான் மதிக்; வயிற்றொளிப்பப், வயிற்றுதிப்பப், வயிறுதைப்பப், வயிறுதைப்ப, வயிறுதிப்பப்.
3. பணைத்தடக்கை.
4. நீட்டிய, நீட்டுறு, நீட்டுறும், நீடுறு; கண்டான். (47)

வனம்புகு படலம் முற்றும்.

# 9. சித்திரகூடப் படலம்

சித்திரகூட மலையைப்பற்றிக் கூறும் படலம் என இதன் பொருள் விரியும். இராமபிரான் முதலிய மூவரும் சித்திரகூட மலையைச் சேர்ந்து, அதன் வளங்களை எல்லாம் கண்டு களித்து, அங்கேயே ஆசிரமம் அமைத்துக்கொண்டு தங்கலுற்ற செய்தி இப்படலத்துள் கூறப்படும். இதனுள், மலைவளங்களை இராமபிரான் பிராட்டிக்குக் காட்டிக் கூறுவதாக அமைந்த பகுதியில் உள்ள வருணனைகளும் பிறவும் படித்து இன்புறற்குரியன.

இராமபிரான் சித்திரகூடக் காட்சிகளைப் பிராட்டிக்குக் காட்டுதல்

740. நினையுந் தேவர்க்கு நமக்குமொத் தொருநெறி நின்ற
அனக னங்கண ணுயிரம் பெயருடை யமலன்
சனகன் மாமட மயிற்கந்தச் சந்தனஞ் செறிந்த
கனக மால்வரை யியல்பெலாந் தெரிவுறக் காட்டும்.

நினையும் தேவர்க்கும் - நாம் உயர்வாக மதிக்கின்ற தேவர் களுக்கும், நமக்கும் - மானிடராகிய நமக்கும், ஒத்து - ஒரு படியாக, ஒரு நெறி நின்ற - ஒப்பற்ற நிலையில் உள்ள, அனகன் - பாவ ரகிதனும், அம் கண்ணன் - அழகிய கண்ணோட்டமுடையவனும், ஆயிரம் பெயர் உடை(ய) அமலன் - ஆயிரம் பேர்களை உடைய நின்மல மூர்த்தியுமான இராமபிரான், சனகன் மாமடம் மயிற்கு - சனகன் பெற்ற சிறந்த இளைய மயில் போலும் சாயலையுடைய சானகிப் பிராட்டிக்கு, சந்தனம் செறிந்த - சந்தன மரங்கள் அடர்ந்த, அந்த கனகம் மால் வரை - அந்தப் பொன்னையுடைய பெரிய சித்திரகூட மலையின், இயல்பு எல்லாம் - இயற்கை வளங்களையெல்லாம், தெரிவு உற - விளங்கும்படி, காட்டும் - காட்டலானுன்.

"சித்திரகூடத்தைக் கண்டார்" எனத் தோற்றுவாய் செய்து கொண்ட சித்திரகூட மலையை மூவரும் சேர்ந்தனராக, அதன் சாரலில் உள்ள இயற்கை வளங்களையெல்லாம் இராமபிரான் சீதாபிராட்டிக்குக் காட்டலானுன் எனத் தொடங்கி, மேலே 37 பாடல்களால் அதனை வருணிக்கின்ருர். அகம் - பாவம்; அனகன் - பாவ ரகிதன். அமலன் - நின்மலன். நம்மைப் போலவே, நம்மினும் அறிவாற்றல் மிக்க தேவர்க்கும் அறிய அரியவன் என்பார், 'ஒத்து ஒரு நெறி நின்ற அனகன்' என்ருர். நினையும் - (அரக்கரால் உளதாம் இன்னல் போக்கத் தன்னை) நினைந்து வேண்டின என்று உரைத்தலுமாம்.

நினையும் தேவர்க்கும் நினையாத நமக்கும் ஒத்து இன்னல் தீர்க்கும் ஒரு நெறி நின்றவன் என்றபடி; 787-பார்க்க. "நெறி நீர்மையர் நீள்வானவர் நினையுந்நினை வாகி" (தேவாரம், 1 : 17 : 6). ஆயிரம் பெயருடை யமலன்: "பேருமோ ராயிரம் பிறபல வுடையவெம் பெருமான்" (திருவாய் மொழி, 26).

(பி - ம்.) 1. ஒருவழி, ஒத்தனி, அருநெறி, நமக்குமற் றொருநெறி.
2. அனக நன்கணன்; பேருடை.
3. கனகன் மாமகள், கனகமாமகள்; மயிற்கு; தனக்கு.
4. கனகமாமலை; அழகெலாம். (1)

மேகத்துக்கும் யானைக்கும் வேற்றுமை தெரியாமை

741. வாளும் வேலும்விட் டளாவின வனையகண் மயிலே
தாளி னேலமுந் தமாலமுஞ் சுடர்தருஞ் சாரல்
நீள மாலைய துயில்வன நீருண்ட கமஞ்சூற்
காள மேகமு நாகமுந் தெரிகில காணாய்.

வாளும் வேலும் - வாட்படையும் வேற்படையும், விட்டு - நன்றாக விட்டு, அளாவின அனைய கண் - கலந்தாற் போன்ற கண்களை உடைய, மயிலே - மயிலின் சாயல் பொருந்தியவளே, தாளின் ஏலமும் - தாளிலே காய்க்கும் ஏலச் செடிகளும், தமாலமும் - பச்சிலை மரங்களும், சுடர் தரும் - ஒளிவிட்டு விளங்குகின்ற, சாரல் - பக்க மலைகளில், நீளம் மாலைய துயில்வன - நீண்ட வரிசையாக உறங்குகின்றன வான, நீர் உண்ட - நீரை மொண்டு கொண்ட, கம சூல் - நிறைந்த கருப்பமுடைய, காளமேகமும் - கருமேகங்களும், நாகமும் - யானைகளும், தெரிகில - (ஒன்றுக்கொன்று வேற்றுமை) தெரிய அரியனவா யிருப்பவற்றை, காணாய் - காண்பாயாக.

இதுமுதல் 37 கவிகள் இராமபிரான் பிராட்டிக்குக் காட்டிய பலவகைக் காட்சிகளை விவரிக்கும். முதற்கண் இக்கவி, அம்மலையில் தங்கும் மேகங்களுக்கும் யானைகளுக்கும் வேறுபாடறிய வொண்ணாதபடி அவை நிறைந்துள்ளன என்கின்றது. வரிசையாகத் துயிலுதல் இரண்டிற்கும் பொது. மேகம் தங்குதலைத் துயிலுதல் என்றார்; "திருத் துயில் பெற்ற மார்பன்" (சீவக. 1504). துயில்வனவான மேகமும் நாகமும் என்க; நாகம் - யானை. மயில் : ஆகுபெயர். துயில்வன : வினையாலணையும் பெயர்.

(பி - ம்.) 1. வேலுமிட்டு, அரையினவனைய, அரையனவனைய, அரையகண்மாமட, அரையனவனகண்,
2. தாளினேலமுமாலமுந்; தழைதரு, தொடர்தரு, தொடர்தரும், தொடர்தடம், சுடர்தரு, தழைதடம்.

3. நீளமாமலை, மாமலைத், நீளமாலையில், மாலையன், நீழல்மாலையன், நீளமாயயல, நீளமால்பணி; மணித், நீளுமாமலை, தளுமாலைய; திண்டகுமகஞ்சூல்.
4. தெரிவில, தெரியல; தெரிவுறத் துயில்வன. (2)

### வருடைகள் குதிக்கின்ற வருணனை

742. குருதி வாளெனச் செவ்வரி பரந்தகட் குயிலே
மருவி மால்வரை யும்பரிற் குதிக்கின்ற வருடை
சுருதி போற்றெளி மரகதக் கொழுஞ்சுடர் சுற்றப்
பருதி வானவன் பசும்பரி நிகர்ப்பன பாராய்.

குருதி வாள் என - இரத்தம் தோய்ந்த வாட்படைபோல, செவ் அரி பரந்த கண் - செவ்வரிகள் பரவிய கண்களை உடைய, குயிலே - (குரலால்) குயில் போன்றவளே, மால் வரை உம்பரில் மருவி - இப்பெரிய மலையின் உச்சியில் போய், குதிக்கின்ற வருடை - துள்ளும் வருடைகள், சுருதிபோல் தெளி - வேதம் போலத் தெளிவுற்ற, மரகதம் கொழு சுடர் சுற்ற - மரகதமணிகளின் வளவிய பச்சொளி சூழ்தலால், பருதி வானவன் - சூரியதேவனுடைய, பசு பரி நிகர்ப்பன - (தேரில் பூட்டிய) பச்சைக் குதிரைகளை ஒத்திருப்பவற்றை, பாராய் - பார்ப்பாயாக.

மரகதத்தின் பச்சையொளி வருடைகளின்மேற் படிய, அவை சூரியன் தேரில் பூட்டிய பச்சைக் குதிரைகள்போலக் காணப்படு கின்றன. வருடை - மலையில் வாழும் ஒரு விலங்கு; வரையாடும் ஆம் (பட்டினப். 139 - ந; சிலப். 25: 51. குறிப்.). மரகதமணியின் மாசில்லாத தெளிந்த ஒளிக்குச் சுருதியை உவமை கூறினர். "மால் வரைப், பாழி மாமுகட்டுச்சிப் பச்சைமா, ஏழும் ஏறப்போய்" (பால. 338) என்பதனால், சூரியன் தேர்க்குதிரைகள் பச்சை நிறமுடையன வென்பது தெரியவரும்.

(பி - ம்.) 1. கருகிவாளெனச், சேயரிபரந்த; வார்ந்த.
2. மருவுமால்வரை, அருவிமால்வரை; உம்பரிற்பாய்கின்ற, இம்பரிற் குதிக்கின்ற.
3. சுருதிபெற்றெளிர், சுருதிபோற்றொடர், குருதிபோற்றொடர், சுருதி போற்சுடர், சுருதிபோலொளிர்; மரதகக் கொழுஞ்சுடர், மரகதச் செழுஞ்சுடர், மரகதக் கொடுஞ்சுடர்; சுற்றிப், துடரப்.
4. பசும்பரி புரைவன. (3)

### அரவுரிகளின் காட்சி

743. வடங்கொள் பூண்முலை மடமயி லேமழை மதமா
அடங்கு பேழ்வயிற் றரவுரி யமைதொறுந் தொடக்கித்
தடங்க டோறுநின் றுடுவ தண்டலை யயோத்தி
நுடங்கு மாளிகைத் துகிற்கொடி நிகர்ப்பன நோக்காய்.

வடம் கொள் பூண்முலை - ஆரங்களாகக் கோக்கப்பட்ட அணி கலன்களைக் கொண்ட தனங்களையுடைய, மட மயிலே - இளமயில் போன்றவளே, மழை மதம் மா அடங்கு - மழைபோல மதம் பொழியும் யானை அடங்கிய, பேழ் வயிறு - பெரிய வயிற்றையுடைய, அரவு உரி - பாம்பின் உரிகள், அமைதொறும் தொடக்கி - மூங்கில்தோறும் சிக்குண்டு, தடங்கள் தோறும் - பற்பல இடங்களில், நின்று ஆடுவ - நிலைபெற்று அசைவன, தண்டலை அயோத்தி - சோலைகள் சூழ்ந்த (நம்) அயோத்தியில், மாளிகை நுடங்கு - மாளிகைகளிலே (பொருந்தி) அசைகின்ற, துகில் கொடி நிகர்ப்பன - சீலைக்கொடிகள் போல்வன வற்றை, நோக்காய் - பார்ப்பாயாக.

பாம்பின் உரி மெல்லிய துகில் போல்வது. அது பக்க மலை மேலுள்ள மூங்கிலில் சிக்கிக் காற்றில் அசைவது, மாளிகைகளின் மேலே நாட்டிய மூங்கிலிற் கட்டிய சீலைக்கொடி காற்றில் அசைவது போன்றுள்ளது. பக்க மலைகள், மாளிகைகள்; மூங்கில், கொடி கட்டும் கோல்; அரவுரி, துகிற்கொடி. மெல்லிய ஆடைக்கு அரவுரியை உவமை கூறுவர்; பெருங். 1. 42, 244; பாகவத. கோவியர் துகில். 9; இலிங்க. அம்பரீட. 56; திருவிளை. திருமண. 147. மலைப்பாம்புகள் யானையையும் விழுங்கத் தக்கன; "இடிகொள் வேழத்தை யெடுத்துட னெயிற்றெடு விழுங்கும், கடிய மாசுணம்" (780); பால. 350; யுத்த. 635; மலைபடு. 260-61; நற். 14, 261; அகநா. 68; பெரிய திருமொழி. 1-2:10; தக்க. 543-பார்க்க; "வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசியால், மோட்டு வயிற்றரவு" (நள. 284).

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை.

(பி ம்.) 1. மடமயிலேமதக்கதமா, மதமழைக்கதமா, மழைமதக்கதமா, மாமயிலேமதக்கதமா.
2. பாழ்வயிற்று, வாள்வயிற்று, வாளெயிற்று; தொடங்கித்.
3. தடங்களேறும்.
4. நிகர்வன. (4)

கவரிமான் வருணனை

744. உவரி வாயன்றிப் பாற்கட லுதவிய வமுதே
துவரி னீண்மணித் தடந்தொறு மிடந்தொறுந் துவன்றிக்
கவரி பானிற வால்புடை பெயர்வன கடிதின்
பவள மால்வரை யருவியைப் பொருவன பாராய்.

உவரி வாய் அன்றி - உப்புக் கடலிலே (தோன்றுதல்) இல்லாமல், பால் கடல் உதவிய அமுதே - திருப்பாற் கடல் தந்த அமுதம் போன்றவளே, துவரின் நீள் - செந்நிறம் மிக்க, மணி தடம் தொறும் - பதுமராகக் கற்கள் அமைந்த பக்க மலைகளில், இடம் தொறும் - பல இடங்களிலும், கவரி துவன்றி - கவரி மான்கள் நெருங்க, பால் நிறம்

வால் கடிதின் புடைபெயர்வன - (அந்த மான்களின்) பால் போலும் வெண்ணிறமுடைய வால்கள் விரைவாக அசைவன, பவளம் மால் வரை அருவியை பொருவன - பவள மலையில் உள்ள அருவியை ஒத்திருப்பவற்றை, பாராய் - பார்ப்பாயாக.

உவரி - உப்பு நீர்க் கடல். "கடலன்றி, அன்றம் மாடத்தும்ப ரளிக்கும் அமுதன்னுள்" (பால: 582) எனவும், "கன்னியமிழ் தத்தை எதிர் கண்டகடல் வண்ணன்" (பால. 1223) எனவும் பிராட்டியை முன்னர்க் கூறியுள்ளமையும் காணத்தகும். "நீல மார்கடல் விடந்தனை யுண்டு", "பொங்குமா கருங்கடல் நஞ்சுண்டான்" என வரும் தேவாரப் பாடற் பகுதிகளும் நோக்கத்தக்கனவாகும். பாற் கடலுதவிய அமுது: "அமுதில் வரும் பெண்ணமுது" (பெரிய திரு: 6: 1: 2). 'அமிர்து கடைந்தது லவண சமுத்திரத்தென வுணர்க' (தக்க: 284, 633 உரை) என்பதனல், இவ்வழக்காறுண்டென்றும் உளதெனத் தெரிகிறது.

(பி - ம்.) 1. உவரிவாயின்றிப்; உதவியமயிலே.
2. துவரிதண்மணித், சுவரி தண்மணித், சுவரி னீண்மணித், கவரி னீண்மணித்; தடந்தொறும் தடங்தொறும், தடங்தொறு மடந் தொறும்.
3. கவரிப்பானிற, கவரிமானிற, கவரிவானிற, கவரிமாநிற; வால்புடைப்; கடிதில்.
4. பவளமாமலை, பவளமாமணி, பருவமால்வரை, பருவமாமணி, மாமலை; பொருவிய, பொருவின, பொருவுவ, போல்வன, ஒப்பன, நிகர்தன; நிகர்ப்பரு. (5)

## யானைகளின் உதிரத்தில் முத்துக்கள் இமைத்தல்

745. சலந்த லைக்கொண்ட சீயத்தாற் றனிமதக் கதமா
உலந்து வீழ்தலிற் சிந்தின வுதிரத்தின் மடவார்
புலந்த காலையிற் றுக்கன குங்குமப் பொதியில்
கலந்த முத்தென வேழமுத் திமைப்பன காணாய்.

மதம் கதம் தனி மா - மதத்தினையும் சினத்தினையுமுடைய தனித்த யானை, சலம் தலைகொண்ட சீயத்தால் - சினம் மிக்க சிங்கத்தால் (தாக்கப்பட்டு), உலந்து வீழ்தலின் - செத்து விழுந்ததனல், சிந்தின உதிரத்தில் - (அதன் உடம்பினின்றும்) சிந்தின இரத்தத்தில், மடவார் புலந்த காலையில் - மகளிர் (தம் கணவரோடு) ஊடிய காலத்து, இற்று உக்கன - (வடம்) அறுந்து சிந்தினவாகி, குங்குமம் பொதியில் கலந்த முத்து என - (அவர்கள் வழித்தெறிந்த) குங்குமக் கலவைச் சாந்தோடு கலந்த முத்துக்கள் போல, வேழம் முத்து - அந்த யானைத் தந்தத்தி னின்றும் சிந்திய முத்துக்கள், இமைப்பன காணாய் - விளங்குவன வற்றைக் காண்பாயாக.

முத்துப் பிறக்கும் இடங்களுள். யானைத் தந்தமும் ஒன்றென்பர். யானையின் இரத்தம் குங்குமக் குழம்புபோல் இருக்க, அதில் அவ் யானையின் முத்துச் சிந்திக் கிடந்த தோற்றம், கணவரோடு ஊடிய மகளிர் தம் உடம்பினின்று வழித்தெறிந்த குங்குமக் கலவையோடு அவர்கள் அணிந்த முத்துவடம் அறுந்து சிந்தின முத்துக்களும் கலந்துகிடந்தது போன்றது. வேழம் - மூங்கில் என்பாரும் உளர்.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

(பி - ம்.) 1. சலந்தலைக்கொளச்; கயமா.
2. உலந்துவிழலின், வீழையில், உலர்ந்துவீழ்தலின்; எய்தின, உதிர்த்த, உதிர்த்தன, உயிர்ந்தன; உதிர்முத்தம்.
3. புலந்தகாலை அற்றுக்கன, அற்றுதிர்ந்தன, இற்றுதிர்ந்தன, புலர்ந்த காலையிலிற்றுக்க; பொதிவில்.
4. கலந்தமுத்தினவ்; வேழமுத்திமைப்பென, வேழமுற்றிழைப்பன. (6)

மலைச்சிகரம், அருவி இவைகளின் தோற்றம்

746. நீண்ட மால்வரை மதியுறு நெடுமுடி நிவந்த
தூண்டு மாமணிச் சுடர்சடைக் கற்றையிற் றோன்ற
மாண்ட வானிற வருவியம் மழவிடைப் பாகன்
காண்ட குஞ்சடைக் கங்கையை நிகர்ப்பன காணாய்.

நீண்ட மால் வரை - மிகப்பெரிய இம் மலையினது, மதி உறும் நெடுமுடி - சந்திரன் வந்து பொருந்தும் உயர்ந்த சிகரத்தில், நிவந்த- மிக்குத் தோன்றுகின்ற, மா மணி தூண்டு சுடர் - சிறந்த மாணிக்க மணிகள் வெளிவிடும் செவ்வொளித் தொகுதி, சடை கற்றையில் தோன்ற - சடைத் தொகுதி போலத் தோன்ற, மாண்ட வால்நிறம் அருவி - மாட்சிமைப்பட்ட வெண்ணிறமுடைய (அச்சிகரத்தி னின்றும் விழுகிற) அருவிகள், அ மழவிடை பாகன் - இளைய ஆனேற்றை ஊரும் அச்சிவபிரானுடைய, காண்தகும் சடை - காணுதற்கினிய சடைத்தொகுதியினின்றும் விழுகின்ற, கங்கையை நிகர்ப்பன - கங்கை நீர்த்திரளை ஒத்திருப்பன, காணாய் - காண்பாயாக.

மலையின் உயர்ந்து நிற்கும் கொடுமுடி, சிவபிரான் முடி; அம் முடியிற் படியும் மாணிக்கத்தின் செவ்வொளி, சிவபிரானது சடைக் கற்றை; முடியிற் பொருந்திய மதி, சடையிற் சூடிய பிறை; முடியினின்று விழும் அருவி, சடையிலிருந்து விழும் கங்கை நீர்த்திரள் எனப் பொருத்திக் காண்க. நிவத்தல் - மிக்குத் தோன்றுதல்; பரவித் தோன்றுதல். அருவி கங்கையை நிகர்த்தல்: "மலைமகள் கொழுநன் சென்னி வந்துவீழ் கங்கை போன்ற, அழகில் பொன் னலம்பி யாரஞ் சார்ந்து வீழருவி மாலை" (பால. 934).

கீழ்க்காணும் இரண்டு பாடல்கள் பல ஏடுகளில் இல்லை; சில ஏடுகளிலும் அச்சுப் புத்தகங்களிலும், "அசும்பு பாய்வரை" (775)

என்பதன் பின்னே உள்ளன; இவை இடைச்செருகலாகத் தோன்றுதலின் மிகைப்பாடலாகக் காட்டப்படுகின்றன:

1. விடங்கொ ணேக்கிநின் னிடையினை மின்னென வெருவிப்
படங்கொ ளுகங்கண் முழைபுகப் பதைப்பன பாராய்
மடங்க லாளிக ளெனக்கொடு மழையன முழங்கக்
கடங்கொள் கார்மதக் கைம்மலை யிரிவன காணய்.

2. நெய்கொ ணீருண்டு நெருப்புண்டு நீண்டுமை நிறைந்த
வைகொள வேலெனக் காலனு மறுகுறுங் கண்ணய்
மெய்க ணேகின்ற பிடிகளை விரும்பிய வேழம்
கைக ணேகில தாங்கின நிற்பன காணய்.

இந்நூல் நிலையத்தின் முந்திய பதிப்பும்; ஆழ்வார் திருநகரிப் பதிப்புமல்லாத ஏனைய அச்சுப் புத்தகங்களில் இவை முன்பின்னாக உள்ளன. இவற்றுட் பாடபேதங்களும் உள.

(பி - ம்.) 1. மதியற, நிவர்ந்த.
2. தூண்ட, சுடரதன், சுடர்க்கனற், சுடர்க்கன, சுடர்கனற், சுடர்கிளர், சுடர்கின்ற, சுடர்முளை, சுடரொடு; கற்றையிற்சொருக, கற்றையிற் சேரும், கற்றையசோரும், கற்றையிற்சோரும், கற்றையிற்சொருகி, புனற்கற்றை சொரிய.
3. வானிறவருவிய, வானிறமருவிய, மானிறமருவிய, மழைவிடைப்.
4. காண்டகுஞ்சிரக், காண்டகுஞ்சரக், காண்டருஞ்சடைக்; கங்லகயும்.
(7)

### சுனையில் படிந்த யானைகளின் தோற்றம்

747. தொட்ட வார்சுனைச் சுடரொளி மணியொடுந் தூவி
விட்ட சென்றன விடாமத மழையெழில் வேழம்
வட்ட வேங்கையின் மலரொடுந் ததைந்தன வயங்கும்
பட்ட நெற்றியிற் சுற்றிய போல்வன பாராய்.

சுனை - மலைச் சுனையிலே, சுடர் ஒளி மணியொடும் - மிக்க ஒளி பொருந்திய இரத்தினங்களுடனே, தொட்ட வார் - (துதிக்கையில்) கொண்ட நீரை, தூவி விட்ட சென்றன - (தலையிலே) தூவி விட்டுக் கொண்டு சென்றனவான, விடா மத மழை - நீங்காத மதப் பெருக்கை யுடைய, எழில் வேழம் - அழகிய (சில) யானைகள், ததைந்தன - நெருங்கிப் படிந்தனவான, வட்டம்-வட்ட வடிவமுள்ள, வேங்கையின் மலரொடும் வயங்கும் - (பொன்னிறம் பொருந்திய) வேங்கைப் பூக்களோடும் (அழகாக) விளங்குகின்றன; (அவை) நெற்றியில் பட்டம் சுற்றிய போல்வன - நெற்றியில் பட்டம் கட்டினாற் போன்றுள்ளன; பாராய் - (அவற்றைப்) பார்ப்பாயாக.

மலைச் சுனையில் நீர் படிந்த சில யானைகள், அச்சுனையில் கிடந்த முத்து முதலிய பல நிற மணிகளும் உட்பட நீரைத் துதிக்கையில் மொண்டு தலையில் வீசிக்கொண்டு, அவை படிந்த நெற்றியுடன் கரை யேறி வருங்கால், பொன்னிறமும் வட்ட வடிவுமுள்ள வேங்கைப் பூக்கள் சிலவும் உதிர்ந்து அவற்றின் நெற்றியில் படிதலால், பொன்னு லும் பல நிற மணிகளாலுமியன்ற நெற்றிப்பட்டங் கட்டிவிட்டவை போலத் தோற்றமளித்தன. வேங்கைப் பூக்கள் நீரோடு கலந்து வந்தனவுமாம். தொடுதல் - கைக்கொள்ளுதல். வார் - நீர். நீரைத் துதிக்கையால் மொண்டு தன் தலையில் வீசிக்கொள்ளுதல் யானைக்கு இயல்பு. சென்றன வான வேழம், வயங்கும்; (அவை) நெற்றியில் பட்டம் சுற்றிய போல்வன என இயைத்து முடிபு கொள்க. இரண்டாம் அடியுள் விட்ட × விடா என முரண்டொடை அமைந்தது. வயங்கும்: செய்யுமென் முற்று நிகழ்காலம் உணர்த்தியது.

(பி - ம்.) 1. தொட்டமாசுணம், மாசுணச், வார்கனைச்.
2. சென்றன்ன; மழையென, விடாமழையனமத.
3. மலரொடுந் தகைந்தன, மலரொடு தகைந்தன, மலர்கொடு மறைத்தன.
4. பட்டஞ்சுற்றிடுநெற்றிய. சுற்றியநெற்றிய, சுற்றியநெற்றியைப், சுற்றியவனையவேயொப்பன, சுற்றியபடியெனப்பொலிவன. (8)

சோலையில் தோன்றும் சந்திரன் வருணனை

748. இழைந்த நூலிணை மணிக்குடஞ் சுமக்கின்ற தென்னக்
குழைந்த நுண்ணிடைக் குவியிள வனமுலைக் கொம்பே
தழைந்த சந்தனச் சோலைதன் செலவினைத் தடுப்ப
நுழைந்து போகின்ற மதியிரு லொப்பது நோக்காய்.

இழைந்த நூல் - நுண்ணிய நூலானது, இணை மணி குடம் சுமக் கின்றது என்ன - இரண்டு இரத்தின கலசங்களைத் தாங்குகின்றது என்னும்படி, குழைந்த நுண் இடை - துவண்ட நுட்பமான இடையை யும், குவி இள வனம் முலை - குவிந்த இளமையான அழகிய தனங் களையும் உடைய, கொம்பே - பூங்கொம்பு போன்றவளே, தழைந்த சந்தனம் சோலை - (இம்மலையின் மீது) தழைத்துள்ள சந்தனமரச் சோலை, தன் செலவினை தடுப்ப - தன்னுடைய (வான்வழிச்) செல்லும் போக்கைத் தடுத்தலால், நுழைந்து போகின்ற மதி - (அந்தச் சோலையினூடே) நுழைந்து செல்லும் சந்திரன், இருல் ஒப்பது நோக்காய் - (சந்தன மரத்தில் கட்டிய) தேனடை போல்வதனைக் காண்பாயாக.

இழைதல் - நுணுகுதல்; "இழைத்துணர்ந் தீண்டிய கேள்வியவர்" (குறள். 417) என்பதற்குப் பரிமேலழகர் கூறிய உரை காண்க. மதிக்குத்

தேனடை : "வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத், தேனினிறுலென வேணி யிழைத்திருக்கும்", "வரைமிசை மேற்றெடுத்த நெய்க்க ணிறுஅல், மழைநுழை திங்கள்போற் றேன்றும்" (கலி. 39, 42); 'பொதிக்க ணிறுஅற் பூம்புறம் புதைஇ, மதிக்கண் மறைந்த மாசுண மான" (பெருங். 1·50: 35 - 6). சந்தன மரத்தில் தேன்கூடு. "சாந்திற் றெடுத்த தீந்தேன் போல" (நற். 1).

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை.

(பி - ம்.) 1. நூலிடை, நூழை, நூலினை; மணக்குடம்; சுமக்கின்றவென்ன.
2. நுண்ணிடைகுவி.
4. போகின்றதொக்கின்றமதியினை, போகின்றமதியிருலொப்பன. (9)

களிறுகள் சூற்கொண்ட பிடிகளுக்குத் தேன் கொடுத்தல்

749. உருகு காதலிற் றழைகொண்டு மழலைவண் டோச்சி
முருகு நாறுசெந் தேனினை முழைநின்று வாங்கிப்
பெருகு சூலிளம் பிடிக்கொரு பிறைமருப் பியானை
பருக வாயினிற் கையினின் றளிப்பது பாராய்.

பிறை மருப்பு யானை - பிறைபோலும் (வளைந்த வெள்ளிய) கொம்பினையுடைய ஆண்யானை யொன்று, உருகு காதலின் - கசிந்த அன்போடு, மழலை வண்டு - (தேனில் மொய்க்கும்) மெல்லிசை பாடும் வண்டுகளை, தழை கொண்டு ஓச்சி - தழையால் ஓட்டிவிட்டு, முழை நின்று - மலைப் பொந்திலிருந்து, முருகு நாறு செம் தேனினை வாங்கி - நறுமணம் வீசும் நல்ல தேனை எடுத்து, பெருகு சூல் இளம் பிடிக்கு - முதிர்ந்த கருப்பத்தையுடைய இளம் பெண் யானைக்கு, நின்று - அதன் முன் நின்றுகொண்டு, பருக - (அது தேனைப்) பருகும் படி, வாயினில் - அதன் வாயில், கையின் அளிப்பது - தன் துதிக்கை யால் கொடுப்பதை, பாராய்—பார்ப்பாயாக.

ஆண்யானைகள் தம் பிடிகளை அன்போடு உண்பித்தல் இலக்கியங் களுட் பயின்று வருவது; "உம்பர்வா னகத்து நின்ற வொளிதரு தருவி னேங்கும், கொம்புகள் பணைக்கை நீட்டிக் குழையொடு மொடித்துக் கோட்டுத், தும்பிக ளுயிரே யன்ன துணைமடப் பிடிக்கு நல்கும்" (பால. 921); "பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின், றிருக ணிளமூங்கில் வாங்கி - அருகிருந்த, தேன்கலந்து நீட்டுந் திருவேங்கடம்" (திவ். 2-ஆம் திருவந்தாதி, 75); "வரைசெய் மாக்களி றிளவெதிர் வளர்முளை யளைமிகு தேன்றோய்த்துப், பிரச வாரித னிளம்பிடிக் கருள்செயும்" (திவ். பெரியதிரு. 1. 2: 5); "சந்தனப்பூம் பைந்தழையைச் செந்தேனிற் றோய்த்தியானை, மந்த மடப்பிடியின் வாய்க்கொடுப்ப" (ஈங்கோய் மலை யெழுபது, 38), என்பவற்றை நோக்குக.

(பி - ம்.) 1. உருகும்;
2. முழைநின்றும்.
3. பெருகும்; பிறழ்மருப்பியானை, பிறையெயிற்றியானை.
4. பருகுவாயினில், கையினின்றளிப்பன, கையினகொடுப்பது, தன் கையினளிப்பது. (10)

பளிக்கறையில் உள்ள பரிமுக மாந்தர் வருணனை

750. அளிக்கு நாயகன் மாயைபுக் கடங்கின னெனினும்
களிப்பி லிந்தியத் தியோகியைக் கரக்கில னதுபோல்
ஒளித்து நின்றுள ராயினு முருத்தெரி கின்ற
பளிக்க றைச்சில பரிமுக மாக்களைப் பாராய்.

அளிக்கும் நாயகன் - காக்கும் தலைவனான திருமால், மாயை புக்கு அடங்கினன் எனினும் - தன் மாயையால் பிரபஞ்சத்துள் புகுந்து தன்னை அறியாவண்ணம் அடங்கி நின்றாலும், இந்தியத்து களிப்பு இல் யோகியை-புலன்களின் வழிச் சென்று மகிழ்தலில்லாத யோகிகளுக்கு, கரக்கிலன் - மறைந்திரான் (புலனாவான்); அதுபோல்—, பளிங்கு அறை ஒளித்து நின்றுளர் ஆயினும் - பளிங்குப் பாறையூடே மறைந்து நின்றார்களேனும், உரு தெரிகின்ற - தம் உருவம் வெளியே காணப்படுகின்ற, சில பரிமுகம் மாக்களை பாராய்- சில கின்னரர்களைக் காண்பாயாக.

கின்னரர், ஒருசார் தேவ சாதியினர்; இவர்கள் குதிரை முகமும் மானிட உடலும் உடையவராகலின், 'பரிமுக மாக்கள்' என்றார். "குதிரை முகத்தார்" (திருஞா. திருக்கேதாரம்); பால. 935, விசேடக் குறிப்புக் காண்க. யோகியை - யோகிக்கு; உருபு மயக்கம். யோகியைக் கரக்கிலன்: "அன்பருள்ளம், கரந்து நில்லாக் கள்வனே" (திருவா. திருச்சதகம்,6).

(பி - ம்.) 1. அடங்கினனேனும், அடங்கினனென்றும்.
2. களிக்கும்; இந்தியத்தியோகிக்குக், யோகியர்க், யோகியிற், இந்தியத்தோகியித், இந்தியத்தோகியைக், இந்தியத்து யோகியைக்; கரக்கிலாததுபோல், காட்டுவனதுபோல்.
3. நின்றனராயினும், நின்றுளவாயினும், நின்றுளதாயினும்; உருத்தெரிகின்ற, முகந்தெரிகின்ற.
4. பரிமுகநிரைகளைப், பரிமுகமகளிரும், மாதரைப். (11)

கின்னர மிதுனங்களின் செயல்

751. ஆடு கின்றமா மயிலினு மழகிய குயிலே
கூடு கின்றிலர் கொடிச்சியர் தம்மனங் கொதிப்ப
ஊடு கின்றனர் கொழுநருக் குருகின ருவக்கப்
பாடு கின்றன கின்னர மிதுனங்கள் பாராய்.

ஆடுகின்ற - தோகை விரித்து ஆடுகிற, மா மயிலினும் அழகிய குயிலே - சிறந்த மயிலினும் மிக்க அழகுடைய பெண்ணே, கொடிச்சியர் - குறிஞ்சிநிலப் பெண்கள் சிலர், தம் மனம் கொதிப்ப - (கொழுநர் பால் தவறு கண்டு) தம்மனம் வெதும்புதலால், கூடுகின்றிலர் -(கூடலை விரும்பும் கொழுநரைக்) கூடாதவர்களாய், ஊடுகின்றனர் - ஊடல் கொண்டிருப்போர், (அவ்வூடலை விட்டு), கொழுநருக்கு - (கூடல் பெருது வருந்தும்) கொழுநர் பொருட்டு, உருகினர் - மனங் கசிந்தவராய், உவக்க - கூடி மகிழும்வண்ணம், பாடுகின்றன கின்னர மிதுனங்கள் - மிக (இனிமையாகப்) பாடும் கின்னர மிதுனங்களை, பாராய்—.

இனிய இசை கேட்போர் மனத்தை உருக்கவும், காமத்தைத் தூண்டவும் வல்லதாகலின், ஊடிய மகளிர் கூடும் வண்ணம் கின்னர மிதுனங்கள் இசை பாடுகின்றன என்ருர். "கேடிலா மகர யாழிற் கின்னர மிதுனம் பாடும், பாடலா லூடல் நீங்கும் பரிமுக மாதர்க் கண்டார்" (பால. 935) என்பதும் அதன் விசேடவுரையும் பால. 868 - இல் கின்னர மிதுனம்பற்றிய குறிப்பும் பார்க்க. இசை காமத்தை விளைக்கும் என்பதை, "கிளைநரம் பிசையும் கூத்துங் கேழ்த்தெழுந் தீன்ற காம, விளைபயன்" (சீவக. 2598) என்பதனுல் உணரலாம்.

(பி - ம்.) 2. கூடுகின்றிலாக், கூடுகின்றிலார், கூடுகின்றவர்.
3. ஊடுகின்றன; கொழுநரையுருகினர்நோக்கிப், உருகியேநோக்கப், உருக்கினர்நோக்கிப்.
4. பாடுகின்றனர். (12)

கவலைக் குழிகளில் தேன் பாய்தல்

752. வில்லி வாங்கிய சிலையெனப் பொலிநுதல் விளக்கே
வல்லி தாங்கழை தாக்கலின் வழிந்திழி பிரசம்
கொல்லி வாங்கிய குன்றவர் கொடிநெடுங் கவலை
கல்லி வாங்கிய குழிகளை நிறைப்பன காணுய்.

வில்லி வாங்கிய சிலை என - பொலிவில் வல்லான் வளைத்த வில்லைப் போல (அழகாக) விளங்குகின்ற, நுதல் - நெற்றியையுடைய, விளக்கே - குலவிளக்கானவளே, வல்லிது ஆம் கழை தாக்கலின் - வலியதான மூங்கில் (தேனிருலைத்) தாக்குதலால், வழிந்து இழி பிரசம் - (இருலினின்றும்) வழிந்தோடுகிற தேனொழுக்குகள், கொல்லி வாங்கிய குன்றவர் - இரும்பாலாகிய தோண்டு கருவியைக் கொண்ட மலைவாணர், நெடு கொடி கவலை - நீண்ட கொடிகளையுடைய கவலைக் கிழங்கை, கல்லி வாங்கிய குழிகளை-தோண்டி எடுத்ததனுல் உண்டான பள்ளங்களை, நிறைப்பன காணுய் - நிறைப்பவற்றைக் காண்பாயாக.

இதனுல் அம்மலையின் வளமிகுதி கூறியவாறு. விளக்கு - பிறந்த குலத்தையும் புகுந்த குலத்தையும் தன் சீலத்தால் விளக்குபவள்.

கொல்லி - தோண்டு கருவி. கவலை - ஒருவகைக் கிழங்கு; உண்ணுதற் குரியது.

(பி - ம்.) 1. வில்லில்வாங்கிய; வில்லின்வாங்கிய, வில்லுவாங்கிய.
2. வல்லிதாங்கனம், வல்லிவாங்கமை, வல்லிவாங்கிமை, வல்லிவாங்குமை, வல்லிவாங்கழை, தாக்கலில், வல்லிவாங்கமைத்தாகலின்; வந்திழிபிரசம்.
3. குன்றுவர்; கொடுநெடுங்.
4. குழிகளைநிறைவன, சுழிகளைநிகர்ப்பன, பெருங்குழிநிறைப்பன. (13)

### கடுவன் மந்திகளின் விளையாட்டு

753. ஒருவில் பெண்மையென் றுரைக்கின்ற வுடலினுக் குயிரே
மருவு காதலி னினிதுட னாடிய மந்தி
அருவி நீர்கொடு வீசத்தா னப்புறத் தேறிக்
கருவி மாமழை யுதிர்ப்பதோர் கடுவனைக் காணாய்.

ஒருவு இல் - நீங்குதல் இல்லாத, பெண்மை என்று உரைக்கின்ற உடலினுக்கு உயிரே - பெண்மையென்று சொல்லப்படுகிற உடம்புக்கு உயிர் போன்றவளே, மருவு காதலின் - பொருந்திய அன்பினால், இனிது - இன்பமாக, உடன் ஆடிய - கடுவனுடன் விளையாடிய, மந்தி - பெண் குரங்கானது, அருவி நீர் கொடு - அருவி நீரைக் கையில் கொண்டு, வீச - (கடுவன்மேல்) வீச, தான் - அக்கடுவன், அப்புறத்து ஏறி - அப்பால் (உயரச்) சென்று, கருவி மாமழை - (அங்கே படிந்துள்ள) தொகுதியான மேகத்தை, உதிர்ப்பது - (மந்தியின்மேல்) பிழிந்து சிந்துவதான, ஓர் கடுவனை - ஓர் ஆண் குரங்கை, காணாய்—.

ஆணும் பெண்ணுமாகிய இரண்டு குரங்குகள் இணைந்து அருவி அருகே விளையாடிக்கொண்டிருக்கையில், பெண் குரங்கு அருவி நீரை அள்ளி ஆண் குரங்கின்மேல் வீச, அவ்வாண் குரங்கு தன் ஆண்மை தோன்ற மலையுச்சியில் ஏறி, அங்கே படிந்திருந்த நீருண்ட மேக படலத்தைக் கைக்கொண்டு, பெண் குரங்கின்மேல் வீசியது எனக் கற்பனை செய்கின்றார். மந்தி - குரங்கில் பெண்; கடுவன் - ஆண். கருவி-தொகுதி; ''கருவி மாமழை'' (குறுந். 42: 2; சீவக. 2752). முதலடி பிராட்டியின் பெண்மையைச் சிறப்பித்தது, ஒருவு: முதனிலைத் தொழிற் பெயர்.

(பி - ம்.) 1. ஒருவில்பெண்மையை, உருவில்பெண்மையை, ஒருவுபெண்மையென்று.
2. உடனாட்டிய.
3. நீர்கொண்டு.
4. கருவின்; உகுப்பதோர். (14)

### மாணிக்கப் பாறையின் வருணனை

754. வீறு பஞ்சின்றி யமுதநெய் மாட்டிய விளக்கே
சீறு வெங்கதிர் செறிந்தன பேர்கல தெரிய
மாறின் மண்டில நிரம்பிய மாணிக்க மணிக்கற்
பாறை வேறொரு பரிதியிற் பொலிவன பாராய்.

வீறு பஞ்சு இன்றி - (எரிதற்குச்) சிறந்த பஞ்சுத்திரி இல்லாமல், அமுதம் நெய் மாட்டிய விளக்கே - அமுதமாகிய நெய் ஊற்றி ஏற்றிய தூண்டா விளக்குப் போன்றவளே, சீறு - (இருளைச்) சீறுகிற, வெம் கதிர் செறிந்தன - விரும்பத் தக்க (இனிய) ஒளி மிக்கனவும், பேர்கல - இடம் பெயராதனவும், தெரிய - (நன்கு) விளங்க, மாறு இல் மண்டிலம் நிரம்பிய - கோட்டமில்லாத வட்டவடிவம் அமைந்தனவுமான, மணி மாணிக்கம் கல்பாறை - அழகிய மாணிக்கக் கற்பாறைகள், தனித் தனியே, வேறு ஒரு பரிதியின் - வேறான ஒரு சூரியனைப்போல, பொலிவன - விளங்குவனவற்றை, பாராய்—.

பஞ்சியின்றி மாட்டியதாதலின், தூண்ட வேண்டாத தூண்டா விளக்காயிற்று. பிராட்டியின் அமுத மயமான திருமேனியொளி, விளக்கொளி போல்வது; ஆயினும், நெய்யும் திரியும் இல்லாத மற்றொரு வகை விளக்கு. நல்ல வட்ட வடிவம் அமைந்த மாணிக்கப் பாறைகள், வடிவத்தாலும் ஒளியாலும் பரிதி மண்டிலம் போல்வன; ஆயினும் பரிதியைப் போல இடம் பெயர்தல் இல்லை. இவ்வாறு இரண்டு பொருள்களுக்கு ஒற்றுமை கூறி, அவற்றுள் வேற்றுமையும் காட்டுவது வேற்றுமையணி எனப்படும். மாட்டுதல் - ஏற்றுதல்; கொளுத்துதல்; "நெய்பெய்து மாட்டிய சுடர்" (குறுந். 398). வெம்மை - விருப்பம். மண்டிலம் - வட்டம்.

பா - ம்.) 1. பஞ்சினில்; பஞ்சினல்; அமுதநெய்யாடிய, ஆட்டிய, அமுதினெய் யாட்டிய.
2. சேறுவெங்கதிர்; செறிந்தெனப், திரிந்தன; பேர்கல திரியா, திரிய, தெரிவ, திரிவ, தெரியா; போகல திரிய, தெரிவ, திரியும், பேர்கில தெரிவ, போலயதிரிய.
3. மாறின்மண்டலம், மாறிமண்டலம்; மண்டிலம்; நிரப்பிய.
4. பாறைமற்றொரு; பருதியிற் பொலிவது, பரிதியை நிகர்ப்பன, பருதியிற் பொலிவன, பருதியின்பொலிவது, பொலிவன, பருதியைப்பொருவுவ, பொருவன, பருதியைப்போல்வது, போல்வன. (15)

### வேங்கைக் கொம்புகளின் வருணனை

755. சீல மின்னதென் றருந்ததிக் கருளிய திருவே
நீல வண்டினம் படிந்தெழ வளைந்துட னிமிர்வ
கோல வேங்கையின் கொம்பர்கள் பொன்மலர் தூவிக்
காலி னிற்றொரு தெழுவன நிகர்ப்பன காணாய்.

அருந்ததிக்கு - அருந்ததி தேவிக்கும், சீலம் இன்னது என்று அருளிய - (மகளிர்க்கு உரிய) கற்பொழுக்கம் இத்தகையது என்று காட்டியருளின, திருவே - இலக்குமி போன்றவளே, கோலம் - அழகிய, வேங்கையின் கொம்பர்கள் - வேங்கை மரத்தின் சிறு கொம்புகள், நீலம் வண்டு இனம் படிந்து - நீல நிறமுள்ள வண்டின் கூட்டம் மொய்த்தலால், வளைந்து - (பாரம் தாங்காமல் கீழ்நோக்கி) வளைந்து, எழ - (அவ் வண்டுகள்) எழுந்திட, உடன் நிமிர்வ - உடனே நிமிர்ந் தெழுவன, காலினில் - (உன்) பாதங்களில், பொன் மலர் தூவி - பொற் பூவால் அருச்சித்து, தொழுது எழுவன நிகர்ப்பன - வணங்கி யெழுமவை போன்றன, காணாய்—.

வழியருகே உள்ள வேங்கைப் பூங்கொம்புகளில் வண்டுகள் நிறைய மொய்க்கும்போது அவற்றின் பாரம் தாங்காமல் கொம்புகள் வளைய, பூக்கள் பிராட்டியின் கால்களில் உதிர்ந்தன. இஃது அக் கொம்புகள் மலர் தூவி வணங்குவது போலவும், வண்டுகள் நீங்கப் பெற்றுக் கொம்புகள் நிமிர்வது வணங்கி எழுவது போலவும் தோற்ற மளித்தது. வேங்கைப் பூ பொன்னிறம் உடையதாகலின், 'பொன் மலர்' எனப் பெற்றது. பிராட்டியை முன்னம், ''அருந்ததி அனையாளே'' (699) என்றவன், இப்போது அருந்ததியை விஞ்சியவள் என்கின்றான். ''சீல மின்றியுஞ் செய்தவம் வேறுமொன் றுளதோ'' (736) என்ற விடத்துச் 'சீலம்' பிராட்டியுடையது எனக் கொள்ளுதல் பொருத்தம் உடையதாதல் இதனால் பெறப்படும்.

(பி - ம்.) 1. அருந்துதிக்குதவிய.
2. படிந்தென; வளைந்தன நிமிர்வ, நிமிர்ந்த, வளைந்துடனிமிர்ந்த, உதிர்த்த.
3. சோலைவேங்கையின் கொம்புகள் பொலமலர்.
4. காலின் வீழ்ந்தன வெழுவன; நிகர்வன, போல்வன, நிகர்ப்பது. (16)

### கொடிச்சியர் கவண் வீசும் காட்சி

756. விற்கொள் வாணுதல் விளங்கிழை யிளந்தளிர்க் கொழுந்தே
எற்கொள் மால்வரை யும்பர்நின் றிரும்புனங் காக்கும்
கொற்கொள் வேற்கணார் குரீஇயினத் தெறிகுரு விந்தக்
கற்கள் வானிடை மீனென விழுவன காணாய்

வில் கொள் வாள் நுதல் - வில்லைப் போன்ற ஒளி அமைந்த நெற்றியையும், விளங்கு இழை - (அழகாக) விளங்கும் அணி கலன்களையுமுடைய, இளம் தளிர் கொழுந்தே - இளந்தளிரான மருக்கொழுந்து போன்றவளே, எல் கொள் - வெயிலொளியைக் கொண்ட, மால்வரை உம்பர் நின்று - பெரிய இம்மலையின் உச்சியில் (பரணில்) இருந்துகொண்டு, இரு புனம் காக்கும் - பெரிய தினைப்புனங் களைப் பாதுகாக்கின்ற, கொல் கொள் வேல் கண்ணார் - கொல்லுதல் பொருந்திய வேல் போலும் கண்களை உடைய குறமங்கையர், குரீஇ

இனத்து எறி - குருவிக் கூட்டங்களின்மேல் வீசுகின்ற, குருவிந்தம் கற்கள் - மாணிக்கக் கற்கள், வானிடை மீன் என - ஆகாயத்தினின்று (விழும்) நாண் மீன்களைப் போல, விழுவன காணாய் - விழுவன வற்றைக் காண்க.

குருவிந்தம் - மாணிக்கத்துள் ஒரு வகை (சிலப். 14 : 186.) என்றும் கூறுவர். பகற்பொழுதாகலின், அக்கற்கள் ஒளி மழுங்கிய விண் மீன்கள் போன்றன. நுதல் - புருவமுமாம். கொல் - கொற்றொழிலுமாம். குரீஇ - குருவி.

(பி - ம்.) 1. தளிர்க்கொம்பே.
2. உம்பரின்; இரும்புனல்.
3. குரீஇயினை; எறிதரக்குறித்த, குவித்த, எறிகுவன்குறித்த, எறிகுன ரந்தச், எறிகுணவந்த, வந்தக், எறிந்திடவெழுந்த.
4. கற்கொள்; மின்னென; வீழ்வன, வீழ்வது, விழைவன, மீள்வன,

(17)

### நீர் வற்றிய காட்டாறுகளின் தோற்றம்

757. நான நாண்மலர் நறையகி லாவிதே னாறும்
சோனை வார்குழற் சுமைபொரு திறுமிடைத் தோகாய்
வான யாறுமீன் மலர்ந்தன வெனப்புனல் வறந்த
கான யாறுகள் கணமணி யிமைப்பன காணாய்.

நானம் - புழுகு நெய்யும், நாள் மலர் - புதிய பூவும், நறை அகில் - நறுமணமுள்ள அகிற்புகையும், நாவி - கத்தூரியும், தேன் நாறும் - பூவிலுள்ள தேனும் (ஆகியவற்றின்), மணங் கமழ்கின்ற, சோனை வார் குழல் - விடா மழை பொழியும் கருமேகம் போன்ற நீண்ட கூந்தலின், சுமை பொருது - பாரம் தாங்காமல், இறும் இடை - தளர்கின்ற இடையை உடைய, தோகாய் - மயில் போன்றவளே, வானம் யாறு - ஆகாயமாகிற ஆற்றிலே, மீன் மலர்ந்தன என - விண்மீன்கள் விளங் குவனபோல, புனல் வறந்த கானம் யாறுகள் - நீர் வற்றிய காட்டாறு களில், கணம் மணி இமைப்பன - கூட்டமான (பலவகை) மணிகள் விளங்கித் தோன்றுவனவற்றை, காணாய்—.

நாள் மலர் - அன்றலர்ந்த பூ. நறை - நறுமணம்; நறையகில்: குறுந்: 334. தேன்-நறுமணமுமாம்; "அகிற்புகை அளைந்து தேனளாய்ப் பஞ்சுடை யமளி" (சூளா. குமார. 17) என்பதில் தேன் இப்பொருள தாதல் காண்க. சோனை - விடா மழை. வார் - மேகம். தோகை: ஆகு பெயராய் விளியேற்றது. வானயாறு: உருவகம்; தேவ கங்கை என்பாருமுளர். நீர் வற்றிய ஆற்றின் வெண் மணற் பரப்புக்கு ஆகாய வெளியும், மணற் பரப்பில் தோன்றும் மணிகளுக்கு விண்மீன்களும் உவமை.

ஆழ்வார் திருநகரிப் பதிப்பொழிந்த ஏனைய அச்சுப் புத்தகங்களில் இப்பாடலும் அடுத்ததும் முன்பின்னாக மாறியுள்ளன.

(பி-ம்.) 1. அகிலாவிதேனுறும், அகினுறுதேனுறும், அகினுவிதேலூறும்.
2. சோனவார்; சுமைபொருதிடுகிடைத், பொருதிடுகிடைத், பெருதிறுமிடைத், பெருத்துடியிடைத், பொருத்துடியிடைத், பொருதிறுகிடைத், பெருத்துடியிடைத், சுமந்திறுமிறுமிடைத், சுமந்திறுமிறுகிடைத், சுமைபொருதிறுமிடைக் கோதாய்.
3. வானயாற்றுமீன், வானையாற்றுமீன்; வானவாறுமீன்: மலர்ந்தனவெனப், அலர்ந்தனவெனப்; புனல் அலர்ந்த.
4. கானவாறுகள், கானியாறுகள்; கதிர்மணி, கனமணி. (18)

### புகைப் படலத்தின் தோற்றம்

758, வரிகொ ணோன்சிலை வயவர்தங் கணிச்சியின் மறித்த
பரிய காரகில் சுடநிமிர் பசும்புகைப் படலம்
அரிய வேதிய ராகுதிப் புகையொடு மளவிக்
கரிய மால்வரைக் கொழுந்தெனப் படர்வன காணாய்.

வரி கொள் நோன் சிலை - கட்டுதல் கொண்ட வலிய வில்லை உடைய, வயவர் - வேடர்கள், தம் கணிச்சியின் மறித்த - தம் கோடரியால் வெட்டிய, பரிய கார் அகில் - பருத்த கரிய அகிற்கட்டைகளை, சுட - கொளுத்துதலால், நிமிர் பசும் புகை படலம் - ஓங்கி எழுந்த பசிய புகைத்தொகுதி, அரிய வேதியர் - பெருமை மிக்க மறையோர்கள், ஆகுதி புகையொடும் அளவி - (ஓம குண்டத்தில்) ஆகுதி செய்தலால் எழுகின்ற புகையோடு கலந்து, கரிய மால்வரை கொழுந்து என - கரிய பெரிய இம்மலையின் சிகரம்போல, படர்வன காணாய் - எழுவனவற்றைக் காண்பாயாக.

வயவர் - வீரர்; இங்கே வேடரைக் குறித்தது. கொழுந்து - சிகரம்.

(பி-ம்.) 1. வரிக்கொள், வரிகள்; ஒண்சிலை, நாண்சிலை, வெஞ்சிலை; மலையவர்; மறிந்த, மடிந்த, மடித்த, பிடித்த.
2. காரகிற்சுட, காரகிற்சுடர், காழகிற்சுட; பசுங்கதிர்ப், பைங்கதிர்ப், பசுஞ்சுடர்ப், பரஞ்சுடர்ப்.
3. ஆவுதிப்; புகையொடு மளாவிக், புகையொடுமருவிக், ஆகுதிதீப் புகையளாவிக். (19)

### விஞ்சைமாதரின் காற்சுவடுகள்

759. மஞ்ச ளாவிய மாணிக்கப் பாறையின் மறைவ
செஞ்செ வேநெடு மரகதப் பாறையிற் றெரிவ
விஞ்சை நாடியர் கொழுநரொ டூடிய விமலப்
பஞ்ச ளாவிய சீறடிச் சுவடுகள் பாராய்.

கொழுநரொடு ஊடிய - தம் கணவரோடு ஊடல் கொண்ட, விஞ்சை நாடியர் - வித்தியாதர மகளிரின், விமலம் - குற்றமற்ற, பஞ்சு

அளாவிய சிறு அடி சுவடுகள் - செம்பஞ்சு ஊட்டப்பெற்ற சிறிய பாதச் சுவடுகள், மஞ்சு அளாவிய - அழகு பொருந்திய, மாணிக்கம் பாறையில் - மாணிக்கப் பாறைகளில், மறைவ - புலப்படாதனவாய், நெடு மரகதம் பாறையில் - பெரிய மரகதப் பாறைகளில், செஞ்செவே தெரிவ பாராய் - நன்குக(செந்நிறத்தனவாய்)த் தெரிவனவற்றைப் பார்ப்பாயாக.

வான்வழியே செல்லும் வித்தியாதரர்கள், தம் துணைவியரோடு, மிகச் சிறந்த இச்சித்திரகூட மலையின்கண் இரவில் தங்குதலால், அங்கே நடந்த வித்தியாதர மகளிரின் செம்பஞ்சூட்டிய பாதச்சுவடு செந்நிறமுள்ள மாணிக்கப் பாறைகளில் தெரியாமல், பச்சைநிறமுள்ள மரகதப் பாறைகளில் பளிச்சிட்டுத் தெரிகின்றன; அவற்றைப் பார் என்கின்றான்.

மஞ்சு - அழகு; ''மஞ்சுடை மணிநகு மாலை மண்டபம்'' (சூளா. குமார. 17); மஞ்சளாவிய - மேகமண்டலத்தை யளாவிய எனவுமாம். செஞ்செவே: 671-விசேடவுரை பார்க்க. நாடியர் - நாட்டு மகளிர்; நாடு என்பதன் அடியாக வந்தது; ''மிதிலை நாடிக்கும்'' (785); பின் இரண்டடிகளுடன் ஒப்பிடுக: ''விஞ்சை வேந்தர், குஞ்சியந் தலத்து நீலக் குருமணித் தலத்தும் மாதர், பஞ்சியங் கமலம் பூத்த பசுஞ்சுவ டுடைத்து'' (பால. 927).

(பி - ம்.) 2. செஞ்சவே; தெரிய.
3. விஞ்சைநாட்டியர், நாட்டவர்; ஊடினர்விமலப், ஊடியவியல்பால்.

(20)

### அருவியிற் கற்பக மலர்கள்

760. சுழித்த தண்புனற் சுழிபுரை யுந்தியந் தோகாய்
கொழித்த மாமணி யருவியோ டிழிவன கோலம்
அழித்து மேவிய வரம்பைய ரறல்புரை கூந்தல்
கழித்து நீக்கிய கற்பக நறுமலர் காணாய்.

தண் புனல் - குளிர்ந்த நீரில் (உண்டாகிற), சுழித்த - வட்டமான' சுழி புரை - சுழி போன்ற, உந்தி - கொப்பூழையுடைய, அம் தோகாய் - அழகிய மயில் போன்றவளே, மாமணி கொழித்த அருவியொடு - சிறந்த மணிகளைக் கொழித்துக்கொண்டு வரும் இம்மலையருவியில், மேவிய அரம்பையர் - (நீராட) விரும்பிய தேவமாதர், கோலம் அழித்து - தாம் புனைந்த கோலத்தை நீக்கி, அறல்புரை கூந்தல் கழித்து நீக்கிய - கருமணல் போன்ற (தம்) கூந்தலினின்றும் எடுத்தெறிந்த, நறு கற்பக மலர் - நறுமணம் மிக்க கற்பகப் பூக்கள், இழிவன காணாய் - (கலந்து) கீழிறங்குமவற்றைக் காண்பாயாக.

சித்திரகூடமலை யருவியின் சிறப்பு நோக்கி அதில் நீராட விரும்பி வந்த தேவமாதர், தம் அணிகலன்களைக் கழற்றி வைத்து, கூந்தலில்

சூடிய கற்பகமலர் மாலைகளை எடுத்தெறிந்துவிட்டு நீராட, அம்மலர் மாலைகள் மணி கொழித்துவரும் அருவியில் கலந்து கீழே வரும் காட்சியைக் காண் என்கின்றான். அருவியொடு - அருவியில்; உருபு மயக்கம். நீர்ச்சுழி கொப்பூழுக்கு உவமை.

(பி - ப்.) 1. சுழித்தசெம்பொனின்றொளைபுரை, தொளைபுரி, தண்புனற்சுழிபுரி, உந்தியின்றுணையே, உந்தியென்றுணையே.
2. அருவியூடிழிவன, அருவிகள்பொழிவன.
3. மேவியரகில்புரை, மேவியவாடையர்; அறல்புரையோதி, அகில்புரை கூந்தல், செறிமுகிற்கூந்தல், அறல்புரைகூந்தற்.
4. நீங்கிய; கற்பகமலரிவை. (21)

கடுவன் பறையடித்தல்; ஓர் கொடிச்சி பிறையைப் பற்றுதல்

761. அறைகழற்சிலைக் குன்றவ ரகன்புனங் காவற்
பறையெடுத்தொரு கடுவனின் றடிப்பது பாராய்
பிறையை யெட்டினள் பிடித்திதற் கிதுபிழை யென்னாக்
கறைது டைக்குறும் பேதையோர் கொடிச்சியைக் காணாய்.

அறை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலையும், சிலை - வில்லையு முடைய, குன்றவர் - குறவர்கள், அகன் புனம் காவல் பறை - அகன்ற தினைப் புனத்தைக் காத்தற்கு வைத்துள்ள (தொண்டகம் என்னும்) பறையை, ஒரு கடுவன் எடுத்து நின்று அடிப்பது பாராய் - ஓர் ஆண் குரங்கு எடுத்துக்கொண்டு நின்று அடிப்பதைப் பார்ப்பாயாக; பிறையை எட்டினள் பிடித்து - (தன் கைக்கு அணிமையாக வந்த) பிறையை எட்டிப்பிடித்து, இதற்கு - இந்தப் பிறைக்கு, இது பிழை என்னா - இது குறையாகும் என்று சொல்லி, கறை துடைக்குறும் - (அதன்) களங்கத்தை அழிக்க முயலுகின்ற, பேதை - அறிவிலியான, ஓர் கொடிச்சியை காணாய் - ஒரு குறமகளைக் காண்பாயாக.

தான் கண்ணாற் கண்டதைச் செய்தல் குரங்கின் இயல்பாதலால்' குறவர்கள் பறையடித்தலைக் கண்டிருந்த குரங்கு, தானும் அதனை எடுத்து அடிக்கலாயிற்று; அதனைக் காட்டினான். பிறையைக் குறமகள் கையால் எட்டிப் பிடித்தாள் என்றது, மலையின் உயர்ச்சியைப் புலப் படுத்தும். ''கொதிநுனை வேற்கண் மாதர் குறத்தியர் நுதலி னோடு, மதியினை வாங்கி யொப்பக் காண்குவர் குறவர்'' (பால. 925) என வரைக்காட்சியுட் கூறியது இங்கு ஒப்பு நோக்கத் தகும். தொண்டகம் என்னும் பறை, தினைப்புனத்தை அழிக்க வரும் பறவைகளையும் விலங்கு களையும் அச்சுறுத்தி ஓட்டுதற்குப் பயன்படுவது.

(பி - ம்.) 1. சினக்குன்றவர், சிலைக்கின்றவர்.
2. கடுவனின்றடிப்பன, பறையெடுத்து நின்றடிப்பதோர் கடுவனைப், அடிப்பது காணாய்.

3. எட்டின, ஒட்டினள், வெட்டினள், பிடித்ததற்கிது, பிடித்ததிற்கிது, பிறை யென்னக்.
4. துடைக்குறு, துடக்குறு; கொடிச்சியோர்பேதையைக். (22)

சூரர மகளிரின் தளிர்ப்படுக்கை

762. அடுத்த பல்பக லன்பரிற் பிரிந்தவ ரென்ப
தெடுத்து நந்தமக் கியம்புவ வெனக்கரிந் திருண்ட
தொடுத்த மாதவிச் சூழலிற் சூரர மகளிர்
படுத்து வைகிய பல்லவ சயனங்கள் பாராய்.

தொடுத்த மாதவி சூழலில் - பின்னிப்படர்ந்த மாதவிக் கொடிகள் (பந்தலாக) அமைந்த இடத்தில், சூர் அர மகளிர் - தெய்வப் பெண்கள் (சிலர்), படுத்து வைகிய பல்லவ சயனங்கள் - படுத்திருந்த தளிர்ப் படுக்கைகள், அடுத்த பல்பகல் - தொடர்ந்த பல நாட்கள், அன்பரின் பிரிந்தவர் என்பது - தம் காதலரைப் பிரிந்திருந்தவர் (அப்பெண்கள்) என்பதனை, நம் தமக்கு எடுத்து இயம்புவ என - நமக்கு எடுத்துச் சொல்வனபோல, கரிந்து இருண்ட - கருகி இருள் நிறமாகி உள்ளன; பாராய் - அவற்றைப் பார்.

சில தெய்வ மகளிர், தம் காதலரைப் பிரிந்ததனாலுளதான காம வெப்பந் தணிய, இந்த மலையில் குளிர்ந்த மாதவிப் பந்தலின்கீழ் இனிய தளிர்களைப் பரப்பி, அத்தளிர்ப் படுக்கையில் கிடந்தனராக, அவர்களுடம்பின் வெப்பத்தால் அத்தளிர்கள் கருகி இருண்டுபோயின; அவற்றைப் பார் என்கின்ருன். "ஆவியி னினிய கொண்கர்ப் பிரிந்தறி வழிந்த விஞ்சைப் பாவையர் வைகத் தீய்ந்த பல்லவ சயனங் கண்டார்" (பால. 938) என்ருர் முன்னும்.

(பி - ம்.) 1. பற்பகல், பல்கலன்; அன்பரிற் பிரிந்தனர், அன்பரைப் பிரிந்தனர், அன்பரைப் பிரிந்தவர்.
2. இயம்புவதெனக், இயம்புவமெனக்.
3. சுரர்மணிமகளிர்.
4. படுத்துலர்ந்தன. (23)

அசுணங்கள் பாடல் கேட்டுத் துயிலுதல்

763. நினைந்த போதினு மமுதொக்கு நேரிழை நிறைதேன்
வனைந்த வேங்கையிற் கோங்கினில் வயின்றொறுந் தொடுத்துக்
குனிந்த வூசலிற் கொடிச்சிய ரெடுத்தவின் குறிஞ்சிக்
கனிந்த பாடல்கேட் டசுணமா வளர்வன காணாய்.

நினைந்த போதினும் - (மனத்தால்) நினைத்தபோதும், அமுது ஒக்கும் - அமுதம் போல இனிக்கின்ற, நேர் இழை - நுட்பமான அணிகலன்களையுடையவளே, நிறைதேன் வனைந்த - மிக்க தேன் தங்கிய, வேங்கையில் - வேங்கை மரத்திலும், கோங்கினில் - கோங்க மரத்தி

லும், வயின்தொறும் - பலவிடங்களிலும், தொடுத்து - பூட்டப்பெற்று, குனிந்த - தாழ்ந்து தொங்குகின்ற, ஊசலில் - ஊஞ்சல்களில் (அமர்ந்து), கொடிச்சியர் - குறமகளிர், எடுத்த - எடுத்துப் பாடிய, இன் குறிஞ்சி - இனிய குறிஞ்சிப் பண் அமைந்த, கனிந்த பாடல் கேட்டு - சுவை கனிந்த ஊசற் பாடலைக் கேட்டு, அசுணம் மா - அசுணமாக்கள், வளர்வன காணாய் - கண் துயிலுவன காண்பாயாக.

வாயாற் சுவைத்தால் இனிப்பது அமுதம்; அதனின் வேருய் மனத்தால் நினைத்தாலே இனிப்பன பிராட்டியின் திருமேனியழகும் குணங்களுமாகலின், 'நினைந்த போதினும் மமுதொக்கும் நேரிழை' என்ருன். நேரிழை : அன்மொழித் தொகை; விளியேற்றது. உம்மை, உயர்வு சிறப்பு. குறிஞ்சிப் பாடல், கனிந்த பாடல் என இயைக்க. குறிஞ்சி - பண்வகையுள் ஒன்று; குறிஞ்சி நிலத்துக்குரியது. அசுணமா- இசையறிவதொரு விலங்கு; பறவையெனவும் கூறுவர். இதனைப்பற்றிய விரிவான செய்திகளை, பால. 7 - விசேடக் குறிப்பில் காண்க.

(பி - ம்.) 1. நினைந்தபோதிலும், போழ்தினும்; நேரிழாய் நிறைதேன், நேரிழாய் நின்ற, தாரிழைதுன்ற.
2. கோங்கினின்; வயின்கொளத்தொடுத்த.
3. குனிந்தபூசலிற்; எடுத்தலின்குறிஞ்சி, விண்குறிஞ்சி, வண்குறிஞ்சிக், மென்குறிஞ்சிக், எடுத்தனர் குறிஞ்சிக், எடுத்துவின்குறிஞ்சிக்.
4. கனிந்த பாடலின், பாடலில்; வருவன காணாய், பாராய். (24)

அருவிநீர் நறுமணங் கமழ்தல்

764. இலவு மிந்திர கோபமும் புரையித ழினியாய்
அலவு நுண்டுளி யருவிநீ ரரம்பைய ராடக்
கலவை சாந்துசெங் குங்குமங் கற்பகங் கொடுத்த
பலவுந் தோய்தலிற் பரிமளங் கமழ்வன பாராய்.

இலவும் - இலவம் பூவையும், இந்திரகோபமும் - இந்திரகோபப் பூச்சியையும், புரை - (நிறத்தால்) ஒத்த, இதழ் - உதடுகளையுடைய, இனியாய் - (கண்ணுக்கும் மனத்துக்கும்) இனியவளே, அரம்பையர் ஆட - தேவமாதர் (வந்து) நீராடுதலால், (அவர்கள் உடம்பில் பூசிய) கலவை - சந்தனக் கலவைக் குழம்பும், சாந்து - மயிர்ச் சாந்தும், செங்குங்குமம் - செங்குங்குமமும், கற்பகம் கொடுத்த பலவும் - கற்பக விருட்சம் (அவர்களுக்குக்) கொடுத்த வேறு பல மலர் முதலிய நறுமணப் பொருள்களும், தோய்தலின் - நீரில் படிதலால், அலவும் நுண் துளி அருவி நீர் - சிதறும் நுண்ணிய திவலைகளையுடைய அருவியின் நீரில், பரிமளம் கமழ்வன பாராய், பலவகை நறுமணம் கமழ்தலை நோக்குவாயாக.

நினைத்தாலும் அமுதம் போன்றவள் பிராட்டி யென்றதனல், மனத்துக்கும் இனியவளாகின்ருள். ஆட - ஆடுதலால்; செய

வெனெச்சம் காரணப் பொருளில் வந்தது. கலவை சாந்து : உம்மைத் தொகை; 'கலவைச் சாந்து' எனற்பாலது ஓசை பற்றி மிகாது வந்ததெனக் கொண்டு 'கலவைச் சந்தனம்' என உரைத்தலுமாம்.

(பி - ம்.) 2. அலவுதண்டுளி, உலவுதண்டுளி, அலேவநுண்டுளி, அலவனுண்டுளி; அருவிகளரம்பையர், அரம்பையரருவிநீர்; உவப்பக்.
3. கலவைச்சாந்து. (25)

## சிகரங்களின் தோற்றம்

765. செம்பொ ணுற்செய்து குலிகமிட் டெழுதிய செப்போர்
கொம்பு தாங்கிய தெனப்பொலி வனமுலேக் கொடியே
அம்பொன் மால்வரை யலர்கதி ருச்சிசென் றணையப்
பைம்பொன் மாமுடி மிலேச்சிய தொப்பது பாராய்.

செம் பொன்னுல் செய்து - செவ்விய (மாற்றுயர்ந்த) பொன்னுல் செய்து, குலிகம் இட்டு எழுதிய - சாதிலிங்கத்தால் வரிக்கோலம் எழுதப்பெற்ற, செப்பு - (அழகிய இரண்டு) செப்புக்களே, ஓர் கொம்பு தாங்கியது என - ஒரு பூங்கொம்பு சுமந்துள்ளது என்னும் படி, பொலி - விளங்குகின்ற, வனம் முலே - அழகிய தனங்களே யுடைய, கொடியே - வல்லிபோல்வாளே, அலர் கதிர் - (கதிரவனுடைய) பரந்த கிரணங்கள், உச்சி சென்று அணைய - சிகரங்களில் சென்று படிதலால், அம் பொன் மால்வரை - அழகிய பொன்னிறமுடைய இப்பெரிய மலே, பசுமை பொன் மா முடி மிலேச்சியது ஒப்பது பாராய் - பசும்பொன்னுலாகிய சிறந்த கிரீடங்களேச் சூட்டியது போன்றிருப்பதைப் பார்ப்பாயாக.

மலேச் சிகரங்களில் வெயிலொளி படுதலால், அவை மின்னும் பொன் மகுடங்களே மலேக்குச் சூட்டினது போல விளங்குகின்றன என்கின்ருன். மிலேச்சுதல் - சூட்டுதல். குலிகம் - இங்குலிகம்; சாதிலிங்கம். இட்டு : மூன்றனுருபின் பொருளது. உச்சி - சிகரம்.

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லே.

(பி - ம்.) 1. குலிகமெட்டு, குலிகமீது; செம்போர்.
2. கொம்பர்தாங்கிய, கொம்புதாங்கினது; துணேமுலேக்.
3. அலேகதிர்; சென்றணுகப், சென்றடையப்.
4. மான்முடி; மிலேச்சியதொப்பது. (26)

## மாணிக்கப் பாறைகளில் மூங்கில் முத்தின் காட்சி

766. மடந்தை மார்க்கொரு திலதமே மணிநிறத் திணிகல்
தொடர்ந்த பாறையின் வேயினஞ் சொரிகதிர் முத்தம்
இடந்தொ றுங்கிடந் திமைப்பன வெரிகதிர்ச் செக்கர்
படர்ந்த வானிடைத் தாரகை நிகர்ப்பன பாராய்.

மடந்தைமார்க்கு ஒரு திலதமே - பெண்களுக்கொரு திலகமாக விளங்குபவளே, மணி நிறம் – பதுமராக மணியின் நிறத்தைக் கொண்ட, திணி கல் – வலிய கல்லால் அமைந்த, தொடர்ந்த பாறையின் – நீண்ட பாறையில், வேய் இனம் சொரி - மூங்கில்கள் சிந்திய, கதிர்முத்தம் - ஒளி பொருந்திய முத்துக்கள், இடம்தொறும் கிடந்து இமைப்பன – பல இடங்களிலும் சிதறிக் கிடந்து ஒளிவிடுவன, எரி கதிர் – சுடும் கதிரவனுல், செக்கர் படர்ந்த வானிடை – செந்நிறம் பரவிய (அந்தி) வானத்தில் (பரவிய), தாரகை நிகர்ப்பன பாராய் – விண்மீன்களை யொத்திருப்பவற்றைப் பார்ப்பாயாக.

செந்நிறமுடையதாய்ப் பரந்து நீண்ட கற்பாறைக்குச் செவ் வானமும், அப்பாறையில் கிடந்து ஒளிவிடும் முத்துக்களுக்கு விண்மீன்களும் உவமை. "வேய்தந்த வெண்முத்தஞ் சிந்துபைங் கார்வரை மீன்பரப்பிச், சேய்தந்த வானக மானுஞ் சிலம்ப" (திருச்சிற். 130) என்பது ஈண்டு ஒப்பிடத்தகும்.

இப்பாடலும் ஒரு பிரதியில் இல்லை.

(பி - ம்.) 1. மடந்தைமார்களில்; திலகமே; மணிநிறத்திணிக்கல், மணிநிறத் தணிகல், மணிநிறத்தடுத்த, மணிநிறைத்தடுத்த.
2. பாறையில்; வேயினஞ்சொரிமணி, துளைக்கழைசொரிதரு,
3. இமைப்பனவெக்கிளஞ்செக்கர், வெஃகிளஞ்செக்கர், வெந்திளஞ் செக்கர், வெயிலிளஞ்செக்கர், இமைப்பனவேயிளஞ் செக்கர், இமைப்பன வெனக்கிளர் செக்கர், இனிதிளஞ்செக்கர், இமைப் பிலன் வெஃகிளஞ்செக்கர், இமைப்பினி லெக்கிளஞ்செக்கர்.
4. தாரகைபுரைவன, தாரகைக்கொப்பன, ஒப்பது. (27)

767. குழுவு நுண்டொளை வேயினுங் குறிநரம் பெறிவுற்
றெழுவு தண்டமிழ் யாழினு மினியசொற் கிளியே
முழுவ தும்மலர் விரிந்தநாண் முருக்கிடை மிடைந்த
பழுவம் வெங்கனல் கதுவிய தொப்பது பாராய்.

குழுவு நுண் தொளை வேயினும் – தொகுதியான நுண்ணிய தொளைகளையுடைய வேய்ங்குழலிசையினும், குறி நரம்பு எறிவுற்று எழுவு – சுரங்களைத் தனித்தனி குறிக்கும் நரம்புகளைத் தெறித்து இசை எழுப்பப்படுகிற, தண் தமிழ் யாழினும் - குளிர்ந்த இனிய யாழொலியினும், இனிய சொல் - இனிமை மிக்க சொற்களையுடைய, கிளியே - கிளி போன்றவளே, முழுவதும் - (மரம்) முழுவதிலும், நாள் மலர் விரிந்த முருக்கு – இலையின்றிப் புதிய பூக்கள் மலர்ந் துள்ள முண் முருக்க மரங்கள், இடை மிடைந்த பழுவம் - இடை யிடையே செறிந்துள்ள இந்தக் காடு, வெம் கனல் கதுவியது ஒப்பது பாராய் - கொடிய தீப்பற்றி எரிவது போன்றுள்ளதைக் காண்பாயாக.

முண்முருக்கின் பூ, தீப்போலச் செந்நிறமுடையது. அம்மரங்களில் இலையின்றி முழுதும் பூக்களே நிரம்பியிருத்தலும் உண்டு. அத்தகைய மரங்கள் அடர்ந்த காடு, தீப்பற்றி எரிவது போலத் தோற்றுகின்றது. வேய் - வேய்ங்குழல்; ஆகுபெயர். தமிழ் - இனிமை; "தமிழ்தழீஇய சாயலவர்" (சீவக. 2026); தமிழ்யாழ்—தமிழ் நாட்டுக்கே சிறப்பாக உரிய யாழெனினுமாம்.

இவ்விடத்து ஒரு பிரதியில் காணும் மிகைப்பாடல் வருமாறு:—

மைக்கொள் வேல்விழி யாயும்பர் மாதுதான் வருடும்
மெய்க்கொள் கூன்மந்தி தனக்குவந் துதவிய விலையில்
செய்க்கொ ளாரத்தைச் சிதறுவ கூனிசிற் றவைமுன்
கைக்கொ ளாரத்தைச் சிதறுவ தொத்தன காணாய்.

(பி - ம்.) 1. குழுவினுண்டொலீ, குழுவிநுண்டுளீ; வேய்ங்குழல், வயங்குழல், வேயினம்; குறிகரம்பெறியுற்று, எழுவுற்று, குறுகரம்பெறிவுற்று, குறிகரம்பறிவுற்று, எறிகரம்பெறிவுற்று, எழுகரம்பெறிவுற்று எறியுற்று, ஏழ்கரம்பெறிவுற்று.
2. எழுவ, எழுது; தகையசொல்.
3. மலர்விரியகாண், விரியுகாண், மலர்விரிந்தனே, விரிந்திடும், இலை விரிந்தகாண்; முருக்கிடைவிரிந்த, இடைந்த.
4. பழுவவெங்கனல், பழுவம்வெங்கனற்; ஒப்பன, ஒப்பதும். (28)

யானைகளின் செயல்

768. வளைகள் காந்தளிற் பெய்தன வனையகை மயிலே
தொளைகொ டாழ்தடக் கைநெடுந் துருத்தியிற் றூக்கி
அளவின் மூப்பின ரருந்தவர்க் கருவிநீர் கொணர்ந்து
களப மால்கரி குண்டிகைச் சொரிவன காணாய்.

காந்தளில் வளைகள் பெய்தன அனைய கை - காந்தட்பூவில் வளைகளிட்டாற்போலும் கைகளையுடைய, மயிலே - மயில் போன்றவளே, களபம் மால் கரி - கன்றையுடைய பெரிய யானைகள், அளவு இல் மூப்பினர் அரு தவர்க்கு - மிக முதிர்ந்த பருவமுடைய அரிய தவசியர் பொருட்டு, அருவி நீர் — அருவி நீரை, தொளைகொள் — தொளையைக் கொண்ட, தாழ் தட கை — தொங்குகிற பெரிய தும்பிக்கையாகிற, நெடு துருத்தியில் - பெரிய தோற்பையில், தூக்கி கொணர்ந்து - தாங்கிக்கொண்டு வந்து, குண்டிகை சொரிவன காணாய் - (தவசியருடைய) கரகங்களில் ஊற்றுவதைக் காண்பாயாக.

அம்மலையில், யானைகளும் சாந்த குண டையனவாய்த் தவசியர்க்கு உதவுகின்றன என அம்மலையின் பெருமை குறித்தவாறு. "கான யானை தந்த விறகிற், கடுந்தெறற் செந்தீ வேட்டு" (புறநா. 251) என்பது இங்கே நினைப்பதற்குரியது. யானையின் துதிக்கைக் குத் துருத்தி உவமை. வளையிட்ட [illegible] கை தோளிலிட்ட

மைந்தர்தாம், தோளிலிட்டு நீர்விடுந் துருத்தியான தொப்பரே'' (கலிங்க. 422). மால்கரிக் களபம் என மாறி, பெருமை வாய்ந்த யானைக் கன்றுகள் என உரைத்தலுமாம்.

(பி - ம்.) 1. அணையகைம்மயிலே, பெய்தனவானகைம்மயிலே, பெய்வனவனைய கைம்மயிலே, பெய்தனவாணகைமயிலே.
2. துளைகள்; தாழ்தடக்கையெனும், தாட்டடக்கையெனும், கைந்நெடும்; தடங்களிற்.
3. மூப்பினுர், மூப்பினுர்க்கு; அருந்தவக்கருவி நீர்.
4. கவளமால்கரி, களவமால்கரி, களபமால்வரைக்; குண்டிகை சொரிவன. (29)

### கடுவன்களின் செயல்

769. வடுவின் மாவகி ரிவையெனப் பொலிந்தகண் மயிலே
இடுகு கண்ணின ரிடருறு மூப்பின ரேக
நெடுகு கூனல்வா னீட்டின வுருகுறு நெஞ்சக்
கடுவன் மாதவர்க் கருநெறி காட்டுவ காணுய்.

இவை மா வடுவின் வகிர் என பொலிந்த - இவை மாவடுவின் பிளப்பு என்று சொல்லும்படி விளங்குகின்ற, கண்-கண்களையுடைய, மயிலே—, இடர் உறு மூப்பினர் - துன்பத்தை மிகுவிக்கும் முதுமையை யுடையவரும், இடுகு கண்ணினர் - (அம்மூப்பினுல்) இடுங்கிய கண்களையுடையவருமான, மாதவர்க்கு - சிறந்த தவசிகட்கு, உருகு உறு நெஞ்சம் கடுவன் - (அவர்கள்பால் இரங்கி) நெகிழ்வுற்ற மன முடைய ஆண் குரங்குகள், நெடுகு கூனல் வால் நீட்டின - (தம் முடைய) நீண்டு வளைந்த வால்களை நீட்டினவாய், ஏக அருநெறி காட்டுவ காணுய் - (அவர்கள்) செல்லுதற்கு அரிய வழியைக் காட்டிச் செல்வன காண்பாயாக.

மூப்பின் மிகுதியால் கண்பார்வை குன்றி நடையும் தளர்வுற்ற தவசியர்க்கு உதவியாகக் குரங்குகள் தம் வாலை அவர்கள் பற்றி நடக்குமாறு நீட்டிக்கொண்டு வழிகாட்டி முன்னே செல்கின்றன என்றதனுல், முந்திய பாடலில் குறித்த யானைகள் போலக் குரங்கு களும் தவசியர்க்கு உதவுகின்றன என்கின்றது இப்பாடல். பிளந்த மாவடு பெண்களின் கண்களுக்கு உவமை; ''மாவடு வகிரன்ன கண்ணிபங்கா'' (அடைக்கலப். 8), ''மாவடு வகிரன்ன கண்ணி'' (திருப்பொற் சுண்ணம். 2) என்பன திருவாசகம். உறு, பிறவினைப் பொருளது.

(பி - ம்.) 1. வடிவின; மாவகிரவையெனப், மாவகிரொப்பெனப், மாவகர் வாளெனப், மாவடுவகிரெனப், மானினமிவையெனப்.
2. மூப்பினரென்ன.
3. நீட்டிய, நீட்டியங்கு, கூனவானீட்டின, கூலவானீட்டின, கோலவா னீட்டின; உருகுறுநெஞ்சிற், உருகினநெஞ்சக், அருகுறு நெஞ்சக், அவர் கைபிற்கொடுத்துக். (30)

### மந்திகளின் செயல்

770\. அலம்பு வார்குழ லாய்மயிற் பெண்ணருங் கலமே
நலம்பெய் வேதியர் மார்பினுக் கியைவுற நாடிச்
சிலம்பி பஞ்சினிற் சிக்கறத் தெரிந்தநூ றேமாப்
பலம்பெய் மந்திக ளுடன்வந்து கொடுப்பன பாராய்.

அலம்பு வார் குழல் - அசைகின்ற நீண்ட கூந்தலையுடைய, ஆய் மயில் - அழகிய மயில் போன்ற, பெண் அரு கலமே - பெண்களுக்கு அரிய அணிகலமாக விளங்குபவளே, தேம் மா பலம் பெய் மந்திகள் - இனிய மாம்பழங்களை(முனிவர்க்கு)த் தரும் பெண் குரங்குகள், நலம் பெய் வேதியர் - (உலகினுக்கு) நன்மையைச் செய்யும் அம்முனிவர்கள், மார்பினுக்கு - மார்பில் அணிவதற்கு, இயைவு உற நாடி - பொருந்துவதாகக் கருதி, பஞ்சினின் - பஞ்சினால் இயன்ற நூல் போல, சிக்கு அற தெரிந்த சிலம்பி நூல் உடன் வந்து - சிக்குதலின்றி ஆராய்ந்த சிலந்தி நூலுடனே (முனிவர்பால்) வந்து, கொடுப்பன - (பழத்தோடு நூலையும்) கொடுப்பவற்றை, பாராய் - பார்ப்பாயாக.

மந்திகள், நல்ல மாங்கனிகளைக் கொணர்ந்து முனிவர்க்குத் தருவன; அவற்றோடு சிலந்தி நூலையும் முனிவர் அணியும் பூணூலுக்குப் பொருந்துமென்று கருதிக் கொணர்ந்து தருகின்றன. சிலம்பிகளே நூலைக் கொணர்ந்து மந்திகளுடன் கொடுத்தன வென்றலும் ஆம். இதனாலும் அந்தச் சூழலின் பெருமை விளங்கும்.

(பி - ம்.) 1. *வார்குழலாய்வளைப், வார்குழலார்மயிற், வார்குழையாய்வளைப்; பெண்ணிருங்கலமே.*
2\. *மார்பினுக்கியைபுற, இயையுற, இயைவன, இசைவன, இசைவுற, ஆகுதிக்கியைவுற; நாட்டிச்.*
3\. *பஞ்சினிற்சிக்குறத், பஞ்சினிச்சிக்குறத், பஞ்சினூல்சிக்கறத், இக்குறத்; திரித்தநூல்; தேமாப், தேமாம்; தெரிக்தநூல்தேமாம், தெரிந்தனதேமாப், தெருட்டுநூல்தேமாம், திரிந்தனதேமாப், தேமாம்.*
4\. *பலங்கள், பலன்கள்; மந்தியொடுடன்.* (31)

### கடுவன்களும் பன்றிகளும்

771\. தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச்செய்த திருவே
பெரிய மாக்கனி பலாக்கனி பிறங்கிய வாழை
அரிய மாக்கனி கடுவன்க ளன்புகொண் டளிப்பக்
கரிய மாகிழங் ககழ்ந்தன கொணர்வன காணாய்.

தெரிவைமார்க்கு ஒரு கட்டளை என செய்த - பெண்களுக்கு ஒரு மாதிரியாகப் படைக்கப்பெற்ற, திருவே - திருமகளே, கடுவன்கள் - ஆண் குரங்குகள், அன்புகொண்டு - (முனிவரிடத்து) அன்புடையன

வாய், பெரிய மா கனி - பெரிய மாம்பழங்களையும், பலா கனி - பலாப் பழங்களையும், பிறங்கிய (அழகாக) விளங்குகின்ற, வாழை அரிய மா கனி - வாழையின் சிறந்த அரிய கனிகளையும், அளிப்ப - (கொண்டு வந்து) கொடுக்க, கரிய மா - பன்றிகளும், கிழங்கு அகழ்ந்தன கொணர்வன காணாய் - கிழங்குகளைத் தோண்டிக் கொண்டு வருவன வற்றைக்காண்பாயாக.

விலங்குகளுள் அறிவிற் சிறந்த குரங்குகளின் செயலைக் கண்ட பன்றிகளும் முனிவர்க்கு உதவும் நல்ல நோக்கம உடையனவாயின என அச்சூழலின் பெருமை குறித்தவாறும். கரிய மா - பன்றி; மாவும் எனற்பால உம்மை தொக்கது.

(பி - ம்·) 1. தெரிவையர்க்கொரு·
2. மாக்கனிபலாக்களின், மாக்களிற்பலாக்களிற், மாக்களிற்பிறங்கிய, மாக்கனிபிறங்கிய; பிறங்கினவாழை, வாழையங்கனியோடு, வாழையிற்பலவின், பலாவின்.
3. கரியமாக்கனி, கடுவன்களரிதுகொண்டு, கடுவனுண்டினிதுகொண்டு, கடுவன்கள்கடிதுகொண்டு; அளித்த.
4. கரியமாக்கிழங்கு, அரியமாக்கிழங்கு, கரிகள்மாக்கிழங்கு; அகழ்ந்தன கொணர்ந்தன, அகழ்ந்தனகொடுப்பன, அகழ்ந்தவாகொடுப்பன, அகழ்ந்தவர்க்கொடுப்பன, அகழ்ந்தவர்க்கொணர்ந்தன, அகழ்ந்தவர்க்கருள்வன, அகழ்வனகொணர்வன, அமர்ந்தனகொணர்வன.
(32)

## கிளிகளின் பணி

772. ஐவ னக்குர லேனலின் கதிரிறுங் கவரை
மெய்வ ணக்குறு வேயின மீன்றமெல் லரிசி
பொய்வ ணக்கிய மாதவர் புரைதொறும் புகுந்துன்
கைவ ணத்தவாய்க் கிள்ளைதந் தளிப்பன காணாய்.

உன் கை வண்ணத்த வாய் கிள்ளை - உன் கையின் செந்நிறங் கொண்ட அலகினையுடைய கிளிகள், ஐவனம் குரல் - மலை நெல் கதிர் களையும், ஏனல் இன் கதிர் - தினையின் இனிய கதிர்களையும், இறுங்கு - சோளத்தையும், அவரை - அவரையையும், மெய் வணக்கு உறு - உடல் வளைதலுற்ற, வேய் இனம் ஈன்ற - மூங்கில்கள் தந்த, மெல் அரிசி - மெல்லிய அரிசியையும், தந்து - கொணர்ந்து, பொய்வணக்கிய - பொய்யை வென்ற, மாதவர் புரைதொறும் புகுந்து - பெரிய தவசியரின் ஆசிரமந்தோறும் நுழைந்து, அளிப்பன காணாய் - கொடுப்பவற்றைக் காண்.

முன்னே விலங்குகளின் நற்பணிகளைக் கூறிவந்தவர், இதில் கிளிகளின் பணியைக் கூறுகின்றார். முனிவரின் உணவுக்கு உதவும் பல பொருள்களைக் கிளிகள் தம் அலகால் கவர்ந்து கொணர்ந்து தருகின்றன என்கின்றார். பாரியின் பறம்பை மூவேந்தரும் முற்றிய

காலத்துக் கிளிகள் செய்த தொண்டு இங்கே நினைத்தற்குரியது. ஐவனம் - மலைநெல். குரல் - கதிர். ஏனல் - செந்தினை. இறுங்கு - சோள வகையுள் ஒன்று. மூங்கிலரிசியும் சிறந்த உணவுப் பொருளாகும். அவரை முதலியன பருப்பாதற்குரிய கூலங்கள். பொய்யை வணக்குத லாவது, பொய்ம்மை சிறிதும் இல்லாமை. புரை - குடில்; ஆசிரமம். கை : ஆகுபெயராய் கைந்நகத்தைக் குறித்தது.

(பி - ம்.) 1. ஏனலின் கதிரொடங்கவரை, தினைக்கதிர், இறுங்கவையவரை, இறுங்கிவையொடித்து.
2. வணக்குறுவேயினின் றின்ற, வேணுகன்றின்ற, வேணுகின்றீன்ற, வேயினிதின்ற, வேயினினின்ற, வணக்குறும்வேழகின்றீன்ற, வேழ நின்றளித்த, வணக்குறவேயினமீன்ற, வளைக்குறவேழகின்றீன்ற.
3. பொய்வணக்கில, வணக்கிலர், வணக்கமில், வனப்பறு; அறை தொறும்; புகுந்துண், புகுந்து, புகுந்தங்.
4. கைவணக்கவாய்க், வணக்குவாய்க், கைநகத்தவாய்க்; கிள்ளைக ளளிப்பன, கிள்ளைகொண்டளிப்பது. (33)

மலைப் பாம்புகள்

773. இடிகொள் வேழத்தை யெடுத்துட னெயிற்றொடு விழுங்கும்
கடிய மாசுணங் கற்றறிந் தவரென வடங்கிச்
சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாமிதித் தேறப்
படிக ளாமெனத் தாழ்வரைக் கிடப்பன பாராய்.

இடிகொள் - முழங்குதலுடைய, வேழத்தை எடுத்து - யானையை எடுத்து, எயிற்றொடும் உடன் விழுங்கும் - கொம்புகளோடு ஒரு சேர விழுங்கவல்ல, கடிய மாசுணம் - கொடிய மலைப் பாம்புகள், கற்று அறிந்தவர் என - (அறிவு நூல்களைக்) கற்று உணர்ந்த பெரியோர் போல, அடங்கி - அடக்கமுடையனவாகி, சடைகொள் சென்னியர் - சடையைக் கொண்ட தலையினையுடையவரும், தாழ்வு இலர் - குறை யொன்றும் இல்லாதவருமான, தாம் - முனிவர்கள், மிதித்து ஏற - மிதித்து ஏறும் வண்ணம், படிகள் ஆம் என - இவை படிகள் ஆகு மென்னும்படி, தாழ்வரை - மலையடியில், கிடப்பன பாராய் - கிடப்பவற் றைப் பார்.

மலைப்பாம்புகளின் கொடுமையைக் கூறி, அவையும் அடங்கிக் கிடந்தன எனச் சூழலின் பெருமையைச் சுட்டுகின்றார். இடி - இடி முழக்கம் போன்ற பிளிற்றொலி; "பெருங்கை யானை யிடிக்குர லியம்பி" (பெருங். 1-54; 40 - 41); "அரிமான் இடித்தன்ன" (கலி. 15) என்பதனுள் இடித்தல், முழங்குதல் என்ற பொருளில் வந்ததும் காண்க.

(பி - ம்.) 1. எடுத்துடலெயிற்றொடும், இடித்துடனெயிற்றொடும், எயிற்றொடு மெடுத்துடன், எயிற்றொடுமெடுத்தன; அழுங்கும்.

2. கடிகொள்; கற்றுணர்ந்தவரேன; வணங்கிச்.
3. சென்னிய; தாழ்விலதாய், தாழ்விலர்தாம்மிதித்திவரப், பிடித்தேறப், இடத்தேறப், தாழ்விலாதவர்மிதித்தேறப், தாவிலர்தாமிதித்தேறப், தளர்விலராய்மிதித்தேறப், தளர்விலார்தாமிதித்திவரப், தாமிதித்தேறப், தளர்விறுர்தாமிதித்தேறப், தாமிதித்திவரப்.
4. படிகளாமெனத், படிகடாஷெனத்; வரைகிடப்பன, வரைகடப்பன, காணுய். (34)

### மயில்களின் பணி

774. பாந்த டேரிவை பழிபடப் பரந்தபே ரல்குல்
ஏந்து நூன்மணி மார்பின ராகுதிக் கியையக்
கூந்தன் மென்மயில் குறுகின நெடுஞ்சிறை கோலிக்
காந்து குண்டத்தி லடங்கெரி யெழுப்புவ காணுய்.

பாந்தள் தேர் இவை - பாம்பின் படமும் தேர்த்தட்டும் ஆகிய இவை, பழிபட - (உவமையாகாமையால்) பழிக்கப்படுமாறு, பரந்த பேர் அல்குல் - விரிந்த பெரிய அல்குலையுடையாளே, கூந்தல் மெல்மயில்-தோகையையுடைய மெல்லிய மயில்கள், குறுகின - (ஆசிரமத்தினுள்) வந்து, நூல் ஏந்தும் மணி மார்பினர் - முப்புரி நூல் அணிந்த அழகிய மார்பினையுடைய முனிவர்கள், ஆகுதிக்கு இயைய - (தீயினுள்) ஆகுதி கொடுத்தற்குப் பொருந்த, காந்து குண்டத்தில் - வெப்பமுடைய ஓம குண்டத்தில், அடங்கு எரி - அடங்கியுள்ள தீயை, நெடு சிறை கோலி - (தம்முடைய) பெரிய சிறகை விரித்து (வீசி), எழுப்புவ காணுய் - கனன்று எழச் செய்வனவற்றைக் காண்.

மயில்கள் தமக்குப் பொருந்திய பணியைச் செய்கின்றன. பாந்தள், தேர் என்பன ஆகுபெயராய், முறையே பாம்பின் படத்தையும் தேர்த் தட்டையும் குறித்தன.

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை; பல அச்சுப் புத்தகங்களிலும், ஏடுகளிலும் இது முன்னே, "வடுவின் மாவகிர்" (769) என்பதனை அடுத்துள்ளது.

(பி - ம்.) 1. படர்ந்தபேரல்குல், பரந்தபொற்குயிலே.
2. நூலணி, நுண்மணி; மார்பினர்க்கு; ஆகுதிக்கியைந்த, ஆகுதிக் கிசையக், ஆவுதிக்கியையக், ஆவுதிக்கியைந்த.
3. மென்மயிற்குறுகின, மென்மயிலருஞ்சிறையானது கோலிக்.
4. குண்டத்திலங்கெரி, குண்டத்தடங்கெரி. (35)

### விமானங்களின் வருணனை

775. அசும்பு பாய்வரை யருந்தவ முடித்தவர் துணைக்கட்
டசும்பு வேய்ந்தவ ரொத்தவர் தமக்குவிண் டருவான்
விசும்பு தூர்ப்பன வாமென வெயிலென விளங்கும்
பசும்பொன் மானங்கள் வருவன போவன பாராய்.

அசும்பு பாய் வரை - நீர்க் கசிவு (பரந்து) பாயும் இம்மலையினிடத்து, அரு தவம் முடித்தவர் - செய்தற்கரிய தவத்தைத் செய்து முடித்தவர்களும், துணை கண் - இரண்டு கண்களாக, தசும்பு வேய்ந்தவர் ஒத்தவர் தமக்கு - (இரண்டு) நீர்க்கலசங்கள் பொருந்தப்பெற்றவர் போன்றவர்களும் ஆன முனிவர்களுக்கு, விண் தருவான் - (அவர்கள் அடைதற்குரிய) மேலுலகைத் தரும் பொருட்டு, வெயில் என விளங்கும் - சூரியனைப் போல விளங்குகிற, பசும் பொன் மானங்கள் - பசிய பொன்னாலியன்ற (தேவ) விமானங்கள், விசும்பு தூர்ப்பன ஆம் என - ஆகாயத்தை நிறைத்து விடுவன போல, வருவன போவன பாராய் - (இங்கே) வருவனவும் போவனவுமாக உள்ளவற்றைப் பார்.

சித்திரகூட மலையின் பெருமையால், தேவர்களும் விமானத்தில் வந்து அங்கே தங்குதலும் போதலும் உண்டாதலின், விமானங்கள் அங்கே வந்து போதல் உளதாயிற்று; அதனை, அங்கு வாழும் முனிவர் பொருட்டெனக் கற்பிக்கின்றார். முனிவர்கள், இறைவனை எப்போதும் நினைதலால் பேரின்பம் மிகப் பெற்று, இன்பக் கண்ணீர் (ஆனந்த பாஷ்பம்) பொழிந்தவண்ணம் இருப்பாராதலின், அவர்களுடைய கண்களை நீர்க் குடங்களென்றார். 'துணைக் கண் தசும்பு வேய்ந்தவர் ஒத்தவர், என்பதற்கு, கண்களையுடைய இரண்டு குடங்களைப் பொருந்தினவர்களை ஒத்த முனி பத்தினிகளாகிய கற்புடை மங்கையர் எனவும் பொருள் கொள்ளலாம். மானங்கள்: முதற்குறை. இராமபிரான் பிராட்டிக்குக் காட்டிக் கூறியவற்றை இதனுடன் முடித்துக் கொள்கிறார்.

(பி - ம்.) 1. முடித்தவரணைந்த, அணைத்த, முடித்தவரனைத்தும், முடித்தவரனைய, முடித்தவரனையத், முடித்தவன்றுணைக்கண், முடித்தவாயணைக்கண், முடிந்தவரணைந்த, உடைந்தவரணைந்த.
2. வேய்ந்தனரொத்தவர், ஒத்தனர், வேய்ந்தனவொத்தவர், வேந்தனவொத்தன, தந்தவரொத்தனர், ஒத்தவர்; விண்டரற்கு.
3. தூர்த்தனவாமென; வெயிலுக, வெயிறர; இயங்கும், வீங்கும், விசும்.
4. பசும்பொனன்னங்கள்; போவனவருவன. (36)

### இராமபிரான் அம்மலைவாழ் வேதியருக்கு விருந்தினனாதல்

776. இனைய யாவையு மேந்திழைக் கியம்பினன் காட்டி
அனைய மால்வரை யருந்தவ ரெதிர்வர வணங்கி
வினையி னீங்கிய வேதியர் விருந்தின னானான்
மனையின் மெய்யெனு மாதவம் புரிந்தவன் மைந்தன்.

மனையில் - இல்லறத்தின் கண் (நின்றே), மெய் எனும் மா தவம் புரிந்தவன் மைந்தன் - வாய்மை காத்தலென்னும் பெருந் தவத்தைச் செய்தவனான தயரதன் புதல்வனாகிய இராமபிரான், இனைய யாவையும் - இத்தன்மையினவான எல்லாவற்றையும், ஏந்து இழைக்கு-

சிறந்த அணிகலன்கள் பூண்ட சீதாபிராட்டிக்கு, இயம்பினன் காட்டி - எடுத்துச் சொல்லிக் காட்டிக்கொண்டு, அனைய மால் வரை - அத் தகைய பெருமை வாய்ந்த அம்மலையின் கண் (உள்ள), அரு தவர் - அரிய தவசியர், எதிர் வர - (தன்னை) எதிர்கொள்ள வர, வணங்கி - (அவர்களைப்) பணிந்து, வினையின் நீங்கிய வேதியர் - இரு வினைத் தொடர்பினின்றும் நீங்கிய வேதம் வல்ல அத்தவசியர்க்கு, விருந்தினன் ஆனான் - விருந்தினனாக அமைந்தான்.

இனைய என்றது, கீழே 741-ஆம் கவிமுதற் கூறியவற்றைச் சுட்டியது. இயம்பினன்: முற்றெச்சம். ஈற்றடியுள், தயரதனது சத்திய சீலத்தைச் சிறப்பித்தார். சித்திரகூட மலையில் வான்மீக முனிவரும் இருந்து இராமபிரான் முதலிய மூவரையும் உபசரித்தாரென முதல் நூல் கூறும் (சருக்கம். 56).

(பி - ம்.) 1. அன்பினன் காட்டி. 2. அருந்தவரெதிரெழ, எதிர்கொள.
3. வினையைநீங்கிய.
4. மெய்யெனுமாதவன், மெய்யினுமாதவம், புரிந்தவனமைந்தான். (37)

கதிரவன் மறைதல்

(கலிவிருத்தம்)

777. மாவிய லுதயமாந் துளவ வானவன்
மேவிய பகையிரு ளவுணர் வீந்துகக்
காவியல் குடவரைக் கால நேமிமேல்
ஏவிய திகிரியி னிரவி யேகினான்.

மா இயல் - மிக்க பெருமை வாய்ந்த, உதயம் ஆம் - உதயகிரியாகிற, துளவம் வானவன் - திருத்துழாய் சூடிய தேவனான திருமால், பகை மேவிய இருள் அவுணர் - (உலகுக்குப்) பகையாக அமைந்த இருட் கூட்டமாகிய அசுரர்கள், வீந்து உக - அழிந்தொழியும்படி, கா இயல் - (அவ்வசுரரைக்) காத்தல் பொருந்திய, குட வரை - மேற்கு மலை (அத்த கிரி)யாகிய, காலநேமி மேல் ஏவிய - காலநேமி என்னும் அசுரன் மேல் ஏவின, திகிரியின் - சக்கராயுதம்போல, இரவி - சூரியன், ஏகினான் - (அம்மலையை) அடைந்தான்.

திருமாலுக்கும் உதயகிரிக்கும் சிலேடையாக அமைந்தது இச் செய்யுள்; திருமால் காலநேமியைத் தன் சக்கரத்தால் அழித்தது போல, உதயகிரியானது அஸ்தமன கிரியாகிற காலநேமிமேல் சூரியனாகிற சக்கரத்தை ஏவியது என்ற வகையில் மேலே பொருள் கூறப் பெற்றது; இனித் திருமாலுக்குச் செல்லுங்கால், மா இயல் உதயம் ஆம் - விலங்கின் (நரசிங்கத்தின்) வடிவாகத் தோன்றிய, துளவம் வானவன் - திருமால், மேவிய......வீந்து உக - தேவர்க்குப் பகையாக அமைந்த இருள்நிற அசுரர் அழிந்தொழிய, கா இயல் காலநேமிமேல் -

(அசுரரைக்) காத்தலுடைய (தலைவனுன) காலநேமியின்மேல் ஏவிய திகிரியின் - ஏவிய சக்கரப்படைபோல, இரவி குடவரை ஏகினுன் என்க.

இதிற் குறித்த காலநேமியின் வரலாறு: நரசிங்காவதாரம் செய்த திருமாலால் அழிப்புண்ட இரணியனுக்குப் புதல்வனுய், நூறு தலைகளும் நூறு கைகளும் படைத்த காலநேமி என்பவன், தேவாசுர யுத்தத்தில், அசுரர் பக்கம் இருந்து தேவர்களையெல்லாம் வென்று, சத்தியலோகத்தில் போய், பிரமனைத் தேவர்கள் வணங்குவது போலத் தன்னை அசுரர்கள் வணங்குமாறு சில காலம் வீற்றிருந்து, அதனுல் மேலும் செருக்கு மிகுந்து, தன் தந்தையான இரணியனைக் கொன்ற திருமாலையும் வெல்லக் கருதிச் சென்று போர் தொடங்க, திருமால் தன் சக்கராயுதத்தால் அக்கால நேமியின் நூறு தலைகளையும் நூறு கைகளையும் அறுத்துத் தள்ளி அவனை அழித்தனன் என்பது; ஆரணிய. 1149-பார்க்க. உதய கிரிக்குப் பெருமை, மங்கலத் திசையாகிய கிழக்கில் இருத்தலும், பலரும் தொழும் கதிரவன் தன்பால் உதிக்கப் பெறுவதும்பற்றி வந்தது.

(பி - ம்.) 1. மாவியலுதயமாத், உதயத்துத்; துளபவானவன், வாவினன், மாதவன், துழதிவானவன், துளதிவானவன், துளதிமானவன், துளசிவானவன், துளரிவானவன், துணரிவானவன், மன்னுவானவன்.
2. பசையிருளவுணன், பகையிருள்புணர, கானிருளவுணர்; வீய்ந்துகக்; விங்கிய.
3. காவுயர்.
4. மேவியதிகிரிபோல், ஏவியதிகிரிபோல், ஏவியநேமிபோல்; இரவியேறினுன், எய்தினுன். (38)

மாலைக்கால வருணனை

778. சக்கரந் தானவ னுடலிற் ருக்குற
எக்கிய குருதியிற் பரந்த தெங்கணும்
செக்கரத் தீயவன் வாயிற் றீர்ந்துவே
றுக்கவான் றனியெயி றொத்த திந்துவே.

சக்கரம்-சக்கரப்படை, தானவன் உடலில் தாக்குஉற - அவ்வசுரன் (காலநேமி) உடம்பில் தாக்குதலால், எக்கிய குருதியின் - (உடலினின்றும்) எழுந்து பரந்த குருதிபோல, செக்கர் எங்கணும் பரந்தது - செந்நிறம் (வானில்) எங்கும் பரவியது; இந்து - சந்திரன், அ தீயவன் வாயில் தீர்ந்து - அக்கொடியவன் வாயினின்றும் நீங்கி, வேறு உக்க - வேருக உதிர்ந்து கிடந்த, வான் தனி எயிறு ஒத்தது - பெரிய ஒற்றைக் கோரப் பல்லைப் போன்றிருந்தது. ஏ : ஈற்றசை.

சூரியாஸ்தமன காலத்தில் தோன்றிய செவ்வானையும், அதன்பின் தோன்றிய பிறையையும், முன் பாடலோடு தொடர்புபடுத்தி, முறையே காலநேமி உடம்பினின்றும் வழிந்து பரவிய குருதி எனவும், அவனது

வாயினின்றும் உதிர்ந்த ஒற்றைக் கோரப்பல் எனவும் உருவகித்துக் கூறுகின்றார். எக்குதல் - மேலெழுதல், மிகுதல்.

(பி - ம்.) 2. எக்குறு; சோரியிற்; பரந்தவெங்கணும்.
3. தியன; வாயிற்றீந்துவேறு, வாயிற்றீந்தவேறு, வாயிற்றீர்த்துபோய், வாயின்றீர்ந்துபோய்.
4. உக்கவான்றீயபல்; ஒத்தமீனெலாம். (39)

779. ஆனன மகளிருக் களித்த தாமரைப்
பூநனி முகிழ்த்தன புலரி போனபின்
மீனென விளங்கிய வெள்ளி யாம்பல்வீ
வானெனு மணித்தட மலர்ந்த வெங்குமே.

புலரி போனபின் - சூரியன் மறைந்த பிறகு, தாமரை பூ - தாமரைப் பூக்கள், மகளிருக்கு ஆனனம் அளித்த - பெண்களுக்கு முகப் பொலிவைத் தந்தனவாய், நனி முகிழ்த்தன - மிகவும் குவிந்தன; மீன் என விளங்கிய - விண்மீன்கள்போல விளங்கிய, வெள்ளி ஆம்பல் வீ - வெள்ளல்லிப் பூக்கள், வான் எனும் மணி தடம் எங்கும் - ஆகாயம் போன்ற அழகிய தடாகங்களிலெல்லாம், மலர்ந்த - நன்கு விரிந்திருந்தன. ஏ: ஈற்றசை.

இரவில், தாமரைப் பூக்கள் குவிதலும், அல்லிப் பூக்கள் விரிதலுமாகிய இயற்கை நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறுகின்றார். மலர்ந்த தாமரையின் அழகு தமக்கு இலதே என்று மகளிரின் முகங்கள் பொலிவிழந்து நிற்க, இப்போது தாமரை குவிந்தவுடன் தம் பகை மடங்கியது கண்டு பொலிவு பெற்றவையாயின. ஆனனம் -முகத்துக்குப் பெருமையும் பொலிவும்; ஆகுபெயர். புலரி - சூரியன்; விடியலைச் செய்வது என்ற காரணப் பொருள் கொண்டது.

(பி - ம்.) 2. முகிழ்த்தென; அலரிபோனபின்.
3. மீனனி; விளங்கின; வெள்ளை ஆம்பல்கள்.
4. வானென; மணிதடம்; மலர்த்தடம், வானனிநகைத்தென; மலர்ந்தெங்குமே, மலர்ந்ததொக்குமே. (40)

780. மந்தியுங் கடுவனு மரங்க ணோக்கின
தந்தியும் பிடிகளுந் தடங்க ணோக்கின
நிந்தையில் சகுந்தங்க ணீட நோக்கின
அந்தியை நோக்கினு னறிவை நோக்கினன்.

மந்தியும் கடுவனும் - பெண் குரங்குகளும் ஆண் குரங்குகளும், மரங்கள் நோக்கின - (தாம் இரவில் தங்குதற்குரிய) மரங்களை நாடிச் சென்றன; தந்தியும் - ஆண் யானைகளும், பிடிகளும் - பெண் யானைகளும், தடங்கள் நோக்கின - (தாம் இரவைக் கழித்தற்கேற்ற) மலைப் பக்கங்களை நாடிச் சென்றன; நிந்தை இல் சகுந்தங்கள் - பழிப்

பில்லாத பறவை இனங்கள், நீடம் நோக்கின - (தம்) கூடுகளை நாடிச் சென்றன; அறிவை நோக்கினன் - மெய்யுணர்வை (யாரிடம் உள தென்று) நாடுபவனாகிய இராமபிரான், அந்தியை நோக்கினன் - அந்திக் காலக் கடன்களை நாடினன்.

தந்தி - தந்தத்தையுடையது; ஆண் யானை. தடம் - மலையடிப்பக்கம். நீடம் - கூடு; நீளம் எனவும் வரும். நிந்தையில் என்ற அடை, ஆந்தை கோட்டான் முதலியவற்றை விலக்கியது. அந்தி: ஆகு பெயர். தூண்டில்காரனுக்குத் தக்கையிலே கண் இருப்பதுபோல, யாரிடம் மெய்யுணர்வு இருக்கிறது என்று நாடி அருள் புரிபவனாதலின், இராமனாகிய திருமாலை, 'அறிவை நோக்கினன்' என்றார்.

(பி - ம்.) 1. மரக்கணேக்கின.
2. தட்டநோக்கின.
3. சிந்தையில்; சகுந்தங்கணீளம், சகுந்தமுநீளம், நீடம், நீடல், சகுந்தமுனீடல், சகுனமுநீடம், நீட்டு, சித்தமுநீடம், சுற்றமுநீடல், நியமமுநீடல், பந்தியுநீளம்.
4. அந்தியைநோக்கினன், நோக்கினர்; அறிவைநோக்கினர். (41)

மூவரும் தியானத்தில் அழுந்துதல்

781. மொய்கிளர் நறுமலர் முகிழ்த்த வாஞ்சில
மையறு நறுமலர் மலர்ந்த வாஞ்சில
ஐயனோ டிளவற்கு மமுதன் னாளுக்கும்
கைகளுங் கண்களுங் கமலம் போன்றவே.

மொய் கிளர் - அடர்ந்து விளங்குகின்ற, நறு மலர் சில-மணமுடைய பூக்கள் சில, முகிழ்த்த - குவிந்தன; மை அறு நறு மலர் சில - குற்ற மற்ற நல்ல பூக்கள் (வேறு) சில, மலர்ந்த - விரிந்தன; ஐயனோடு - இராமபிரானுக்கும், இளவற்கும் - தம்பிக்கும், அமுது அன்னாளுக்கும் - அமுதம்போல் பவளான சீதாபிராட்டிக்கும், கைகளும் கண்களும்—, கமலம் போன்ற - (குவிந்த) தாமரை போல் ஆயின. ஏ! ஈற்றசை.

பூ வகைகளுள் சில பகலில் மலர்ந்து இரவில் குவிவன; சில இதற்கு மாறானவை; ஆகலின், சில முகிழ்த்த; சில மலர்ந்த என்றார். 'ஆம்' இரண்டும் அசை. 'கைகளுங் கண்களும் கமலம் போன்ற' என்றது, இரவில் தாமரை குவிதல் போலக் குவிந்திருந்தன என்பதாம். இது, அவர்கள் கைகுவித்துக் கண்மூடிக் கடவுளரைத் தியானித் திருந்தமை குறித்தது.

(பி - ம்.) 1. மொய்யுற, மொய்குழை, மொய்தழை; முகிழ்த்ததாம்.
2. மய்யுற; மலர்ந்ததாம்.
3. ஐயனொடு, அப்பனோடிளவலுக்கும், அய்யனுமிளவலும்; அமிழ் தனாளுக்கும்; அமிழ்தனாட்கிருங், அணங்கனாளுக்கும்.
4. கைகளுமுகங்களுங்; போன்றதே, பூத்ததே, பூத்தவே. (42)

### தம்பி அமைத்த தவச்சாலையை அடைதல்

782. மாலைவந் தகன்றபின் மருங்கி லாளொடும்
வேலைவந் துறைவிட மேய தாமெனக்
கோலைவந் துமிழ்சிலைத் தம்பி கோலிய
சாலைவந் தெய்தினன் றவத்தி னெய்தினன்

மாலை வந்து அகன்றபின் - மாலையாகிய முதல்யாமம் வந்து நீங்கிய பின் (இருள் சூழ்ந்தவுடன்), தவத்தின் எய்தினன் - (தேவரும் பிறரும் செய்த) தவத்தால் (இவ்வுலகில்) தோன்றிய இராமபிரான், மருங்கு இலாளொடும் - நுண்ணிய இடையையுடைய சீதாபிராட்டியோடு, வேலை வந்து - திருப்பாற் கடல் (அங்கு) வந்து, உறைவு இடம் மேயது என - (அவர்கள்) தங்குதற்கு உரிய இடமாக அமைந்தது என்னும்படி, கோலை - அம்புகளை, வந்து உமிழ் சிலை - காற்றைப் போலக் கடிது பொழியவல்ல வில்லை ஏந்திய, தம்பி - இளைய பெருமாள், கோலிய - (திருந்த) அமைத்த, சாலை வந்து எய்தினன் - பர்ணசாலையை வந்து அடைந்தான்.

அச்சாலையுட் குடிபுக்கான் என மேலே 787-ஆம்கவியுட் கூறுவர்.

இராமபிரானும் பிராட்டியும் இனிது தங்குதற்கு ஏற்றவாறு சிந்தித்துத் திருத்தமுற ஒரு பர்ணசாலையை இலக்குவன் அமைத்தானாக, அது இவர்கள் பொருட்டுப் பாற்கடலின் ஒரு பகுதி அங்கு வந்து அமைந்தாற்போன்று இருந்தது என்றவாறு. மருங்கு இலாள் என்றது இடையின் நுண்மை குறித்தது; "மருங்கிலா நங்கையும்" (பால. 593). கோல் - அம்பு. வந்து - காற்று; "வந்தெனக் கந்தன் நூறு கணைதொட" (கந்த: சூர. வதை. 188), தவத்தின் எய்தினன் - தவநெறியில் தலைப்பட்டவன் எனினுமாம்.

ஓர் ஏட்டுப் பிரதியிலும், வை. மு. கோ. அச்சுப் பதிப்பிலும் இப்பாடல்,

"மாலைவந் தகன்றபின் மருங்கி லாளொடும்
மேலவ னிருந்திட விரும்பி யேமனம்
கோலிநற் குணத்திளங் குருசி லாங்கொரு
சாலையை வகுத்தமை சாற்று வரமரோ"

என்றுளது. இளையவன் சாலை வகுத்த வகையைக் கூறத் தொடங்கி அதனை நான்கு பாடல்களாற் கூறி, அத்தகைய சாலையுள் அண்ணல் குடிபுக்கான் (787) என வரும் கதைத் தொடர்புக்கு இது பொருந்துவதாகவே காண்கின்றது. எனினும், பெரும்பான்மையாகவுள்ள பாடமே இங்குக் கொள்ளப்பெற்றது. இதன்படி இங்கே சாலை இருந்த இடத்தை அடைந்தான் எனக் கொள்ளல்வேண்டும்.

(பி - ம்.) 1. மருங்கிலாளொடு, மருங்குலாளொடும், மருங்கின்யாற்ருடும்.
2. மேயதாலெனக்.
4. சாலேவங்தெய்தினன்; தவத்தின்மேயினுன், தவத்துமேயினுன், தையல்கூடவே. (43)

இலக்குவன் சாலே அமைத்த வகை

783. நெடுங்கழைக் குறுந்துணி நிறுவி மேனிரைத்
தொடுங்கலி னெடுமுக டொழுக்கி யூழுற
இடுங்கலில் கைவிரித் தேற்றி யெங்கணும்
முடங்கலில் வரிச்சுமேல் விரிச்சு மூட்டியே.

நெடு கழை குறு துணி - நெடிய மூங்கில்களைத் தறித்த குறிய துண்டுகளை, நிறுவி - (தூண்களாக) நிறுத்தி, மேல் - அவற்றின்மேல், நிரைத்து - (நீண்ட மூங்கில்களை இறப்பாக) அமைத்து, ஊழ் உற - முறையாக, ஒடுங்கல் இல் - தாழ்வில்லாத, நெடு முகடு ஒழுக்கி - உயர்ந்த முகட்டு வளையைப் போக்கி, எங்கணும் - எல்லாப் பக்கமும், இடுங்கல் இல் - ஒடுங்குதலில்லாத (பருமனுன), கை விரித்து - (மூங்கில்) கை மரங்களை(அளவாக)ப் பரப்பி, ஏற்றி - (இறப்புக்கும் முகட்டுவளைக்கும் பொருந்த) உயர்த்திக் கட்டி, மேல் - அவற்றின் மேல், முடங்கல் இல் வரிச்சு விரிச்சு - வளைவில்லாத வரிச்சுக் கோல்களைப் பரப்பி, மூட்டி - (எல்லாவற்றையும்) இறுகக் கட்டி. ஏ: ஈற்றசை.

இது முதல் ஐந்து பாடல்கள் ஒரு தொடர். முதல் நான்கு பாடல்களும் தொடர்ந்து, ஐந்தாவதில் வரும், 'இன்னணம் இழைத்த சாலேயில் குடிபுக்கான்' என்பதனேடு முடியும்.

(பி - ம்.) 1. நெடுங்கழைகுறுந்துணி, நெடுங்கழைகுறுந்தறி, நெடுங்கழைக் குறுந்தறி; நிறுத்திமேல்வளை.
2. முகடொழுக்கியூடுற, முகட்டொழுக்கியூடுற.
3. கைவிசித்தேற்றி, கைவிசித்தெற்றி, கைவிசைத்தேற்றி, கைவிதந் தேற்றி, கைவிரிந்தேற்றி, கண்வளைபரப்பி.
4. முடங்கலின்; வரித்துமேல், வரிந்துமேல், வலித்துமேல், விரிச்சுமேல்; விரிச்சுமூடியே, விரித்துமூடியே, விரிந்துமூட்டியே, வரித்து மூட்டியே, உறுத்திமூட்டியே. (44)

784. தேக்கடைப் படலேயிற் செறிவு செய்துபின்
பூக்கிளர் நாணலின் புல்லு வேய்ந்துகீழ்த்
தூக்கிய வேய்களிற் சுவருஞ் சுற்றுறப்
போக்கிமண் ணெறிந்தவை புனலிற் றீற்றியே.

தேக்கு அடை படலேயின் - தேக்கிலேப் பரப்பினுல், செறிவு செய்து - (மேற் கூரையை) நெருங்க அமைத்து, பின் - அதன்மேல், பூ கிளர் - பூவோடு விளங்குகின்ற, நாணலின் புல்லு வேய்ந்து -

நாணற் புல்லால் மூடி, கீழ் - கீழே, சுற்று உற - சுற்றிலும், தூக்கிய வேய்களின் - (ஊன்றி) நிறுத்திய மூங்கில்களால், சுவரும் போக்கி - சுவரையும் நீள அமைத்து, மண் எறிந்து - (அம்மூங்கில்களின்மேல் படியுமாறு) குழைத்த மண்ணையும் அறைந்து, அவை - அவ்வாறு அமைத்த சுவர்களை, புனலின் தீற்றி - நீர் கொண்டு மணியாசு செய்து. ஏ - ஈற்றசை.

மேற்கூரைக்குரிய ஓலை அங்கே கிடைத்தல் அரிதாகலின், அங்கே எளிதிற் கிடைப்பனவும் உறுதியுடையனவுமான உலர்ந்த தேக்கிலைகளால் கூரையை அமைத்து, அவற்றின்மேல் பாதுகாப்பாகவும் நீர் பொசியாமலும் இருக்க நாணற்புல்லைப் பரப்பி வேய்ந்தான். கூரையின்மேல், நாணல், விழல் முதலிய புற்களை வேய்தலை இன்றும் காணலாம். மூங்கிற்கோல்களை நெருங்க நிறுத்தி அவற்றின்மேல் மண் அறைந்து அமைக்கும் சுவர், தனி மண்சுவரினும் உறுதியுடையதாகும். தீற்றுதல் - பூசி மணியாசு செய்தல்.

(பி - ம்.) 1. தேக்கடைப்படலையின், படலையாற், தேக்குடைப்படலையிற், சேக்கையி னருந்துயிற்; செறிவுசெய்தபின், கூரைசெய்துபின்.
2. புல்லின்; வேய்ந்துகீழ்த், மேய்ந்துகிழ்த், மேய்ந்துநீள், மேய்ந்துகிழ், வேய்ந்துகான்.
3. வேய்களிற்சுவரின், வேய்களின்சுவரின்; வேயினிற்சுவரும்.
4. புனலிற்றிட்டியே. (45)

785. வேறிடம் வீரற்கு மிதிலை நாடிக்கும்
கூறிய நெறிமுறை குயிற்றிக் குங்குமச்
சேறுகொண் டழகுறத் திருத்தித் திண்சுவர்
ஆறிடு மணியொடு தரள மப்பியே.

(குடிலின் உள்ளே தங்குதற்கு) வீரற்கும் - இராமபிரானுக்கும், மிதிலை நாடிக்கும் - மிதிலை நாட்டவளான சானகிப்பிராட்டிக்கும், வேறு இடம் - வேறு வேறான இடங்களை, கூறிய நெறி - (மனைநூலில்) சொல்லிய விதியின்படி, முறை குயிற்றி - முறையாக அமைத்து, குங்குமம் சேறு கொண்டு - குங்குமம் கலந்த செஞ்சாந்தினால், அழகு உற திருத்தி - (தரையை) அழகாக (மெழுகிச்) செப்பம் செய்து, திண் சுவர் - வலிய சுவர்களில், (உட்புறத்தே) ஆறு இடும் மணியொடு - ஆறுகள் கொணர்ந்து ஒதுக்கிய இரத்தினங்களையும், தரளம் - முத்துக்களையும், அப்பி - (சித்திர வேலைப்பாடு அமையும்வண்ணம்) பதித்து. ஏ : ஈற்றசை.

தவ நெறியில் வாழ்பவராதலின் இராமனுக்கும் சீதைக்கும் தனி அறைகள் அமைத்தான். குங்குமச் சேறு கொண்டு திருத்தியது சுவர்களை என்பார் சிலர். சுவர்களை அழகுபடுத்தினமை வேறே கூறுதலாலும், தரையைப்பற்றிய செய்தி வேறில்லாமையாலும் அது தரைக்கு எனக் கொண்டு உரைக்கப்பெற்றது.

(பி - ம்.) 1. வேறிடமியற்றினன்.
2. கூறினமுறைநெறி, கூறியமுறைநெறி, கூறியமுறையது, கூறின நெறிமுறை.
4. மணியொடும், மணிகொடு, மணல்சொடு, மணலொடு, மணலொடும்; கனகம், களபம்; பம்பியே. (46)

786. மயிலுடைப் பீலியின் விதான மேல்வகுத்
தயிலுடைச் சுரிகையா லருகு தூக்கறுத்
தெயிலுடைக் கழைகளா லியற்றி யாங்குநற்
செயலுடைப் புதுமலர் பொற்பச் சிந்தியே.

மயில் உடை(ய) பீலியின் - மயில் தோகையால், விதானம் மேல் வகுத்து - மேற்கட்டியைச் சிறப்புற அமைத்து, அயில் உடை(ய) சுரிகையால் - கூர்மையையுடைய (தன்) உடை வாளால், அருகு - ஓரங்களில், தூக்கு அறுத்து - நீண்டு தொங்கும் இலை புல் முதலியவற்றை (ஒழுங்குபட) அறுத்து, எயில் உடை(ய) கழைகளால் இயற்றி - சுற்று மதில் போன்ற அரணை (அதற்குத் தகுதி) உடைய மூங்கில்களால் ஆக்கி, யாங்கும் - எவ்விடத்தும், நல் செயல் உடை(ய) புது மலர் - நல்ல அழகுடைய புதிய பூக்களை, பொற்ப சிந்தி - எழில்கொளத் தூவி. ஏ: அசை.

முந்திய மூன்று பாடல்களால் குடிலின் அமைப்பைக் கூறி, இதனுள் அதனை அழகு செய்தலும், புறக்காவலான வேலி இடுதலும் கூறினர். ஆக, இந்நான்கு பாடல்களாலும் குடிலின் அமைப்பும் சிறப்பும் கூறப்பெற்றன.

(பி - ம்.) 1. பீலியால்.
2. அருகுதூக்குறுத்து, அலகுதூக்கறுத்து,
3. எயிலிளங்கழைகளால், கழைகளின், எயிலுடைக்கழைகளின், எயிலிணைக்கழைகளால், எயிலினத்தழைகளால்; இயற்றியாறிடு, யாறிடும், யாற்றிடு; அங்குநற், யாண்டுறக்.
4. செயலுடைப் பொழின்மலர், புதுமணல், பருமணல், புயன்மணல், செயல்மணற்புதுமலர், செயலமர்ப்புதுமணல், புயலுடைப்புதுமலர், படுமணல், பொழில்மலர்ப், பொலமலர்ப், புயலமர்புதுமலர், புயல்மணல்புதுமலர், மணற்புதுமலர், மணப்புதுமலர்; போர்ப்பச் சிந்தியே, பூவுஞ்சிந்தியே. (47)

### குடிலுட் குடிபுகுதல்

787. இன்னண மிளையவ னிழைத்த சாலையில்
பொன்னிறத் திருவொடுங் குடிபுக் கானரோ
நன்னெடுந் திசைமுக னகத்து நம்மனோர்
உன்னரு முயிருளு மொக்க வைகுவான்.

இன்னணம் - இவ்வாறாக, இளையவன் இழைத்த சாலையில் - இளைய பெருமான் செய்தமைத்த குடிலில், நல் நெடுதிசைமுகன்

அகத்தும் - நன்மையும் பெருமையும் உடைய பிரமனுள்ளும், நம் அன்னோர் - நம்மைப் போன்றவர்கள், உன்ன அரும் - நினைத்தற்கும் அரிய, உயிர் உள்ளும் - (நுண்ணிய) உயிர்களுள்ளும், ஒக்க வைகுவான் - ஒருபடித்தாகத் தங்கும் (இறைவனான) இராமபிரான், பொன் நிறம் - பொன்னிற மேனியுடைய, திருவொடும் - இலக்குமியான சீதாபிராட்டியுடன், குடிபுக்கான் - குடிபுகுந்தான். அரோ : அசை.

அணுவுக்கும் அணுவாய்ப் பெரிதுக்கும் பெரிதாய் எங்கும் இருப்பவன் இறைவன் என்னும் உண்மையைப் பொதிந்து வைத்து, இராமபிரானை விசேடித்துள்ள அருமை ஓர்தற்கு உரியது. அத்தகைய பெருமை உடையவன், இங்கே பலர் காண ஒரு குடிலுட் புக்கு வைகுவானானான் என்ற கருத்தும் உன்னத் தகும். வைகுவான் குடிபுக்கான் என இயைக்க. இன்னணம் என்றது, இதுகாறும் நான்கு கவிகளிற் கூறிய வகையில் என்றபடி. வைகுவான் : வினையாலணையும் பெயர்.

இலக்குவனைக் கொண்டு ஒரு மானை அடித்துவரச் செய்து, அதனால் வாஸ்து ஹோமம் செய்தபின் பர்ணசாலையில் பிரவேசித்ததாக வான்மீகம் கூறும். காட்டில் கழிக்கவேண்டிய காலம் முழுதும் சித்திரகூட மலையிலேயே தங்கலாமென்று பரத்துவாச முனிவன் கூறினமை இங்கு நினைக்கத் தகும்.

(பி - ம்.) 1. இன்னன.
2. பொன்னியல்; புக்கானவள்.
4. ஒத்துவைகுவான். (48)

### பன்னசாலையின் இயல்பு

### (வேறு)

788. மாய நீங்கிய சிந்தனை மாமறை
தூய பாற்கடல் வைகுந்தஞ் சொல்லலாம்
ஆய சாலை யரும்பெற லன்பினன்
நேய நெஞ்சின் விரும்பி நிரம்பினன்.

மாயம் நீங்கிய சிந்தனை - மாயை (அவிச்சை) நீங்கிய (ஞானியரின்) மனமும், மா மறை - பெருமை மிக்க வேதமும், தூய பால்கடல் - பரிசுத்தமான பாற்கடலும், வைகுந்தம் - வைகுந்தமும் (அது என்று), சொல்லல் ஆம் - சொல்லத் தக்கதான, ஆய சாலை - அந்தப் பன்னசாலையில், பெறல் அரு அன்பினன் - (மற்றொருவர்) பெறுதற்கரிய தூய அன்பினை உடைய இராமபிரான், நேயம் நெஞ்சின் - நண்பு நிறைந்த மனத்தோடு, விரும்பி - விருப்பங்கொண்டு, நிரம்பினன் - மன நிறைவு உடையவனானான்.

பரமன் வீற்றிருக்கும் இடமெல்லாம் அப்பர்ணசாலைக்கு உவமை கூறலாம்படி அது சிறப்புற்றிருந்தது; அதனுட் புகுந்த பரமனும் பரம திருப்தியுடையவன் ஆனான். "வேலைவந் துறைவிட மேய தாமெனத், தம்பி கோலிய சாலை" (782) என்றார் முன்னும். கீழ் வருவன இங்கு ஒப்புநோக்கத் தக்கன: "முன்ன மேதுயின் றருளிய முதுபயோ ததியோ, பன்ன காதிபப் பாயலோ பச்சையா லிலையோ, சொன்ன நான் மறைச் சுருதியோ கருதிநீ யெய்தற், கென்ன மாதவம் செய்ததிச் சிறுகுடி லென்றான்" (வி. பா. கிருட்டினன் றூது. 80).

(பி - ம்.) 1. மாயை; சிந்தையின்; நான் மறை.
2. வைகுண்டம்.
3. அன்பினன், அன்பினர்.
4. நேயநெஞ்சில், மேயநெஞ்சில், நெஞ்சின்; விரும்பிகிரப்பினன், விரும்பகிரம்பினன், விரும்பிகிரப்பினர், விருப்பகிரம்பினன், விருப்ப மியம்பினன், விருப்பினிரம்பினன். (49)

## இராமபிரான் சிந்தித்தல்

789. மேவு கான மிதிலையர் கோன்மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன
தாவி லெம்பிகை சாலை சமைத்தன
யாவை யாதுமி லார்க்கியை யாதவே.

மேவு கானம் -(ஒரு காரணத்தால்) நாம் வந்துற்ற காட்டில், மிதிலையர் கோன் மகள் - மிதிலையிலுள்ளார்க்கு அரசனான சனகன் மகளுடைய, பூவின் மெல்லிய பாதமும் - தாமரைப் பூவினும் மென்மை உடைய பாதங்களும், போந்தன - நடந்து வந்தன; தா இல் எம்பி கை - குற்றம் இல்லாத எம் தம்பி இலக்குவனுடைய கைகள், சாலை சமைத்தன -(அரிய) குடிலை அமைத்தன; (ஆதலால்), யாதும் இலார்க்கு - ஏதும் அற்றவர்க்கு, இயையாத யாவை - எய்த இயலாதன யாவுள?—. ஏ: அசை.

இதுவும் அடுத்த இரண்டு செய்யுளும் ஒரு தொடர். இயையாத யாவை என்பது 'என்று சிந்தித்து' என மேல் வருவதனோடு தொடர்ந்து, சோர்கின்றான் (790), என்றான் (791) என முடியும். 'ஏதுமற்ற துறவிபோல நாம் வர நேர்ந்த காட்டுக்கு, நம்மை விடாது தொடர்ந்து இவ்விருவரும் வந்ததோடு, இலக்குவன் தன் நிலைக்கு மீறிய தொண்டுகளையும் செய்கின்றான்; இதனை என்னென்பது!' என வியக்கின்றான் இராமபிரான். வசதி உள்ளவர்கள் ஓர் உதவியும் பெறாத நிலையை அடைந்தால் வேண்டியவற்றைத் தம் முயற்சியாற் பெறுவார்கள் என்பது கருத்து.

கீழ்வரும் பாடல் ஒன்று சில சுவடிகளிலும், புறத் திரட்டிலும், காணப்படுகிறது. அது, இப்பாடலுட் கூறியதையே கூறுவதனாலும்,

முன்பின் தொடராத சந்த வேறுபாடு உடைமையாலும், இடைச் செருகலான 'மிகைப்பாடலென்று' கொள்ளப் பெற்றது.

எய்தவின்னல் வந்தபோழ்தி யாவையேனும் யாவரும்
செய்யவல்ல ரென்றுகொள்க கோணெறிக்க ணீங்கிட
மையகண்ணி செய்யபாதம் வல்லவாய வெம்பிதன்
கைகளின்று பன்னசாலை கட்டவல்ல வாயவே.

(பி - ம்.) 1. மேவுங்காதல்: மிதிலையர் கோமகள், கோமளம்.
4. இசையாதவே, இசையாததே.

(பி - ம்) 1. எய்ய : யாவரேனும் யாவையும்.
2. செய்யவல்லவல்லரென்று தீநெறிக்க ணெய்தலான், தீநெறிக் கணேகிட.
3. வல்லவாய மற்றவன்.
4. கட்டும் வண்ணமாயவே. (50)

### இராமபிரான் இலக்குவனை வியத்தல்

790. என்று சிந்தித் திளையவற் பார்த்திரு
குன்று போலக் குவவிய தோளினாய்
என்று கற்றனை நீயிது போலெனாத்
துன்று தாமரைக் கண்பனி சோர்கின்றான்.

என்று சிந்தித்து - என்று இவ்வாறு இராமன் நினைத்து, இளையவன் பார்த்து - இளையபெருமானை நோக்கி, இரு குன்றுபோல குவவிய தோளினாய் - இரண்டு மலைகள் போலத் திரண்ட தோள்களையுடையவனே, நீ—, இதுபோல் என்று கற்றனை - இது போன்ற தொழிலை எப்போது கற்றுக்கொண்டாய், எனா - என்று சொல்லி, தாமரை கண் - தாமரை மலர்போன்ற தன் கண்களில், துன்று பனி சோர்கின்றான் - நிறைந்த நீரை வடிக்கின்றவனாய்.

சோர்கின்றான், என்றான் என அடுத்த பாடலோடு இயைந்து முடியும். 'முன்பு செய்தறியாத ஒரு தொழிலை நீ ஒருவனாகவே நின்று திறம்படச் செய்திருக்கின்றாயே! இஃது உனக்கு எவ்வாறு இயைந்தது?' என்று கூறி வியக்கின்றான் இராமபிரான்.

(பி - ம்.) 1. என்றுபின்னுமிளையவற் சொல்லுவான்.
2. குன்றுபோலும; குன்றம்போலக்; குலவிய, குலாவிய, தோளினான், தோளிய.
3. நீயிதுபோலென்றான், நீயிதுபேசெனத், நீயிதுபோயெனாத், நீயிவை தானெனாத், நீயிதுபோலென்னத், நீயிதுபோயென்றான், கற்றனை போவிதுநீயென்றான், கற்றனை யோவிதுநீயென்றான், கற்றனை போலிவைதானெனாத். (51)

791. அடருஞ் செல்வ மளித்தவ னாணையிற்
படரு நல்லறம் பாலித் திரவியிற்
சுடரு மெய்ப்புகழ் சூடின னென்பதென்
இடரு னக்கிழைத் தேனிங்ங னென்றான்.

(இராமன்), அடரும் செல்வம் - (தன்னைச் சேர்தற்குரிய) பெருஞ் செல்வத்தை, அளித்தவன் - (பரதனுக்குக்) கொடுத்த தந்தையின், ஆணையின் படரும் - கட்டளையின் வழிச் செல்லுதலாகிய, நல் அறம் பாலித்து - நல்ல தருமத்தைக் காத்து, இரவியின் சுடரும் - சூரியனைப் போல விளங்குகிற, மெய் புகழ் சூடினன் - உண்மையான புகழைத் தரித்தான், என்பது - என்று (உலகோர்) என்னைப் புகழ்ந்து சொல்வது, என் - என்ன பொருளுடையது? இங்ஙன் - இவ்வகையால், நான் உனக்கு இடர் இழைத்தேன் - நான் உனக்கு (மிக்க) துன்பம் செய்தவனாகிறேன், என்றான் - என்று (இலக்குவனிடம்) கூறினான்.

'நான் தந்தை சொல் கடவாது காட்டுக்கு வந்ததனால் உலகம் என்னைப் புகழுமாயினும், அஃது உண்மையான புகழாகாது; தன்னால் பிறருக்குத் துன்பமின்றி ஒருவன் எய்தும் புகழே உண்மையான புகழாகும்; நானே உனக்குப் பெருந்துன்பம் தருபவனாக அமைகின்றேன்' என வருந்திக் கூறினானென்க.

(பி - ம்.) 1. செல்வத்தெந்தைதன், செல்வத்தனெந்தைதன், செல்வத்தெனை யனது, செல்வத்தடுத்தையன், செல்வத்தடுத்தவன், அடறருஞ் செல்வனெந்தைதன்; ஆணையால்.
2. பாவித்து, பாரித்து.
3. சுடருமெய்ப்பொருள்; சூடினென்.
4. இடருனக்கிழைத்தேனெடுநாள், இழைத்தேனிங்குநான். (52)

இலக்குவன் வருந்திக் கூறல்

792. அந்த வாய்மொழி யைய னியம்பலும்
நொந்த சிந்தை யிளையவ னோக்கினால்
எந்தை காண்டி யிடரினுக் கங்குரம்
முந்தி வந்து முளைத்ததன் றேவென்றான்.

ஐயன் - இராமபிரான், அந்த வாய்மொழி இயம்பலும் - அந்த வார்த்தையைச் சொன்னவளவில், இளையவன் - (அது கேட்ட) இலக்குவன், நொந்த சிந்தையன் - மனம் நொந்தவனாய், நோக்கினால்- (உண்மையாகப்) பார்த்தால், இடரினுக்கு அங்குரம் - (என்பால்) துன்பம் விளைதற்குரிய முளை, முந்தி வந்து முளைத்தது அன்றோ - முந்தியே வந்து தோன்றிய ஒரு நிகழ்ச்சியன்றோ? எந்தை - என் தந்தையே, காண்டி - (அதனை) நோக்குவாயாக, என்றான்—.

'உனக்குத் துன்பம் விளைக்கின்றேனே' என்று இராமபிரான் வருந்திக் கூறியது கேட்ட இலக்குவன், 'என் ஐயனே, இஃது எனக்குத் துன்பமன்று; தேவரீருக்குத் தொண்டு செய்தலே எனக்கு இன்ப

மாவது; என் மனத் துன்பத்துக்குக் காரணம், தேவரீர் பதவி துறந்து இங்கு வந்ததேயன்றிப் பிறிதன்று; இந்நிலையில் தேவரீரைப் பார்த்துக் கொண்டிருப்பதே என் துன்பத்தின் மேல் விளைவாகும்' என்றான். இதனை உட்கொண்டே, 'இடரினுக் கங்குரம் முந்தி வந்து முளைத்த தன்றே என்றது. இத்தொடருக்கு, 'தேவரீர் மூத்தமகனாகத் தோன்றிய தன்றே துன்பத்துக்குக் காரணம்?' எனப் பொருள் கூறுதலும் உண்டு.

(பி - ம்.) 2. நோக்கினான், நோக்கியான், இளவலு நோக்கினல்.
3. காண்டியிடருனக்கு, காட்டியிடரினுக்கு.
4. முந்தவந்து; முளைத்தனன்றே. (53)

இராமன் எண்ணுதல்

793. ஆக செய்தக்க தில்லை யறத்தினின்
றேக லென்ப தரிதென்று மெண்ணினான்
ஓகை கொண்டவ னுள்ளிடர் நோக்கினான்
சோக பந்தந் துடைப்பரி தாலெனா.

ஆக - (இலக்குவன் மேற்கண்டவாறு) கூறினானாக, ஓகை கொண்டவன் - (தனக்குப் பணிவிடை செய்தலில்) மகிழ்ச்சிகொண்ட இலக்குவனது, உள் இடர் நோக்கினான் - தனக்காகக் கொண்ட மனத் துன்பத்தை உணர்ந்த இராமபிரான், எண்ணினான் - (அது குறித்துச்) சிந்தித்து, சோகம் பந்தம் - (இவன் கொண்டுள்ள) சோகப் பிணிப்பு, துடைப்பு அரிது - போக்குதல் அரிதாகும்; அறத்தின் நின்று ஏகல் என்பது - (நாம் கொண்ட விரதமாகிய) தருமத்தினின்றும் (இவன் பொருட்டு) விலகுவதென்பதும், என்றும் அரிது - என்றும் இயலாதது; செய் தக்கது இல்லை - (இப்போது வேறு) செய்யத் தக்கதொன்றும் இல்லை; எனா - என்று கருதி. ஆல்—அசை.

இதுமுதல் மூன்று பாட்டுக்கள் குளகம். இதில் எனா என நின்றது; மேற்பாட்டோடும் மூன்றாவதனோடும் தொடர்ந்து, அதில் வரும், 'தம்பியைத் தேற்றி நோற்றிருந்தனன்' என்பதனோடு முடியும். நோக்கினான் : வினையாலணையும் பெயர். எண்ணினான்: முற்றெச்சம்.

(பி - ம்.) 1. ஆகச்செய்தக்க.
2. ஏகலென்றும்; எண்ணிப்பின்.
3. கொண்டவனுன்னிடர், கொண்டவனின்னிடர், கண்டிலனுன் னிடர்; நோக்கினன், நோக்கியென், நோக்கிப்பின், நோக்கியே.
4. சோகபங்கம், சோகபந்தி; துடைப்பரிதாலென்றான், தொடர்வரிதா லென்றான். (54)

இராமன் கூறுதல்

794. பின்னுந் தம்பியை நோக்கிப் பெரியவன்
மன்னுஞ் செல்வத்திற் குண்டு வரம்பிதற்
கென்ன கேடுண்டிவ் வெல்லையி லின்பத்தை
உன்னு மேல்வரு மூதியத் தோடெனா.

பெரியவன் - இராமபிரான், பின்னும் - மீண்டும், தம்பியை நோக்கி- இலக்குவனைப் பார்த்து, மன்னும் செல்வத்திற்கு - (ஒருவரிடம் வந்து) பொருந்தும் செல்வத்துக்கு, வரம்பு உண்டு- ஒரு வரையறை (முடிவு) உண்டு; இதற்கு - (இப்போது நாம் மேற்கொண்டுள்ள) இத்தவநெறி வாழ்க்கைக்கு, என்ன கேடு உண்டு? - (கேடில்லை); எல்லை இல் இவ் இன்பத்தை - முடிவில்லாத இந்த இன்பத்தை, மேல் வரும் ஊதியத் தோடு - மறுமையில் வரத்தக்க பெரும் பயனோடு, உன்னு - எண்ணிப் பார், என - என்று, தம்பியைத் தேற்றி என மேல் வருவதனோடு தொடரும்.

தம்பியை ஒருவாறு தேற்றக் கருதிய இராமபிரான், அவனை நோக்கி, 'நீ பெரிதாகக் கருதும் அரசச் செல்வத்துக்குப் பகைவராலும் வேறு பல வகையாலும் அழிவுண்டு; அது மறுமையில் பயன் தருவதும் அன்று. அதனால் அது துன்பத்திற்கு இடமானது: இத்தவச் செல்வமோ என்றும் (நாமாகக் கைவிட்டாலன்றி) அழியாதது; மறுமையிலும் வீட்டின்பமாகிய பேருதியத்தை அளிக்கவல்லது; இதனைச் சிந்தித்துப் பார்' என்று எடுத்துக்காட்டிக் கூறினன்.

பெரியவன் - மூத்தவன்; எவற்றிலும் பெரியவன். இன்பம் தரும் தவவாழ்க்கையை இன்பம் என்றான்; இதனால், துன்பந்தரும் அரச வாழ்க்கையின் நீங்கி, இருமையிலும் இன்பந் தரும் இத்தவ வாழ்க்கை யெய்தியதுபற்றி நீ மகிழ்தலின்றி வருந்துதல் தகாது என்றவாறும்.

இதன் பின் ஒரு பாட்டுச் சில சுவடிகளில் காணப்படுகிறது :

தினைத்துணை வயிறிலாச் சிற்றெ றும்புகள்
வனத்திடைக் கரிகளை வருத்தி வாழ்வன
அனைத்துள வுயிர்களும் யாவு மங்ஙனே
மனத்திடர் நீங்கின ரில்லை மன்னனே.

(பி - ம்.) 2. மன்னுசெல்வத்திற்கு, மன்னுஞ்செல்வத்துக்கு.
3. என்னை; இவ்வெல்லையின், இவ்வேலையின்.
4 உன்னின்மேல்வரும்.
(பி - ம்.) 1. தினைத்தின.
2. கரிகளும் வருந்த. (55)

795. தேற்றித் தம்பியைத் தேவருங் கைதொழ
நோற்றி ருந்தன னென்சிலை யோனப்பால்
ஆற்றன் மாதவ னணையிற் போனவர்
கூற்றி னுற்றது கூறலுற் றுமரோ.

தம்பியை தேற்றி - இலக்குவனைத் தெளிவுறுத்தி, நோன் சிலையோன் - வலிய வில்லையுடைய இராமபிரான், தேவரும் கைதொழ-

தேவர்களும் தன்னை அஞ்சலி செய்து வணங்கும்வண்ணம், நோற்று இருந்தனன் - விரதம் மேற்கொண்டு (சித்திரகூடத்தில்) இருந்தான்; அப்பால் - மேலே, ஆற்றல் - பெரு வலிமையையுடைய, மாதவன் ஆணையால் - பெருந்தவசியான வசிட்டனது கட்டளையால், போனவர் கூற்றின் - கேகய நாட்டுக்குப் போன தூதுவர் பக்கல், உற்றது - நிகழ்ந்ததை, கூறல் உற்றாம் - சொல்லலுற்றோம். அரோ : அசை.

முன்பாட்டில் 'என' என நின்றது, 'தம்பியைத் தேற்றி' என்பதனோடு தொடர்ந்து, நோன்சிலையோன் இருந்தான் என்பதனோடு முடியும். இஃது இவ்வாறாக, மேலே, முன்னர் அயோத்தியில் நிகழ்ந்தவற்றைக் கூறுவோம் என்று முன் கதையைத் தொடர்கின்றார். இதனோடு இப்படலம் முடிவுறுகின்றது.

(பி - ம்.) 2. இப்பால்.
3. ஆற்றமாதவன், ஆற்றிமாதவன், ஆற்றின்மாதவன், ஆற்றுமாதவன்.
4. கூற்றினுற்றவர், கூற்றிலுற்றது. (56)

சித்திரகூடப் படலம் முற்றும்.

# 10. பள்ளிபடைப் படலம்

**பள்ளி**யின்பாற் படுத்தலைக் கூறும் படலம் என இதன் பொருள் விரியும். தசரதன் உடலை ஈமப்பள்ளி (சிதை)யில் வைத்து எரியூட்டுதல் முதலிய ஈமக்கடன்கள் நிகழ்ந்தமை கூறுவது இப்படலம். பள்ளி - ஈமப்பள்ளி; படை - படுத்தல். 'பள்ளி படுத்தல்' என்ற வழக்குண்மை, "எந்தாய் வெறுநிலத்துச் சேர்தியோவென் றினைந்திரங்கிப் பள்ளி படுத்தார்களே" (சீவக. 292) என்பதனால் அறியலாம். இச்செய்தி 923-ஆம் கவியுட் கூறப்படும். பழைய அச்சுப் புத்தகங்களிலும் சில ஏட்டுப் பிரதிகளிலும் இப்படலப் பெயர் 'பள்ளியடைப்படலம்' என்றுள்ளது. 'பள்ளியிடைப் படலம்' எனவும் சில பிரதிகளில் காணப் படுகின்றது, ஒரு பிரதியில், முதலில் 106 பாடல்கள் 'பரதன் நகர்புகு படலம்' என்ற தலைப்பிலும், எஞ்சிய 26 பாடல்கள் 'தகனஞ்செய் படலம்' என்ற தலைப்பிலுமாக, இரண்டு பகுதிகளாய் உள்ளது. முதற்பகுதியின் இறுதியில் ஓர் அதிகப் பாடலும் இந்தப் பிரதியில் காணப்படுகின்றது.

**தூதுவர் பரதனுக்குத் தம் வரவு உணர்த்தல்**

(கலிவிருத்தம்)

**796.** பொருவி றூதுவர் போயினர் பொய்யிலார்
இரவு நன்பக லுங்கடி தேகினர்
பரதன் கோயிலுற் றுர்படி காரிரெம்
வரவு சொல்லுமின் மன்னவற் கேயென்றுர்.

**போயினர்** - (அயோத்தியினின்றும் வசிட்ட முனிவன் ஏவலால் கேகயநாடு குறித்துப்) போனவர்களான, **பொரு இல் தூதுவர்** - தமக்கு ஒப்பில்லாத (திறமைமிக்க) தூதர்கள், **பொய் இலார்** - (தம் பணியில்) பொய்ம்மை இல்லாதவராய், **இரவும் நன்பகலும்** - இரவும் பகலுமாக (விடாது), **கடிது ஏகினர்** - விரைவாகச் சென்று, **பரதன் கோயில் உற்றுர்** - பரதன் தங்கியிருந்த மாளிகையை அடைந்து, **படிகாரிர்** - வாயில் காவலர்களே, **மன்னவற்கு எம் வரவு சொல்லுமின்** -பரதனாகிய அரசகுமரனுக்கு (அயோத்தியினின்றும் வந்துள்ள) எமது வருகையைத் தெரிவியுங்கள், **என்றுர்**—.

தூதருக்குரிய உத்தம இலக்கணங்கள் அமையப் பெற்றவராகலின் 'பொருவில் தூதுவர்' என்றும், பரதனை விரைவில் அழைத்துவர

வேண்டியிருத்தலின், அப்பணியில் சிறிதும் தாழ்த்தலின்றி உண்மையோடு விரைந்து சென்றமை தோன்ற, 'பொய்யிலார், இரவும் நன்பகலும் கடிது ஏகினுர்' என்றும் அவர் தன்மை கூறினுர். "போனுரவருங் கேகயர்கோன் பொன்மா நகரம் புகவெய்த" (610) என முன்னே கூறியதன் அநுவாதம் இது. போயினர்: வினையாலணையும் பெயர்; எழுவாய். ஏகினுர், உற்ருர் என்பன முற்றெச்சம். படிகாரர் - வாயில்காவலர்; விளியேற்றது. மன்னவற்கே! ஏ, அசை.

(பி - ம்.) 1. புரியும் மாதவர்; போயினர், போனவர், போயபின்பொய்யிலார், போனவர்பொய்யிலார் ஏயினபோயினுர், ஏவினர் போயினுர்.
3. கோயில்புக்கார் படிகாரரெம், கோயிலுற்ருர் படிகாரெம, படர் தாரிரெம்.
4. வரவுசொல்லுதிர், வரவுஞ்சொல்லுமின்; மன்னவற்கென்கின்ருர், மன்னவற்கென்றனர், மன்னவர்க்கேயென்ருர், மன்னவர்க்கென் கின்ருர். (1)

### பரதன் தூதுவர்பால் தந்தையின் நலத்தைக் கேட்டல்

797. தூதர் வந்தன ருந்தைசொல் லோடெனக்
காதன் முந்திக் களிக்கின்ற சிந்தையான்
போது கென்னவுட் புக்கனர் கைதொழத்
தீதி லன்கொ றிருமுடி யானென்ருன்.

உந்தை சொல்லோடு - உங்கள் தந்தை அனுப்பிய செய்தியோடு, தூதர் வந்தனர் என - தூதுவர் வந்துள்ளனர் என்று (வாயில் காவலர்) அறிவிக்க, காதல் முந்தி - ஆசைமிக்கு, களிக்கின்ற சிந்தையான் - மகிழும் மனமுடையவனுன பரதன், போதுக என்ன - அவர்கள் வரட்டும் என்று கட்டளையிட, உள் புக்கனர் கைதொழ - (தூதர்) உள்ளே வந்து வணங்க, (அவர்களை நோக்கி), திருமுடியான் - சக்கரவர்த்தி, தீது இலன்கொல் என்ருன் - தீதின்றி (நலமாக) இருக்கின்ருனு என்று வினவினன்.

தந்தை முதலியோர் நலன் அறிதலில் பரதனுக்குள்ள ஆவலையும் விரைவையும் புலப்படுத்தச் சுருங்கக் கூறுகின்ருர். சொல் - செய்தி; செய்தி கொண்ட ஓலையுமாம். போதுகென்ன: தொகுத்தல். புக்கனர்: முற்றெச்சம். கொல்: வினுப்பொருளது. 'தந்தை வலியனே' எனற்பாலதைத் 'தீதிலன் கொல்' என்ருன் என்றது குறிப்பு மொழி.

(பி - ம்.) 1. தூதுவந்தனர், தூதுவந்தன; நுந்தைசொல்லோடெனக், உந்தை சொல்லோடெனுக்.
2. முந்தக்.
3. போதுகென்னெனப், போதுகென்கெனப், போதுகென்னவப், போதுகென்னவட், போதுகென்னவிற், போதுகேங்கெனப், போது கென்றனன்; புக்கவர் கைதொழாத்.
4. திருமுடியோன், (2)

### இராமலக்குவரின் நலத்தை வினுதல்

798. வலிய னென்றவர் கூற மகிழ்ந்தனன்
இலைகொள் வேலெம் பிரானிளங் கோவொடும்
உலைவில் செல்வத்த னேவென வுண்டெனத்
தலையி லேந்தினன் ருழ்தடக் கைகளே.

வலியன் என்று அவர் கூற - (தந்தை) வலிமையாக (திடமாக) இருக்கின்ருன் என்று அத்தூதுவர் கூற, மகிழ்ந்தனன் - மகிழ்ந்தவனுய், இலைகொள் வேல் எம்பிரான் - இலைபோலும் வேலினையுடைய எம் தலைவன் (இராமபிரான்), இளம் கோவொடும் - இளைய பெருமாளுடனே, உலைவு இல் செல்வத்தனே என - கெடுதலில்லாத நலமாகிய செல்வமுடையவனுயிருக்கின்ருனே என்று வினவ, உண்டு என - அவ்வாறே உள்ளது என்று (தூதுவர்) கூற, (பரதன்) தாழ் தட கைகள் - நீண்ட பெரிய தன் கைகளை, தலையில் ஏந்தினன் - தலை மேற் குவிந்து அஞ்சலி செய்தான். ஏ: ஈற்றசை.

இங்கும், நலம் வினுவுதலில் 'உலைவில் செல்வத்தனே' என்ற தொனி, தீங்கைக் குறிப்பாக உள்ளடக்கியது. தந்தையையும் தமையனையும் திசைநோக்கித் தொழுதான் பரதன். சுருங்கக் கூறல் இதிலும் அமைந்துள்ளது. வலியன் : 1124-பார்க்க, அயோத்தியில் நிகழ்ந்தவற்றை உள்ளவாறு இப்போது கூறுதல் உரியதன்ருகலின், தூதுவர் தாமாக ஏதும் கூருமல், பரதன் வினுவுக்கு, வலியன், உண்டு என்று மாத்திரம் விடை கூறியதாக அமைந்துள்ளதன் நயம் ஓர்க. "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்" என்பது மறைமொழியன்ருே?

(பி - ம்.) 1. வலியனென்றிவர், வலிய னெஞ்சினர்.
2. இலைகொள்பூணிளங்கோனெம்பிரானெடும்.
3. தலையினேந்தினன், தலையினேத்தினன், தலையினேந்திய; தாழ்தடக்கையனே, கையரோ, தாட்டடங்கையரோ, தாள்தடக்கைகளே, தாமரைக் கைகளே, தாமரைக் கையினன். (3)

### தூதுவர் திருமுகம் கொடுத்தல்

799. மற்றுஞ் சுற்றத்து ளார்க்கும் வரன்முறை
உற்ற தன்மை வினவி யுவந்தனன்
இற்ற தாகு மெழுதரு மேனியாய்
கொற்ற மன்னன் றிருமுகங் கொள்கென்ருர்.

மற்றும் - வேறும், சுற்றத்து உள்ளார்க்கும் - சுற்றத்தினரான அனைவர்க்கும், உற்ற தன்மை - பொருந்தியவற்றை, வரல் முறை வினவி - முறையாகக் கேட்டறிந்து, உவந்தனன் - மகிழ்ந்தான்; (அதன்பின் தூதுவர்) எழுத அரு மேனியாய் - ஓவியத்தும் எழுத அரிய திருமேனியையுடைய அண்ணலே, கொற்றம் மன்னன் திருமுகம் -

வெற்றியுடைய சக்கரவர்த்தியின் திருமுகம், இற்றது ஆகும் - இது வாகும், கொள்க என்றார்—இதனைப் பெற்றுக்கொள்க என்று நீட்டினர்.

பரதன், முதலில் தலைமையுடைய மூவர் நலனையும், பின்பு மற்றெல்லாருடைய நலனையும்பற்றி முறையே வினவ, தூதுவரும் ஏற்றவாறு விடையளித்தபின், திருமுகத்தை நீட்டினர்.

இற்றது - இது என்னும் பொருளுடையது; 'இறந்து பட்டது' என்ற குறிப்புப் பொருளும் தொனித்தல் காண்க. எழுதரு, கொள்கென்றார்: தொகுத்தல். பரதனும் இராமபிரானே போல்பவனாகலின், எழுதரு மேனியான் அவன்; "தீட்டருமேனி மைந்தன்" (1030) என்பர் பின்னும். ஓலையைத் திருமுகமென்றல் மங்கல மரபு.

(பி - ம்.) 1. சுற்றத்துள்ளார்க்கும், சுற்றத்துளார்க்கு,
2. வினவியுவந்தபின், வினவியுவந்தனன், யுகந்தனன், உவந்தவற்கு, உவந்துபின், வினவியுகந்தவற்கு, உகந்தனன், உவர்ந்தவர்க்கு, விராவியுவந்தபின், விராவி யுவந்தனன்,
3. எழிலுறுமேனியாய், எழிறருமேனியாய், எழுதிருமேனியாய்; என்றேயினியாரவர், என்றெண்ணியராயவர்.
4. கொற்றவன்றன்; கொள்ளென்றார், கொள்கென்றான். (4)

### பரதன் திருமுகம் வாங்கித் தலையிற் சூடுதல்

800. என்று கூறலு மேத்தி யிறைஞ்சினான்
பொன்றி ணிந்த பொருவி றடக்கையான்
நின்று வாங்கி யுருகிய நெஞ்சினான்
துன்று நாண்மலர்ச் சென்னியிற் சூடினான்.

என்று கூறலும் - (கொள்க) என்று (தூதுவர்) கூறிய அளவில், பொன் திணிந்த - பொன்னாலியன்ற அணிகலன்கள் செறிந்த, பொரு இல் - ஒப்பில்லாத, தட கையான் - பெரிய கைகளையுடைய பரதன், ஏத்தி இறைஞ்சினான் - (அத்திருமுகத்தைத்) துதித்து வணங்கி, நின்று வாங்கி - எழுந்து நின்று வாங்கி, உருகிய நெஞ்சினான் - (அன்பால்) நெகிழ்ந்த மனத்தோடு, நாள் மலர் துன்று சென்னியில் சூடினான் - அன்றலர்ந்த பூக்கள் நிறைந்த தலைமேற்கொண்டான்.

தந்தையின் திருமுகமாதலின், மரியாதையோடு எழுந்து நின்று அதனை வாங்கித் தலைமேற்கொண்டான். பொன்: ஆகுபெயர். சூடுதல்- தலைமேற் கொள்ளுதல்.

(பி - ம்.) 1. ஏத்தியிறைஞ்சினன், இறைஞ்சியே, ஏந்தியிறைஞ்சினான். இறைஞ்சினன்.
2. பொன்றிகழ்ந்த, பொன்றணிந்த; பொருவிறடக்கையால், பொருவிற்றடக்கையால், பொருவிற்றடக்கையான்.
3. உருகியநெஞ்சினால், நெஞ்சினன், உருகினநெஞ்சினான்.
4. துன்றுதார்மலர்ச், துன்னுநாண்மலர்ச், கன்றுநாண்மலர்ச், துன்று தார்மலர். (5)

**திருமுகத்தைப் படித்தறிந்து தூதுவர்க்குப் பரிசு வழங்குதல்**

801. சூடிச் சாதனந் தோற்றுடைச் சுற்றுமண்
மூடுந் தோட்டின் முடங்க னிமிர்த்தனன்
ஈடு நோக்கிவந் தெய்திய தூதர்க்குக்
கோடி மேலு நிதியங் கொடுத்தனன்.

சூடி - தலைமேல் கொண்டபின், சுற்றும் - (வாய்ப்புறத்தைச்) சுற்றிலும், சாதனம் தோற்று உடை(ய) - இலச்சினை (முத்திரை) தோற்றுதலுடைய, மண்மூடும் - மண்ணால் மூடப் பெற்ற, தோட்டின்- ஓலையின், முடங்கல் நிமிர்த்தனன் - சுருளைப் பிரித்து, ஈடு நோக்கி - (அதன்) உள்ளீடாகிய செய்தியை உணர்ந்து, வந்து எய்திய தூதர்க்கு - (அவ்வோலையுடன்) வந்தடைந்த தூதுவர்க்கு, நிதியம் - பொற்குவையை, கோடி மேலும் கொடுத்தனன் - ஒரு கோடிக்கு மேலும் (பரிசாகக்) கொடுத்தான்.

ஓலை எழுதி அனுப்பும்போது, எழுதின ஓலையைச் சுருளாக இறுகச் சுற்றி, வாய்ப்புறத்தில் மண் அப்பி, அதன்மேல் முத்திரையைப் பதித்து (இந்நாளில் அரக்கு முத்திரையிடல் போல) அனுப்புவது வழக்கம். முடங்கல் என்பது, சுற்றுதலுடைமையால் வந்த காரணக்குறி. அவ்வாறு வந்த முடங்கலைப் பிரித்துப் படித்து நோக்கினன் என்க. ஈடு- உள்ளீடு; உள்ளே அடங்கிய செய்தி; அஃது, 'உன்னால் நிறைவேற வேண்டிய அவசர காரியம் இருப்பதனால் உடனே புறப்பட்டு வருக' என்பது. காரியம் எதுவாயினும், இராமபிரானையும் தந்தையையும் காணும் வாய்ப்பு நேர்ந்தமைபற்றிப் பரதன் மகிழ்வெய்தித் தூதுவர்க்கு மிக்க பொன்னைப் பரிசாக வழங்கினான். கோடி என்றது, மிகுதி குறித்தது; புத்தாடை எனலுமாம். உவகைச் செய்தி கொணர்ந் தோர்க்குப் பரிசு வழங்குதல் மரபு. இராமபிரான் திருமணச் செய்தி கொணர்ந்த மிதிலைத் தூதுவர்க்குத் தயரதன் வழங்கினமையும், முடிசூட்டுச் செய்தி சொன்ன மந்தரைக்குக் கைகேயி வழங்கினமை யும் காண்க. முத்திரையிடப்பட்ட ஓலையை, "மண்ணுடை. முடங்கல்" என்பர் (சிலப்: 13 : 76). சாதனம் - முத்திரை. தோடு - ஏடு.

(பி - ம்.) 1. *சந்தன தோய்த்துடைச், தோய்த்துடை. தொற்றுடைச், சாதனச் சாற்றெடைச், சொற்றுடைச், சுற்றுடைச், சொற்றெடைச், சாதனஞ் சொற்றுடைச், தொற்றுடைச், தோலுடைச், சாதனத்தொற்றுடை, தோட்டுடைச்; மு. சூடிச் சாதனந்தோட்டுடைத்துச் சுருள்.*

2. *மூடுதோட்டின், தோட்டு, முடல்தோட்டின், முடித்தோட்டின்; நிமிர்த்ததன்.*

3. *நீடுநோக்க, நீடிநோக்கி.*

4. *மேலுநிதியங்கொடுத்தரோ, மேல்நிதியங் கொடுத்தானரோ.* (6)

### தமையனைக் காணலாம் என்று பரதன் மகிழ்தல்

802. வாணி லாநகை தோன்ற மயிர்புறம்
பூண மீதுயர் காதலிற் பொங்கினன்
தாணி லாமலர் தூவினன் றம்முனைக்
காண லாமெனு மாசை கடாவவே.

தம்முனை - தமையனான இராமபிரானை, தாள் - (அவன்) திருவடிகளில், நிலா(வு)ம் மலர் தூவினன் காணலாம் எனும் - விளங்கும் மலர்களைத் தூவி (அருச்சித்து)க் காணலாம் என்ற, ஆசை கடாவ - ஆசை உந்துதலால், வாள் நிலா நகை தோன்ற - மிக்க ஒளி பொருந்திய பற்கள் (சிரிப்பினால்) வெளித்தோன்றவும், மயிர் புறம் பூண - மயிர் சிலிர்க்கவும், மீது உயர் காதலின் - மிக உயர்ந்த உள்ளன்பினால், பொங்கினன் - மகிழ்ச்சி மேலிட்டான்.

பரதன் என்ற எழுவாய் வருவிக்க.

பரதனுக்குத் தந்தையினும் பார்க்க இராமபிரான்பால் உள்ள ஈடுபாடு இதனால்புலனாகும். மகிழ்ச்சி மேலீட்டால் மயிர்க்கூச்செறிதல் இயல்பு. பெரியோரையும் கடவுளரையும் காணுங்கால் அவர்களை அருச்சித்தல் முறையாகும். மகிழ்ச்சி மிகுதியால் பற்கள் வெளித்தான்றச் சிரித்தான். தூவினன் : முற்றெச்சம்.

(பி - ம்.) 1. வானிலா; மயிர்ப்புறம்.
2. பூணவானுயர், பூணவந்துளம், பூனும் வானுயர், பூனுமீதுயர்; பொங்கினன்.
3. தூவினன்றன்முனைக், சிந்தினன்றம்முனைக்.
4. காணலாவதொர்; கடாயவே. (7)

### பரதன் அயோத்திக்குப் புறப்படுதல்

803. எழுக சேனையென் றேவின னெய்தினன்
தொழுது கேகயர் கோமகன் சொல்லொடும்
தழுவு தேரிடைத் தம்பியொ டேறினன்
பொழுது நாளுங் குறித்திலன் போயினன்.

(பரதன்) நாளும் பொழுதும் குறித்திலன் - (அயோத்திக்குப் புறப்பட) நல்ல நாளும் முகூர்த்தமும் பாராமல், சேனை எழுக என்று ஏவினன் - சேனைகள் புறப்படுக என்று கட்டளையிட்டு, கேகயர் கோமகன் எய்தினன் - கேகயராசனை அணுகி, தொழுது - வணங்கி, சொல்லொடும் - அவன் ஆசியும் அநுமதியுங்கொண்ட வார்த்தையோடு, தழுவு தம்பியொடு - (தன்னை எப்போதும்) பின்பற்றும் தம்பியாகிய சத்துருக்கனுடன், தேர் இடை ஏறினன் - (தனக்கென்று சித்தமாகி வந்த) தேரில் ஏறி, போயினன் - அயோத்தியை நோக்கிச் செல்லலானான்.

ஆசை கடாவுதலாலும், திருமுகத்தில் கண்ட கட்டளையாலும் மிக விரைந்து பரதன் புறப்பட்டமையை அவ்விரைவு தோன்றக் கூறுகின்றார். 'எழுக சேனை' என்றது அதனை நன்கு காட்டும். போயினான் என்பது ஒழிந்த முற்றுக்கள் எச்சப் பொருளன.

(பி - ம்.) 1. ஏவினனெய்தினன், எய்தினர், ஏயினனெய்தினன்.
2. தொழுத; கைகயர்கோன்மகன்.
3. தழுவித்; தழுவும், தம்பியோடு.
4. குறிக்கலன்; போகின்றான். (8)

சேனையும் பரிவாரங்களும்

804. யானை சுற்றின தேரிரைத் தீண்டின
மான வேந்தர் குழுமினர் வாளுடைத்
தானை சூழ்ந்தன சங்க முரன்றன
மீன வேலையின் விம்மின பேரியே.

(பரதன் புறப்பட்ட அளவில்) யானை சுற்றின - பல யானைகள் வந்து சூழ்ந்தன; தேர் இரைத்து ஈண்டின - தேர்கள் ஒலி செய்து கொண்டு (வந்து) நெருங்கின; மானம் வேந்தர் குழுமினர் - பெருமையையுடைய பல அரசர் (வந்து) கூடினர்; வாள் உடை தானை சூழ்ந்தன - வாட்படையை ஏந்திய காலாட் படைகள் சூழ்ந்தன; சங்கம் முரன்றன - சங்குகள் முழங்கின; பேரி - முரசங்கள், மீனம் வேலையின் விம்மின - மீன்களையுடைய கடலொலிபோல மிக்கு முழங்கின. ஏ: ஈற்றசை.

நால்வகைப் படைகளுள், யானை, தேர் காலாள் ஆகிய மூன்றைக் கூறினார். குதிரைகள் மிகுதியாக வந்தமை மேலே கூறுவார். சங்கும் பேரிகையும் முழங்குதல் எங்கும் கூறப்படும்; பால. 835 - குறிப்புப் பார்க்க. யானை, தேர், சங்கம், பேரி என்ற பால்பகா அஃறிணைப் பெயர்கள் பன்மை கொண்டன. மேல் வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும்.

(பி - ம்.) 1. ஆனை, சேனை; தேரினைத்திண்டின.
2. வானவேந்தர்; குழுவினர், தழுவினர்.
3. சூழ்ந்தது, சூழ்வந்து; சங்குமுரன்றன. (9)

805. கொடிநெருங்கின தொங்கல் குழீஇயின
வடிநெடுங்கண் மடந்தைய ரூர்மடப்
பிடிதுவன்றின பூணொளி பேர்ந்தன
இடிமுகிற்படு மின்னென வெங்குமே.

கொடி நெருங்கின - (அடையாளமான) கொடிகள் மிகுந்தன; தொங்கல் குழீஇயின - (விருதுகளாகிற) மயிற்பீலிக் குஞ்சங்கள் மிக்கன; வடி நெடுகண் மடந்தையர் ஊர் மட பிடி துவன்றின - கூரிய

நீண்ட கண்களையுடைய பெண்கள் ஏறிச் செல்லும் இளம் பெண்யானைகள் நெருங்கின; இடி முகில் படும் மின் என - இடியோடு கூடிய மேகத்தில் தோன்றும் மின்னல்போல், பூண் ஒளி எங்கும் பேர்ந்தன - (பெண்கள் அணிந்த) அணிகலன்களின் ஒளிகள் எங்கும் விட்டு விட்டு வீசின. ஏ: ஈற்றசை.

தொங்கல் : பால : 863 - விசேடக் குறிப்புப் பார்க்க. வடி-கூர்மை; மாவடுவின் பிளப்புமாம். ஆண்கள் களிற்றின்மீதும் பெண்கள் பிடியின்மீதும் செல்லுதல் மரபு; பால. 822, 846; "பிடியின் மேல்வரு பிடிக்குல மனேகமெனவே, பெய்வளைக் கைமட மாதர்பிடி மீதுவரவே" (கலிங்கத்துப். 287). பிளிற்றொலியுடைய பிடிகள் இடிக்கும் மேகங்கள் எனவும், அவற்றின்மீது ஊர்ந்து செல்லும் மகளிரின் அணிகலவொளி மேகத்தில் தோன்றும் மின்னொலி எனவும் கொள்க.

(பி - ம்.) 1. தொடி மிரைத்தன, நிரைந்தன, மிரந்தன, குழுமின, குழுவின, குமீயன, குமீஇயின; மிடைந்தன.
3. பூணொளிபேர்த்தன, பூணெரிபேர்ந்தன, பூணொடுபேர்ந்தென.
4. இடிதுவன்றின, துவன்றிய, துடங்கின, துடங்கிய, நுடங்கின, மின்னினவெங்குமே, மின்னெனவெங்கணும். (10)

806. பண்டி யெங்கும் பரந்தன பல்லியம்
கொண்டி யம்பின கொண்டலிற் கோதையில்
வண்டி யம்பின வாளியின் வாவுறும்
செண்டி யங்கும் பரியுஞ் செறிந்தவே.

பண்டி எங்கும் பரந்தன - (பல பண்டங்களை ஏற்றிய) வண்டிகள் எங்கும் பரவின; பல் இயம் - பலவகை வாத்தியங்கள், கொண்டலின் கொண்டு இயம்பின - மேகங்களைப்போல முழக்கங்கொண்டு பேரொலி செய்தன; கோதையில் - (ஆடவரும் மகளிரும் அணிந்த) மாலைகளில், வண்டு இயம்பின - வண்டுகள் இனிய ஒலி எழுப்பின; வாளியின் வாஉறும் - அம்புபோலப் பாய்ந்து செல்வனவும், செண்டு இயங்கும் - வையாளிவீதியில் வருவனவுமான, பரியும் - குதிரைகளும், செறிந்தன - மிக நெருங்கின. ஏ : ஈற்றசை.

பண்டி, பல்லியங்கொண்டு எங்கும் பரந்தனஎன மாறிக் கூட்டிப் பொருள் கொள்ளலுமாம். செண்டு - செண்டுவெளி; வையாளி வீதி. குதிரைகள் இவ்வெளியில் வட்டமாகச் சுற்றிவருதலை வையாளி வருதல் என்பர்; "வெம்பரியூர் செண்டுவெளி பார்த்து" (ஆதிஉலா, 23); இனி, செண்டு - செண்டாடல் எனக்கொண்டு, செண்டாடலில் இயங்கும் பரி என்றுரைப்பினும் ஆம். "புரவியிற் பொருவில் செண்டாடி" (பால. 161); "நிலைச்செண்டும் பரிச்செண்டும் வீசி" (பெரிய. கழறிற். 125). குதிரையின் செலவுக்கு அம்பின் செலவு உவமை,

"பாய்மா வாளியின் வருவ" (பால. 566); "கணைவிடு விசைய...புரவி" (பெருங். 1.48 : 8 - 14).

(பி - ம்.) 1. பண்டியங்கள், பரந்தனபண்டியம், மண்டியம்.
2. கொண்டியம்பிய; கோடையிற்கோதையில், கோதையர் கோதையில்.
3. வண்டியம்பிய, வண்டலம்பின; வாளியில், வாவியில், வாளிபின்.
4. செண்டியங்கு, செண்டியம்பும், செண்டலங்கு; பரியுஞ் சிறந்தவே, பரிகள் சிறந்தவே. (11)

807. தொளைமு கத்திற் சுருதி விளம்பின
உளைமு கத்தின வும்பரி னேவிடின்
விளைமு கத்தனல் வேலையின் மீதுசெல்
வளைமு கத்தன வாசியும் வந்தவே.

தொளைமுகத்தின் - மூக்குத் தொளைகள் அமைந்த முகத்தால், சுருதி விளம்பின - வேதவொலி எழுப்புவனவும், உளைமுகத்தின - தலையாட்டம் அணிந்த முகத்தையுடையனவும், ஏவிடின் - செலுத்தினல், உம்பரின் - ஆகாயத்திலும், முகத்து அனல் விளை வேலையின் மீது - (குதிரை) முகத்தால் தீயைத் தோற்றுவிக்கும் கடலின் மேலும், செல் - செல்லத்தக்கனவும், வளை முகத்தன - வளைந்த முகத்தை உடையனவுமான, வாசியும் - (சிவந்த பல) குதிரைகளும், வந்த - வந்தன. ஏ : ஈற்றசை.

உயர்ந்த சாதிக் குதிரைகள் பல வந்தன என்கின்றது இது. அவற்றின் கனைப்பொலி, வேதகீதம்போல் இனிதாயிருந்தது. திருமால் குதிரை முகத்தோடிருந்து வேதகோஷம் செய்தமையை நினைந்து இங்ஙனம் கூறினர் போலும். உளை - தலையாட்டம்; குதிரையின் முகத்தை அழகு செய்யும்வண்ணம் தலையில் அணியப்படும் வெண்கவரி; பிடரி மயிருமாம். "பரியுடை நன்மான் பொங்குளை யன்ன, அடைகரை வேழம் வெண்பூப் பகரும்" (ஐங்குறு : 13); "பல்லுளைப் புரவி" (நெடுநல் : 93). ஆகாயத்திலோ, கடலிலோ எங்கே செலுத்தினும் செல்ல வல்லன என அவற்றின் ஆற்றலைச் சிறப்பிக்கிருர். கடல் விளைவிக்கும் அனல் - வடவைத் தீ; இது பெண் குதிரை முகத்தின் வடிவமுடையதாகலின், 'முகத்தனல் விளை வேலை' என்ருர். 'முகத்தனல் விளை' என மாறிக் கூட்டப்பெற்றது.

(பி - ம்.) 1. முகத்ததுரிதம், நுகத்திற்றுருதம்; விளம்புவ, விளக்கின, விளம்பனத்து, மு. கிளைமுகத்திற்கிளரிசை விம்மின, கிளைநுகத்திற்கிளரிசை விம்மின, கிளைமுகத்திற்றுருதம் விளக்கின.
2. இளைமுகத்தினன், முகத்தினிது, முகத்தினில், முகத்தினின்று, இளமுகத்தின, உளைமுகத்தினும், உளைமுகந்தன; உம்பரின் ஏகிட, ஏகிடில், ஏகிடன், ஏவிட, ஏவிடல், ஏவிடின்.
3. விளைமுகத்தன, விளைமுகத்தினில், விளைமுகத்திதன்.
4. வளைமுகத்தநல், முகத்தனல், முகத்தின, இளைய முகத்தினின்; வாசியுவந்தவே, வாசியும்வந்ததே. (12)

808. வில்லின் வேதியர் வாள்செறி வித்தகர்
மல்லின் மல்லர் சுரிகையின் வல்லவர்
கொல்லும் வேல்குந்தங் கற்றுயர் கொற்றவர்
தொல்லை வாரணப் பாகருந் துன்னினர்.

வில்லின் வேதியர் - தநுர்வேதம் வல்ல வீரர்களும், வாள் செறி வித்தகர்-வாட்போரில் தேர்ச்சி மிக்கவரும், மல்லின் மல்லர் - மற்போரில் வல்ல மல்லர்களும், சுரிகையின் வல்லவர் - உடைவாட் போரில் வல்ல வீரரும், கொல்லும் வேல் - (பகைவரைக்) கொல்லுதலுடைய வேல் தாக்குதலையும், குந்தம் - ஈட்டி எறிதலையும், கற்று உயர் - கற்று மேம் பட்ட, கொற்றவர் - வெற்றி வீரரும், தொல்லை - பழமையான (அநுபவம் மிக்க), வாரணம் பாகரும் - யானைப்பாகரும், துன்னினர் - வந்து நெருங் கினர்கள்.

வேதியர் - வேதத்தில் வல்லவர்; விற்பயிற்சியானது, வேதங்களுள் ஒன்றாய், 'தநுர்வேதம்' எனப்படுதலின், 'வில்லின் வேதியர்' என்றார். வாள், சுரிகை ; ஆகுபெயர்; அவற்றால் போர் செய்தலைக் குறித்தது; மல்லில் வல்லர் எனவும் பாடம் உளது. கொற்றம் - வெற்றி.

(பி - ம்.) 1. வாள்நிறை வித்தகர்.
2. மல்லின் வல்லர்; சுரிகையும்; வித்தகர்.
3. வல்குந்தம், கல்லின்வேல் குந்தம், கல்லும்வேல்குந்தம்.
4. வாரணப்பாகர்கள், வாரணம்பாகரும்; சுற்றினர், தோன்றினர். (13)

809. எறிப கட்டின மாடுக ளேற்றைமா
குறிகொள் கோழி சிவல்குறும் பூழ்நெடும்
பொறிம யிர்க்கவு தாரிகள் போற்றுறு
நெறியின் மாக்களு முந்தி நெருங்கினர்.

எறி - ஒன்றையொன்று மோதுகிற, பகடு இனம் - எருமைக்கடாக் களையும், ஆடுகள் - ஆட்டுக் கடாக்களையும், ஏற்றை மா - காளை களையும், குறிகொள் கோழி - வெல்லுதலையே குறியாகக் கொள்ளும் கோழிச் சேவல்களையும், சிவல் - (காடை வகையைச் சேர்ந்த) சிவல் என்னும் பறவைகளையும், குறும்பூழ் - காடைகளையும், நெடும் பொறி மயிர் கவுதாரிகள் - நீண்ட புள்ளிகளையும் மயிரையுமுடைய கவுதாரி களையும், போற்று உறும் - (சண்டைக்கென) நன்கு வளர்க்கின்ற, நெறியின் மாக்களும் - வாழ்க்கை நெறியையுடைய மக்களும், முந்தி நெருங்கினர்.

சில விலங்குகளும் சில பறவைகளும் பழக்கப்பட்டுச் செய்யும் சண்டையை அரசரும் செல்வரும் பிறரும் பொழுது போக்காகக் கண்டு மகிழ்வதுண்டு. இதற்கெனவே அவற்றை நன்கு போற்றி வளர்த்துப் பழகும் தொழிலுடையார் சிலர். வழியிடையே தங்குங்கால் விநோதமாகப் பொழுது போதற்குப் பயன்படுமாறு இவர்களும்

அவ்விலங்கு முதலியவற்றுடன் வந்தனரென்க. பகட்டினம் - யானை எனவும், ஏற்றை - காளை, மா - பிற விலங்குகள் எனவும் பொருள் கொள்வாரும் உளர். மா குறிகொள் கோழி என இயைத்துப் பொருள் கோடலும் உண்டு. குறி - இரத்தக்குறி எனவும், குறிகொள் - ஏவுவோர் குறிப்பைக் கொள்கின்ற என உரைப்பாரும் உண்டு. குறிகொள் என்பதனைப் பிற பறவைகளோடும் ஒட்டுக. கோழியின் கால்களில் கத்தியைக் கட்டியும் சண்டைக்கு விடுவர். கோழிப் போர்: பால. 48. எருமைக் கடாப் போர் : பால : 49. ஆட்டுக்கிடாய்ச் சண்டை: பால : 62. யானைப் போர்: பால . 161.

(பி - ம்.) 1. ஏற்றினம், ஏற்றைமாக், ஏற்றமா, ஏற்றின்மாக், ஏற்றினர், ஏறுமா, ஏனமாக்.
2. சிவல்குறும்புள்ளொடும், சிவல்குறும்பூணொடும், குறும்பூணொடும், சிவற்குறும்பூழ்நெடும்.
3. பொறிமயில் கவுதாரிகள், பொறிமயிற்கவுதாரிகள்; போற்றிடு, போற்றுவ.
4. நெறியும்; மாக்களுமெங்கும், மாக்களுமேவி; நிரம்பினர். (14)

810. நிறைந்த மாந்தர் நெருங்கினர் நெஞ்சினில்
பறந்து போதுங்கொ லென்று பதைக்கின்றார்
பிறந்த தேவ ருணர்ந்து பெயர்ந்துபோய்
உறைந்த வானுறு வார்களை யொக்கின்றார்.

நெருங்கினர் - (பரதனை) அணுகிச் சென்றவர்களான, நிறைந்த மாந்தர் - (கல்வி கேள்விகள்) நிரம்பிய பலர், நெஞ்சினில் - தம் மனத்தில், பறந்து போதும் கொல் என்று - (அயோத்திக்குப்) பறந்து போய்விடுவோமா என்று நினைந்து, பதைக்கின்றார் - துடிதுடிக்கின்றவர்கள், பிறந்த தேவர் - (சாப வசத்தால்) பூமியில் வந்து பிறந்த தேவர்கள், உணர்ந்து - (தம் நிலையை) உணர்ந்து, பெயர்ந்து போய் - (பூமியினின்றும்) நீங்கிப் போய், உறைந்த - (தாம் முன்பு) வாழ்ந்த, வான் உறுவார்களை ஒக்கின்றார் - விண்ணுலகை அடையத் துடிக்கின்றவர்களை ஒத்தவராயினர்.

நிறைந்த மாந்தர் - அயோத்தியையும் இராமபிரானையும் காணும் ஆசையால் பரதனைத் தொடர்ந்து நிறைந்த பலர் என்றலும் பொருந்தும். அயோத்தி, இராமபிரான் இருத்தற்கிடமாய், விண்ணுலகினும் மேம்பட்டதாகலின், அதனையும் இராமபிரானையும் காணும் ஆசையால் துடிப்பவர் நிறைந்த மாந்தர். அவர்கள் வாழும் கேகய நாட்டை மண்ணுலகெனவும், அயோத்தியை விண்ணுலகெனவும் கொள்க.

(பி - ம்.) 1. மாதர்நெருங்கினர், நெருக்கினர்; நெஞ்சிறை.
2. போகுங்கொல்.
3. பிறந்து; பெயர்ந்துமுன், பெயர்த்தும் போய்.
4. உறைந்து; வானுறைவார்களை. (15)

811. ஊன ளைந்த வுடற்குயி ராமெனத்
தான ளைந்து தழுவின தண்ணுமை
தேன ளைந்து செவியுற வார்த்தென
வான ளைந்தது மாகதர் பாடலே.

மாகதர் பாடல் - மாகதரின் துதிப்பாடல், தேன் அளைந்து - (அவ்விசையோடு) தேனைக் கலந்து, செவி உற வார்த்து என - காதிலே பொருந்த ஊற்றியது போல, வான் அளைந்தது - விண்ணுலகத்தவர் செவிகளிலும் போய் நிறைந்தது; தண்ணுமை - மத்தளவோசைகள், ஊன் அளைந்த உடற்கு உயிர் என - (பிற தாதுக்களோடு) தசை கலந்தியன்ற உடம்பில் (அமைந்த) உயிர்போல, அளைந்து தழுவின - (மாகதர் பாடலோடும் பிற இசைகளோடும்) கலந்து இயங்கின. ஏ: ஈற்றசை.

இசைக்கு உயிர் போன்றது தாளம் (லயம்) ஆகலின், தாள வாத்தியமாகிய தண்ணுமையின் ஓசை, இசையாகிய உடம்பில் உயிர் போலச் சிறந்து கலந்தியங்கியது என்கின்றார். உயிர், தான் இயங்கி, உடலையும் இயக்குவது; அது போன்றது தண்ணுமை. 'தண்ணுமை தழுவின' எனப் பன்மையாற் கூறினமையின், மாகதர் பாடலோடு, குழல், யாழ் முதலிய கருவிகளின் இசையும் பிறவும் அங்கே பல்வேறு இடங்களில் இயங்கினவாக, அவற்றில் எல்லாம் தண்ணுமை கலந்து தான் சிறந்து அவற்றையும் சிறப்பித்தமை பெறப்படும்.

உடற்கு - உடலில்; உருபு மயக்கம். ஆம், தான்: அசை. வார்த்தென : தொகுத்தல் விகாரம். மாகதர் - இருந்தேத்துவார். செவி உற ஆர்த்தென எனப் பிரித்துக் காதுகளில் நிறைந்தாற்போல என உரைத்தலுமாம்.

(பி - ம்.) 1. ஊனளந்த, ஊனடைந்த; உயிர்க்குயிர்.
2. தானளந்து, தான்விரித்து; தழுவினன்; தண்ணுமைத்.
3. தேனளந்து, தேனளந்தன; செவியுறவார்த்தன, செவியுற வாரித்தேன்.
4. வானளந்தது, வானளைந்தன. (16)

812. ஊறு கொண்ட முரசிமி ழோதையை
வீறு கொண்டன வேதியர் வாழ்த்தொலி
ஏறு கொண்டெழு மல்ல ரிடிப்பொடு
மாறு கொண்டன வந்திய ரேத்தரோ.

ஊறு கொண்ட - (குறுந்தடியால்) அடித்தலைக் கொண்ட, முரசு - முரசங்களின், இமிழ் ஓசையை - பேரோசையை, வேதியர் - வேதம் வல்ல அந்தணர், வாழ்த்து ஒலி - (பரதனை) வாழ்த்தும் ஒலிகள், வீறு கொண்டன - விஞ்சின; வந்தியர் ஏத்து - வந்தியர் பாடும் துதிப்பாடல் ஒலிகள், ஏறு கொண்டு எழும் - பெருமிதங்கொண்டு எழுகிற, மல்லர்

இடிப்பொடு - மல்லர்களின் வீர முழக்கத்தோடு, மாறுகொண்டன - மாறுபட்டு (மிக்கு) ஒலித்தன. அரோ : அசை.

வேதியர் வாழ்த்தொலி முரசொலியையும் விஞ்சியது என்பதனால், வேதியர் தொகைமிகுதியும் அவரன்பு மிகுதியும் புலப்படும். வந்தியர் - அரசன் புகழை நின்று பாடுவோர்; சூதர் எனவும் வழங்கப்பெறுவர். சூதரும் மாகதரும் இணைத்துக் கூறப்பெறுவர். இமிழோதை: ஒரு பொருட் பன்மொழி. வீறு கொள்ளுதல் - வெற்றிகொள்ளுதல்; விஞ்சுதல்.

(பி - ம்.) 1. முரசுமிழோதையை, ஓதையான், ஓதையும், முரசிமிழோதையின், முரசம்விம்மோதையும், சகடுமிழோதையின்; ஊற்றுகொண்டகடுர் சிமிழோதையின்.
2. வீறுகொண்டென, மாறுகொண்டன, வேறுகொண்டன; வேதியரேத் தொலி, ஒத்தொலி.
3. ஏறுகொண்டன, மாறுகொண்டெழு, ஆறுகொண்டெழு; மல்ல ரிடிப்பினை, அடிப்பினை, இடப்பினை.
4. மாறுகொண்டது; வந்திகரொத்தரோ, வந்திகளேத்தரோ, வந்திகர் வாக்கொலி, வாழ்த்தரோ, வந்திகள் வாழ்த்தரோ, வந்திவழுத் தரோ, வந்திகரேத்தரோ. (17)

பரதன் கோசல நாட்டை அடைதல்

813. ஆறுங் கானு மகன்மலை யுங்கடந்
தேறி யேழ்பக னீந்திப்பி னெந்திரத்
தூறு பாகு மடையுடைத் தொண்முளை
நாறு பாய்வயற் கோசல நண்ணினன்.

(பரதன் சேனையுடன்), ஆறும் - பல ஆறுகளையும், கானும் - காட்டையும், அகன் மலை - பெரிய மலைகளையும், ஏழ் பகல் - ஏழு நாட்கள், நீந்தி கடந்து ஏறி - மிக்க சிரமத்துடன் கடந்து சென்று, பின், எந்திரத்து ஊறு பாகு - கரும்பாலைகளினின்றும் சுரந்து வரும் கருப்பஞ்சாறுனது, மடை உடைத்து - மடைகளை உடைத்துக்கொண்டு, ஒள் முளை நாறு வயல் பாய் - ஒள்ளிய முளைகள் தோன்றப்பெற்ற நாற்றங்காலில் பாய்தற்கிடமான, கோசலம் நண்ணினன் - கோசல நாட்டை அணுகினன்.

பரதன் கோசலத்தினை அணுகுமுன், வழியின் இடர்ப்பாடுகள் தோன்ற ஆறு முதலியவற்றை ஏழு நாட்கள் அரிதிற் கடந்து சென்றான் என்றார்.

நாறு - வயல் நாற்றங்கால். பாகு - கருப்பஞ்சாறு.

(பி - ம்.) 1. ஆறுங்குன்றும்.
2. ஏறியம்பகல்; நீந்தப்பின், நீத்தபின், நீங்கிப்பின் எந்திரத்து, நீங்கியபின்னெதிர்ந்து;

3. ஊறுபாகின், ஆறுபாகு; மடையுடைந்து.
4. பாய்நெடுங்கோசலை, கோசலம்; நண்ணினர்.

(18)

கோசலத்தின் அவலத் தோற்றம்

814. ஏர்து றந்த வயலிள மைந்தர்தோள்
தார்து றந்தன தண்டலை நெல்லினும்
நீர்து றந்தன தாமரை நீத்தெனப்
பார்து றந்தனள் பங்கயச் செல்வியே.

வயல் - (ஏரடிக்கவேண்டிய) வயல்கள், ஏர் துறந்தன - ஏரடிக் காமல் (தரிசாய்க்) கிடந்தன; இளமைந்தர் தோள் - இளங் குமரரின் தோள்கள், தார் துறந்தன - மாலைகளை நீக்கி இருந்தன; நெல்லின் தண்டலையும் - நெற்பயிரையுடைய குளிர்ந்த வயலிடங்களும், நீர் துறந்தன - நீரற்று உலர்ந்திருந்தன; பங்கயம் செல்வி - திருமகள், தாமரை நீத்தது என - (தான் இருந்த) தாமரை மலரை நீங்கிச் சென்றாற் போல, பார் துறந்தனள் - அந் நாட்டையும் துறந்து சென்றாள். ஏ: ஈற்றசை.

நெல்லினும் என்றதில் உம்மை பிரித்து முன்னே கூட்டப்பெற்றது.

இதுமுதல் ஒன்பது பாடல்களால், கோசல நாட்டின் பொலிவிழந்த தோற்றத்தை விரித்து, பரதன் நாட்டினுட் புகும்போதே, இத்தகைய காட்சிகளைக் கண்டு, ஏதோ தீங்கு நேர்ந்துளதென ஊகித்தற்கிடமாயிருந்தமை கூறுகின்றார். தொழில் செய்வார் அனைவரும் தம் தம் தொழிலில் நாட்டமின்றி அயர்ந்திருந்தனர். மகிழ்ச்சியின்மையின், மைந்தரும் தம்மை அழகு செய்துகொள்ளுதலில் விருப்பமின்றி வறிதே யிருந்தனர். திருமகள் வீற்றிருந்த தாமரை மலர் போல முன்பு மிக்க பொலிவு பெற்றிருந்த நாடு, இப்போது அவள் துறந்து கைவிட்ட மலர்போலப் பொலிவிழந்தது என்றதனால், சீதாபிராட்டியாகிய திருமகள் நாட்டைத் துறந்து சென்றமை குறிக்கப் படுதல் காண்க.

தண் தலை - குளிர்ந்த வயலிடம்; நெல்லின் தண்டலையென மாறுக; நெல் - நெற்பயிர்; ஆகு பெயர். தண்டலை நெல் - காடாக வளர்ந்த நெற்பயிர் என்பாரும் உளர்.

(பி - ம்.) 1. இளமைந்தர்.
3. நீர்த்தெனப், நீர்த்தன.
4. பார்துறந்தன.

(19)

815. பிதிர்ந்து சாறு பெருந்துறை மண்டிடச்
சிதர்ந்து சிந்தி யழிந்தன தேங்கனி
முதிர்ந்து கொய்குந ரின்மையின் மூக்கவிழ்ந்
துதிர்ந்து லர்ந்தன வொண்மல ரீட்டமே.

தேம் கனி - இனிய பழங்கள், கொய்குநர் இன்மையின் - பறிப்பார் இல்லாமையால், முதிர்ந்து - அளிந்து, சாறு பிழிந்து பெருதுறை மண்டிட - சாறு வெளிப்பட்டுப் பெரிய நீர்த்துறையிலே விரைந்து பாயுமாறு, சிதர்ந்து சிந்தி அழிந்தன - மிகப் பலவாக உதிர்ந்து சிதறிக் கெட்டன; ஒள் மலர் ஈட்டம் - ஒளி பொருந்திய பூக்களின் தொகுதியும், கொய்குநர் இன்மையின் - பறிப்பாரில்லாமையால், மூக்கு அவிழ்ந்து உதிர்ந்து - காம்பு கழன்று உதிர்ந்து, உலர்ந்தன - உலர்ந்து கிடந்தன. ஏ : ஈற்றசை.

மக்கள் துன்பத்துள் ஆழ்ந்து கிடந்தமையின், பூக்களும் பழங்களும் பறிப்பாரற்றுப் பதங்கெட்டு அழிந்தன. 'கொய்குநர் இன்மையின்' என்பது இடைநிலை விளக்காய் முன்னும் பின்னும் இயைந்தது. மூக்கு - காம்பு.

(பி - ம்.) 1. பிதிர்ந்தசாறு; மண்டின, மண்டிட.
2. சிதைந்து, அதிர்ந்து; சிந்தியளிந்தன, சிந்தினமுந்திய; தேன்கனி.
3. முதிர்ந்த; கொய்யுநர்; இன்மையும்; மூக்குமிழ்த்து, மூக்குமிழ்ந்து, மூக்குமித்து, மூக்குமுத்து, மூக்குளுத்து, மூக்கவிழ்த்து.
4. உதிர்ந்துலந்தன, உதிர்ந்து வார்ந்தன, உதிர்ந்து சிந்தின. (20)

816. ஏய்ந்த கால மிதுவிதற் காமென
ஆய்ந்து மள்ள ரரிகுந ரின்மையால்
பாய்ந்த சூதப் பசுநறுந் தேறலால்
சாய்ந்தொ சிந்து முளைத்தன சாலியே.

இதற்கு ஏய்ந்த காலம் இது ஆம் என - அறுவடை செய்தற்கு ஏற்ற காலம் இதுவாகும் என்று, ஆய்ந்து - ஆலோசித்து, அரிகுநர் மள்ளர் இன்மையால் - அறுக்கும் உழவர் இல்லாமையால், சாலி - (விளைந்த) நெற் பயிர்கள், சாய்ந்து ஒசிந்து - தலை சாய்ந்து ஒடிந்து, பாய்ந்த - (வயலில்) பாய்ந்திருந்த, சூதம் பசு நறு தேறலால் - மாங்கனிகளின் பசிய நல்ல (தேன்போன்ற) சாற்றின் ஈரத்தினால், முளைத்தன - (நெல் மணிகள் உதிர்ந்து) முளை கண்டிருந்தன. ஏ : ஈற்றசை.

முன் கவியிற் கண்டவாறு நீருடன் கலந்த பழச்சாறு வாய்க்கால் வழியே ஓடி வயல்களில் பாய்ந்ததனால் தரை ஈரமாக, அரிவாரற்றுக் கிடந்த நெற்கதிர்கள் தலை சாய்ந்து, நெல்மணிகள் உதிர்ந்து முளைக்கலாயின. தேறல் - தேன்.

(பி - ம்.) 1. இதுவதற்காமென, இதற்கிதுவாமென.
2. ஆய்ந்தமள்ளர்; இன்மையிற்.
3. பாய்ந்தவாய; தேறலிற்; பாய்ந்த சூற்கொண்டப்பசுந்தேறலால் (21)

817. எட்கு லாமல ரேசிய நாசியர்
புட்கு லாவயற் பூசற் கடைசியர்
கட்கி லார்களை காதற் கொழுநரோ
டுட்க லாமுடை யாரி னுயங்கினர்.

புள் குலா வயல் - பறவைகள் குலாவும் வயல்களில், பூசல் - ஆரவாரம் செய்யும் இயல்பினையுடையவரும், குலா(வு)ம் எள் மலர் ஏசிய நாசியர் - (அழகாக) விளங்கும் எள்ளுப் பூவைத் தன்னழகால் பழித்த மூக்கினையுடையவருமான, கடைசியர் - உழத்திமார், களைகட்கிலார் - (வயல்களில்) களை பறியாதவர்களாய், காதல் கொழுநரோடு - (தம்முடைய) அன்பு மிக்க கணவன்மாருடன், உள் கலாம் உடையாரின் - ஊடல் கொண்டவர்களைப் போல, உயங்கினர் - வாடியிருந்தனர்.

இராமபிரானைப் பிரிந்து, அரசனையும் இழந்ததனாலான துயரம் மகளிரை மிக வருத்துதலால், அவர்கள் தம் தொழிலில் நாட்டமின்றி வாட்டமுற்றிருந்தமைக்குக் கணவரோடு ஊடல் கொண்ட நிலையை உவமித்தார்.

குலாவும் எள் மலர் என மாறுக; 'குலாவும்' என்ற செய்யுமென்னெச்சத்து ஈற்றயல் உயிர்மெய் கெட்டது. எள்ளின் பூவை மகளிரின் மூக்கிற்கு உவமை கூறுதல் கவிமரபு. நாசி - மூக்கு. குலா - கலந்து மகிழ்தல்.

(பி - ம்.) 1. எய்தியநாசியர்:
2. புட்குலாமலர்ப், புக்குலாவயற்.
4. உட்கலா முலையாரின், உட்கலாமிடையாரின், உட்குலாமுடையாரின்; ஒதுங்கினர், ஒதுங்கியே. (22)

818. அலர்ந்த பைங்கூ ழகன்குளக் கீழ்மடை
மலர்ந்த வாயிற் புனல்வழங் காமையால்
உலர்ந்த வன்க ணுலோபர் கடைத்தலைப்
புலர்ந்து நிற்கும் பரிசிலர் போலவே.

அகன் குளம் கீழ் - அகன்ற ஏரியை அடுத்து, அலர்ந்த பசு கூழ் - வளமாக வளர்ந்த பசிய நெற்பயிர்கள், மலர்ந்த மடைவாயில் - திறந்த மடையின் வழியே, புனல் வழங்காமையால் - நீர் பாய்ச்சப்படாமையால், வன்கண் - இரக்கமின்மையையுடைய, உலோபர் கடைத்தலை - உலோபிகளின் (வீட்டுத்) தலைவாயிலில், புலர்ந்து நிற்கும் - (பொருள் பெறாது) வாடி நிற்கிற, பரிசிலர் போல - இரவலரான பரிசிலரைப் போல், உலர்ந்த - வாடி உலர்ந்தன. ஏ; ஈற்றசை.

ஏரியை அடுத்துக் குறையாது நீர் பாய்தற்கேற்ற இடத்தில் செழித்து வளர்ந்த பயிர்களும், அவற்றைப் போற்றி மடைதிறந்து நீர் பாய்ச்சுவார் இன்மையின் நீர் பெறாது வாடி உலர்ந்தமைக்கு, உலோபி

களை அடைந்து இரப்போர், அவர்களிடமிருந்து ஏதும் பெருமல் தலை வாயிலில் வாடி நிற்கும் நிலையை உவமித்தார். உலோபிகள் பெருஞ் செல்வராயினும், தம்மை அடைந்தோர்க்கு மனமிரங்கிக் கொடுத்த லின்மையின், அவர்களை நாடி வந்தோர் ஏதும் பெருது வாடி நிற்பர். அதுபோல், நீர்மிக்க ஏரியை அடுத்திருந்தும், நீர் பாய்ச்சப் பெருமை யால் பயிர்கள் நீர் பெருது வாடி உலர்ந்தன.

அச்சுப் புத்தகங்கள் பலவற்றிலும், பல ஏடுகளிலும் இப்பாடல், 'நகையிழந்தன' (821) என்பதன்பின் காணப்படுகிறது; ஆயினும், மருதநிலச் செய்திகளைக் கூறும் தொடர்புடைய இவ்விடத்தில் இஃதிருத்தலே பொருத்தமுடையதாதல் காண்க.

(பி - ம்.) 1. அலந்த; கிழகன், கிழன.
3. உலந்த, உயர்ந்து; வன்கணுலோவர், நிற்பதுலோபர்; புறங்கடைப், பிறங்கடை.
4. புலந்துநிற்கும், உலர்ந்துநிற்ப; புலன்கொள்கேள்விப்; போன்றவே, போன்றதே. (23)

819. ஓது கின்றில கிள்ளையு மோதியர்
தூது சென்றில வந்தில தோழர்பால்
மோது கின்றில பேரி முழாவிழாப்
போது கின்றில பொன்னணி வீதியே.

கிள்ளையும் - கிளிகளும், ஓதுகின்றில - பேசுகின்றனவில்லை; ஓதியர் தூது - கூந்தலழகுடைய மகளிரின் தூதுகளும், தோழர்பால் சென்றில வந்தில - காதலரிடம் போதலும் வருதலும் இலவாயின; பேரி - பேரிகைகளும், முழா - குடமுழாக்களும், மோதுகின்றில - அடிக்கப்படவில்லை; பொன் அணி வீதி - பொன்னுல் அழகு செய்யப் பெற்ற வீதிகளில், விழா போதுகின்றில - விழா உலாக்கள் (ஊர்வலங்கள்) வரவில்லை. ஏ: ஈற்றசை.

கிளிகளை வளர்க்கும் மகளிர், அவற்றைப் போற்றுதலும் அவற்ருேடு பேசுதலும் இன்மையின், அவையும் பேச்சு இழந்தனவாயின. மங்கையர் மனமகிழ்ச்சி குன்றிச் சாம்பியிருந்தமையின், காதலர்க்குத் தூதனுப்புதலும் நிகழவில்லை. விழா - கடவுளர் விழாக்களும் மண விழாக்களும்; விழா, ஆகுபெயராய் வீதி யுலாவைக் குறித்தது.

இதுமுதல் நான்கு பாடல்களால் புறநகரின் செய்திகளைக் கூறுகின்ருர்.

(பி - ம்.) 1. ஓதிய, ஓதிமம்.
2. சென்றில சொல்லல, சொல்லில; சோலையில்; சென்றிலர் வந்திலர், சென்றில சொல்லிய, சென்றவர் வந்திலர், சென்றவர் சொல்லில், சொல்லலர், சென்றன சொல்லல, சென்ருரை சொல்லல; கொண்கர்பால், தொன்னகர்.

3. மோதுகின்றல; பேரிமுழவெழா, முழவிழாப், முழவிழா.
4. போதுகின்றிலர்; பொன்னகர். (24)

820. பாட னீத்தன பண்டொடர் பாண்குழல்
ஆட னீத்த வரங்கொ டகன்புனல்
சூட னீத்தன சூடிகை சூளிகை
மாட நீத்தன மங்கல வள்ளையே.

பண் தொடர் - இசையின் தொடர்புடைய, பாண் குழல் - பாணரின் வேய்ங்குழல்கள், பாடல் நீத்தன - வாசிக்கும் பாடல்களை நீங்கின; அரங்கொடு - அரங்குகளும், அகன் புனல் - பரந்த நீர் நிலைகளும், ஆடல் நீத்தன - ஆடுதலை நீங்கின; சூடிகை - (மகளிர்) தலைகள், சூடல் நீத்தன - (மலர்களையும் அணிகலன்களையும்) சூடு தலைத் தவிர்ந்தன; சூளிகை மாடம் - நிலாமுற்றங்களையுடைய மாளிகைகள், மங்கலம் வள்ளை நீத்தன - மங்கலமான வள்ளைப் பாட்டுக்களைத் தவிர்ந்தன. ஏ: அசை.

'ஆடல்' என்பது கூத்தையும் நீராடுதலையும் குறித்தது. புனல் ஆகுபெயராய் நீர் நிலைகளைக் குறித்தது. சூளிகை - இடிதாங்கிச் சூலமும் ஆம். வள்ளை-மகளிர் நெற்குற்றும்போது தலைவனைப் புகழ்ந்து பாடுவது; உலக்கைப் பாட்டென்பர். செல்வர் மனைகளில் நாள்தோறும் மங்கலம் பாடுவோர் பாடுவதும் 'வள்ளை' எனப்படும்; இது 'நாண் மங்கலம்' எனவும் வழங்கும்; பால. 63. விசேடக் குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. பண்டொகு, வண்டொடு; பண்குழல், பாண்குழாம், பாணர்கள்
2. ஆடனீர்த்த; அரங்கொடகன்சுனை, அரங்கொண்டகண்புனல்.
3. சூடிகைச் சூழிகை, சூலிகை.
4. மங்கலம் வள்ளையே. (25)

821. நகையி ழந்தன வாண்முக நாறகிற்
புகையி ழந்தன மாளிகை பொங்கழற்
சிகையி ழந்தன தீவிகை தேமலர்த்
தொகையி ழந்தன தோகைய ரோதியே.

வாள் முகம் - ஒளியமைந்த முகங்களெல்லாம், நகை இழந்தன - சிரிப்பை இழந்தன; மாளிகை - மாளிகைகள், நாறு அகில் புகை இழந்தன - நறுமணம் கமழும் அகில் புகையை இழந்தன; தீவிகை - (எங்குமுள்ள) விளக்குகள், பொங்கு அழல் சிகை இழந்தன - மேலோங்கி எரியும் தீச்சுடரை இழந்தன: தோகையர் ஓதி - மயில் போலும் சாயலையுடைய மகளிர் கூந்தல், தேம் மலர் தொகை இழந்தன - இனிய மலர்க் கூட்டங்களை இழந்தன. ஏ: ஈற்றசை.

நகரமாந்தர், முன்பு எப்போதும் மகிழ்ச்சி ததும்பும் முகமுடைய ராயிருப்பர்; இப்போது அது தவிர்ந்தது. மாடங்களில் மகளிர்

கூந்தலுக்கும் ஆடைக்கும் புகையூட்டும் பொருட்டு எப்போதும் அகில் புகைந்துகொண்டிருக்கும்; அது தவிர்ந்தது. மங்களமான விளக்கெரிதலும் இல்லை. மகளிர் பூச்சூடுதலும் இல்லையாயிற்று. தீவிகை - தீபிகா என்ற வடசொற்றிரிபு.

(பி - ம்.) 1. வாண்முகனுறகிற், வாண்முக நங்கையர், வாண்முகநாகரிற்.
3. திபிகை. (26)

822. நாவி னீத்தரு நல்வளந் துன்னிய
பூவி னீத்தன நாடு பொலிவொரீஇத்
தேவி நீத்தருஞ் சேணெறி சென்றிட
ஆவி நீத்த வுடலென வாயதே.

நாவின் நீத்து அரு - நாவால் சொல்லி முடித்தற்கரிய, நல்வளம் துன்னிய - நல்ல வளம் செறிந்த, பூவின் ஈத்து அ(ன்)ன் நாடு - நில மகளின் கொடை போன்ற அந்தக் கோசல நாடு, தேவி - சீதாபிராட்டி, நீத்து - (அங்கு நின்று) அகன்று, அரு சேண் நெறி சென்றிட - கடத்தற்கரிய நெடுந்தூரம் சென்றதனுல், பொலிவு ஒரீஇ - பொலிவை இழந்து, ஆவி நீத்த உடல் என ஆயது - உயிர்பிரிந்த உடம்பு (பிணம்) போல ஆயிற்று. ஏ : ஈற்றசை.

இதுகாறும் ஒன்பது பாடல்களால் கோசலநாட்டின் பொலிவிழந்த நிலையை விரித்துக் கூறிவந்த ஆசிரியர், இறுதியாகச் சுருங்கச் சொல்லலாய், 'நாடு பிணம் போலப் பொலிவிழந்தது' என்று முடிக்கின்ருர்.

நீத்து - நீந்துதல்; சொல்லி முடித்தல். பூ - பூமி; நிலமகள். ஈத்து - ஈதல்; கொடை. அன ; தொகுத்தல். சென்றிட - சென்றதால்; செயவெனெச்சம் காரணப் பொருளில் வந்தது. இடு : துணை வினைப் பகுதி. தேவி - நகரின் காவல் தெய்வம் என்றலுமாம்.

(பி - ம்.) 1. நாவிநீத்தரு, நீத்தருள், நீத்தன, நவினீத்தன; நல்வளந் துன்னிசை, நல்வனந்துன்னிய, நல்லவந்துன்னிய.
2. பூவிநீத்தென, நீத்தன, நீத்தரு, பூவினீத்தென, பூவினீத்தனன், பூவினீத்தரு, பூவுநீத்தநன், பூவுநீத்தரு.
3. தேவிநீத்தகம், நீத்தகன், நீத்தகற், நீத்ததம், நீக்கத்தன், நீக்கத்தம், தேவினீக்கத்தைச்; தேவுநீக்கத்தைச், தேவுநீத்தரும், நீத்தகன், நீத்தகம்.
4. எனலாயதே, எனலாவதே. (27)

### பரதன் வருந்துதல்

823. என்ற நாட்டினை நோக்கி யிடருழந்
தொன்று முற்ற துணர்ந்தில னுன்னுவான்
சென்று கேட்பதொர் தீங்குள தாமெனு
நின்று நின்று நெடிதுயிர்த் தானரோ.

உற்றது ஒன்றும் உணர்ந்திலன் - நிகழ்ந்தது ஒன்றையும் அறியாத வனுன பரதன், என்ற - (இதுகாறும் விவரித்துச்) சொல்லிய, நாட்டினை நோக்கி - (பொலிவிழந்த) அந்த நாட்டைப் பார்த்து, இடர் உழந்து - பெருந்துன்பமுற்று, உன்னுவான் - (அந்நிலைபற்றி) நினைப்பவன், சென்று - நாம் (அரண்மனைக்குப்) போய், கேட்பது ஓர் தீங்கு உளது எனு - கேள்விப்படுதற்குரிய தீய செய்தி ஒன்று இருக்கின்றது என்று அநுமானித்து, நின்று நின்று - தயங்கித் தயங்கி, நின்று, நெடிது உயிர்த்தான் - பெருமூச்செறிந்தான். அரோ : அசை.

நாட்டின் அவல நிலையைக் கண்ட பரதன், 'இதற்குக் காரணமாக ஏதோ பெருந்தீங்கு விளைந்திருத்தல் வேண்டும்' என்று உய்த்துணர்ந்து, மிகவும் துன்பமுற்று வருந்தினுன் என்றவாறு.

உணர்ந்திலன், உன்னுவான் : வினையாலணையும் பெயர்கள். உளதாம்: ஆம், அசை. நின்று நின்று என்ற அடுக்குத் தயக்க மிகுதியை உணர்த்திற்று.

(பி - ம்.) 1. என்று நாட்டினை; இடருழன்று.
2. ஒன்றுமுற்ற.
3. தீங்குளதாமென, தீங்குளவாமென. (28)

### பரதன் அயோத்தியை நெருங்குதல்

824. மீண்டு மெய்தியம் மெய்யெனு நல்லணி
பூண்ட வேந்தன் றிருமகன் புந்திதான்
தூண்டு தேரினு முந்துறத் தூண்டுவான்
நீண்ட வாயி னெடுநகர் நோக்கினுன்.

அ மெய் எனும் நல் அணி பூண்ட - அந்த வாய்மை என்னும் நல்ல அணிகலனைப் பூண்ட, வேந்தன் திருமகன் - சக்கரவர்த்தியின் சிறந்த புதல்வனுன பரதன், மீண்டும் எய்தி - மீளவும் (சிறிது தெளிந்த நிலையை) அடைந்து, புந்தி - (தன்) மனமானது, தூண்டு தேரினும் முந்து உற - விரைந்து செலுத்தப்படும் தேரினும் முற்பட்டுச் செல்ல, தூண்டுவான் - (தேரை) மேலும் விரைந்து செலுத்தி, நெடு நகர் - பெரிய அயோத்தி நகரின், நீண்ட வாயில் நோக்கினுன் - உயர்ந்த தலைவாயிலைக் கண்டான்.

நாட்டின் அவல நிலை கண்டு கலங்கித் தயங்கிய பரதன், மீண்டும் சிறிது தெளிவு பெற்று, தான் அநுமானித்த செய்தி இன்னதென்பதை அறியும் ஆவலால் மனம் முந்திச் செல்லத் தேரையும் முன்னிலும் விரைவாகச் செலுத்திச் சென்று, நகரின் பெருவாயிலை நண்ணினுன்.

சக்கரவர்த்தி தன் வாய்மை காத்ததே இத்துன்பங்களுக்கெல்லாம் காரணம் என்பது தோன்ற, அவ்வகையில் அவனை விசேடித்தார். அ !

உலகறி சுட்டு. தான் : அசை. பரதன் இப்போது வந்து கண்டது, 'வைஜயந்தம்' என்னும் பெயரையுடைய மேற்கு வாயில் என்பது முதனூலால் அறியப்படும். நகரினுட் சென்று அவன் கண்டனவும் கூறியனவும் மேலே ஒன்பது பாடல்களால் கூறப்படும்.

(பி - ம்.) 1. மீண்டுமேகியம், மீண்டுமேகிய, மீண்டுமெய்திய, மீண்டுமெய்தவம், மெய்யனும்.
2. புந்தியால், புந்திதன், புத்திதான்.
3. தூண்டுதேரினை; தூங்குவான், தூங்குமா, தூங்குமால், தூண்டிவான், தூண்டுவோன்.
4. நீண்டவாயல், வாய; நீங்கினன். (29)

## நகரில் கொடிகள் இல்லாமை

825. அண்ட முற்றுந் திரிந்தயர்ந் தாயமு
துண்டு போதியென் றொண்கதிர்ச் செல்வனை
விண்டொ டர்ந்து விலக்குவ போல்வன
கண்டி லன்கொடி யின்னெடுங் கானமே.

(பரதன்) ஒண் கதிர் செல்வனை - சூரியனை, அண்டம் முற்றும் திரிந்து அயர்ந்தாய் - நீ இவ்வண்டமெல்லாம் சுற்றிச் சோர்ந்திருக்கின்றாய்; (ஆதலால்), அமுது உண்டு போதி என்று - (இங்கே சற்றுத் தங்கி) உணவை உண்டு செல்வாயாக என்று சொல்லி, விண் தொடர்ந்து - (சூரியன் செல்லும்) வானவீதியை எட்டி, விலக்குவ போல்வன-(அவனைத்) தடுப்பவை போன்ற, கொடியின் நெடு கானம் - கொடிகளின் பெருங் கூட்டத்தை, கண்டிலன் - (வாயிலிலும் பிற விடத்தும்) காணவில்லை. ஏ : அசை.

மதிலிலும், உள்ளே மாளிகைகளிலும் கொடிகள் வானளாவப் பறக்கும் காட்சி முதலில் காணத் தக்கது; அதனைக் கண்டிலன். கொடிகள் சூரியனைத் தடுத்து நிறுத்தி உண்ணுமாறு அழைப்பன வென்றது தற்குறிப்பேற்றம். கொடிகளை இடத்திற்கேற்பக் கூறுதல் கவிகளின் சாதுரியம். ஒண் கதிர்ச் செல்வன் - ஒளிக்கதிர்களாகிய செல்வத்தை உடையவன்; சூரியன். கொடியின் கானம் என்றது மிகுதி பற்றி, 'தாமரைக்காடு' என்பது போல.

(பி - ம்.) 1. முற்றுந்திரிந்தமர்ந்தாய், முற்றத்திரிந்தயர்ந்தாய், திரிந்தலுத்தாய்.
2. ஓங்குமருக்கனை, ஓதுமருக்கனை.
3. விலக்குவபோயெனக். (30)

## முரசொலி இன்மை

826. ஈட்டு நன்புகழ்க் கீட்டிய யாவையும்
வேட்ட வேட்டவர் கொண்மின் விரைந்தெனக்
கோட்டி மாக்களைக் கூவுவ போல்வன
கேட்டி லன்முர சின்கிள ரோதையே.

ஈட்டும் நன் புகழ்க்கு - தேடுதற்குரிய (கொடையால் வரும்) நல்ல புகழுக்காகவே, ஈட்டிய யாவையும் - (நான்) தேடிய பொருள்கள் எல்லாவற்றையும், வேட்டவர் - (கொள்ள) விரும்புவோர், வேட்ட - விரும்பியவற்றை, விரைந்து கொண்மின் என - (தயக்கமின்றி) விரைந்து வந்து கைக்கொள்ளுங்கள் என்று, கோட்டி மாக்களை - குழுவான இரப்போரை, கூவுவபோல்வன - அழைப்பனபோன்றன வான, முரசின் - கொடை முரசங்களின், கிளர் ஓதை - பொங்கும் ஒலியை, கேட்டிலன் - (பரதன்) கேட்கவில்லை. ஏ : ஈற்றசை.

இரப்போர் எப்போது வரினும் அவரவர் விரும்பியவற்றைத் தடையின்றிப் பெறலாமென்பதை அறிவித்தற்கு நாள்தோறும் கொடை முரசு முழங்கும்; அது செவிப்படவில்லை. எனவே, அது முழங்கவில்லை யென்பதும் பெறப்படும்.

இரப்பார்க்கொன் றீவார்மேல் நிற்கும் புகழே சிறந்ததாகலின் அப்புகழ்க்காகவே ஈட்டிய பொருள் எனப் பொருளைச் சிறப்பித்தார். ஈட்டிய - தேடியவை; வினையாலணையும் பெயர். கூவுதல் - கூப்பிடுதல்; அழைத்தல்.

(பி - ம்.) 1. ஈட்டி; நன்பொருள், தன்புகழ்க்கு, ஈட்டியுமியாவையும். ஈயுமின்யாவையும், ஈயுமென்றியாவையும், வீயுமுன்யாவையும், யாவையுமீட்டியே, யாதனயாவையும்.
2. வேட்டுவேட்டவர், வேட்டவேட்டுவர்.
3. கோட்டமாக்களை; போன்றன. (31)

பரிசு பெற்றுச் செல்லும் பாணரைக் காணாமை

827. கள்ளை மாக்கவர் கண்ணியன் கண்டிலன்
பிள்ளை மாக்களி றும்பிடி யீட்டமும்
வள்ளை மாக்க ணிதியும் வயிரியர்
கொள்ளை மாக்களிற் கொண்டன ரேகவே.

கள்ளை - (பூவிலுள்ள) தேனை, மா கவர் - வண்டுகள் கவர்ந்துண்ணு தற்கிடமான, கண்ணியன் - தலைமாலை சூடிய பரதன், வள்ளை மாக்கள் - மங்கலம் பாடுவோரும், வயிரியர் - கூத்தரும், நிதியும் - பொன்னையும், பிள்ளை மாகளிறும் - இளைய பெரிய ஆண் யானைகளையும், பிடி ஈட்டமும் - பெண்யானைகளையும், கொள்ளை மாக்களின் - கொள்ளை யடிப்போரைப்போல, கொண்டனர் ஏக கண்டிலன் - கைக்கொண்டு செல்லக் கண்டானில்லை. ஏ : ஈற்றசை.

நாண் மங்கலம் பாடுவோரும் கூத்தரும் அரசனையும் பிற செல்வரையும் பாடி, யானைகளையும் பொன்னையும் அளவின்றிப் பெற்றுச் செல்லல் நாள்தோறும் அந்நகரில் நிகழ்வதாகும்; அது கொள்ளை கொண்டு போதல் போலத் தோற்றும். அதனை இன்று கண்டிலன்.

கொள்வோர் கொள்பவற்றின் மிகுதிபற்றிக் 'கொள்ளை' என்றார். தன் மாலையில் தேனைக் கொள்ளை கொடுப்பவன் இந்தக் கொள்ளையைக் கண்டிலன் என்றது சாதுரியம். வள்ளை மாக்கள் - மங்கலப் பாடகர்; நாண்மங்கலம் பாடுவோர்; 820 - விசேடக் குறிப்புப் பார்க்க. வயிரியர் பாணரில் ஒரு வகையினர்; கூத்தும் பாட்டும் உடையோர்.

(பி - ம்) 3. வள்ளன்மாக்கள், வள்ளமாக்கள்.
4. மாக்களி; கொண்டனர் போகவே. (32)

அந்தணர் தானம் பெற்றுச் செல்வதைக் காணாமை

828. காவன் மன்னவன் கான்முளை கண்டிலன்
ஆவு மாவு மழிகவுள் வேழமும்
மேவு காத னிதியின் வெறுக்கையும்
பூவின் வானவர் கொண்டனர் போகவே.

காவல் மன்னவன் கால்முளை - உலகு புரக்கும் தசரத மன்னனின் புதல்வனான பரதன், ஆவும் - பசுக்களையும், மாவும் - குதிரைகளையும், அழி கவுள் வேழமும் - மதம் பெருகும் கன்னங்களை உடைய யானைகளையும், காதல் மேவு - (எவரும்) விரும்புதற்குரிய, நிதியின் வெறுக்கையும் - செல்வத்திரளையும், பூவின் வானவர் - பூசுரர்கள், கொண்டனர் போக கண்டிலன் - (தானமாகப்) பெற்றுச் செல்லப் பார்த்திலன். ஏ : ஈற்றசை.

அந்தணர் பலர் அரண்மனையிலிருந்து தானமாகப் பொருளையும், பசுக்களையும், யானை, குதிரை முதலியவற்றையும் பெற்றுச் செல்லுதலும் நாள்தோறும் நிகழ்வது; அதனையும் பரதன் காணவில்லை.

அந்தணர் பூதேவர், புவித்தேவர், பூசுரர் என வழங்கப் பெறுவராகலின், 'பூவின் வானவர்' என்றார். தானம் பெறுதற்குரியோர் இவர்கள். கொண்டனர்: முற்றெச்சம். அழிதல் - பெருகுதல்; சீவக. 1193. வெறுக்கை - மிகுதி.

(பி - ம்) 1. கார்முளை.
3. மேவுங்காதல், காவல்; நிதியும்; மேவும்வையமுமுத்தும்.
4. பூவில்வானவர்; கொண்டவர். (33)

கூத்தரின் கூட்டம் வறிதே இருத்தல்

829. சூழ மைந்த சுரும்பு நரம்புந்தம்
ஏழ மைந்த விசையிசை யாமையால்
மாழை யொண்கண் மயிலெனுஞ் சாயலார்
கூழை போன்ற பொருநர் குழாங்களே.

சூழ் அமைந்த - வட்டமிடும் இயல்புள்ள, சுரும்பும் - வண்டுகளும், (சூழ் அமைந்த) நரம்பும் - முறுக்காணியில் சுற்றுதல் (பொருந்திய) யாழ்

நரம்புகளும், தம் - தம்முடைய, ஏழ் அமைந்த இசை - ஏழு சுரங்கள் பொருந்திய இசையினை, இசையாமையால் - பாடாமையால், மாழை ஒண் கண் - மாவடுவகிர் போலும் ஒளி அமைந்த கண்களையும், மயில் எனும் சாயலார் - மயில் போன்ற சாயலையுமுடைய மகளிரின், கூழை - கூந்தலும், பொருநர் குழாங்கள் - கூத்தர் கூட்டமும், போன்ற - தம்முள் ஒரு தன்மைய ஆயின. ஏ : ஈற்றசை.

வண்டுகள், நறுமணமுள்ள இடத்தை நாடிச் சென்று வட்டமிட்டு முரன்று மொய்க்கும் இயல்புடையன வாதலின், மகளிர் கூந்தலில் நறுமணங் கண்டு அங்கே மொய்க்கும்; இப்போது அவர்கள் கூந்தல், வாச நெய்யையும் மலர்களையும் மறந்திருந்தமையின், வண்டுகள் மொய்த்தற்கும் முரலுதற்கும் இடமிலதாயிற்று; யாழ் முதலிய இசைக் கருவிகளுடன் சென்று அங்கங்கே பாடுதலும் ஆடுதலும் செய்து பரிசுபெறும் பொருநர் குழாம் இப்போது அதற்கிடமின்றி வறிதேயிருந்தமையின், அங்கே யாழொலி எழாதாயிற்று; எனவே, மகளிர் கூந்தலும், பொருநர் குழாமும் இசையெழுச்சியின்மையில் தம்முள் ஒத்தன என்க.

சூழ் : முதனிலைத் தொழிற் பெயர். சூழ்தலை வண்டுகளுக்கும் நரம்புகளுக்கும் இயைக்க. வண்டுகளுக்கு, வட்டமிடுதல்; மொய்த்தலுமாம்; நரம்புக்கு, முறுக்காணியிற் சுற்றப்படுதல். பொருநர் குழாத்தின் நரம்பும், கூழையும் ஒத்தன என்றுரைத்தலும் பொருந்தும். பொருநர் - ஒருவரைப் போலக் கோலங்கொண்டு பாடி ஆடும் கலைஞர்.

(பி - ம்.) 1. சூழமைந்தர், சூழிமைத்தர். சூழமைந்தர்; சுரும்பினரம்புந்தம், சுரும்புநரம்புந்தன், நரம்புஞ்சுரும்புந்தம்.
2. ஏழைமைந்த.
3. மாழையுண்கண்; மயினெடும். (34)

தெருக்களின் நிலை

830. தேரு மாவுங் களிறுஞ் சிவிகையும்
ஊரும் பண்டியு மூருந ரின்மையால்
யாரு மின்றி யெழிலில வீதிகள்
வாரி யின்றிய வாலுக வாற்றினே.

ஊரும் - ஊர்ந்து செல்லுதற்குரிய, தேரும் - தேர்களும், மாவும் - குதிரைகளும், களிறும் - யானைகளும், சிவிகையும் - பல்லக்குகளும், பண்டியும் - வண்டிகளும், ஊருநர் இன்மையால் - ஏறிச் செல்வோர் இல்லாமையாலும், யாரும் இன்றி - நடந்து செல்வோரும் இல்லாமலும், வீதிகள் - வீதிகளெல்லாம், வாரி இன்றிய - நீர் இல்லாத, வாலுகம் ஆற்றின் - மணற்பரப்புடைய (அழகிழந்த) ஆற்றைப்போல, எழில் இல - அழகில்லாதன ஆயின. ஏ : ஈற்றசை.

வீதிகள் அழகில ஆயின என ஒரு சொல் வருவித்து முடிக்க. தேர் முதலிய ஊர்திகளும் நடந்து செல்வோரும் போக்குவரத்தின்றி, வீதிகள் வெறிச்சோடிக் கிடந்தன. "யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெரு" (நெடுநல். 30) என வீதிகளுக்கு ஆற்றை உவமை கூறுவர். ஆறு நீர் நிரம்பி ஓடுதலின்றி வற்றி மணல் பரந்து கிடந்தால் அழகிழந்த தேயாகும். அவ்வாறே வீதிகளும் போக்குவரத்தின்றேல் அழகிழந்தன வாகும் என ஒப்புமை காண்க. நீர் வற்றி மணல் பரந்த ஆற்றை 'வாலுக ஆறு' என்றார். வாலுகம் - வெண்மணல்.

(பி - ம்.) 2. ஊரும் பண்டியர், ஊரினரின்மையால், ஊர்னரொதுங்கினர், ஊர்ந் தங்கொதுங்குவார், ஊர்ந்தோரொதுங்கினர்.
3. யாருமின்றி, ஆருமின்றி; எழிலழி விதிகள், வீதியுள், எழிலணி வீதிகள்.
4. வாரியின்றியல், வாரியன்றியல்; வாலுகயாற்றினே. (35)

பரதன் சத்துருக்கனிடம் கூறுதல்

831. அன்ன தன்மை யகநகர் நோக்கினன்
பின்னை யப்பெரி யோர்க்குப் பெருந்தகை
மன்னன் வைகும் வளநகர் போலுமீ
தென்ன தன்மை யிளையவ னேயென்றான்.

அன்ன தன்மை - அவ்வாறாகிய (பொலிவிழந்த) தன்மையினை யுடைய, அக நகர் நோக்கினன் - உள் நகரிடங்களை ஊன்றிப் பார்த்த, அ பெரியோர்க்கு பெரு தகை - (அறிவு ஒழுக்கம் நிரம்பிய) பெரியோர்க்கும் பெரியவனான அந்தப் பரதன், பின்னை - தன் பின்னவனை (நோக்கி), இளையவனே - தம்பீ, ஈது மன்னன் வைகும் வளம் நகர் போலும் - சக்கரவர்த்தி வாழும் (நமது) வளமிக்க நகரமோ இது? என்ன தன்மை - இதன் அவல நிலைதான் என்னே! என்றான் —.

நகரின் இரங்கத்தக்க நிலை கண்டு வருந்திய பரதன், தம்பிக்கும் அதனைச் சுட்டிக் கூறி, "அரசன் வாழுமிடமாகவே இது தோற்ற வில்லையே; இதற்குக் காரணமென்னவோ?" என்று மேலும் வருந்துவானானான். நாட்டின் அவலநிலை கண்டபோதே, 'சென்று கேட்பதோர் தீங்குளது' என்று அநுமானித்த பரதன், நகரினுள்ளும் அத்தகைய நிலைகண்டு, அரசன் உள்ளானோ இல்லையோ என்ற ஐயமும் அச்சமும் கொண்டு, தம்பிக்கும் அதனைக் கூறினன். மேலும் அவன் கூறியது அடுத்த பாட்டிற் கூறப்படும். 'பெரியோர்க்குப் பெருந்தகை' என்பதனை மன்னனுக்கு விசேடணமாக்கிக் கூறினும் அமையும். போலும் என்றது காகுவினால் வினாவாயிற்று.

(பி - ம்.) 1. அகநகர் நோக்கினான், அகநெக நோக்கினன், அகநகர் நோக்கித் தன், அகனகர் நோக்கினன்.

2. பின்னையப் பெரியோர்தம், பின்னையே பெரியோர்தம், பின்னினைப் பெரியோற்கப், பின்னிணைப் பெரியோற்குப், பின்னுநின்று நினைந்த பெருந்தகை.
3. மன்னரின்றிய மாநகர்; போலுமிது, போலுமின்று, போலுமன்று.

(36)

832. வேற்ற டங்கல ரூரென மெல்லிதாற்
சூற்ற டங்கருங் கார்புரை தோற்றத்தான்
சேற்ற டங்கட் டிருவொடு நீங்கிய
பாற்ற டங்கட லொத்தது பாரென்றான்.

வேறு அடங்கலர் ஊர் என-(நம்மோடு) மாறுபட்ட பகைவர் ஊர்போல, மெல்லிது - தாழ்வுற்றுளது; சூல் தடம் கரு கார் புரை தோற்றத்தான் - சூல்கொண்ட பெரிய கரிய மழை மேகம் போன்ற திருமேனியையுடைய திருமால், சேல் தடம் கண் திருவொடும் - சேல் மீனைப்போலும் பெரிய கண்களையுடைய திருமகளுடனே, நீங்கிய - விட்டுச் சென்ற, தடம் பால் கடம் ஒத்தது - பெரிய பாற்கடலைப் போன்றுளது; பார் - இதனைப் பார், என்றான்—.

நகரம் பாழ்பட்ட பகைவர் ஊரைப் போலவும், திருமாலும் திருமகளும் நீங்கப்பெற்றுப் பொலிவிழந்த பாற்கடல் போலவும் வறிதாகியுள்ளதனைப் பார் என்று தம்பிக்குக் கூறினான் பரதன்.

நகரின் பரப்புக் கருதிப் பாற்கடல் உவமிக்கப்பெற்றது. பின் மூன்று அடிகள் கூறுவது, இராமபிரானும் பிராட்டியும் நகரை விட்டகன்றமையைக் குறிப்பித்தல் காணத்தக்கது. மென்மை - தாழ்வு; "மென்சொ லேனும் இகழார்" (கந்த. அவை. 3.) ஆல்: அசை.

(பி - ம்.) 1. ஊரெனல் மெல்லிதால், ஊரென மெல்லிதாய்ச், ஊரெனில் மெல்லிதால்; அடங்கலர் விண்ணுற வென்றிடும், விண்ணுற வெற்றிடும், விண்ணுற வெண்ணிடும்.
2. சூற்றடங்கார், சூற்றடங்கல், கூற்றடங்கார், கூற்றடங்கல், கூற்றடங்கப்; பொருநெடுங்கோளினய், கோளின, கொள்கையாய், புரைநெடுங்கோளினய், தோளினன், தோற்றத்தான்; சூற்றடங்கருங் கார்புரை கோளினய்.
3. சேற்றடங்கடிருவொடு.
4. ஒத்ததிப்.

(37)

சத்துருக்கன் கூற்று

833. குருமணிப்பூ ணரசிளங் கோளரி
இருகை கூப்பி யிறைஞ்சின னெய்திய
தொருவ கைத்தன் றுறுதுய ரூழிவாழ்
திருந கர்த்திருத் தீர்ந்தன ளாமென்றான்.

குரு மணி பூண் - நல்ல நிறமுள்ள மணிகள் பதித்த அணி கலன்களை அணிந்த, அரசு இள கோள் அரி - அரசிளஞ் சிங்கமான சத்துருக்கன், இரு கை கூப்பி இறைஞ்சினன் - தன் இரு கைகளையும் குவித்துத் தமையனை வணங்கி, எய்தியது உறு துயர்-நேர்ந்துளதாகிய பெருந்துன்பம், ஒரு வகைத்து அன்று - ஒரு வகையானதன்று (பல விதத்திலும் ஆனது); ஊழி வாழ் திருநகர் திரு - மிக நெடுங்காலமாக நல் வாழ்வுடைய இந் நகரத்துத் திருமகள், தீர்ந்தனள் ஆம் - நீங்கி விட்டனளாவள்; என்றான் —.

பரதன் கூறியதை உடன்பட்டுக் கூறிய சத்துருக்கன், நகர்ச் செல்வி நீங்கினவள் நீங்கினவளே, இனி இந்நகரம் முன்னை நிலை யெய்துதல் அரிது என்ற கருத்துப்படக் கூறுகின்றான்.

குரு - நிறம். கோள் - வலிமை; உயிரைக் கொள்ளுதலுடைய எனினும் ஆம். இறைஞ்சினன்: முற்றெச்சம். ஊழி வாழ் திருநகர் - ஊழிக் காலத்தும் அழியாத வளநகர் என்றலுமாம்; "ஊழியி னிறுதி யுறையுளோ" (பால. 95). நகரின் செல்வப் பொலிவு திருமகளாக உருவகிக்கப்பெற்றது. நகர்த்திரு - நகரின் அதிதேவதை என்பாரும் உளர்.

(பி - ம்.) 2. எய்திய.
4. திருத்தீர்ந்தனள். (38)

### பரதன் தசரதனது மாளிகையை அடைதல்

834. அனைய வேலையி லச்சுடைத் தேரரண்
மனையி னீணெடு மங்கல வாயிலை
நினையு மாத்திரத் தெய்தலு நேமியான்
தனைய னுந்தந்தை சார்விட மெய்தினன்.

அனைய வேலையில் - அந்தச் சமயத்தில், அச்சு உடை(ய) தேர் - வலிய அச்சினையுடைய தேரானது, நினையும் மாத்திரத்து - நினைப் பளவில் (மனோ வேகமாக), அரண்மனையின் - அரச மாளிகையின், நீள் நெடு மங்கலம் வாயிலை எய்தலும் - நீண்டுயர்ந்த மங்களமான வாசலை அடைந்ததாக, நேமியான் தனையனும் - சக்கரவர்த்தியாகிய தசரதனின் புதல்வனான பரதனும், (தேரைவிட்டு இறங்கி), தந்தை சார்வு இடம் எய்தினன் - தந்தை (வழக்கமாகத்) தங்கும் இடத்தை அடைந்தான்.

அனைய வேலை - பரத சத்துருக்கனர் கவலையோடு இருந்த அச் சமயம். நினையும் மாத்திரத்து என்றது தேரின் விரைவு குறித்தது. தந்தையின் ஓலை பெற்றதனாலும், எவ்வகையிலும் முதலில் காண வேண்டியது தந்தையையே யாதலாலும், பரதன் தந்தையின் இருப் பிடத்துக்கு முதலில் சென்றான்.

(பி - ம்.) 1. வேலையில் அக்கடைத், வேலை அகன்கடைத், வேலையிலரசுடைத், வேலையிலச்சுடர்த், வேலையிலச்சிடைத், வேலையிலக்கணத்; தோரணி, தோரண.
2. மனையின் மாதிர, மனையினீண்டுயர், மனையினெங்கிடும், மனையினேக்கிய, மனையினன்னெடு; மங்கலவீதிகள், வாயில்கள், வாயிலின், மனையின் மங்சுல வீதிகள் யாவையும்.
3. நினையுமாத்திரத்தேகிய, மாத்திரத்தெய்தினன், மாத்திரத்தே சென்ற, மாத்திரமேகிய, நினைவின் மாத்திரத்தெய்தலும், நினைவின் மாத்திரத்தேசென்று.
4. தனையரும்; சார்விடன்; மேவினன், எய்தினர், எய்தலும். (39)

## அரசனைக் காணாது பரதன் ஐயுறுதல்

835. விருப்பி னெய்தினன் வெந்திறல் வேந்தனை
இருப்பு நல்லிட மெங்கணுங் கண்டிலன்
அருப்ப மன்றிதென் றையுற வெய்தினன்
பொருப்பு நாண வுயர்ந்தபொற் றோளினன்.

விருப்பின் எய்தினன் - (தந்தையைக் காணவேண்டுமென்ற) ஆவலோடு வந்தவனான, பொருப்பும் நாண உயர்ந்த பொன் தோளினன் - மலையும் நாணும்படி திரண்டோங்கிய அழகிய புயங்களை உடைய பரதன், வெம் திறல் வேந்தனை - மிக்க வலிமையுடைய அத் தசரதனை, இருப்பு நல் இடம் எங்கணும் - அவன் இருத்தற்குரிய நல்ல இடங்கள் எல்லாவற்றிலும், கண்டிலன் - காணாதவனாய், இது அருப்பம் அன்று என - (இவ்வாறு காணப்படாத) இது அற்பமான நிகழ்ச்சி அன்று என்று, ஐயுறவு எய்தினன் - ஐயங் கொண்டான்.

தந்தையை எங்கே தேடியும் காணாமையால், 'இது சாமானிய மன்று; ஒரு வேளை தந்தை உயிர் நீத்திருத்தலுங் கூடும்' என்று சந்தேகப்பட்டான் பரதன். எய்தினவனான தோளினன் என இயைக்க. அருப்பம்: அல்பம் என்ற வடசொல்லின் திரிபு; "அருப்ப மென்று பகையையு மாரழல், நெருப்பை யும்மிகழ்ந் தாலது நீதியோ" (யுத்த. 1047).

(பி - ம்.) 1. எய்திய, எய்தினர், எய்தியவ்; வேந்தினை; வீரனை, ஏந்தலவ் வேந்தனை.
2. இருப்பினல்லிடம்; எங்ஙனம்; கண்டிலர்.
3. அருப்பமன்றிதன்று, என்றிதன்று, அருப்பமேயிதென்று; ஐயுறல்; எய்தினர்.
4. உயர்ந்தபுயத்தினன், எழுந்தபொற்றோளினன், வளர்ந்தபொற்றோளினன், பொற்றோளினர், புயத்தினன். (40)

## பரதனைக் கைகேயி அழைப்பித்தல்

836. ஆய காலையி லையனை நாடித்தன்
தூய கையிற் றொழலுறு வான்றனைக்
கூய வன்னை குறுகுதி ரென்றொரு
வேய்கோ டோளி தொழுது விளம்பினள்.

ஆய காலையில் - அவ்வாறு ஐயங்கொண்டபோது, ஐயனை நாடி - தந்தையை (எவ்வகையிலாவது) தேடிக் கண்டு, தன் தூய கையின் தொழல் உறுவான் தன்னை - தன்னுடைய தூய கைகளால் (திருவடி பற்றித்) தொழ முற்படுகின்ற பரதனை, ஒரு வேய்கொள் தோளி - மூங்கிலை யொத்த தோள்களையுடைய ஒருத்தி, தொழுது - (எதிர்வந்து) வணங்கி, அன்னை கூயள் - உம் தாய் உம்மை அழைத்தாள், குறுகுதிர் என்று - அங்கே வருவீராக என்று, விளம்பினுள் - சொன்னுள்.

தன் மனத்தில் எழுந்த ஐயுறவினுல், தந்தையை எப்படியும் தேடிக் காணவேண்டும் என்ற மனவேகத்துடன் செல்லும் பரதனிடம், கைகேயி அனுப்பிய சேடி ஒருத்தி வந்து, 'தாயார் உங்களை அங்கே அழைத்துவரச் சொன்னுர்; வருக' என்று கூறினுள். ஐயன் - இராமபிரான் என்று கொண்டு கூறுதலும் உண்டு. பரதன் கோசலையைக் காணச் சென்ருன் என்று பொருள் கொள்ளத்தக்கவாறு பாடபேதமும் உளது.

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை. தந்தையைக் காணுத பரதன், கைகேயிபாலுள்ள பேரன்பினுல், தந்தை அவளிடம் இருத்தல் கூடும் என்று கருதி அவளது மாளிகையைத் தானுகவே சென்று அடைந்தான் என்று வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. காலையினையனை, காலத்தனையனை, காலத்திலையனை, காலத்தனையனை, காலைத்தனையனை, காதற்றனையனை; நாட்டந்த; மூ. ஆயகாலையிலையனைத் தந்தவத்;
2. தூயகையால், தூயதையல், தூயவையன், தூயதாயர்த், தூயதாயைத், தாயையன்பின்; தொழிலுறுவான்றனைத், தொழிலுறுவானைக்.
3. கூயரன்னை, கூயினன்னைக்; குறுகுதிரீண்டெடன, ஆண்டெடன, குறுகுதியென்றெரு, குறுகுதிராண்டென்ரோர்; கூயளன்னையென்றே சென்றுகூறலும்.
4. வேய்கொடோளியர் வந்து விளம்பினுர், வேய்கொடோளியொருத்தி விளம்பினள்; ஏலவன்பினன்ருனுஞ்சென்றெய்தினுன். (41)

### கைகேயி பரதனைத் தழுவி நலன் உசாவுதல்

837. வந்து தாயை யடியில் வணங்கலும்
சிந்தை யாரத் தழுவின ளதிலர்
எந்தை யென்னைய ரெங்கைய ரென்றனள்
அந்த மில்குணத் தானும தாமென்ருன்.

வந்து - (சேடியின் சொற்படி பரதன்) வந்து, தாயை - கைகேயியை, அடியில் வணங்கலும் - பாதங்களில் விழுந்து வணங்கியவுடன், (கைகேயி) சிந்தை ஆர - தன் மனம் நிறைவு கொள்ள, தழுவினள் - (பரதனை எடுத்துத்) தழுவியவளாய், எந்தை - என்

தந்தையும், என் ஐயர் - என் தமையன்மாரும், எங்கையர் - என் தங்கையரும், தீது இலர் - தீதின்றி (நலமாக) உள்ளனரோ, என்றனள் - என்று வினவினள்; அந்தம் இல் குணத்தானும் - அளவில்லா நற்குணங்களையுடைய பரதனும், அது ஆம் என்றான் - அஃது அவ்வாறே என்றான்.

வந்து வணங்கிய பரதனைக் கைகேயி எடுத்துத் தழுவித் தன் பிறந்தகத்தாரின் நலம் வினவ, அவனும் சுருங்க விடை கூறினன். தந்தையைக் காணாத மனத்துயர் பெரிதாயினும், தாய் கேட்டதற்குப் பொறுமையுடன் விடையளித்தான். 'தீதிலர்' என்றதனை ஓசை வேறுபாட்டால் வினாவாகக் கொள்க; காகுசுவரம்; அது ஆம் என்றது, தீதிலரோ என்ற வினாவிற்கு, 'அவ்வாறே தீதிலர்' என்று விடையிறுத்தபடி.

(பி - ம்.) 1. வந்த : தாயை அடியின், தாயரடியின்.
2. திதிலன்.
3. என்னையரேனையர், அன்னையரெங்கையர், அன்னையரென்னையர், அன்னையரேனையர்; என்றலும். என்றுளார்.
4. அதாமென, இதாமென. (42)

மன்னனைப்பற்றிப் பரதன் கேட்டல்

(வேறு)

838. மூண்டெழு காதலான் முளரித் தாடொழ
வேண்டினெ னெய்தினெ னுள்ளம் விம்முமால்
ஆண்டகை நெடுமுடி யரசர் கோமகன்
யாண்டையான் பணித்திரென் றிருகை கூப்பினான்.

மூண்டு எழு காதலான் - (தந்தையைக் காணுதலில்) கிளர்ந்தெழும் ஆவலுடையவனான பரதன் (தாயை நோக்கி), ஆண்தகை - ஆண்மையில் சிறந்தவரும், நெடுமுடி - நீண்ட முடி அணிந்தவரும் ஆகிய, அரசர் கோமகன் - சக்கரவர்த்தியின், முளரி தாள் - தாமரை போன்ற திருவடிகளை, தொழ வேண்டினென் எய்தினென் - (கண்டு) தொழவேண்டி விரைந்து வந்துளேன்; உள்ளம் விம்மும் - (காணாமையால்) என் மனம் ஏங்குகின்றது; யாண்டையான் - (சக்கரவர்த்தி) எங்குளான்? பணித்திர் என்று - சொல்லுங்கள் என்று, இரு கை கூப்பினான் - தன் இரு கைகளையும் கூப்பி அஞ்சலி செய்து கேட்டுக் கொண்டான்.

தந்தையை, வழக்கமாக இருத்தற்குரிய இடங்களில் காண இயலாமையால், தாயிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்து, 'யாண்டையான்? பணித்திர்' என்று விரைவு தோன்றக் கூறினான். ஐயுறவு கொண்ட அவனது மனம், அதனைத் தெளிந்துகொள்ளவே விரைந்ததாகலின், கைகேயியின் வினாக்களுக்கு முழு மனத்துடன் அவன் விடையளிக்கவில்லை.

'காதலான்' என்றது, மூன்றனுருபேற்றதெனக் கொண்டு பொருள் கூறுதலும் ஆம்; அதற்கு, எழுவாய் வருவித்துரைக்க. வேண்டினென்: முற்றெச்சம். ஆல் : அசை. அரசர் கோமகன் - அரசர்க்கரசன்; சக்கரவர்த்தி.

(பி - ம்.) 1. காதலின்; தாடொழா.
2. வேண்டினனெய்தினன், வேண்டியதிரங்கினன், வேண்டியதிரங்கியென்; விம்மலால், விம்முவான்.
3. கோன்மகன்.
4. யாண்டையன்; பணித்தியென்றங்கை. (43)

கைகேயி கூறுதல்

839. ஆனவ னுரைசெய வழிவில் சிந்தையாள்
தானவர் வலிதொலைத் தவனி தாங்கிய
தேனமர் தெரியலான் றேவர் கைதொழ
வானக மெய்தினன் வருந்த லீயென்றாள்.

ஆனவன் உரைசெய - அப்பரதன் (அவ்வாறு) கேட்க, அழிவு இல் சிந்தையாள் - கலங்குதல் இல்லாத மனத்தை உடைய கைகேயி (அவனை நோக்கி), தானவர் வலி தொலைத்து - அசுரரின் வலிமையை அழித்து, அவனி தாங்கிய - உலகைக் காத்த, தேன் அமர் தெரியலான் - தேன் பொருந்திய பூமாலையை அணிந்த சக்கரவர்த்தி, தேவர் கை தொழ - தேவரும் வணங்கும்வண்ணம், வான் அகம் எய்தினன் - சுவர்க்கத்தை அடைந்தான்; நீ வருந்தல் என்றாள் - நீ வருந்தாதே என்றாள்.

அரசர் கோமகன் யாண்டையன் என்று பரதன் கேட்ட அளவில் மனம் கலங்கி விடைகூற இயலாத நிலையெய்த வேண்டியவள், சிறிதும் கலங்காமல் செய்தி சொல்லி, நீயும் வருந்தாதே என்றமையின், 'அழிவில் சிந்தையாள்' என்றார். தனக்கு வரம் கொடுத்ததற்குக் காரணமான சம்பராசுரவதத்தை எண்ணினள். 'வானவர்க்காகத் தானவர் வலிதொலைத்தவனாதலால், வானவர் போற்ற வானுலகிலும் பெருமையும் இன்பமும் எய்துவான்; அதுகுறித்து மகிழ்க' என்றது அவள் கூறியதன் கருத்து.

(பி - ம்.) 1. மானவன்; உரைசெய்ய; வழுவில்; சிந்தையள், சிந்தையான்.
2. வலிதப, வலிதவ, வலிகெட, வலிதொலை; நிமிர்ந்ததானையத், உயர்ந்ததானையத், ஈர்ந்ததானையத்.
3. தேனலர், தேமலர், தேனமிர்.
4. எய்தினன். (44)

பரதன் நிலை

840. எறிந்தன கடியசொற் செவியி னெய்தலும்
நெறிந்தலர் குஞ்சியா னெடிது வீழ்ந்தனன்
அறிந்தில னுயிர்த்தில னசனி யேற்றினால்
மறிந்துயர் மராமர மண்ணுற் றென்னவே.

எறிந்த அன்ன - (வேலால் மருமத்தில்) தாக்கியதுபோன்ற, கடிய சொல் - (கைகேயி கூறிய) கொடுஞ் சொல், செவியின் எய்தலும் - காதிற்பட்ட அளவில், நெறிந்து அலர் குஞ்சியான் - நெறிப்புடையதாய் விரிந்து கிடந்த தலைமயிரையுடைய பரதன், உயர் மராமரம் - ஓங்கி வளர்ந்த மராமரமொன்று, அசனி ஏற்றினுல்-பேரிடியால், மறிந்து மண் உற்றது என்ன - வேரற்றுத் தரையில் சாய்ந்தது போல, நெடிது வீழ்ந்தனன் - நெடிதாகத் தரையில் விழுந்து, அறிந்திலன் - தன்னுணர் வற்றவனுய், உயிர்த்திலன் - மூச்சற்றுன்.

தந்தையைக் காணுது ஏங்கித் தவித்த பரதனுக்குக் கைகேயியின் சொல் பேரிடிபோல் ஆயிற்று. நீண்டுயர்ந்து, தலைவிரி கோலமாய் நின்ற பரதன் தாய் சொற் கேட்டு, அந்நிலையிலே தரையிற் சாய்ந்தான் என்பார், தலைவிரிந்த நெடிய மராமரம் இடியால் தரையில் சாய்ந்ததனை உவமித்துக் கூறினுர். பரதனது தலைவிரி கோலத்தை, நெறிந்தலர் என்பதனுற் குறிப்பித்தார். 'எறிந்தன' என்றதற்கேற்பக் கருவி வருவித்துரைக்கப்பட்டது. எய்தல் - அம்பெய்தல் என்ற குறிப்பும் பெறப்படும். வீழ்ந்தனன், அறிந்திலன் : முற்றெச்சம். உற்றென்ன; தொகுத்தல் விகாரம். மராமரம் - வெண்கடம்பு என்பர்.

(பி - ம்.) 1. செவியுள்.
2. நெறிந்தன, நெறிந்தபேர், நெறிந்துயர்; குஞ்சியன், குஞ்சியார்; வீழ்ந்தனர்.
3. அறிந்திலருயிர்த்திலர்.
4. மாமரம், மதவரை. (45)

### பரதன் கைகேயியைக் கடிந்துரைத்தல்

841. வாயொளி மழுங்கத்தன் மலர்ந்த தாமரை
ஆயலர் நயனங்க ளருவி சோர்தரத்
தீயெரி செவியில்வைத் தனைய தீயசொல்
நீயல துரைசெய நினைப்ப ரோவென்ருன்.

(மூர்ச்சையுற்ற பரதன் சிறிது தெளிந்து) வாய் ஒளி மழுங்க - (உடம்பில்) பொருந்திய நல்ல ஒளி மழுங்கவும், மலர்ந்த - நன்கு விரிந்த, தாமரை ஆய் அலர் - தாமரையின் அழகிய மலர்போன்ற, தன் நயனங்கள் - தன் கண்களில், அருவி சோர்தர - நீர் அருவி போலப் பெருகவும் (கைகேயியை நோக்கி), தீ எரி - (எவற்றையும்) எரிக்கும் நெருப்பை, செவியில் வைத்த(து) அனைய - காதில் வைத்தாற் போன்ற, தீய சொல் - (நீ கூசாது கூறிய) கொடுஞ்சொல்லை, நீ அலது - உன்னை யன்றி, உரை செய நினைப்பரோ - (பிறர் எவரும்) சொல்ல நினைத்தலும் செய்வரோ? (செய்யார்) என்ருன் —.

துயரம் தாங்காத பரதன், தாயைக் கடிபவனுய், 'பிறர் சொல்ல நினைக்கவும் கூசும் கொடுஞ் சொல்லை நீ வாய் கூசாது சொன்னுய்;

உன்னைப்போற் கொடியவர் இல்லை' என்றான். அவனுடம்பும் முகமும் இயல்பான பொலிவை இழந்தன.

வாயொளி : வினைத்தொகை. வாய் - முகம் எனவும், வாய் எனவும் உரைத்தலுமாம். தாமரை போல மலர்ந்த கண்கள் என்றலுமாம். தீய சொல்: 'மன்னன் வானுலக மெய்தினான்; நீ வருந்தாதே' என்றது. வைத்தனைய : தொகுத்தல் விகாரம்.

(பி - ம்.) 1. மழுங்கத்தான், மழுங்கித்தன், மழுங்கித்தான்.
2. ஆய்மலர்.
3. தியெரிசெவியின், தியிருசெவியில்; தீச்சொலை, தீச்சொல்லைத்.
4. நீயலாது; நினைப்பரோவென, நினைப்பரோவென. (46)

பரதன் புலம்புதல்

842. எழுந்தன னேங்கின னிரங்கிப் பின்னரும்
விழுந்தனன் விம்மினன் வெய்து யிர்த்தனன்
அழிந்தன னரற்றின னரற்றி யின்னன
மொழிந்தனன் பின்னரு முருகற் செவ்வியான்.

முருகன் செவ்வியான் - முருகனைப் போல் அழகுடைய பரதன், எழுந்தனன் - (கிடந்தவன்) எழுந்து நின்று, ஏங்கினன் இரங்கி - (தந்தையை நினைந்து) ஏங்கி அழுது, பின்னரும் விழுந்தனன் - மீண்டும் (நிலை கொள்ளாது) விழுந்தான்; விம்மினன் - பொருமினான்; வெய்து உயிர்த்தனன் - பெருமூச்செறிந்தான்; அழிந்தனன் அரற்றினன் - மனங் கலங்கி வாய்விட்டு அழுதான்; அரற்றி—, பின்னரும் இன்னன மொழிந்தனன் - மேலும் இவற்றைச் சொல்லலானான்.

பரதன் புலம்பிக் கூறியவை மேலே ஒன்பது கவிகளிற் கூறப்படும். வினைமுற்றுக்களை அடுக்கிச் சொன்னது அவனுடைய சோகத்தால் விரைவாக எழுந்த மெய்ப்பாடுகளைக் குறித்தது.

எழுந்தனன், ஏங்கினன், அழிந்தனன் என்பன முற்றெச்சங்கள். செவ்வி - அழகு.

(பி - ம்.) 1. இரங்கினன் ஏங்கிப்.
3. அழுந்தினன்; அரற்றியின்னணம், அயர்ந்து வீழ்ந்தனன்.
4. முருகச், முருகிற், முகிலிற். (47)

843. அறந்தனை வேரறுத் தருளைக் கொன்றனை
சிறந்தநின் றண்ணளித் திருவைத் தேசழித்
திறந்தனை யாமெனி னிறைவ நீதியை
மறந்தனை யுனக்கதின் மாசு மேலுண்டோ.

இறைவ - அரசே, அறம் தனை வேர் அறுத்து - தருமத்தை வேர் பறித்து, அருளை கொன்றனை - அருளையும் அழித்து, சிறந்த நின் தண் அளி திருவை - சிறந்த உன்னுடைய தண்ணளி செய்தலாகிய செல்வத்தை, தேசு அழித்து - ஒளி கெடச் செய்து, இறந்தனை எனின்- நீ இறந்தாயென்றால், நீதியை மறந்தனை (ஆம்) - அரச நீதியை மறந்து விட்டாயென்றாகும்; உனக்கு இதின்மேல் மாசு உண்டோ - உனக்கு இதன்மேலும் களங்கமுண்டோ ?

ஆராமையால் கூறிய இது, பழிப்பது போலத் தோற்றினும், தசரதன் ஆட்சியில் அறமும் அருளும் அரச நீதியும் நிறைந்து சிறந் திருந்தன என்றலின், பழித்தலன்று; புகழ்தலே ஆகும்.

கொன்றனை: முற்றெச்சம். இறந்தனை ஆம் என்றதில் 'ஆம்' என்பது, பிரித்து மறந்தனை என்பதனோடு கூட்டப்பெற்றது.

(பி - ம்.) 1. கொன்றயற், கொன்றுயர், கொன்றுயிர், கொன்றயான்.
3. இறந்தனையாலெனில்; இறைவர் நீதியை, இறைவனீதியை.
4. இதன்மாசு, இனிமாசு; வேறுண்டோ, வேண்டுமோ. (48)

844. சினக்குறும் பெறிந்தெழு காமத் தீயவித்
தினக்குறும் பியாவையு மெற்றி யாவர்க்கும்
மனக்குறு நெறிசெலும் வள்ளி யோய்மறந்
துனக்குறு நெறிசெல லொழுக்கின் பாலதோ.

சினம் குறும்பு எறிந்து - சினமாகிய பகையை அழித்து, காமம் தீ அவித்து - காமமாகிய தீயை அடக்கி, இனம் குறும்பு யாவையும் எற்றி - (உட்பகை ஆறனுள் மேல் இரண்டுக்கும்) இனமான ஏனைய எல்லாவற்றையும் தாக்கி ஒழித்து, யாவர்க்கும் மனக்கு உறு நெறி செல்லும் - எவர்க்கும் மனத்துக்குப் பொருந்திய செவ்விய நெறியில் செல்லுதலுற்ற, வள்ளியோய் - வன்ளன்மையுடையவனே, மறந்து - (இத்தன்மையைக்) கைவிட்டு, உனக்கு உறுநெறி செல்லல் - உனக்கு (மறுமையில்) இன்பமுளதாகும் நெறியிலே செல்லுதல், ஒழுக்கின் பாலதோ - சீறிய ஒழுக்கத்தின்பாற்படுவதாகுமோ? (ஆகாது).

தசரதன் இருந்தவரையில், தன்னலமின்றி மன்னுயிர்க்கு நலமே நாடிச் செய்தவன் இப்போது சென்றது தன்னலங் கருதியதாகலின், 'ஒழுக்கின்பாலதோ' என்றான். இதுவும் முன்னையது போன்றது. காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என ஓரின மான உட்பகை ஆறனுள், காமம் குரோதம் என்ற இரண்டையும் எடுத்துக் கூறி, "இனக் குறும்பு யாவையும்" என்றதனால், இவ்விரண்டும் ஒழிந்த ஏனைய நான்கும், இவற்றைச் சார்ந்து வரும் தீமைகள் பிறவும் கொள்ளத்தகும். தீய பிறத்தல் சினத்தால் வருவதாகலின் முற்கூறினர். புறப் பகையை அழித்தற்குரிய 'எறிந்து', 'எற்றி' என்ற வினைகளால் இவற்றையும் கூறினர்.

(பி - ம்.) 1. எறிக்தெழும் காமத் தீயெழுத்து.
2. யாவையுமாற்றி, யாவையுமேற்றி; இனக்குறும்புலோபையுமாற்றி, உலோபையுமெற்றி, உலோபையுமொற்றி, இனக்குறையாவர்க்குமெற்றி, உரிமையுமெற்றி, யாவையுமகற்றி.
3. மனக்குறி; நெறிசெல்லும் நெறிசொலும்; வள்ளியோய்மறைந்து.
4. உனக்குறுநெறிசெல, கதிசெல, கதிசெலல், கெதிசெல, தனக்குறுநெறிசெலல்; தவத்தின்பாலதோ. (49)

845. முதலவன் முதலிய முந்தை யோர்பழங்
கதையையும் புதுக்கிய தலைவ கண்ணுடை
நுதலவன் சிலைவலி நோன்மை நூறிய
புதல்வனை யெங்ஙனம் பிரிந்து போயினாய்.

முதலவன் முதலிய - நம் குல முதல்வனான மனுமுதலான, முந்தையோர் - முன்னோர்களின், பழங்கதையையும் - (வீரமும் நீதியும் பற்றிய) பழைய வரலாறுகளையும், புதுக்கிய - உன் செயலால் புதுப்பித்த, தலைவ - தலைமையுடையவனே, கண் உடை(ய) நுதலவன்- நெற்றிக் கண்ணையுடைய சிவபிரானது, சிலை வில்லின் நோன்மை - மலைபோன்ற வில்லின் வலிமையை, நூறிய - (எளிதில்) அழித்த, புதல்வனை - அரும்புதல்வனாகிய இராமனை, எங்ஙனம் பிரிந்து போயினாய் - எவ்வாறு பிரிந்து போனாய் ?

இதுகாறும் தந்தையின் தண்ணளியையும் நீதியையும் குறித்துக் கூறிய பரதன், இதில் நீதியோடு வீரத்தையும் குறிக்கின்றான். குல முதல்வனான மனு நீதியாலும், அவன் பின்வந்த இட்சுவாகு முதலியோர் வீரத்தாலும் மேம்பட்டவர்களாய்த் தம் வரலாற்றைப் பின்னோர் கதையாகச் சொல்லிப் பாராட்ட விளங்கியவர்கள்; தசரதன், அவற்றை நேரே அனைவரும் காணும்படி விளங்கினான்; அவனது ஆட்சியால் நீதியும், சம்பரனை வென்றதால் அரிய வீரமும் புலப்பட்டன; எனவே, 'முந்தையோர் பழங்கதையையும் புதுக்கிய தலைவன்' எனப் பெற்றான். தலைவன் என்று பாடம் கொண்டு இராமன் எனக்கொண்டு கூறுதலுமாம். அடுத்து இராமபிரானையே உயிராகக் கொண்டவனாதலின் (பால. 302, பார்க்க), 'அவ்விராமனை எங்ஙனம் பிரிந்து போயினாய்' என்கின்றான். முதல்வன் மனு என்றமை: "ஆதித்தன் குல முதல்வன் மனுவினையா ரறியாதார்" (பால. 712). சிலைவில் - மலை போன்ற வில்; மேரு மலையின் அமிசமான வில்லெனவுமாம் (பால. 774); சிலை யென்னும் மரத்தாற் செய்த வில் என்பர் நச்சினார்க்கினியர் (கலி. 15 : 1, உரை); முழங்கும் வில் என்பாரும் உளர்; சிலைவில் (குறுந். 385; ஐங்குறு. 363; அகநா. 69: 15; பெருங். 3.20:8). இராமபிரான் வில்லின் வலிமை கெடுத்தது. சனகன் வைத்த வில், பரசுராமன் கை வில் என்ற இரண்டுக்கும் பொருந்தும்.

(பி - ம்.) 1. முதல்வனே முதலிய.
2. தலைவன்.
3. சிலைவலின் வலிமை, சிலைவலிநோன்மை, மலைவலிஞேன்மை, ஒண்சிலை நோன்மை; வலிமை.
4. எங்கனம்; போயினன். (50)

846. செவ்வழி யுருட்டிய திகிரி மன்னவ
எவ்வழி மருங்கினு மிரவ லாளர்தாம்
இவ்வழி யுலகினி லினிய நண்பிஞேர்
அவ்வழி யுலகினு முளர்கொ லோவையா.

செம்மை வழி உருட்டிய - நேர்மையான நெறியிலே செலுத்திய, திகிரி - ஆணைச் சக்கரத்தையுடைய, மன்னவ - அரசே, ஐயா - என் ஐயனே, இ வழி உலகினில் - இவ்வுலகத்தில், இனிய நண்பிஞேர்- (உனக்கு) இனிய நட்பாளராவோர், எ வழி மருங்கினும் இரவல் ஆளர் தாம்-எங்கும் உள்ள இரவலரே ஆவர்; அ வழி மருங்கினும் - அவ்வுல கத்திலும், உளரோ - (அவ்விரவலர்) இருக்கின்றனரோ? (இல்லையே).

தசரதன், இரப்போர் கடலை ஈந்தே கடந்தான் (பால.173) ஆகலின், 'உனக் கினிய நண்பினர் இரவலாளர்தாம்' என்ருன்; "இரவலர் தமரினு மினிய ராவரே" (நைடத. நளன்தூது. 22). இராமனைப்பிரிந்து எங்ஙனம் சென்ருய் என்றவன், 'அதுபோல, இரவலருக்கு ஈதற் பொருட்டேனும் இங்கிருத்தலாகாதோ? விண்ணுலகில் ஏற்பார் எவரும் இலரே!' என்கின்ருன். "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்" (குறள். 1058, பரிமேல். மேற்.) புறநா. 38 12 - 5, அடிக் குறிப்பும் பார்க்க. கொல் : அசை. ஓகாரம் எதிர்மறை உணர்த்திற்று.

(பி - ம்.) 1. மன்னவன்.
2. எவ்வழிமரபினும், மரபினர், மன்னரும், ஆயினும்; இரவலாளர்கள், இரவலாளராம், இரவலாளரும், இரவலார்களில், இரவலார்மற்று.
3. உலகினின், உலகினும்; இனியநண்பினர், நண்பரும், இயைந்த நண்பிஞேர், இன்மை நண்பிஞேர், நண்ணினர், நண்ணிஞேர்.
4. உலகினுமுளர்கொலாம், ஆர்கொலாம், உலகினிலார்கொலாம், ஆர்கொலோ, உலகினிஞர்கொலாம், உலகினுளுளர்கொலோ, உலகிலுளர்கொலாம். (51)

847. பற்பக னிழற்றுநின் கவிகைப் பாய்நிழல்
நிற்பன பல்லுயி ருணங்க நீநெடுங்
கற்பக நறுநிழல் காத லித்தியோ
மற்பக மலர்ந்ததோண் மன்னர் மன்னனே.

மல் பக - பிறருடைய மற்போர்த் திறமை கெடும்படி, மலர்ந்த தோள் - விரிந்த தோள்களையுடைய, மன்னர் மன்னனே - அரசர்க்கு

அரசே, பல் பகல் - மிக நெடுங்காலமாக, நிழற்றும் - (உயிர்களுக்கு) நிழலைத் தந்த, நின் கவிகை - உனது வெண்கொற்றக் குடையின், பாய்நிழல் - பரந்த நிழலில், நிற்பன பல் உயிர் - இன்பமாகத் தங்கி யிருந்த பல உயிர்களும், உணங்க - (நிழற்றுவாரின்றி) வாட, நீ—, நெடு கற்பகம் நறுநிழல் - பெரிய கற்பக மரத்தின் நறுமணம் பரவும் இனிய நிழலை, காதலித்தியோ - விரும்புகின்றாயோ?

காப்பாரின்றி உயிர்கள் வருந்த, உனக்கு இன்பந் தேடிக்கொண்ட இது முறையாகாது என்ற இதுவும் பழிப்பதுபோலத் தோற்றினும், அவனது ஆட்சிச் சிறப்பைக் குறித்தலின் புகழ்ச்சியேயாம். பல்பகல் என்றது, அறுபதினாயிரம் ஆண்டாகிய கால நீட்டிப்பைக் குறித்தது. பாய்தல் - பரவுதல்.

(பி - ம்.) 1. கவிகைபாய்நிழல், பார்நிழல், பாணிழல், கவிகைப்பார்நிழல், கவிகைப்பானிழல்.
2. பலவுயிர், பல்லுரு; உணங்க நீணெடும், உணங்கி நீணெடும்.
3. நறுநிழற்காதலித்தியோ.
4. மற்பக மலைந்த. (52)

848. இம்பர்நின் றேகினை யிருக்குஞ் சார்பிழந்
தும்பர்வந் துன்கழ லொதுங்கி னார்களோ
சம்பர னனையவர் தானைத் தானவர்
அம்பரத் தின்னமு முளர்கொ லோவையா.

ஐயா - ஐயனே, இம்பர் நின்று ஏகினை - நீ இவ்வுலகினின்றும் (விண்ணுலகு) சென்றாய்; (அதற்குக் காரணமாக) உம்பர் - தேவர்கள், இருக்கும் சார்பு இழந்து - தாம் இருக்கும் இடத்தை இழந்து (தங்க இடம் இன்றி), வந்து - இங்கு வந்து, உன் கழல் ஒதுங்கினார்களோ - உன் பாதங்களில் சரண் புகுந்தார்களோ? சம்பரன் அனையவர் - சம்பராசுரனைப் போன்றவர்களான, தானை தானவர் - பெரும் படையையுடைய அசுரர், அம்பரத்து - விண்ணுலகில், இன்னமும் உளர் கொலோ - இன்னமும் இருக்கின்றார்களோ?

'ஐயனே, முன்னம் நீ, தேவர்களுக்குச் சம்பராசுரனால் நேர்ந்த துன்பத்தைப் போக்கி அவர்களைக் காத்தாய்; அது போன்றது ஏதேனும் இப்போதும் அவர்களுக்கு நிகழ்ந்ததாக, அவர்கள் உன்னைச் சரணடைந்தார்களோ? அதனாலேதான் அவர்களைக் காத்தற்காக அங்கே சென்றாயோ?' என்கின்றான். 'உன் நலம் நாடிச் சென்றாய்', 'உயிர்களை வருந்தவிட்டுச் சென்றாய்' என்று முன்னே கூறியவன், அவை தந்தையின் பெருமைக்குத் தகாவென்று கருதி, 'முன்போல இப்போதும் தேவர்க்குதவியாகச் சென்றாயோ?' என்றான்.

(பி - ம்.) 1. சார்விழந்து.
2. ஒதுங்கினர் கொலாம், ஒதுங்கினர்கொலோ, எய்தினர்கொலாம், எய்தினர்களோ.
3. சம்பரனனையவத், அனையவான்; தானத்தானவர், தருக்குந்தானையர்.
4. உயிர்கொலாமையா. (53)

849. இயங்கெழு தானைய ரிறுத்த மாத்திறை
உயங்கலின் மறையவர்க் குதவி யும்பரின்
அயங்கெழு வேள்வியோ டரசர்க் கோதிய
வயங்கெரி வளர்க்கலை வைக வல்லையோ.

இயம் கெழு தானையர் - (பலவகை) வாத்தியங்களின் ஒலிமிக்க படைகளையுடைய (பல) அரசர்கள், இறுத்த - (உனக்குச்) செலுத்திய, மா திறை - மிக்க திறைப்பொருள்களையெல்லாம், உயங்கல் இன் மறையவர்க்கு உதவி - (விரதங்களால் உடம்பு) வருந்துதலையுடைய இனிய வேதியர்க்கு(த் தானமாக)க் கொடுத்து, அயம் கெழு வேள்வி யோடு - அசுவமேதத்தோடு, அரசர்க்கு ஓதிய - அரசருக்குச் சொல்லப் பட்ட, வயங்கு எரி வளர்க்கலை - விளங்கும் தீ வளர்த்துச் செய்வன வற்றையும் (இங்கிருந்து) செய்யாமல், உம்பரின் வைகவல்லையோ - விண்ணுலகில் (வறிதே) தங்கியிருக்க வல்லாயோ?

தசரதன் செய்யாது விட்ட யாகங்கள் இல்லை; எவற்றினும் மேலான அசுவமேதமும் செய்து அந்தணர்க்கெல்லாம் அளவின்றித் தானம் செய்தான். விண்ணுலகில் இவற்றிற்கெல்லாம் இடமில்லையாதலால், 'இவற்றை விட்டு அங்கே தங்கியிருத்தல் உன்னாலாகுமோ? இங்கேயே தங்கியிருக்கலாமே' என்கின்றான். இதுவும் தசரதனுடைய வேள்விச் சிறப்பும், தானச் சிறப்பும் கூறியதாகும்.

அயம் - குதிரை. அயம் கெழு வேள்வி - பரிவேள்வி; அசுவமேதம். உயங்கல் இல் என்று பிரித்துப் பொருள் கோடலும் ஆம். வளர்க்கலை: முற்றெச்சம். தசரதன் யாகங்கள் பல செய்தமை: பால. 171. திறைப் பொருளைப் பலர்க்கும் உதவல்: "வேந்து தந்த பணிதிறையாற், சேர்ந்தவர் கடும்பார்த்தும்", "பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின், நகைப்புல வாணர் நல்குர வகற்றி" (புறநா. 22: 26 - 7; 387 : 12 - 13).

(பி - ம்.) 1. இயங்கெழும்; தானையரிறுத்த மாத்திரை, தானையவ்விறுத்த மாத்திறை, தானையாயிறுத்த மாத்திறை, தானையர்க்கிறைவ நீனிதி, தாயரினிறுத்த மாத்திறை.
2. உயங்கெழு.
3. வேள்வியோ டமரர்க்காக்கிய, அமரர்க்கேவிய, அமரர்க்கேயவி, அரசற்காக்கிய, அரசற்கெய்திய, அரசற்கேவிய, அரசற்கோதிய, அரசர்க்காக்கிய, அரசர்க்கேவிய.
4. வளர்த்தனை, வளர்த்தலை, வளர்த்திலை, வளர்க்கிலை; வைகல்; மறத்தல், மறக்க. (54)

850. ஏழுயர் மதகளிற் றிறைவ வேகினை
வாழிய கரியவன் வறியன் கையெனப்
பாழியம் புயத்துநின் பணியி னீங்கிலா
ஆழியை யினியவற் களிக்க வெண்ணியோ.

ஏழு உயர் - ஏழு முழம் உயர்ந்த, மதம் களிறு - மதம் பெருகும் அரசுவாவினையுடைய, இறைவ - சக்கரவர்த்தியே, கரியவன் - கரிய திருமேனியையுடைய இராமபிரான், வாழிய - அரசவாழ் வெய்துதற்கு, கைவறியன் என - (தான் தாங்கவேண்டிய) சக்கரமின்றி வெறுங் கையனா யிருக்கின்றானே யென்று கருதி, பாழி அம் புயத்து - வலிய அழகிய தோள்களையுடைய, நின் பணியின் நீங்கு இல்லா - உன் பணியில் நீங்காதிருக்கின்ற, ஆழியை - ஆணைச் சக்கரத்தை, இனிய வற்கு - (அனைவர்க்கும்) இனியவனான அவ்விராமபிரானுக்கு, அளிக்க எண்ணியோ - கொடுக்க நினைத்தோ, ஏகினை - இங்கு நின்றும் போயினை?

'ஆணைச்சக்கரந் தாங்கி அரசேற்பதற்குரிய இராமபிரான், நீ உள்ளவரை அது செய்யானென்று கருதி, ஆணைச் சக்கரத்தை அவன்பால் அளிக்கக் கருதியே நீ இங்குநின்றும் போய்விட்டாய் போலும்' என்று படைத்துக் கூறுகின்றான். இராமன் திருமால்; சக்கரம் அவனுக்கு உரியது; அதனை அவனிடம் சேர்ப்பித்தல் வேண்டும் என்ற கருத்தும் தொனித்தல் காண்க. 'திருமால் சக்கரமின்றி வறிய கைகளை உடையவராயிருக்கின்றார்; இனி அவர்க்கு இதனை அளிப்போம் என்று எண்ணியோ ஏகினை' (கம்ப. பழைய வசனம்) என்பதும் நோக்கத்தகும்.

ஏழு முழம் உயர்ந்திருப்பது உத்தம யானையின் இலக்கணம். இனி, ஏழு - ஏழு உறுப்புக்கள் எனலுமாம். அவை யாவன: கால்கள், வால், துதிக்கை, கோசம். இவை நிலந்தோய அமைதல் சிறப்பு.

(பி - ம்.) 1. மதக்களிற்று, மழகளிற்று.
2. வாழியர், வாழியற், வாழியான், வாழியாய்; வலியன்கையெனப்.
3. புயத்தினின்; பணியினீங்கலா, பணியை நீங்கலா, பணியு நீங்கலா, பாணி நீங்கலா.
4. இனிதவற்கு, அனையவற்கு; எண்ணியே. (55)

851. பற்றிய தவத்தினிற் பயந்த மைந்தற்கு
முற்றுல களித்தது முறையி னெய்திய
கொற்றவன் முடிமணக் கோலங் காணவும்
பெற்றிலை போலுநின் பெரிய கண்களால்.

பற்றிய தவத்தினில் பயந்த மைந்தற்கு - நீ மேற்கொண்ட தவத்தாற்பெற்ற (மூத்த) புதல்வனுக்கு, முற்று உலகு அளித்து - (நீ ஆண்ட) உலகமுழுதும் கொடுத்து, அது - அவ்வுலகத்தை, முறையின்

எய்திய - முறைப்படி அடைந்த, கொற்றவன் - அரசனுன இராமபிரானுடைய, முடி மணம் கோலம் - முடிசூடிய மங்கலக் கோலத்தை, நின் பெரிய கண்களால் - விசாலமான உன் கண்களால், காணவும் பெற்றிலே - காணப் பெற்ருயும் இல்லே.

'பிரிதற்கரிய இராமபிரானேப் பிரிந்த நீ, அவன் அரசு பெறுமாறு விட்டுச் சென்ருயெனின் அவனுக்கு அரசளித்து முடிசூட்டி, அந்தக் கோலத்தைக் கண்ணுரக் கண்டு மகிழ்ந்த பின்னரேனும் போயிருக்கலாகாதோ? அதுவுமின்றிச் சென்ருயே!' என்கின்ருன். தவம் - விரதங்களும், அசுவமேதமும், புத்திரகாமேட்டியுமாகியவை. பரதன் தான் அரசு பெறுதலேக் கனவிலுங் கருதாதவனுதலால், 'மூத்தவற்குரித்தரசு' என்ற முறைப்படி பெறுதற்குரிய இராமபிரானேக் 'கொற்றவன்' என்ருன். முடிபுனேதலும் ஒரு மணமேயாகும். "அவனி மாதெனும், ஒருமகள் மணமுங்கண் டுவப்ப வெண்ணினேன்" (29) என்ற தசரதன் கூற்ருல், அவன் அதனேக் காணவே விரும்பி இருந்தான் என்பதும் பெறப்படும். போலும்! ஒப்பில் போலி.

(பி - ம்.) 1. பற்றிலே, பற்றறு, பற்ருறு; பலமென், பவமென்.
2. அளித்துந், அளித்தன, அளித்துள; முறையுள்; ஏகிய, ஓங்கிய.
3. கொற்றவ மணிமுடிக், கொற்றவன் மணிமுடிக், கொற்றநன் மணிமுடிக், முடிமணக், கொற்றநின் முடிமணக்.
4. பெற்றிலேயைய; உன் பெரிய. (56)

பரதன் ஒருவாறு தேறிக் கைகேயியை வினவுதல்

852. ஆற்றல னின்னன பன்னி யாவலித்
தூற்றுறு கண்ணின னுருகு வான்றனேத்
தேற்றின ளன்னேதான் சிறிது தேறிய
கூற்றுறழ் வரிசிலேக் குரிசில் கூறுவான்.

ஆற்றலன் - (துயரம்) தாங்க மாட்டாமல், இன்னன பன்னி - இவை போன்றவற்றைச் சொல்லி, ஆவலித்து - அழுது, ஊற்று உறு கண்ணினன் - நீர் ஊறிப் பெருகும் கண்களே உடையவனுய், உருகுவான் தன்னே - மனமுருகும் மகனே, அன்னே தேற்றினள் - தாயாகிய கைகேயி (ஒருவாறு) தேற்றினுள்; (அதனுல்), சிறிது தேறிய - ஒரு சிறிது தேறுதலுற்ற, கூற்று உறழ் வரிசிலே குரிசில் - யமனேப் போன்ற கட்டமைந்த வில்லேயுடைய பரதன், கூறுவான் - (அவனே நோக்கிக்) கூறலானுன்.

அவன் கூறியது அடுத்த பாடலுள் வரும்.

ஆற்றலன், கண்ணினன்: முற்றெச்சம். ஆவலித்தல் - அழுதல். உருகுவான்: வினேயாலணேயும் பெயர். தன்: சாரியை. தான்: அசை. 'தேறிய குரிசில்' என்றியைக்க.

(பி - ம்.) 1. ஆற்றிலன், ஆற்றலின்; இன்னணம்.
2. ஊற்றிய கண்ணினும், கண்ணினீர்.
3. தேற்றினளொருவகை, தேற்றினரொருவழி, தேற்றினனொருவகை; தேறியக்.
4. கூற்றுறு, குருசில். (57)

பரதன் கூறுதல்

853. எந்தையும் யாயுமெம் பிரானு மெம்முனும்
அந்தமில் பெருங்குணத் திராம னாதலால்
வந்தனை யவன்கழல் வைத்த போதலால்
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்க லாதென்றான்.

(சிறிது தேறிய பரதன்) எந்தையும் - எம் தந்தையும், யாயும் - எம் தாயும், எம்பிரானும் - எம் கடவுளும், எம் முனும் - எம் தமையனும் (ஆகிய எல்லாம்), அந்தம் இல் பெரும் குணத்து - எல்லை இல்லாத பெருங் குணங்களையுடைய, இராமன் ஆதலால் - இராமபிரானே யாதலால், அவன் கழல் - அவனுடைய திருவடிகளில், வந்தனை வைத்தபோது அல்லால் - என் வந்தனையைச் சமர்ப்பித்தாலன்றி, சிந்தை - என் மனத்துள்ள, வெம் கொடும் துயர் தீர்கலாது - மிகக் கொடிய துயரம் தீராது, என்றான் - என்று (தாயை நோக்கிக்) கூறினான்.

இதுவரை தந்தையையே நினைந்து அழுதரற்றிய பரதன், இனி அதனாற் பயனில்லை என்று தேறி, இராமபிரானை நினைந்தவனாய், 'அவனைக் கண்டேனும் துயர் தணிவோம்' என்று கருதித் தாயிடம் கூறினான். இராமபிரான்பால் பரதனுக்குள்ள அன்பு யாவரும் அறிந்ததே; அவன் கேகயநாட்டினின்றும் புறப்படும்போதே, 'தம் முனைக் காணலாமெனும் ஆசை கடாவப் புறப்பட்டான்' (802); சத்துருக்கனும் எப்போதும் பரதன் வழி நிற்பவன்; அவனையும் உளப் படுத்தியே பரதன், 'எம் தந்தை' முதலியனவாகப் பன்மையாற் கூறினான். இராமபிரான் குணச் சிறப்பு: "எண்ணருங் குணத் தினவன்" (பால. 98); "குணங்களா லுயர்ந்த வள்ளல்" (பால. 555); "நினைவருங் குணங்கொ டன்றோ விராமன்மே னிமிர்ந்த காதல்" (1033); "ஏத்தரும் பெருங்குணத் திராமன்" (1199); "இகழ்வரும் பெருங்குணத் திராமன்" (சுந்தர. 155.); "நவையறு குணங்க ளென்னும், பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி" (யுத்த. 1588). வெங்கடும் : ஒருபொருட் பன்மொழி.

(பி - ம்.) 1. எந்தையுமாயும், எந்தையுமியாயும், எந்தையும்யாவும், எந்தையுமியாவும், எந்தையும் யாவையுமுலகும்.
4. கடுந்துயர், கடுங்கனல்; தீர்க்கலாது, தீர்கிலாது. (58)

இராமன் வனம் சென்றமையைக் கைகேயி கூறுதல்

854. அவ்வுரை கேட்டலு மசனி யேறன
வெவ்வுரை வல்லவண் மீட்டுங் கூறுவாள்
தெவ்வடு சிலையினுய் தேவி தம்பியென்
றிவ்விரு வோரொடுங் கானத் தானென்ருள்.

அ உரை கேட்டதும் - (பரதன் கூறிய) அந்த வார்த்தையைக் கேட்டவுடன், அசனி ஏறு அன்ன வெவ் உரை வல்லவள் - இடியேறு போன்ற கொடுஞ் சொல்லைச் சொல்ல வல்லவளாகிய கைகேயி, மீட்டும் கூறுவாள் - மீண்டும் (முன்போலச்) சொல்லுகின்றவள், தெவ் அடு சிலையினுய் - பகைவரை அழிக்கவல்ல வில்லேந்தியவனே, (அவ்விராமன்) தேவி தம்பி என்ற இவ் இருவோரோடும் - தேவியும் தம்பியுமாகிய இவ்விருவருடனும், கானத்தான் - காட்டில் உள்ளான்; என்ருள்—.

கைகேயி, முன்னே தசரதனைப்பற்றிச் சொன்னபோதும், கேட்போர்க்குப் பேரிடி போன்ற சொல்லைச் சிறிதும் கலக்கமின்றிச் சொன்னுள்; இப்போது இராமபிரானைப்பற்றியும் அவ்வாறே சொல்லுகின்ருள் ; ஆதலின், 'அசனியேறன்ன வெவ்வுரை வல்லவள் மீட்டுங் கூறுவாள்' என்ருர். இராமன் இருக்குமிடத்தைக் குறிக்கும்போது, அவன் பெயரைக் கூருமலே, 'தேவி, தம்பி என்ற இருவரோடும் சென்று கானத்தில் இனிதாக இருக்கின்ருன்; அங்கும் அவன் தனியே துன்புருன்' என்கின்ருள். 'நீ அரசை ஏற்று ஆளுதற்கு உரியவன்' என்ற குறிப்புத் தோன்றப் பரதனை, 'தெவ்வடு சிலையினுய்' என்ருள்.

(பி - ம்.) 1. அசனியேறென, ஏறென்ன, ஏறன்ன, ஏற்றன்ன.
2. மீண்டும்.
3. தெவ்வரு; தம்பியோடு.
4. இவ்விவரொடு கெடும், இவ்வவரொடு நெடும், இவ்வவரோடும் வெம், இவ்விவரோடும்வெம், இவ்விவரோடும்போய்க், அவ்வவரொடுநெடும், அவ்விவரொடுநெடும்; கானத்தெய்தினுன், கானத்தேகினுன். (59)

பரதன் நொந்து கூறுதல்

855. வனத்தின னென்றவ ளிசைத்த மாற்றத்தை
நினைத்தன னிருந்தன னெருப்புண் டானென
வினைத்திற மியாதினி விளைப்ப தின்னமும்
எனைத்துள கேட்பன துன்பம் யானென்ருன்.

வனத்தினன் என்று அவள் இசைத்த மாற்றத்தை - (இராமன்) காட்டிலுள்ளான் என்று அக்கைகேயி சொன்ன வார்த்தையை, நினைத்தனன் - (பரதன் பலகால்) நினைத்தவனுய், நெருப்பு உண்டான் என இருந்தனன் - நெருப்பை உண்டவன் போன்ற நிலையெய்தி(ச்

சிறிது போது) இருந்து, (பின்னர்) வினை திறம் - (என்) தீவினையின் கூறுபாடு, இனி விளைப்பது யாது - இன்னும் விளைக்கத்தக்க கொடுமை யாதுளதோ, இன்னமும் யான் கேட்பன துன்பம் - மேலும் நான் கேட்கவிருக்கும் துன்பச் செய்திகள், எனைத்து உள - எத்துணை உள்ளனவோ! என்றான்—.

இராமன் காட்டில் உள்ளான் என்ற வார்த்தையைக் கேட்ட பரதன் அடைந்த துன்பத்தை முதலில் கூறி, இன்னும் இதுபோலக் கேட்கத்தக்கன எத்தனை உளவோ என அவன் நடுங்கினான் என்றார். பரதன் தேரில் வரும்போதே நாட்டின் நிலைகண்டு அஞ்சி, "சென்று கேட்பதோர் தீங்குளது" (823) என அநுமானித்தான்; "ஒருவகைத் தன் றுறுதுயர்" (833) என்றான் சத்துருக்கன்; இவற்றிற்கேற்பப் பேரிடி போன்ற இரண்டு செய்திகள் செவிப்பட்டன; அதனால், 'இன்னமும் கேட்பன எனைத்துளவோ' என நடுங்குகின்றான். நினைத்தனன், இருந்தனன் என்பவற்றை முற்றெச்சமாக்கி முடிக்க.

(பி - ம்.) 1. *உரைத்த மாற்றத்தை.*
3. *யாதினிவிளைவது, வினையது, யானினிவிளைப்பது, இனையன விளைப்பது.*
4. *துன்பம் யானெனன்பான், யாதென்றான், யாமென்றான், இன்னம் யானென்றான், நும்மையானென்றான், யானென்பான்.* (60)

**இராமபிரான் வனம் சென்றதன் காரணம் வினவுதல்**

856. ஏங்கின விம்மலோ டிருந்த வேந்தலப்
பூங்கழற் காலவன் வனத்துப் போயது
தீங்கிழைத் ததனினோ தெய்வஞ் சீறியோ
ஓங்கிய விதியினோ யாதி னோவெனா.

ஏங்கினன் - மிக்க ஏக்கங்கொண்டு, விம்மலோடு இருந்த ஏந்தல் - பொருமலோடு இருந்த அப்பரதன், அ கழல் பூ காலவன் - அந்த வீரக்கழலணிந்த பூப்போலும் திருவடிகளையுடைய இராமபிரான், வனத்து போயது - காட்டிற்குச் சென்றது, தீங்கு இழைத்ததனினோ - (ஏதேனும்) பெருங் குற்றம் புரிந்ததனாலோ? (அல்லது) தெய்வம் சீறியோ - தெய்வக் குற்றத்தாலோ? (அல்லது) ஓங்கிய விதியினோ - எவற்றினும் மேம்பட்ட ஊழ்வினையாலோ? யாதினோ - எதனாலோ? எனா - என்று வினவி.

இது குளகம்; அடுத்த பாட்டில் அருளுவீரென்றான் என்பதனோடு முடியும்.

இராமபிரான் வனம் போவதற்குத் தக்க காரணம் ஏதேனும் இருத்தல் வேண்டும்; 'குருக்களை யிகழ்தல் முதலிய பெருங் குற்றம் புரிந்தோர் காட்டிற்குத் துரத்தப்படுவர்; அல்லது, தெய்வக் குற்றத்தால்

மதிமயங்கி மருள்கொண்டு திரிவர்; அல்லது, விதி வசத்தால் செருக்கு மேலிட்டுச் சூது போர், மோது போர் முதலியவற்றில் தலைப் பட்டு அதன் பயனாக நாடுகடத்தல் நேரலாம்; இவற்றுள் ஏதேனும் நிகழ்ந்ததா அன்றி, வேறு காரணமுண்டா?' என்று ஐயுற்று வினவினான். அந்தமில் பெருங்குணத்திராமனுக்கு, இவற்றுள் ஒன்றும் எய்துதற்கு இடமில்லையே என்பது பரதன் கொண்ட ஐயுறவு; அதனாலேயே, 'யாதினோ' என்றான்.

(பி - ம்.) 1. ஏங்கின, ஏக்தலம்; வேக்தயல், வேக்தரப்.
2. பூங்கழற் காவலன்; வனத்துட்போயது, வனத்துப்போனது, கானம் போனது.
3 இழைத்ததனிலோ, தெய்வஞ்சிறிலோ, சிறவோ, தேவர்மாயமோ.
4. யாதினோவென்றான். (61)

வனம் போனது எப்பொழுது என்றல்

857 தீயன விராமனே செய்யு மேலவை
தாய்செய லல்லவோ தலத்து ளோர்க்கெலாம்
போயது தாதைவிண் புக்க பின்னரோ
ஆயதன் முன்னரோ வருளு வீரென்றான்.

தீயன - தீய செயல்களை, இராமனே செய்யுமேல் - இராமபிரானே செய்வானாகில், அவை - அத்தீய செயல்கள், தலத்து உள்ளோர்க்கு எல்லாம் - நாட்டில் உள்ளவர்களுக்கெல்லாம், தாய் செயல் அல்லவோ - தாய் (தன் மகவுக்குச் செய்யும்) செயல் போன்றவை அல்லவோ? (அது கிடக்க); போயது - அவன் வனம் போனது, தாதை விண் புக்க பின்னரோ - தந்தை விண்ணுலகம் அடைந்த பின்போ? (அல்லது) ஆய அதன் முன்னரோ - நேர்ந்த அதற்கு முன்போ? அருளுவீர் - இதனைச் சொல்வீராக, என்றான் - என்று கேட்டான்.

'இராமபிரான், பிறர்க்குக் கேடு விளைவிக்கும் தீங்கு எதையும் செய்யான்; அவன் தீங்கு செய்வதாயின், தாய் தன் குழந்தையை நல்வழிப்படுத்துதற்குச் செய்யும் கண்டனையும் தண்டனையும் போன்ற அன்புச் செயலாகவே இருக்கும்; எனவே, அவன் வனம் போனதற்கு அது காரணமாயிராது' என்பது பரதனின் துணிபு. ஏனை இரண்டும் இராமபிரான் வசத்தனவல்ல; எவ்வாறாயினும், போனது எப்போது என்பதை அறியலுறின், காரணமும் தானே தெரியவரும் என்று கருதி அதனை வினவினான். "என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்" (பெரியாழ்வார் திருமொழி, 4. 9 : 2) என்பது இங்கே ஒப்புநோக்கத்தகும்.

(பி - ம்.) 1. இராமனும்; செய்யுமேலது.
2. அல்லவே; தலத்துளோர்க்கெல்லாம், தவத்துளோர்க்கெலாம்.
4. அருளுவாய். (62)

### கைகேயியின் விடை

858. குருக்களை யிகழ்தலி னன்று குன்றிய
செருக்கினு லன்றொரு தெய்வத் தாலுமன்
றருக்கனே யனைய நம் மரசர் கோமகன்
இருக்கவே வனத்தவ னேகினு னென்றாள்.

(இராமன் வனம் போனது) குருக்களை இகழ்தலின் அன்று - ஆசிரியர்களை அவமதித்ததனால் அன்று; குன்றிய செருக்கினால் அன்று - இழிந்ததான செருக்கினாலும் அன்று; ஒரு தெய்வத்தாலும் அன்று - ஒரு தெய்வம் சினந்ததனாலும் அன்று; அருக்கனே அனைய - (வாய்மையில்) சூரியனே போன்ற, நம் அரசர் கோமகன் - நம் சக்கரவர்த்தி, இருக்கவே - (உயிருடன்) இருந்தபோதே, அவன் வனத்து ஏகினான் - அவன் காட்டிற் போனான்; என்றாள் —.

'இராமன் வனம் போனதற்கு, நீ கருதியவற்றுள் ஒன்றும் காரண மன்று; தந்தை உயிருடன் இருக்கும்போதே அவன் போனான்' எனச் சுருக்கமாக விடையளித்தாள் கைகேயி. அருக்கன் வாய்மைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாவான்; ''ஞாயிறன்ன வாய்மையும்'' (ஆத்திரையன் பேராசிரியன் பாயிரம்) என்பது காண்க. இவ்வாறு கூறியதனால், தந்தையின் வாய்மை காத்தல் வேண்டி இராமன் வனம் புக நேர்ந்ததென்ற குறிப்பும் பெறப்படும்.

(பி - ம்) 1. இகழ்தலில், இகழ்ந்தபின், பிழைத்தலின், பிழைத்தலும்; கூறிய.
2. அன்றுமோர்தெய்வத்தானுமன்று.
3. அனையவவ்வரசர், அனைய தம்மரசர், மரீஇய நம்மரசர்.
4. வனத்தவனெய்தினன், வனத்தினினேகினன், அவன்வனத் தேகினன். (63)

### பரதன் மீண்டும் வினவுதல்

859. குற்றமொன் றில்லையேற் கொதித்து வேறுளோர்
செற்றது மில்லையேற் றெய்வத் தாலன்றேல்
பெற்றவ னிருக்கவே பிள்ளை கான்புக
உற்றதென் றெரிதர வுரைசெய் வீரென்றான்.

குற்றம் ஒன்று இல்லையேல் - (இராமபிரான் செய்த) குற்றம் ஒன்றும் இல்லாவிடின், வேறு உள்ளோர் - வேறுபட்ட பகைவர், கொதித்து - கோபங்கொண்டு, செற்றதும் இல்லையேல் - போரிட்டு ஓட்டியதும் இல்லாவிடின், தெய்வத்தால் அன்றேல் - தெய்வம் சீறியதாலுமன்றாயின், பெற்றவன் இருக்கவே - பெற்ற தந்தை உயிருடன் இருக்கும்போதே, பிள்ளை கான் புக உற்றது என் - (அருமைப்) புதல்வன் காடுபோக நேர்ந்த காரணம் என்ன? தெரிதர உரை செய்வீர் - (அதனை எனக்குத்) தெளிவாகச் சொல்வீராக, என்றான் —.

'நான் கூறியவற்றுள் ஒன்றும் காரணமில்லையென்ருல், தந்தை இருக்கும்போதே இராமபிரான் காடு செல்ல நேர்ந்ததற்குத் தகுந்த காரணம் வேறு எது? அதனைத் தெளிவாகச் சொல்லுங்கள்' என்ருன். கைகேயி, விளக்கமின்றியே விடை கூறி வந்ததனுல், மனம் துடித்த பரதன் பொறுமை இழந்து கேட்கிருன். முன் பாட்டில் 'செருக்கினு லன்று' என்றதும், இதில் 'வேறுளோர் செற்றது மில்லையேல்' என்றதும், 'ஓங்கிய விதியினே' (856) என்றதற்கு விளக்கமாக இருத்தல் காண்க.

(பி-ம்.) 1. இல்லையே; வேறுள்ளோர்.
2. செற்றமும், செற்றமொன்று; இல்லையத்; தெய்வத்தானன்றேல்.
3. பெற்றவள், பெற்றவர்; பிரிந்து கான்புக;
4. உற்றதென் மன்னவன், பின்னவன், உலந்ததென், உலந்ததேன், உலைந்ததென்; உரைசெயீர். (64)

கைகேயி நிகழ்ந்ததைக் கூறுதல்

860. வாக்கினுல் வரந்தரக் கொண்டு மைந்தனைப்
போக்கினேன் வனத்திடைப் போக்கிப் பாருனக்
காக்கினே னன்னது பொறுக்க லாமையால்
நீக்கினுன் றன்னுயிர் நேமி வேந்தென்ருள்.

வாக்கினுல் - மன்னன் தன் வாக்கால், வரம் தர - (நான் கேட்ட இரண்டு) வரங்களை எனக்குத் தர, கொண்டு - அவற்றைப் பெற்றுக் கொண்டு, (ஒரு வரத்தால்) மைந்தனை - இராமனை, வனத்து இடை போக்கினேன் - காட்டிற்குப் போகச் செய்தேன்; போக்கி - அவ்வாறு போகச் செய்து, பார் உனக்கு ஆக்கினேன் - (மற்ருெரு வரத்தால்) நாட்டை உனக்குரியது ஆக்கினேன்; அன்னது பொறுக்க அல்லாமையால் - (அவன் பிரிந்து போனதைப்) பொறுக்க மாட்டாமையால், நேமி வேந்து - சக்கரவர்த்தி, தன் உயிர் நீக்கினுன் - தன் உயிரை விட்டான்; என்ருள் - என்று கூறினுள் (கைகேயி).

எழுவாய் வருவித்து உரைக்கப்பெற்றது. இராமபிரான் வனம் போனதற்கும் தசரதன் உயிர் நீத்ததற்கும் உரிய காரணங்களை உள்ளபடி கூறினுள் கைகேயி.

வாக்கினுல் - முன் தசரதன் தந்த வாக்குறுதியினுல் என்பதும் ஆம். மைந்தன் - தந்தையின் பேரன்புக்குரிய மகன். அவன் எங்கிருப்பினும் இனிது வாழ்தற்குரிய வலிமை படைத்தவன் என்பாள், 'மைந்தன்' என்ருள்; மைந்து - வலிமை. பார் என்றது நாட்டை.

(பி-ம்.) 2. வனத்தினில் பாருனது.
3. அவனது; பொறுக்கிலாமையால், பொறுத்திலாமையால்.
4. நீக்கினன்; மன்னுயிர்; நேமிவேந்தனே. (65)

பரதனது கோப நிலை

861. சூடின மலர்க்கரஞ் சொல்லின் முன்செவி
கூடின புருவங்கள் குனித்துக் கூத்துநின்
றூடின வுயிர்ப்பினோ டழற்கொ ழுந்துகள்
ஓடின வுமிழ்ந்தன வுதிரங் கண்களே.

(பரதனுக்கு), சூடின மலர் கரம் - (இராமபிரானை நினைந்து தலைமேல்) குவித்திருந்த மலர்போன்ற கைகள், சொல்லின் முன் - (கைகேயியின்) சொல் செவிப்படுமுன், செவி கூடின - காதுகளைச் சேர்ந்தன (காதைப் பொத்திக்கொண்டான்); புருவங்கள் குனித்து நின்று கூத்து ஆடின - புருவங்கள் வளைந்தேறி நின்று கூத்தாடுதல் போலத் துடித்தன; உயிர்ப்பினோடு - மூச்சுக் காற்றோடு, அழல் கொழுந்துகள் ஓடின - நெருப்புச் சுவாலைகள் வெளிப்பட்டன; கண்கள் உதிரம் உமிழ்ந்தன - கண்கள் இரத்தஞ் சிந்தின.

ஏ : ஈற்றசை.

கேட்கத் தகாத சொற்கள் செவிப்பட்டால் காதைப் பொத்திக் கொள்வர் பெரியோர்; அவ்வாறே பரதனும் கைகேயியின் வார்த்தை செவிப்பட்டவளவில் காதைப் பொத்திக்கொண்டான்; அதனை, 'கரங்கள் செவி கூடின' என்றார். சொல்லின் முன் என்றது விரைவு குறித்தது. புருவந்துடித்தல் முதலியன சினத்தின் மெய்ப்பாடுகள். மேல் இரண்டு பாடல்களுள் வருவனவும் அவை.

(பி - ம்.) 1. சூடினன் மலர்க்கரம், கரதலம், சூடின கரதலம், சூடிய மலர்க்கரம், சூடிய கரதலம்; சொல்லுமுன்.
2. கோடின; குதித்துக்.
3. ஆடினன்; உயிர்ப்பிடை, உயிர்ப்புடை, உயிர்ப்புடன், உயிர்ப்படை; அழற்கடம்முடன், அழற்கட்டமுடன், அழறகொழுந்துடன், அனற் கொழுந்துகள்.
4. உதிர்ந்தன, உதித்தன. (66)

862. துடித்தன கபோலங்கள் சுற்றுந் தீச்சுடர்
பொடித்தன மயிர்த்தொளை புகையும் போர்த்தது
மடித்தது வாய்நெடுந் தடக்கை மண்பக
அடித்தன வொன்றொடொன் றசனி யஞ்சவே.

கபோலங்கள் துடித்தன - கன்னங்கள் துடித்தன; மயிர் தொளை - மயிர்க்கால்களினின்றும், சுற்றும் தீ சுடர் பொடித்தன - சுற்றிலும் தீக்கொழுந்துகள் தோன்றின; புகையும் போர்த்தது - (அத்தீயால்) புகையும் சூழ்ந்தது; வாய் மடித்தது—; நெடு தட கை - நீண்ட பெரிய கைகள், மண் பக - (அதிர்ச்சியால்) தரை பிளக்கவும், அசனி ஏறு அஞ்ச - இடியேறும் (அவ்வொலி கேட்டு) அஞ்சவும், ஒன்றொடு

ஒன்று அடித்தன - ஒன்றோடொன்று ஓங்கி அறைந்தன. ஏகாரம்: ஈற்றசை.

பரதன் கடுஞ் சினங்கொண்ட நிலையைக் கூறுகின்றார். அடுத்த பாடலும் இத்தகையதே.

(பி - ம்.) 1. துடித்தன இதழ்விழி; தொடருந்தீச்சுடர், தீச்சுடப்.
2. புகையும் போர்த்தன.
3. நெடுமழைக்கைம் மண்பக, மண்புக.
4. அடித்தனன்; ஒன்றோடொன்று; அசனியெஞ்சவே, என்னவே. (67)

863. பாதங்கள் பெயர்தொறும் பாரு மேருவும்
போதங்கொ ணெடுந் தனிப் பொருவில் கூம்பொடு
மாதங்கம் வருகல மறுகிக் கால்பொர
ஓதங்கொள் கடலினின் றுலைவ போன்றவே.

பாதங்கள் பெயர்தொறும் - பரதன் அடி பெயர்த்து வைக்குந்தோறும், பாரும் - பூமியும், மேருவும் - மேருமலையும், (முறையே), போதம்கொள் - மரக்கலம் வருகிறதென்ற அறிவைக் கொள்வதற்குக் காரணமான, நெடு தனி பொரு இல் கூம்பொடும் - உயர்ந்து ஒன்றான ஒப்பற்ற பாய்மரத்தோடு, மாதங்கம் வரு கலம் - யானையை ஏற்றிவரும் மரக்கலம் ஒன்று, கால் மறுகி பொர - பெருங் காற்றுச் சுழன்று மோதுதலால், ஓதம் கொள் கடலில் நின்று - பேரலைகளைக் கொண்ட கடல் நடுவே நின்று, உலைவ(து) போன்ற - நிலை குலைந்து ஆடுவது போன்று இருந்தன.

ஏ: ஈற்றசை.

இப்பாடலும் முந்தியது போலப் பரதன் கொண்ட சினத்தை மிகுத்துக் காட்டுவது. பூமியைக் கப்பலாகவும், அதன் நடுவே உயர்ந்தோங்கி நிற்கும் மேருவைக் கப்பலின் பாய்மரமாகவும், பரதனை அக்கப்பலில் ஏற்றப்பட்ட யானையாகவும் உருவகித்தார். கப்பலை அலைக்கும் பெருங்காற்று, பரதன் அடிபெயர்த்து வைப்பதனால் உளதாகும் அதிர்ச்சியின் வேகம் எனக் கொள்க. பரதன், கடுஞ் சினத்தால் நிலைகொள்ளாது திரிதலுற்றான் என்பதும் இதனால் பெறப்படும். கப்பலுக்கு இன்றியமையாத உறுப்புக் கூம்பாதலின், அதனை 'நெடுந்தனிப் பொருவில் கூம்பு' என விசேடித்துக் கூறினார். உலைவது என்பதன் இறுதி தொக்கது. "பாரிடை யழுந்து கின்ற படர்நெடும் பனிமாக் குன்றம், கூருகிர்க் குவவுத் தோளான் கூம்பெனக் குமிழி பொங்க, ஆர்கலி யழுவத் தாழுங் கலமென லாயிற் றன்றே" (சுந்தர. 9) என்பது இங்கே ஒப்பு நோக்கத் தகும். பாரும் மேருவும் உலைவ போன்றவே என்று கூட்டுக.

(பி - ம்.) 2. போதங்கணெடுங், போதங்களொடு, போதங்களொடும், பூதங்களொடும், பூதங்கொள்கடலெனப், போதக நெடுந்திசைப்; பொறுத்தபாரொடு.
3. மாதங்கம் வருங்கலம், வருகில, வருதலம், மாதங்கவருகலம், மாதங்கவருங்கலம்; மறுகிக்காலவோர்.
4. ஓதங்கள்; போன்றதே. (68)

864. அஞ்சினர் வானவ ரவுண ரச்சத்தால்
துஞ்சின ரெனைப்பலர் சொரிம தத்தொளை
எஞ்சின திசைக்கரி யிரவி மீண்டனன்
வெஞ்சினக் கூற்றுந்தன் விழிபு தைத்ததே.

(பரதன் நிலை கண்டு) வானவர் - தேவர்களும், அவுணர் - அசுரர்களும், அஞ்சினர் - அச்சங் கொண்டனர்; அச்சத்தால் துஞ்சினர் எனை பலர் - அச்சத்தால் இறந்தோர் எத்துணையோ பலர்; திசை கரி - திக்கு யானைகளின், மதம் சொரி தொளை எஞ்சின - மதம் பெருகியூற்றும் தொளைகள் பெருக்கிழந்தன; இரவி மீண்டனன் - சூரியனும் (தன்) திசை மாறினன்; வெம் சினம் கூற்றும் - கடுங் கோபமுடைய எமனும், தன் விழி புதைத்தது - தன் கண்களைப் பொத்திக்கொண்டான்.

ஏ: அசை.

இப்பாடலும் முந்திய இரண்டைப் போன்றது. மேற்கு நோக்கிச் செல்லவேண்டிய சூரியனும் அஞ்சித் திரும்பிக் கிழக்கு நோக்கலானுன் என்பது கருத்து. 'இரவியும்' எனற்பால உயர்வு சிறப்பும்மை தொக்கது. வெஞ்சினமும் அஞ்சாமையுமுடைய கூற்றும் அஞ்சிற்று எனலால், இதிலும் உம்மை உயர்வு சிறப்பு. கூற்று, சொல்லால் அஃறிணையாகலின் அத்திணை முடிபேற்றது.

(பி - ம்.) 1. அஞ்சின, அஞ்சலின்.
2. துஞ்சினரேனையர், துஞ்சினரெனைப்பல, துஞ்சினரெனப்பலர், துஞ்சினரென்பதென்; துளைக்கை யானையும், தொலைந்து சாய்ந்தனர்.
3. எஞ்சிய; திசைக்களிறு, திசைக்கிரி, திசைகளில், திசைகளின்; மீண்டன.
4. கூற்றம்; புதைப்பவே, புதைத்தவே. (69)

பரதன் சிந்தனையும் சொல்லும்

865. கொடியவெங் கோபத்தாற் கொதித்த கோளரி
கடியவ டாயெனக் கருது கின்றிலன்
நெடியவன் முனியுமென் றஞ்சி நின்றனன்
இடியுரு மனையவெம் மொழிவி ளம்புவான்.

கொடிய வெம் கோபத்தால் - மிகக் கொடிய கோபத்தினல், கொதித்த - மனங் கொதிப்புண்ட, கோள் அரி - ஆண் சிங்கம் போன்ற பரதன், கடியவள் - கொடியவளாகிய அக் கைகேயியை, தாய் என

கருதுகின்றிலன் - தாய் என்று மதிக்காதவனாய் (அவளைக் கொல்லக் கருதியவன்), நெடியவன் முனியும் என்று அஞ்சி - (கொன்றால்) இராமபிரான் கோபிப்பான் என்று பயந்து, நின்றனன் - (கொல்லாது) நின்று, இடி உரும் அனைய - பேரிடி போன்ற, வெம்மொழி - கொடுஞ் சொற்களை, விளம்புவான் - சொல்லலானான்.

பரதன் கைகேயியைக் கடிந்துரைத்தவை, மேலே பதினேழு பாடல்களால் கூறுகின்றார். இராமபிரானுக்கு அஞ்சியே பரதன் அவளைக் கொல்லாது விட்டான் என்பது, மேலே 867, 992 - ஆம் பாடல்களில் வரும் அவன் கூற்றால் விளங்கும். கோள் அரி - கொல்லு தலையுடைய சிங்கம். பரதனை இவ்வாறு குறித்ததும் அவன் அவளைக் கொல்ல நினைத்தான் என்பதனை உணர்த்தும். இடியுரும் : ஒரு பொருட் பன்மொழி.

(பி - ம்.) 2. கடிவதுதகாதெனக்; கருதுகின்றிலென், கருதுகின்றிலேன்.
4. இடியுருவனையவெம், இடியுருமனையன; இயம்பினான், இயம்புவான்.
(70)

பரதன் தாயைக் கடிதலும் தன்னை நோதலும்

866. மாண்டன னெந்தையென் றம்முன் மாதவம்
பூண்டன னின்கொடும் புணர்ப்பி னாலென்றால்
கீண்டிலென் வாயிது கேட்டு நின்றயான்
ஆண்டன னேயன்றோ வரசை யாசையால்.

(பரதன் கைகேயியை நோக்கி), நின் கொடும் புணர்ப்பினால் - உனது கொடிய சூழ்ச்சியால், எந்தை மாண்டனன் - என் தந்தை இறந்தான்; என் தம்முன் மா தவம் பூண்டனன் - என் தமையன் பெருந்தவத்தை மேற்கொண்டான், என்றால்—, இது கேட்டும் - இக் கொடுஞ் செய்தியைக் கேட்டும், வாய் கீண்டிலென் நின்ற யான் - சொன்ன (உனது) வாயைக் கிழியாது நின்ற நான், அரசை ஆசை யால் ஆண்டனனே அன்றோ-(நீ பெற்றுத் தந்த) அரசை ஆசையோடு ஆண்டவனே ஆவேனன்றோ?

இதுமுதல் பதினேழு கவிகள் ஒரு தொடர். பரதன் கைகேயியைக் கடிந்து கூறுவன. 'நினைக்கவும் தகாத கொடுஞ் செயல்களைக் கூசாது செய்து, அவற்றைச் சிறிதும் கலக்கமின்றிச் சொல்லவும் முற்பட்ட உன் வாயை நான் அப்போதே கிழித்திருக்கவேண்டும்; அது செய்யாது நிற்பதனால், நானும் அரசுக்கு ஆசைப்பட்டு அதனைப் பெற்று ஆண்டவனாகவே கருதப் பெறுவேன்; இஃதென்ன கொடுமை!' என்கின்றான். கருத்தொப்புமை : 1036—பார்க்க. மறுக்காதது உடன் பாட்டைக் குறிக்கும். கீண்டிலென் : முற்றெச்சம்.

(பி - ம்.) 1. மாண்டதும்; எந்தையென்றெம்முன், எந்தையேயெம்முன்.
2. பூண்டனன் உன்னெடும், உன்கொடும், என்கொடும், இன்னன, இன்னது, பூண்டது மின்னது, மின்கொடும், புணர்ப்பினென்னவும்.
3. வாயது
4. ஆண்டனனுமன்றே, ஆண்டனனுமென்னே; அரசினுசையால். (71)

867. நீயின மிருந்தனை யானு நின்றனென்
ஏயெனு மாத்திரத் தெற்று கிற்றிலென்
ஆயவன் முனியுமென் றஞ்சி னேனலால்
தாயெனும் பெயரெனைத் தடுக்கற் பாலதோ.

நீ இன்னம் இருந்தனை - நீ இன்னும் மாளாதிருக்கின்றாய்; யானும் - நானும், ஏ எனும் மாத்திரத்து கணப்போதில், எற்றுகிற்றிலென் நின்றனென் - (உன்னைத்) தாக்கிக் கொல்லாமல் நின்றேன்; (அதற்குக் காரணம்) ஆய் அவன் - தாயைப் போன்ற அவ்விராமபிரான், முனியும் என்று அஞ்சினேன் - (என்னை) வெகுள்வானென்று அஞ்சினேன்; அல்லால் - அதனையன்றி, தாய் எனும் பெயர் - பெயரளவில் நீ தாய் என்பது, என்னை தடுக்கல் பாலதோ - (உன்னைக் கொல்லுதலினின்றும்) என்னைத் தடுத்ததற்குரியதோ? (அன்று).

'முன்னே உணராது தவறு செய்யினும், விளைவறிந்தபின் நீ அதற்கு நாணி நீயே மாண்டிருத்தல் வேண்டும்; அஃதின்றி இன்னும் நிற்கின்றாய்; நீ தாய் என்ற பெயர் மாத்திரமேயன்றித் தாய்மைப் பண்பு சிறிதும் இல்லாதவள்; ஆதலால் உன்னை அப்போதே கொன்றிருப்பேன்; உண்மையில் தாயைப் போன்ற இராமபிரான் என்னைக் கோபித்தல் கூடும் என்றஞ்சியே அது செய்யாது விட்டேன்' என்றான். ஆய் - தாய். இராமபிரானே தாயும் தந்தையும் எல்லாமும் என்ற பரதன் உட்கோள் இங்கே கருதத் தகும்; 853-பார்க்க. 'ஏ' எனும் மாத்திரத்து என்றது, விரைவு குறித்தது.

(பி - ம்.) 1. நானும்.
2. ஏயதுமாத்திரத்து; எற்றுகின்றிலன், எற்றுகின்றிலென், எற்றகிற்றிலென், எற்றகிற்றிலேன், எற்றுகிற்றிலன், ஏற்றுகிற்றிலென்.
3. ஆயகன், அயனும், நாயகன், நாயகம்.
4. தாயெனும் பொருளெனைத், பொருளினைத்; தடுக்கலாற்றுமோ, தடுக்கவல்லதோ, தடுக்கத்தக்கதோ, தடுக்கவல்லவோ. (72)

868. சுழியுடைத் தாயுடைக் கொடிய சூழ்ச்சியால்
வழியுடைத் தாய்வரு மரபை மாய்த்தொரு
பழியுடைத் தாக்கினன் பரதன் பண்டெனும்
மொழியுடைத் தாக்கலின் முறைமை வேறுண்டோ.

பண்டு - முன்னே, பரதன் - பரதன் என்பவன், சுழி உடை(ய) - வஞ்சனையுள்ள, தாய் உடை(ய) - தாயினது, கொடிய சூழ்ச்சியால்—,

வழி உடைத்து ஆய் வரும் -(சூரிய குலத்தில்) வழிவழியே நடந்து வருகிற, மரபை மாய்த்து - முறையைக் கெடுத்து, ஒரு பழி உடைத்து ஆக்கினன் -(அக்குலம்) ஒரு பழியை உடையதாகச் செய்தான், எனும் மொழி - என்று உலகம் சொல்லும் பழிச் சொல்லை, உடைத்து ஆக்கலின் - நிலைத்திருக்கச் செய்தலினும், முறைமை - சிறந்த முறை, வேறு உண்டோ - வேறென்றுள்ளதோ?

'சூரிய குலத்தில் பிறந்த பரதன், கொடியவளான தன் தாயின் தகாத சூழ்ச்சியால் தனக்குக் கிடைத்த அரசை ஏற்று, வழி வழியாக வந்த அக்குல முறைக்கே ஒரு மாசு உண்டாக்கினன் என்று பிற்காலத்தார் சொல்லும் பழிச் சொல் நிலைப்பதைத் தவிர, இதில் நன்மை யாதுளது? ஆதலால், நான் அரசேற்றல் முறையன்று' என்கின்றான். 'முறைமை வேறுண்டோ' என்றது இகழ்ச்சிக்குறிப்பு. வழியுடைத்தாய் வரும் மரபு, மூத்தவற்குரியது அரசு என்பது; அது கெடும்படி அரசை ஏற்றால், பழியைத்தவிர வேறில்லையென்பது பரதன் உட்கோள். பழிச்சொல் பிற்காலத்தார் கூற்றாகலின் 'பண்டு' என்றான்.

(பி - ம்.) 1. தாய்சொலும், தாய்தரு; கொடிய சூழ்ச்சியாய், கோடிசூழ்ச்சியால்.
2. வருவரம்பை, வரும் வரம்பை; மாய்த்தகதோர், மற்றெரு.
4. மொழியுடைத்தாகலின், உடைத்தாதலின், முறைமை வேண்டுமோ.
(73)

869. மாளவு முளனொரு மன்னன் வன்சொலால்
மீளவு முளனொரு வீரன் மேயபார்
ஆளவு முளனொரு பரத னாயினால்
கோளில தறநெறி குறையுண் டாகுமோ.

வன் சொல்லால் - உன் கொடிய சொல்லால், மாளவும் ஒரு மன்னன் உளன் - இறப்பதற்கும் ஓரரசன் (தசரதன்) உளனாக, மீளவும் ஒரு வீரன் உளன் -(வனம் போய்) மீள்வதற்கும் ஒரு வீரன் (இராமபிரான்) உளனாக, மேய பார் - (நீ) விரும்பிய நாட்டை, ஆளவும் ஒரு பரதன் உளன் ஆயினால் - ஆள்வதற்கும் பரதனொருவன் உளனானால், அறம் நெறி கோள் இலது - அறநெறி குற்றமற்றதே; குறை உண்டு ஆகுமோ - குறையுடையதாகுமோ? (ஆகாது).

பரதன் இதனை இகழ்ச்சியாகக் கூறுகின்றான். குற்றமில்லாத அறநெறியே இது என்றதும் இகழ்ச்சியே. 'நீ வரம் கேட்ட முறை தவறானது; தந்தை வேறு வகையின்றி வரத்தைக் கொடுத்துவிட்டு, வாய்மையைக் காத்துத் தன் உயிரையும் நீத்தான். தமையனும் தந்தைசொல் காக்கும் கடமையை அறமாக மேற்கொண்டான். அவ்விருவர் செயலும் அறமாயினும், உன் விருப்பத்தின்படி நான் அரசேற்றல் அறமாகாது' என்ற கருத்துப்படக் கூறினான். மேய பார் - (இராமபிரான் ஆளுதற்குப்) பொருந்திய நாடு என்பதும் ஆம்.

(பி - ம்.) 1. மாளவுமுன்ஞெரு; மன்னவன் சொலால், மன்னவன் கொலோ, மன்னனின் சொலால், மன்னன் கானம்போய், மன்னவன் செல்கான்.
2. மீளவு முன்ஞெரு; மேவுபார், வெய்யபார்.
3. பரதனுகினல்.
4. கோளலதறநெறி, கோளலவறநெறி, கோளிலவுறநெறி; குறைவுண்டாகுமோ, குறியுண்டாகுமோ, குறைதற்பாலதோ. (74)

870. கவ்வர வதுவென விருத்திர் கற்பெனும்
அவ்வரம் பழித்துமை யகத்து ளேவைத்த
வெவ்வரம் பொருதவே லரசை வேரறுத்
திவ்வரங் கொண்டநீ ரினியென் கோடிரோ.

கற்பு எனும் அ வரம்பு அழித்து - (மகளிர்க்குச் சிறந்த) கற்பு என்ற அந்த வரம்பைக் கெடுத்து, உம்மை அகத்து உள்ளே வைத்த - உம்மை (எப்போதும்) தன் மனத்தினுள்ளே வைத்திருந்த, வெவ் அரம் பொருத வேல் அரசை - கொடிய அரத்தால் அராவப்பட்ட வேலையுடைய மன்னனை, வேர் அறுத்து - அடியோடு அழித்து, கவ்வு அரவு அது என இருத்திர் - கடிக்கும் பாம்புபோல இருக்கின்றீர்; இ வரம் கொண்ட நீர் - (பல கேட்டுக்குக் காரணமான) இந்த வரத்தை (வலிதின்) வாங்கிக்கொண்ட நீர், இனி என் கோடிரோ - இன்னும் என்ன கொள்ளப் பார்க்கின்றீரோ?

'கணவன் வழி நிற்றலாகிய கற்பு வரம்பை மீறிக் கணவனை உன் வழிப்படுத்தி, வரத்தை வலிதிற் பெற்றுக்கொண்டு, உன்பால் அளவிறந்த அன்பு கொண்ட கணவனையே தொலைத்துவிட்டாய்; அதனல் நீ, தன்னை அன்போடு வளர்த்தவனையே கடித்துக் கொல்லும் பாம்புபோல் ஆனுய்; இன்னும் நீ என்ன என்ன தீமைகளுக்கு அடி இடுகின்ருயோ?' எனக் கடிந்தான்.

பன்மைப் பாலாற் கூறியது செறல்பற்றி. மேல் வருவனவும் இவ்வாறே கொள்க. அரவு அது - அரவாகியது; அது: பகுதிப் பொருள் விகுதி. கவ்வுதல் - கடித்தல். ''நாகமெனுங் கொடியாள்தன்'' (296) என்ற பாடலும் இங்கு நினைக்கத்தகும்.

முந்திய அச்சுப் புத்தகங்கள் பலவற்றில் இப்பாடல் இல்லை.

(பி - ம்.) 1. கவ்வர விதுவென, கவ்வர மிதுவென, கல்வரம் பிதுவென; இருத்திர் காட்டிய, இருந்திர் கற்பெனும், இருந்து கற்பெனும், கைவரம் பிதுவென விருத்தர் காட்டிய.
2. அவ்வரம்பறுத்துமை, அவ்வரமழித்துமை,
3. பொருதலால்.
4. கொண்டனிர், கொள்திரோ, கொள்விரால், (75

(கலிநிலைத்துறை)

871. நோயீ ரல்லீர் நுங்கண வன்றன் னுயிருண்டீர்
பேயீ ரேநீ ரின்ன மிருக்கப் பெறுவீரோ
மாயீர் மாயா வன்பழி தந்தீர் முலைதந்தீர்
தாயீ ரேநீ ரின்ன மெனக்கென் றருவீரோ.

முலை தந்தீர் தாயீரே - (குழவிப் பருவத்தில் எனக்கு) முலை கொடுத்த தாய் என்கிறவளே, நீர் எனக்கு மாயா வன் பழி தந்தீர் - நீயே எனக்கு என்றும் அழியாத கொடும்பழியைத் தேடிக் கொடுத்தாய்; இன்னம் என் தருவீரோ - இன்னமும் என்ன கொடுக்க இருக்கின்றாயோ? நோயீர் அல்லீர் - நோயாக இல்லாமலே, நும் கணவன் தன் உயிர் உண்டீர் - உன் கணவன் உயிரைக் குடித்தாய்; (ஆதலால்) நீர் பேயீரே - நீ ஒரு பேயே; மாயீர் இன்னம் இருக்க பெறுவீரோ - (பேயாகிய நீ) மாயாமல் இன்னமும் இருக்கப் பெறுவாயோ? (இருப்பது தகுதியோ).

'சேயின் நலனை என்றும் நாடிச் செய்பவளே தாய்; கணவன் வழி நிற்பவளே பெண்; நீ இவ்விரண்டுமின்றிச் சேயாகிய எனக்குப் பெரும் பழியைத் தேடித் தந்து, கணவனது உயிரையும் குடித்து விட்டாய்; நோய் உடலைப் பற்றிச் சில காலம் இருந்து, உயிர் போய் உடல் அழியும்போது தானும் கெட்டுவிடும்; நீ இன்னம் இருக்கின்றாயாதலால் நோயல்லை; நீ ஒரு பேயே; நீ இனி இவ்வுலகில் இருத்தற்குரியை அல்லை' என்கின்றான். பேய், கணவனுயிரைக் குடித்தலுண்டென்பது பழையனூர் நீலியின் கதையால் அறியப்படும். இழிப்பும் செறலும்பற்றிப் பன்மை வந்தது.

(பி - ம்.) 1. நொயீரல்லீர்; நுன்கணவன்றன்; உயிருண்ட, உயிர்கொண்டீர்.
2. பேயீரல்லீர்; பெறுவீரே, பெறுதீரே.
3. மாயா மாயா; வசைதந்தீர்.
4. தாயீரோ; இன்னும்; தருவீரே. (76)

872. ஒன்றும் பொய்யா மன்னனை வாயா லுயிரோடும்
தின்றுந் தீரா வன்பழி கொண்டுந் திருவெய்தி
என்றுந் நீரே வாழ வுகந்தி ரவனேகக்
கன்றுந் தாயும் போல்வன கண்டுங் கழியீரே.

ஒன்றும் பொய்யா மன்னனை - ஒரு சிறிதும் பொய்படாத நம் அரசனை, வாயால் உயிரோடும் தின்றும் - (வரம் என்ற பேர் கொண்ட) உன் வாய்ச்சொல்லால் உயிரோடு தொலைத்தும், (அதனோடு இராம பிரானையும் போக்கியதனால்) தீரா வன்பழி கொண்டும் - (என்றும்) அழியாத வலிய பழியை ஏற்றும், திரு எய்தி - இராச்சியத்தைப் பெற்று, என்றும் நீரே வாழ உகந்தீர் - எக்காலமும் நீயே நல்வாழ்வு

பெற விரும்பினுய்; அவன் ஏக - அவ்விராமபிரான் (நாட்டை விட்டுச்) செல்லுதலால், கன்றும் தாயும் போல்வன கண்டும் - (நாட்டில் உள்ள உயிர்கள் எல்லாம்) கன்றும் அதனைப் பிரிந்த தாய்ப்பசுவும்போல் ஆன நிலையைக் கண்டும், கழியீர் - (உன் கொள்கையை) விட்டாயல்லை; ஏ - இஃதிருந்தவாறென்னே!

'என்றுந் தீராத பழிக்கிடமான கொடுஞ் செயல்களைக் கூசாது செய்து, நீ இன்ப வாழ்வு எய்த விரும்பினுய்; உன் செயலால் இராம பிரானைப் பிரிந்த குடிகளெல்லாம், தாயைப் பிரிந்த கன்றுகள் போலத் தவித்தலைக் கண்டும் உன் மனம் மாறவில்லை; உன்னிடம் அன்பு கொள்வார் எவரும் இல்லை; அங்ஙனமாக, உனக்கு இன்ப வாழ்வு எங்ஙனம் உளதாகும்?' என்கின்றுன். வாய்மையால் சிறிதும் வழுவாமையே மன்னன் உயிர் விடக் காரணமாயிற்றென்பான், 'ஒன்றும் பொய்யா மன்னனை வாயா லுயிரோடுந் தின்றும்' என்ருன். வாயால் - அவன் வாய்மையாலேயே என வுரைத்தலுமாம்; "அந்தோ இனிவாய்மைக் காருளரோ" (1128) என வரும் இராமபிரான் கூற்றும் காண்க. முன்னே 'பேய்' என்றதற்கேற்ப, இங்கே 'வாயால் தின்று' என்றது ஒரு நயம். முறை தவறிய அரச வாழ்வை நீ விரும்பினுயே யன்றி நான் அதனை விரும்பவில்லை என்பது போந்த கருத்து. இறுதி ஏகாரம், இரக்கம். அவன்: இராமபிரானைச் சுட்டியது.

(பி - ம்.) 1. உயிரோடு, உரையோடும்.
2. வன்பழி கொண்டீர்.
3. வாழவுவந்தீர், வாழ்வு முவந்தீர், ஆளவுவந்தீர்; இவனேகக், மிக நன்றே.
4. போவன கண்டும், போல்வன கண்டீர், போல்வது கண்டீர்; கழியீரோ, கழிவீரோ, கழியாதீர். (77)

873. இறந்தான் றந்தை யீந்த வரத்துக் கிழிவெண்ணுன்
அறந்தா னீதென் றன்னவன் மைந்த னரசெல்லாம்
துறந்தான் ருயின் சூழ்ச்சியின் ஞால மவனேடே
பிறந்தா ளுண்டா னென்னுமி தென்னுற் பெறலாமே.

தந்தை - தசரதன், ஈந்த வரத்துக்கு இழிவு எண்ணுன் - தான் கொடுத்த வரத்துக்குத் தாழ்வு வருதலை விரும்பாதவனுய், இறந்தான் - உயிர் விட்டான்; அன்னவன் மைந்தன் - அத்தகைய அவனுடைய (அரசுக்குரிய மூத்த) மகன், ஈது அறம் தான் என்று - (தந்தை சொல்லைக் காக்க நாம் அரசைத் துறந்து செல்லும்) இது தருமமே என்று கருதி, அரசு எல்லாம் துறந்தான் - அரசாட்சியை முற்றும் விட்டுச் சென்ருன்; அவனேடே பிறந்தான் - அவனுடன் பிறந்த பரதன், தாயின் சூழ்ச்சியின் - தாயின் துராலோசனைக்கு இணங்கி, ஞாலம் ஆண்டான் - நாட்டைப் பெற்று ஆண்டான், என்னும் இது

பெறல் - என்று உலகத்தார் இழித்துச் சொல்லும் இப்பழியைப் பெறுதல், என்ஞல் ஆமே - என்ஞலாகுமோ? (ஆகாது).

'உன்செயலால், உன்னேடு எனக்கும் மீளாப் பழி வந்தெய்துதலை நீ உணர்ந்தாயல்லை; நீ எங்ஙனமாயினும், அப்பழி யெய்துதலை நான் விரும்பேன்' என்கின்முன். 'தாயின் தவருன சூழ்ச்சிக்குத் தநயனும் உடந்தையானுன்' என்று உலகோர் தன்னைப் பழிப்பர் என்பதே பரதன் உட்கோள். சத்தியமும் தருமமும் தவருத தந்தையையும் தமையனையும் படைத்த தான், தமையன் செய்கைக்கு மாருக அரசேற்றல் ஒல்லாது என்முன். ஏகாரவினு, எதிர்மறை உணர்த்தியது.

(பி - ம்.) 1. தக்தையீந்த, ஏய்ந்த, எந்தையீந்த, ஏய்ந்த தந்தையெந்தை; இழிவென்னு, இழிவெண்ணு, அழிவென்னு, அழிவென்னுன், அழிவென்னு, அழிவெண்ணுன்.
2. ஈதேயென்றவன், ஈதெனமன்னவன்.
3. தாயர்சூழ்ச்சியின், தாயார் சூழ்ச்சியின், சூழ்ச்சியில், சூழ்ச்சியிஞ், தாயுன்சூழ்ச்சியின்; அவனேடும், அவரோடே.
4. இதென்னுற்பெறலாமோ, பெறலாமால், இதென்னிற் பெறலாமே, இதென்முற் பெறலாமால், இதற்முற் பெறலாமால். (78)

874. மாளு மென்றே தந்தையை யுன்னுன் வசைகொண்டாள்
கோளு மென்னு லேயெனல் கொண்டா னதுவன்றேல்
மீளு மன்றே யென்னையு மெய்யே யுலகெல்லாம்
ஆளு மென்றே போயின னன்றே வரசாள்வான்.

அரசு ஆள்வான் - அரசாளுதற்குரிய இராமபிரான், வசை கொண்டாள் கோளும் - பழியேற்றவளாகிய இவள் வரம் கொண்டதும், என்னுலே எனல் கொண்டான் - என்னுலேயே நேர்ந்ததென்ற கருத்துக் கொண்டவனுய், தந்தையை - தந்தையைப்பற்றி, மாளும் என்றே உன்னுன் - (தன் பிரிவால்) அவன் இறத்தல்கூடுமே யென்றும் எண்ணுமல், என்னையும் - என்னைப்பற்றியும், மெய்யே உலகு எல்லாம் ஆளும் என்றே - (தாயைத் தூண்டினவன்) திண்ணமாக நாடு முழுதும் ஆள்வானென்று கருதியே, போயினன் - வனம் போனுனுதல் வேண்டும்; அது அன்றேல் - அங்ஙனமல்லாவிடின், மீளும் அன்றே - (நாடு முழுதும் வருந்துதல் கண்டேனும்) திரும்பியிருக்கக் கூடுமன்றே?

'நீ வரங்கொள்ளுமாறு உன்னைத் தூண்டி, அரசாளுதற்கும் நான் இசைந்திருப்பேன் என்று என்னைப்பற்றித் தவருக எண்ணியே இராமபிரான் வனம் போயிருத்தல் வேண்டும். அவன் இவ்வாறு நினைத்தற்கும் நீ காரணமானுய்' என்கின்முன். கோள்: முதனிலை நீண்ட தொழிற்பெயர்; வரங்கொள்ளுதலைக் குறித்தது. உலகு எல்லாம் என்றது, ஒரு பாதியும் பகிர்தலின்றி நாடு முழுதும் என்றபடி; "ஆழிசூ ழுலக

மெல்லாம் பரதனே யாள" (கைகேசி. 94) என்றது காண்க. அன்று, ஓர்: அசை.

(பி - ம்.) 1. மாளுமென்றே, மாளும்மென்றும்; தந்தையை உன்னு, என்னுல், தந்தையுமன்ன, அன்னுன், உன்னுன், என்னுல், எந்தையுமுன்னே; வசைகொண்டான், பாரான், கொண்டால், வதை கொண்டாள்.

2. கொண்டானிதுவன்றேல், அதுவன்றே.

3. இன்றே, என்றே, மீளும்மின்றே, மீளுமென்றே; என்னையுமெய்மெய் பின்னையுமெய்யே; அரசெல்லாம், மண்ணெல்லாம்.

4. அன்றே வுலகாள்வான். (79)

875. ஓதா நின்ற தொல்குல மன்ன னுணர்வப்பால்
ஏதே னுந்தா னுகவெ னக்கே பழிசெய்வான்
தீதா நின்ற சிந்தனை செய்தா னவனென்னப்
போதா தோவென் ருயிவள் கொண்ட பொருளம்மா.

ஓதா நின்ற - (அனைவரும்) புகழ்ந்து சொல்லுகிற, தொல் குலம் மன்னன் - பழம்பெருமையையுடைய குலத்தில் உதித்த சக்கரவர்த்தியின், உணர்வு-நினைவானது, அப்பால்-(வரம் கொடுத்த)பிறகு, ஏதேனும் ஆக - எதுவாயினும் ஆகுக; என் தாய் இவள் கொண்ட பொருள் - என் தாயாகிய இப்பழிகாரி வரம் கேட்டதன் பொருள், எனக்கே பழி செய்வான் - எனக்கே குற்றஞ் செய்பவனுய், தீது ஆக நின்ற சிந்தனை செய்தான் அவன் - தீங்காகவுள்ள எண்ணத்தைக் கொண்டான் அப்பரதன், என்ன போதாதோ - என்று (மன்னன்) கருதப் போதியதாகாதோ? அம்மா - என்னே இவள் பேதைமை!

இதுகாறும் தாயை முன்னிலைப்படுத்திக் கூறியவன், வெறுப்பு மேலிட்டு இதில் படர்க்கையாற் கூறுகின்ருன். 'இவளால் நெருக்குண்ட மன்னன், வேறு வகையின்றி வரங்கொடுத்துவிட்டான்; கொடுத்தபின் அவனெண்ணம் எதுவாயினும் இருக்கட்டும்; வரங் கேட்டவுடன், நானும் அதற்கு உடந்தையாயிருந்திருப்பேன் என்று அவன் கருத இடமுண்டாகிறதன்றே? இவள் பேதைமையும் கொடூரமும் இருந்த வாறு என்னே!' என வருந்துகின்ருன். தன்னைப்பற்றி இராமபிரான் தவருக எண்ணியிருத்தல் கூடுமென்றது போலத் தந்தையும் அவ்வாறு கருத இடமுண்டாயிற்றே என்கின்ருன்.

அப்பால் - வரம் தந்தபின். மன்னன்-இராமபிரான் என்று கொண்டு பொருள் கூறுவாருமுளர். அதற்கு, இரண்டாமடியில் 'பணிசெய்வான்' என்ற பாடங் கொள்வர். தீதா: இறுதி தொக்கது. அம்மா : இரக்கங் குறித்தது.

(பி - ம்.) 1. திண்குல நல்லோன், திண்குண நன்னூல்; உணர்விப்பால், உரையிப்பால்.

2. யாதானுந்தானுக, ஏதானுந்தானுக, ஏதாமென்னுத்தந்தை, தாதை; பணி செய்வான், பணி செய்தான், அணிசெய்வான்.
3. நீதாய்நின்ற; அவனென்னுப்.
4. தாயவள் கொண்ட புகழம்மா. (80)

876. உய்யா நின்றே னின்னமு மென்முன் னுடன்வந்தோன்
கையார் கல்லைப் புல்லட குண்ணக் கலமேற்றி
வெய்யோ னுனின் சாலியின் வெண்சோ றமுதென்ன
நெய்யோ டுண்ணு நின்றது நின்றுர் நினையாரோ.

வெய்யோன் நான் - கொடியவனுகிய நான், இன்னமும் உய்யா நின்றேன் - இன்னமும் உயிரோடிருந்து, உடன் வந்தோன் என்முன் - உடன் பிறந்தவனுன என் முன்னவன், கை ஆர் கல்லை - கையில் பொருந்திய தொன்னையில், புல் அடகு உண்ண - புல்லிய கீரையை (வைத்து) உணவருந்த, (நான்), இன் சாலியின் வெண் சோறு - இனிய சம்பா அரிசியாலான வெள்ளிய சோற்றை, கலம் ஏற்றி - பொற் கலத்தில் இட்டு, அமுது என்ன - தேவாமிருதம்போல, நெய்யோடு உண்ணுநின்றது - நல்ல நெய்யோடு உண்பதை, நின்றுர் - பார்த்து நிற்கும் உலகத்தவர், நினையாரோ - (இழிவாக) நினையாரோ? (நினைப்பர்).

'இராமபிரான் காடு சென்றதைக் கேட்டபோதே நான் உயிர் நீத்திருத்தல் வேண்டும்; அவ்வாறன்றி இன்னும் நான் உயிரோடிருப் பதே மிகை; அதன்மேலும், அவன், இன்னுத காட்டில் தகாத உணவை உண்டுகொண்டிருக்க, நான் இங்கே அரண்மனையில் இனிதாகத் தங்கி, இனிய சம்பா அரிசிச் சோறும் புத்துருக்கு நெய்யுமாக ஆடம்பர உணவு கொள்வதைப் பார்ப்பவர் என்ன நினைப்பர்? இது தகுமோ?' என வருந்துகின்றுன்.

கலம் - இடத்துக்கேற்பப் பொற்கலம் எனப்பட்டது.

(பி - ம்.) 1. உய்யாநின்றுன்; இன்னமுமெம்முன், இன்னமுமென்றன்; உடன் வந்தான்.
2. கய்யார்கல்லைப், கையார் கானில்; கலமேற, கலமேறி, கலமேற்று, கலமேந்தி, உண்ணத் தலமேறும்.
3. வெய்யாகாணின், வெய்தா காணிச், ஐயோ கானின், அய்யா நானின், அய்யோ கானிச்; வெண்சோறமுதான்பால், வெண்சோறமு துண்ட, வெண்சோறஃதென்ன, வண்சோறமுதன்ன, வண் சோற்றமுதென்ன, வன்சோற்றமுதென்ன.
4. உண்ணநின்றது. (81)

877. வில்லார் தோளான் மேவினன் வெங்கா னகமென்ன
நல்லா னன்றே துஞ்சின னஞ்சே யனையாளைக்
கொல்லேன் மாயேன் வன்பழி யாலே குறைவற்றேன்
அல்லே னேநா னன்புடை யார்போ லழுகின்றேன்.

வில் ஆர் தோளான் - வில்லேந்திய தோளையுடைய இராமபிரான், வெம் கானகம் மேவினன் என்ன - கொடுங் காட்டை அடைந்தா னென்று, நல்லான் - நல்லவனாகிய மன்னன், அன்றே துஞ்சினன் - (இராமன் காடு சென்ற) அன்றே இறந்துபட்டான்; நான்—, நஞ்சே அனையாளை கொல்லேன் - விடமே போன்ற இக்கொடியவளைக் கொல்லாமலும், மாயேன் - நானே இறவாமலும், வன் பழியாலே குறைவு அற்றேன் அல்லேனோ - கொடும்பழியில் குறைவில்லாதவனானேன் அன்றோ? (அங்ஙனமிருந்து) அன்பு உடையார்போல் - (இராமபிரான்பால்) மெய்யன்புடைய மற்றவர்போல், அழுகின்றேன் - (இப்போது) அழுது கொண்டிருக்கின்றேன்! (என் நிலை இருந்தவாறு என்னே).

'இராமபிரான் காடடைந்ததைக் கேட்டவுடனே உயிர் துறந்த தந்தை உண்மையான அன்புடையவன்; நானோ, அது கேட்டவுடன் இறவாமலும், அக்கொடுமைக்குக் காரணமானவளைக் கொல்லாமலும் வீணே இருந்து அழுகின்றேன்; இதனால் எனக்குப் பழி மிக்கதேயன்றி நான் உண்மை அன்புடையவன் எனல் பொருந்துமோ? இது நாடகமே!' எனக் குறைகின்றான்.

பழியாலே குறைவற்றேன் என்றது, பழி நிறையப்பெற்றேன் என்றவாறு.

(பி - ம்.) 1. மேயினன்; என்னா.
2. நல்லானைந்து, நல்லானையன்.
3. குறையற்றேன், குறையுற்றேன், குறைகின்றேன், குறையாறேன், குறைவுற்றேன்.
4. அல்லேனோயான், அல்லனாயான், அல்லனாய்நான், அல்லனானே.

(82)

878. பாரோர் கொள்ளார் யானுயிர் பேணிப் பழிபூணேன்
தீரா தொன்றோ துன்புமிவ் வூரிற் றிருநில்லாள்
ஆரோ டெண்ணிற் றாநுரை தந்தா ரறமெல்லாம்
வேரோ டுங்கே டாக முடித்தென் விளைவித்தாய்.

பாரோர் கொள்ளார் - (நான் அரசேற்றலை) உலகோர் ஒப்ப மாட்டார்; யான் - நான், உயிர் பேணி - (அரசுக்காக) என் உயிரைக் காத்துக்கொண்டு, பழி பூணேன் - பழியை மேற்கொள்ள மாட்டேன்; இ ஊரில் - இந்த ஊரில், துன்பும் தீராது - (இராமபிரான் இல்லாத வரையில்) துன்பமும் தீராது; ஒன்றோ - அதுமட்டுமோ? திரு நில்லாள் - இலக்குமி இங்கே தங்கமாட்டாள்; (இவ்வளவு தீமைக்கும் இடமாக), எண்ணிற்று ஆரோடு - நீ ஆலோசித்தது யாருடன்? ஆர் உரைதந்தார் - யார் உனக்கு இதைச் சொன்னவர்கள்? அறம் எல்லாம் வேரோடும் கேடு ஆக முடித்து - தருமம் முழுதும் அடியோடு கெடும்படி செயலைச்

செய்து, என் விளைவித்தாய் - எத்தகைய பொல்லாங்குகளை விளையச் செய்தாய்?

'உன் செயலால் உனக்கோ, எனக்கோ, நாட்டுக்கோ நல்ல தொன்றும் இல்லை; தருமம் கெட்டதும், நமக்குப் பழியும், நாட்டுக்குத் துன்பமும் உண்டானதுமே மிச்சம்; இராமபிரான் சென்றபோதே ஊரும் பாழாயிற்று; இத்தகைய செயலை நீயாகச் செய்திருக்கமாட்டாய் என்று தோற்றுகின்றது. உனக்கு இந்தச் சூழ்ச்சியைச் சொன்னவர் யார்? எங்ஙனமாயினும், நான் உயிரோடிருந்து, அரசோடு பழியையும் ஏற்று வாழேன்' என்கின்றான். கைகேயியின் செயல்குறித்து முன்பு தசரதனும், "பொய்ந்நிலை யோர்கள் புணர்த்தவஞ்ச முண்டோ, உன்னிலை சொல்" (203) என வினவியது காணத் தகும்.

(பி - ம்.) 1. பாரோரகொள்ளா, பாரொடுகொள்ளா; பழிபூண்டால், பழிபூண்டெடன்.
2. தீராதன்றே; துன்பமிவ், நின்பழி, தீராதொன்றானின்பழி, தீராதொன்றானும்பழி, தீராதொன்றாற்றுன்பமிவ், தீராதொன்னார்துன்பமிவ்; திருநின்றாள்.
3. எண்ணிற்றாருரைகொண்டாய், தந்தாய், எண்ணியாருரைதந்தார்.
4. முடித்தே விளைவித்தாய், முடித்தாய் விளைவித்தாய், முடித்தென் வினையேனே. (83)

879. கொன்றே னானென் றாதையை மற்றுன் கொலைவாயால்
ஒன்றோ கானத் தண்ணலை யுய்த்தே யுலகாள்வான்
நின்றே னென்றா னின்பிழை யுண்டோ பழியுண்டோ
என்றே னுந்தா னென்பழி மாயு மிடமுண்டோ.

உன் கொலை வாயால் - கொலையை விளைவித்த உன் (கொடிய) வாயினால் (வாயைக் கருவியாகக் கொண்டு), நான் —, என் தாதையை கொன்றேன் —; ஒன்றோ - அதுமட்டுமோ? அண்ணலை கானத்து உய்த்து - இராமபிரானையும் காட்டிற் போக்கி, உலகு ஆள்வான் நின்றேன் - உலகாள இருக்கின்றேன், என்றால் - என்று பலரும் நினைத்தால், நின் பிழை உண்டோ - உன்மேல் குற்றம் உண்டோ? பழி உண்டோ - (உனக்குப்) பழியும் உண்டோ? (இல்லை); என் பழி - நான் எய்தும் பழி, என்றேனும் மாயும் இடம்தான் உண்டோ - என்றாவது மறைய இடமேனும் உண்டோ? (அதுவும் இல்லை).

'நான் நேரே இன்றி, உன் மூலமாக இத்தீமைகளைச் செய்வித்தேனென்று பலரும் கருதும்போது, எய்தவன் இருக்க அம்பை நோவதிற் பயனில்லை என்பது போல் ஆகி, நீ குற்றமும் பழியும் அற்றவளாகிவிடுவாய்; நான் எய்திய பழி என்றும் மறையாது; உன்னை நல்லவளாக்கிவிட்டவனாவேன் நான்' என்று தன்னையே நொந்து கொள்கின்றான் பரதன்.

என் பழி மாயும் இடந்தான் உண்டோ என மாறிப் பொருளுரைக்கப்பெற்றது. மற்று : அசை.

(பி - ம்.) 1. தந்தையை; மற்றுன் கொலைவாளால், மற்றென் கொலைவாளா.
2. ஒன்றே; உய்த்தேன்.
3. என்றுனின்னிலை.
4. என்புகழ், உன்புகழ்; மாயுமிடையுண்டோ. (84)

880. கண்ணு லேயென் செய்வினை யின்னுஞ் சிலகாண்பார்
மண்ணோர் பாரா தெள்ளுவர் வாளா பழிபூண்டாய்
உண்ணு நஞ்சங் கொல்கில தென்னு முரையுண்டென்
றெண்ணு நின்றே னன்றியி ரேனென் னுயிரோடே.

(உயிர் விடக் கருதிய நான்) உண்ணு நஞ்சம் கொல்கிலது என்னும் உரை - உண்ணுத விடம் கொல்லாது என்னும் சொல், உண்டு என்று எண்ணுநின்றேன் - (உலகத்தில்) உண்டேயென்று (இப்போது) நினைக்கின்றேன்; அன்றி - அவ்வாறு இல்லையேல், என் உயிரோடே இரேன் - என் உயிரோடு இருக்கமாட்டேன்; மண்ணோர் - உலகத்தவர், என் செய்வினை சில - (உயிரோடிருந்து) நான் செய்யப் போகும் சில காரியங்களை, இன்னும் கண்ணுலே காண்பார் - மேலே தங்கள் கண்ணுலே பார்ப்பார்கள் (அப்போது என்னை இகழார்); பாராது (உன்னிடம் அத்தகையது ஒன்றையும்) காணுமல், எள்ளுவர் - உன்னைப் பழிப்பார்கள்; வாளா பழி பூண்டாய் - நீ வீணே (பயனின்றிப்) பழியைக் கொண்டவளாவாய்.

'பழிக்கு அஞ்சி உயிர் விடுதலினும், உயிரோடிருந்து நான் குற்ற மற்றவனென்பதை உலகறியச் செய்தலே மேல் என்று இப்போது எண்ணுகின்றேன்; அவ்வாறு செய்து நான் பழியின் நீங்கினவனுவேன். நீ அஃதின்றி இகழப்பட்டு வீண்பழிக்கு ஆளாவாய்' என்கின்றுன். 'உண்ணு நஞ்சம் கொல்கிலது' என்றது, நஞ்சு அதனை உண்ட வரையே கொல்லும்; அதுபோல, நஞ்சனைய உன் செயலில் நான் தொடர்பு கொண்டால்தான் அஃது என்னைப் பழிக்கும் பாவத்துக்கும் ஆளாக்கும் என்பதனைக் குறித்தது. நான் அரசேற்றல் இல்லை என்பது உறுதியாதலால், உன் முயற்சி பயனற்றதாகி, நீ வீணே பழிக்காளாவாய் என்கின்றுன். பழி நீங்கத் தான் செய்யப்போவதையும், அவள் செய்தற் குரியதையும் மேலே இரண்டு கவிகளாற் கூறுகின்றுன்.

எண்ணு நின்றேன் - எண்ணுகின்றேன். உண்ணுநஞ்சங் கொல் கிலது: "உண்ணுதே யுயிருண்ணு தொருநஞ்சு" (யுத்த. 3859).

(பி - ம்.) 1. இன்னம், பின்னும்; சிலகாண்பாய், காண்பான், சிலர்காண்பார், காண்பர், காண.
2. மண்ணுர்பாராது, மண்ணோர்பாரார், காணுது, மண்ணோர் விண்ணோர், வானோர், விண்ணோர் மண்ணோர்; எள்ளலர், எண்ணலர், கொள்ளலர்; பழிபூண்டேன், வாளாப் பழி பூண்டாய், வாளாப்பழி

பூட்டார், பழிபூண்டார், வாளாவழி யுண்டாய், மாயாப்பழி பூண்டாய், பூண்டேன், மாளாப்பழி பூண்டாய், விணே பழிபூண்டாய்.
3. கொள்கிலது, கொலலலது, கோறலது; என்னுமுறை, என்றுமுரை.
4. எண்ணுகின்றே: அன்றியிரேனிவ், அன்றியிருந்தேன், என்று மிருந்தேன்; உயிரென்றுல். (85)

881. ஏன்றுன் பாவிக் கும்பி வயிற்றி னிடைவைகித்
தோன்றுந் தீராப் பாதக மற்றென் றுயர்தீரச்
சான்றுந் தானே நல்லற மாகத் தகைஞாலம்
மூன்றுங் காண மாதவ நானே முயல்கின்றேன்.

உன் - உன்னுடைய, பாவி கும்பி வயிற்றினிடை - பாவிகள் இருத்தற்குரிய நரகம் போன்ற வயிற்றில், ஏன்று - (இருக்க) நேர்ந்து, வைகி தோன்றும் - தங்கிப் பிறந்ததனுலான, தீரா பாதகம் அற்று-தீராத பாவம் தீர்ந்து, என் துயர் தீர-(அவ்வாறு பிறந்ததனுல் உண்டான)என் வருத்தமும் தீரும்படி, நல் அறம் தானே சான்று ஆக - நல்ல தருமமே சாட்சியாக, தகை ஞாலம் மூன்றும் காண - பெருமை பொருந்திய மூவுலகத்தவரும் நேரே காண, நானே மாதவம் முயல்கின்றேன் - நானே பெருந்தவம் செய்யப்போகின்றேன்.

'பிறர் நினைக்கவும் அஞ்சத்தக்க கொடுமைகளைக் கூசாமல் செய்த நீ பெரும் பாவி; உன் வயிற்றிற் பிறந்ததனுல், உன் பாவம் என்னையும் தொடரும்: அதனுலே நான் செய்யாத பிழை செய்தது போலப் பிறர்க்குத் தோற்றவும் அது குறித்து நான் வருந்தவும் இடமாயிற்று. இவையெல்லாம் தீர, இராமபிரானுக்கு நீ கொடுத்த தவ வாழ்க்கையை நானே மேற்கொள்வேன்; இதனை நான் தருமமே சான்ருகக் கூறுகின்றேன்; ஒருவருக்காக அன்று' என்கின்ருன்.

கும்பி - நரகம்; அது பாவிகள் இருத்தற்குரிய இடமாதலின் பாவிக் கும்பி என்ருன். இடை: ஏழனுருபு. நானே: ஏகாரம், பிரிநிலை: தவத்திற் குரியவன் இராமபிரானல்லன் எனப் பிரித்துக் காட்டியவாறு.

(பி - ம்.) 1. ஏன்றும்; இடையெய்தித், இடையேகித்.
2. தோன்றும்திய, பாரப், பாராப், பாரா; பாதகமற்றேன், பாதக முற்றேன், பாதகமேனும்.
4. மாதவம்யானே, மாதவமின்றே. (86)

882. சிறந்தார் சொல்லு நல்லுரை சொன்னேன் செயலெல்லாம்
மறந்தாய் செய்தா யாகுதி மாயா வுயிர்தன்னைத்
துறந்தா யாயிற் றூயையு மாதி யுலகத்தே
பிறந்தா யாதி யீதல தில்லைப் பிறிதென்ருன்.

மாயா உயிர் தன்னை - (இதுவரை) மாய்த்துக் கொள்ளாத உன் உயிரை, துறந்தாய் ஆயின் - (இப்போதேனும் நீ) விடுவாயானுல்,

செயல் எல்லாம் - (இதுகாறும் செய்த) கொடுஞ் செயல்களை எல்லாம்; மறந்தாய் செய்தாய் ஆகுதி - (புத்தி பூர்வமாக அன்றி) மறந்து செய்த வளாவாய்; தூயையும் ஆதி - (பழியின் நீங்கித்) தூய்மை பெற்றவளும் ஆவாய்; உலகத்தே பிறந்தாய் ஆதி - உலகத்தில் பிறந்ததன் பயனைப் பெற்றவளும் ஆவாய்; (நீ பழி பாவங்களின் நீங்கிப் புகழ் பெறுதற்குரிய வழி) ஈது அலது - இது வல்லாது, பிறிது இல்லை - வேறு இல்லை; (இது நானுகச் சொல்வதன்று); சிறந்தார் - அறிவொழுக்கங்களிற் சிறந்த பெரியோர்கள், சொல்லும் - சொல்லத் தக்க, நல் உரை - நல்ல அறிவுரையாகும்; சொன்னேன் - அதனைச் சொன்னேன்; என்ருன் - என்று கூறிமுடித்தான் (பரதன்).

தனக்கு நன்மை தருவது தவமே என முன்னர்க் கூறியவன், 'உனக்கு நன்மை தருவது நீ உயிர் துறத்தலே; சிறந்தோர் சொல்லத் தக்கது அதுதான்; நீ உயிர் துறந்தால், ''கைகேயி தன்னுணர்வின்றித் தவறு செய்துவிட்டாள்; உணர்ந்ததும் உயிர் நீத்தாளாதலால் அவள் குற்றமில்லாதவளே'' என்ற புகழெய்துதற்கும், பழிபாவங்கள் தீர்தற் கும் வழியுண்டாகும்' என்று கைகேயிக்குக் கூறுகின்ருன்.

'தாயே' என்று விளிக்கவும் மனமின்றிப் பொதுப்படக் கூறினுன். ''தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார், தோன்றலிற் ருேன்ருமை நன்று'' என்றபடி, பிறந்தோர் எய்தும் சிறந்த பயன் புகழேயாதலால், அது பெறுவாய் என்பான், 'உலகத்தே பிறந்தாயாதி' என்ருன்.

(பி - ம்.) 1. நல்லுரை சொல்லும்.
2. செய்தாயாகியுன், ஆகிலுன், ஆகினை, ஆதியுன்.
3. துறந்தாயாகில்; தூயையுமாயிவ், தூயையுமாவை, தூயையுமாயை, தூயையுமாகி, தூய்மையுமாயிவ். (87)
4. பிறந்தாயாகி, பிறந்தாயாவை.

### பரதன் கோசலையின் இருப்பிடம் செல்லுதல்

(கலிவிருத்தம்)

883. இன்னண மினையன வியம்பி யானினிப்
பன்னருங் கொடுமனப் பாவி பாலிரேன்
துன்னருந் துயர்கெடத் தூய கோசலை
பொன்னடி தொழுவெனென் றெழுந்து போயினுன்.

இன்னணம் - இவ்வாருக, இனையன இயம்பி - இத் தன்மையான பலவற்றைச் சொல்லி, யான் இனி பன்ன அரு கொடு மனம் பாவிபால் இரேன் - நான் இனிமேல் சொல்லுதற்கரிய கொடிய மனமுடைய பாவியான இவள்பால் தங்கேன், துன் அரும் துயர் கெட - நேர்ந் துள்ள அரிய துயரம் தீரும்படி, தூய - மனத் தூய்மையையுடைய, கோசலை பொன் அடி தொழுவன் என்று - கௌசல்யா தேவியின்

பொலிவு பெற்ற பாதங்களை வணங்குவேன் என்று சொல்லி, எழுந்து போயினான் - (அவ்விடத்தினின்றும்) எழுந்து போனான்.

பரதன் எவ்வளவு சொல்லியும் கைகேயியின் மனம் மாறாதது கண்டு, 'இனி இங்கிருப்பதில் பயனில்லை; எத்தகைய துயரத்தையும் போக்கி இதமளிக்க வல்ல மாண்புடையவள் கௌசல்யா தேவியாதலால், அவளைச் சென்று காண்பேன்' என்று அவள்பால் செல்ல எழுந்தான். கைகேயியின் கொடுமை சொல்லுதற்கரியது என்றதனால், இனி இங்கே தாழ்த்தால் அவளால் இன்னும் என்ன நேருமோ என்ற அச்சமும் கொண்டான்.

சுமந்திரன் முதலியோர் அருகில் இருப்பதையும் பாராது, பரதன் கைகேயியை வைதுகொண்டிருக்க, அவன் பேச்சொலியால் அவன் வந்திருப்பதை அறிந்த கோசலை, அவனைக் கண்டு பேசக் கருதிச் சுமித்திரையுடன் கைகேயியின் அரண்மனைக்குப் புறப்பட, அத்தருணத்தில் பரதன் சென்று அவளைக் கண்டதாக வான்மீகம் கூறும் (சருக்கம். 75).

(பி - ம்.) 1. இன்னணமிளையவன், இன்னணம் பலபல, இன்னனவினையன, இன்னனபலபல; இயம்பியானுமிப், விளம்பியானுமிப்.
2. பன்னெடுங் கொடுமையிப்; பாவிபாடு, பாவிமாடு.
3. துயருடைத்.
4. அழுதுபோயினான். (88)

**பரதன் கோசலையின் அடியில் வீழ்ந்து புலம்புதல்**

884. ஆண்டகை கோசலை யருகி னெய்தினான்
கீண்டுமண் கிழிதர விழுந்து கேழ்கிளர்
காண்டகு தடக்கையிற் கமலச் சீறடி
பூண்டனன் கிடந்திடை புலம்பி னானரோ.

ஆண் தகை கோசலை அருகின் எய்தினான் - ஆண் தன்மையிற் சிறந்த பரதன் கோசலையை அணுகி, மண் கீண்டு கிழிதர விழுந்து - தரை பிளந்து கிழியும்படி (கீழே) விழுந்து, கேழ்கிளர் - (நீல) நிறம் விளங்குகின்ற, காண்தகு - காணுதற்கு இனிய, தட கையின் - (தன்) பெரிய கைகளால், கமலம் சிறு அடி பூண்டனன் - (கோசலையின்) தாமரை மலர் போன்ற சிறிய பாதங்களைப் பற்றியவனாகி, இடை கிடந்து - (சிறிது போது) தரையிலே கிடந்து, புலம்பினான் - பின்பு புலம்பலானான்.

அரோ : அசை.

கோசலையைக் கண்ட பரதன், அடியற்ற மரம் போல அவள் திருவடிகளில் விழுந்து, அவற்றைப் பற்றிக்கொண்டு புலம்பலானான். துயர மிகுதியால் யாதும் பேச மாட்டாதவனாய்ச் சில நேரம் கிடந்து பின்பு புலம்பலானான் என்பது பட 'இடை கிடந்து' என்றார்.

எய்தினான், பூண்டனன்: முற்றெச்சம்.

(பி - ம்.) 1. அருகரெய்தினன், அருகினெய்தினன்.
2. மீண்டுமண்கிழிதர, கிழிபட, கிழ்தர; வீழ்ந்து, விழுந்த.
3. தடக்கையாற்.
4. கிடந்தனன், கிடக்திடைப், தீயிடை. (89)

885. எந்தையெவ் வுலகுளா னெம்முன் யாண்டையான்
வந்தது தமியனேன் மறுக்கங் காணவோ
சிந்தையி லுறுதுயர் தீர்த்தி ராலெனும்
அந்தரத் தமரரு மழுது சோரவே.

(பரதன் கோசலையை நோக்கி) அந்தரத்து அமரரும் - விண்ணுலகிலுள்ள தேவர்களும், அழுது சோர - (அவன் நிலை கண்டு) அழுது வருந்தும்படி, எந்தை எ உலகு உள்ளான் - எம் தந்தை எவ்வுலகத்தில் உள்ளான்? எம்முன் யாண்டையான் - எம் தமையனுன இராமபிரான் எங்குள்ளான்? தமியனேன் வந்தது - ஆதரவற்ற நான் (இங்கு) வந்தது, மறுக்கம் காணவோ - இந்தக் கலக்க நிலையைக் காண்பதற்கோ? சிந்தையில் உறுதுயர் தீர்த்திர் - என் மனத்திலுள்ள பெருந்துயரத்தைத் தீர்ப்பீராக, எனும் - என்பான்.

ஆல், ஏ : அசை.

தனக்கு ஆறுதல் கூறித் தேற்ற வல்லவள் கோசலையே என்று கருதி அவள்பால் வந்தா னுதலால், 'சிந்தையி லுறு துயர் தீர்த்திர்' என்று அவளை வேண்டுகிருன். தந்தை இவ்வுலகில் இல்லையென்பதும் தமையன் நாட்டில் இல்லை என்பதும் முன்னமே அறிந்தவனுனுலும், ஆராமை மேலீட்டால், 'எவ்வுலகுளான், யாண்டையான்' என்று வினவுகின்ருன்; இஃது உலக இயற்கை. அவ்வினுவிலேயே அவனறிந் துள்ளதன் குறிப்புப் பெறப்படும். இவ்வாறு அவன் புலம்பிக் கூறிய வற்றை இதுமுதல் ஐந்து கவிகளால் கூறுகின்ருர்.

மறுக்கம் - கலக்கம்; நாடு முழுதும் இராமபிரான் பிரிவால் கலங்கும் நிலையைச் சுட்டியது.

(பி - ம்.) 1. உலகுளன், உலகினன்.
2. தமியெனிம்.
3. சிக்தையின்; தீர்திராலெனும், தீதிலாரெனும், தீர்த்திராலென்ருன், தீர்கலேனென்ருன். (90)

886. அடித்தலங் கண்டிலென் யானென் னையனைப்
படித்தலங் காவலன் பெயரற் பாலனே
பிடித்திலிர் போலுநீர் பிழைத்தி ராலெனும்
பொடித்தலந் தோளுறப் புரண்டு சோர்கின்ருன்.

தோள் பொடி தலம் உற - தோள்கள் புழுதி படிந்த தரையில் படுமாறு, புரண்டு சோர்கின்ருன் - புரண்டு வருந்துகின்ற பரதன்

யான் - நான், என் ஐயனை - என் தந்தையின், அடிதலம் கண்டு இலென்- திருவடிகளைக் கண்டு தொழப் பெற்றிலேன்; (அது நிற்க), படி தலம் காவலன் - நாடு காத்தற்குரிய இராமபிரான், பெயரல் பாலனோ (நாட்டை விட்டுச்) செல்லத்தக்கவனோ? நீர் பிடித்திலிர் போலும் - (அவன் அவ்வாறு போகாதபடி) நீர் தடுக்கவில்லை போலும்; பிழைத்திர் - (இவ்வகையில் நீர்) தவறிவிட்டீர்; எனும் - என்பான்.

ஆல் : அசை.

'இராமபிரான் காடு புகாத வண்ணம் நீர் தடுத்திருத்தல் வேண்டும்; அவன் பிரிவாலேயே தந்தை உயிரிழக்கவும், நாடு கலங்கவும் நேர்ந்தது; நானும் அவர்களைக் காணப்பெற்றிலேனே' என்கின்றான்.

பிடித்தல் - தடுத்து நிறுத்துதல். முதலில் தந்தையையும், அடுத்ததாக இராமபிரானையும் கண்டு தொழ வேண்டுமென்பதே பரதனது பேராவல்: 838, 853 - பார்க்க. படித்தலம் : இருபெயரொட்டு.

(பி - ம்.) 2. படித்தலங் காத்திலன், பிடித்திலன் காவலன்; பெயரப்பாலனோ, பரியற்பாலனோ, பிரியற்பாலனோ, பிரியப்பாலனோ.
3. பிடித்திலீர்; பிழைத்திராலெனப், பிழைத்திராவெனும்.
4. புரண்டுசோருமால். (91)

887. கொடியவர் யாவருங் குலங்கள் வேரற
நொடிகிலர் யானது நுவல்வ தெங்ஙனம்
கடியவள் வயிற்றினிற் பிறந்த கள்வனேன்
முடிகுவெ னருந்துயர் முடிய வென்னுமால்.

கொடியவர் யாவரும் - (இத் தீமைகளுக்குக் காரணமான) கொடியவர்களெல்லாம், குலங்கள் வேர் அற நொடிகிலர் - தம் குலம் வேரோடழியுமாறு இறந்தொழிந்திலர்; கடியவள் வயிற்றினில் பிறந்த - கொடியவளான கைகேயியின் வயிற்றில் பிறந்த, கள்வனேன் யான் - வஞ்சகனான நான், அது நுவல்வது எங்ஙனம் - அதைச் சொல்வது எவ்வாறு? அரு துயர் முடிய - எனது கடுந்துயரம் தீர, முடிகுவென் - நான் இறந்தொழிவேன்; என்னும் - என்பான்.

ஆல் : அசை.

'இக் கொடுமைகள் செய்தவர் குலத்தோடு அழிய வேண்டும்; ஆனால் அவர்கள் அழியவில்லை; நான் அதைச் சொல்வதால் பயனில்லை; ஆதலால், பழிக்கு ஆளாகாமல் நான் இறந்தொழிவேன்' என்கின்றான். கூனியின் போதனையினால் கைகேயி மனந் திரிந்து கொடுமைக்கு உடன்பட்டாளென்பதனைப் பரதன் ஒருவாறு அறிந்திருத்தல் கூடுமாதலின், கொடியவர் எனப் பன்மையிற் சுட்டியது அவ்விருவரையுங் குறித்ததெனலாம். 'கைகேயியை நான் கொல்வதற்குமில்லை; அவளாக

ஒழியவுமில்லை; ஆதலால், நான் உயிர் நீத்து எனக்கு வரக் கடவ பழி பாவங்களைத் தீர்த்துக்கொள்வேன்' என்கின்றான்.

நொடிதல் - அழிதல். அழித்தற் கடவுள் 'நொடித்தான்' எனப் படுவர்; சுந்தரர் தேவாரம், திரு நொடித்தான மலைப் பதிகம் பார்க்க.

(பி - ம்.) 1. யாரையும், அயாவரக், வேரறும்.
2. நொடிகுவென்யானது, யானிது, நொடிகிலராகில்யான், நொடிகுவர் யானது, நொடிகிலம்யானது, நொடிவரின்யானது, நொடியினில் யானது.
3. வயிற்றிலே; கள்வனேல்.
4. முடிகிலன், முடிகுவன்; முடிக்க, முடிப்ப. (92)

888. இரதமொன் றூர்ந்துபா ரிருளை நீக்குமவ்
வரதனி லொளிபெற மலர்ந்த தொல்குலம்
பரதனென் றொருபழி படைத்த தென்னுமால்
மரகத மலையென வளர்ந்த தோளினான்.

மரகதம் மலை என - மரகதக் கல்மலை போல, வளர்ந்த - (பூரித்துத் திண்ணிதாக) வளர்ந்துள்ள, தோளினான் - தோள்களையுடைய பரதன், இரதம் ஒன்று ஊர்ந்து - ஓராழித் தேர் ஒன்றைச் செலுத்தி, பார் இருளை நீக்கும் அ வரதனில் - உலக இருளைப் போக்கும் அச் சூரிய னிடமிருந்து, ஒளி பெற மலர்ந்த - புகழ்மிக விரிந்த, தொல்குலம் - பழமையான நம் குலம், பரதன் என்ற ஒரு பழி படைத்தது - பரதன் என்ற ஒரு பழிகாரனை (இடையே) பெற்றுவிட்டது; என்னும் - என்பான்.

ஆல் ! அசை.

நிறத்தாலும் திண்மையாலும் பரதன் தோள்களுக்கு மரகத மலை உவமை. உலகம் தன்மீது ஐயங்கொண்டு தன்னைப் பழிக்கும் என்பதே பரதன் கருத்தாகலின், 'இதுகாறும் பழிக்கு இடமாக ஒருவரேனும் தோன்றாத இக்குலத்தில் பழிகாரனாக நானொருவன் தோன்றினேனே' என்கின்றான். காரணமான தன்னைக் காரியமாக்கிக் குலம் பழி படைத் தது எனக் கூறுகின்றான். வரதன் - உலகுக்கு ஒளி கொடுப்பவன். அ : உலகறி சுட்டு. சூரியன் ஓர் இரதத்தை ஒரே திசையிற் செலுத்தி உலகிருளைப் போக்குபவன்; தசரதன் எல்லாத் திக்குக்களிலும் தேரைச் செலுத்திப் பகையிருளைப் போக்கியவன். அவன் சூரியனிலும் சிறந்தவன் என்ற குறிப்பும் காணத்தகும்.

(பி - ம்.) 1. ஊர்ந்த; பேரிருளை; நீக்குநம், நீக்கிய, நீக்குறும்.
2. வரதனின்; வளர்ந்த, வளர்க்கும்.
3. பரதனின்று, பரதனில்; என்னுமா. (93)

889. வாடொடு தானையான் வானின் வைகிடக்
காடொரு தலைமக னெய்தக் கண்ணிலா
நாடொரு துயரிடை நைவ தேயெனும்
தாடொடு தடக்கையத் தரும மேயனான்.

தாள் தொடு தட கை - முழந்தாளைத் தொடுமாறு நீண்ட கைகளை யுடைய, அ தருமமே அன்னான் - தருமமே உருக்கொண்டது போன்ற அப்பரதன், வாள் தொடு தானையான் - வாட்படையேந்திய சேனைப் பெருக்கையுடைய மன்னன், வானின் வைகிட - வானுலகு சென்று தங்க, ஒரு தலைமகன் - (அவனுடைய) ஒப்பற்ற மூத்த புதல்வன், காடு எய்த - காட்டை அடைய, கண் இலா நாடு - கண்ணை இழந்த கோசல நாடு, ஒரு துயரிடை நைவதே - பெருந்துயருக்கு உட்பட்டுத் துன்புறுவதோ? (இது தகுமோ!), எனும் = என்பான்.

'நாட்டை முன்பு காத்தவனும், இனிக் காத்தற்குரியவனும் நாட்டில் இல்லாது சென்றுவிட்டமையின், நாடு கண்ணிழந்ததாகிக் கலங்குகின்றது; இந்நிலை எய்துதல் தகுமோ?' என்கின்றான். மன்னவன் நாட்டிற்குக் கண்: "கண்ணெனப் படுவ மூன்று காவலர் கல்வி காமர், விண்ணினைச் சுழல வோடும் வெய்யவன் என்னும் பேரார், எண்ணினுள் தலைக்கண் வைத்த கண்ணஃதில்லை யாயின், மண்ணினுக் கிருளை நீக்கும் வகைபிறி தில்லை மன்னா" (சூளா : மந்திர. 30); "மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம், கண்ணு மாவியு மாம்பெருங் காவலான்" (பெரிய. நகரச்).

(பி - ம்.) 1. வாட்டொடு, வாடொகு, வாட்டொழில்; வானில்வைகுறக், வைகிடக்.
2. காட்டொரு, காடொடு, காட்டொடு; காண்கிலா, காண்கிலான்.
3. நாட்டொரு, நாடொடு, நாட்டொடு; நைவதோவெனும், நடப்பதே யெனும், நடப்பதோவெனும், நலிவதோவெனும், நவில்வதோ வெனும், நையவோவெனும்.
4. தாடொடும்; தாட்டொடு, தாட்டொழு; தருமமேயன்னான், தரும மெய்தினான், தருமமேயினான்; மு. தாட்டொழு மன்பினிற் றகையன் போலவே. (94)

பரதனது தூய்மையைக் கோசலை உணர்தல்

890. புலம்புறு குரிசிறன் புலர்வு நோக்கினள்
குலம்பொறை கற்பிவை சுமந்த கோசலை
நிலம்பொறை யாற்றல னெஞ்சு தூய்தெனச்
சலம்பிறி துறமனந் தளர்ந்து கூறுவாள்.

குலம் பொறை கற்பு இவை சுமந்த கோசலை - உயர்குடிப் பிறப்பும் பொறுமையும் கற்பும் என்ற இவ்வுயர் பண்புகள் கொண்ட கோசலை, புலம்பு உறு - புலம்புதல் மிக்க, குரிசில்தன் - பரதனது, புலர்வு நோக்

கினுள் - வாட்டத்தைக் கண்டு, நெஞ்சு தூய்து - இவன் மனம் தூய்மை யுடையது, நிலம் பொறை ஆற்றலன் - இராச்சிய பாரத்தை ஏலான், என - என்று உட்கொண்டு, சலம் பிறிது உற - (முன்பிருந்த) கோபம் மாயப்பெற்று, தளர்ந்து - மனம் நெகிழ்ந்து, கூறுவாள் - (பரதனுக்குக்) கூறலானுள்.

கோசலே, உயர் குடிப்பிறப்பும், அதற்கு ஏற்ற பொறுமை, கற்பு முதலிய சீரிய குணங்களும் படைத்தவளாதலால், பரதனுடைய மன நிலேயை உய்த்துணர்ந்து, தாயின் சூழ்ச்சியில் அவனும் தொடர் புடையன் என்ற கருத்தால் முன்பு இருந்த சினம் மாறி, மனம் நெகிழ்ந்து அவனே நோக்கிக் கூறலுற்ருள்.

புலர்வு - வாட்டம்; அகமும் முகமும் வாடுதல். முகவாட்டத்தாலும் சொற்களாலும் அவனது அகந்தூய்மையை உணர்ந்தாள். நோக்கினுள்: முற்றெச்சம். மாருதி சீதா பிராட்டியைக் குறித்துக் கூறும், "இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்ப தொன்றும், கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்" (சுந்தர. 1273) என்பது இங்கே ஒப்புநோக்கத் தகும்.

(பி - ம்.) 1. புலத்தை, புலப்பு, புலம்பல், புலம்பு, புலம்ப.
2. கற்பவை சுமந்த, கற்பவையமைந்த, சுமந்த கற்பமைந்த.
3. நெஞ்சம், நெஞ்சும்; தூய்தெனச்.
4. பிறிதுணமனம், பிறிந்துறமனம், பிறிதுளதெனத்; கூறுவான். (95)

### கோசலே வினவுதல்

891. மையறு மனத்தொரு மாசு ளானலன்
செய்யனே யென்பது தேருஞ் சிந்தையாள்
கைகயர் கோமக ளிழைத்த கைதவம்
ஐய நீ யறிந்திலே போலு மாலென்ருள்.

(பரதன்) மை அறு மனத்து - (இயல்பாகவே) களங்கமற்ற தன் மனத்தில், ஒரு மாசு உளான் அல்லன் - ஒரு (செயற்கைக்) குற்றமும் உடையவனல்லன், செய்யன் - நேர்மை உடையவனே, என்பது - என்பதை, தேரும் சிந்தையாள் - (தெளிவாக) அறியும் கருத்துடைய வளாய், (கோசலே அவனே நோக்கி), ஐய - ஐயனே, கைகயர் கோ மகள் - கேகய அரசன் புதல்வியான உன் தாய், இழைத்த - செய்த, கைதவம் - வஞ்சனையை, நீ அறிந்திலே போலும் - நீ (முன்னே) அறிந்த தில்லே போலும், என்ருள் - என்று வினவினுள்.

ஆல் : அசை.

கோசலே, பரதனேப்பற்றித் தான் கொண்ட கருத்தை மேலும் உறுதி யாக்கிக்கொள்ளக் கருதி, அவனே அவ்வாறு வினவினுள்.

(பி - ம்.) 1. மையுறு, மையுரு.
2. தேறும், தெரியும், தெருளும்.
3. கோன்மகள்; விளைத்த.
4. அய்யனீ; ஐயனீ; அறிகிலே. (96)

### பரதன் சூளுரை

892. தாளுறு குரிசிலத் தாய்சொற் கேட்டலும்
கோளுறு மடங்கலிற் குமுறி விம்முவான்
நாளுறு நல்லற நடுங்க நாவினுற்
சூளுறு கட்டுரை சொல்லன் மேயினுன்.

தாள் உறு குரிசில் - (கோசலையின்) திருவடிகளைப் பற்றிக் கிடந்த பரதன், அ தாய் சொல் கேட்டலும் - அந்தத் தாயின் சொல்லைக் கேட்ட வளவில், கோள் உறு மடங்கலின் - (பொறியால்) கொள்ளுதலுற்ற (பொறியில் அகப்பட்ட) சிங்கம் போல, குமுறி - மனம் குமைந்து, விம்முவான் - பொருமுகின்றவனுகி, நாள் உறு நல் அறம் நடுங்க - எந்நாளும் நிலைத்த தருமதேவதை நடுங்கும்படி, நாவினுல் - தன் (குற்றமற்ற) நாக்கினுலே, சூள் உறு கட்டுரை - சபதமான உறுதி மொழிகளை, சொல்லல் மேயினுன் - சொல்லலுற்றுன்.

கைகேயியின் சூழ்ச்சியை நீ முன்பு அறியாயோ என்று கோசலை வினவியது, அவள் தன்னை ஐயுற்ருள் என்பது குறித்தலின், பரதன் துணுக்கமுற்றுத் தன் உண்மை நிலையை அவளுக்குத் தெரிவிக்கும் வகையில் பல சூளுரைகளைச் சொல்லலானுன். அவன் அவ்வாறு சொல்லியவற்றை அடுத்த பாடல் முதல் இருபது பாடல்களால் கூறுகின்ருர்.

கோசலையின் சொல்லால் குமுறலுற்ற பரதனுக்குப் பொறியில் அகப்பட்ட சிங்கத்தை உவமை கூறினர். கோள் - கொள்ளுதல்; அகப்படுத்தல். பொறி என்பது வருவித்துரைக்கப்பெற்றது. 'கமலச் சீறடி பூண்டனன் கிடந்திடை புலம்பினுன்' (884) என முன்னர்க் கூறினமையின் இங்கே 'தாளுறு குரிசில்' என்ருர்.

(பி - ம்.) 2. குமறிவிம்முவான்.
3. நயக்கு நாவினுல்.
4. சூளுறும், சூளுரை; சொல்லமேயினுன். (97)

893. அறங்கெட முயன்றவ னருளி னெஞ்சினன்
பிறன்கடை நின்றவன் பிறரைச் சீறினேன்
மறங்கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்
துறந்தமா தவர்க்கருந் துயரஞ் சூழ்ந்துளோன்.

அறம் கெட முயன்றவன் - தருமம் கெடுமாறு (தீய வழியில்) முயன்றவனும், அருள் இல் நெஞ்சினன் - இரக்கமற்ற மனமுடைய

வனும், பிறன் கடை நின்றவன் - அயலான் மனைவியை விரும்பி அவன் வாயிலில் காத்து நிற்பவனும், பிறரை சீறினேன் - பிறரைக் (காரண மின்றிக்) கோபிப்பவனும், மறம் கொடு - கொடுமையால், மன் உயிர் கொன்று வாழ்ந்தவன் - நிலைபேறுடைய உயிர்களைக் கொன்றும் தின்றும் வாழ்பவனும், துறந்த மா தவர்க்கு - (பற்றுக்களை யெல்லாம்) துறந்த பெருந்தவசிகட்கு, அரு துயரம் சூழ்ந்து உள்ளோன் - கடுந் துன்பங்களைச் சூழ்ந்து செய்தவனும்.

'கைகேயியின் சூழ்ச்சியை நான் முன்பு அறிந்திருப்பின், இன்ன இன்ன பாவங்கள் செய்தோர் எய்தும் நரகமெல்லாம் எனக்கே ஆகுக' என்று பலவாறாகப் பரதன் சூளுரைத்தமை இது முதல் இருபது கவிகளாற் கூறப்படும். இவற்றுள் முதல் நான்கு கவிகள் ஒரு தொடர்; 896-ஆம் கவியில், 'கடிது செல்க யான்' என்பதனோடு முடியும். பரதன் சூளுரை கூறுமுகத்தால் பற்பல அரிய நீதிகளை நமக்குத் தருகின்றார் கவிஞர். இச்செய்யுளில், அறன் அழியாமை, அருளுடைமை, பிறர் மனை நயவாமை, வெகுளாமை, கொல்லாமை, புலாலுண்ணாமை, பெரியாரைப் பிழையாமை என்ற அறங்களில் வழுவினோர் நரகம் புகுவர் என்பது சொல்லப்பட்டது. பிறன் கடை நிற்றல் : "அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை, நின்றாரிற் பேதையா ரில்" (குறள். 142).

(பி - ம்.) 1. அறன் கெட; அருளிலாநெஞ்சன்.
2. பிறங்கடை; மின்றனன்; சிறியோன், பிறர்கட் சீறினேன், பிதாவைச் சீறினேன், பிதரர்ச் சீறினேன், பிறப்பைச் சீறினேன்.
3. மறன்கெட; கொன்று வாழ்பவள், கொண்டு வாழ்ந்தவன், புடைத்து வாழ்ந்தவன்.
4. சூழ்ந்துளான். (98)

894. குரவரை மகளிரை வாளிற் கொன்றுளோன்
புரவல னுறுபொருள் புனைவில் வாரினேன்
விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுளோன்
இரவல ரருநிதி யெறிந்து வவ்வினேன்.

குரவரை - ஐம்பெருங்குரவரையும், மகளிரை - பெண்டிரையும், வாளில் கொன்று உளோன் - வாளால் கொன்றவனும், புரவலன் உறு பொருள் - அரசன் அடைதற்குரிய பொருள்களை, புனைவில் வாரினேன் - வஞ்சனையாற் கவர்ந்தவனும், விரவலர் வெரிந் இடை விழிக்க - பகைவர் தன்னைப் புறங்காணுமாறு, மீண்டு உள்ளோள் - (போரில் தன் உயிர் காத்து) மீண்டவனும், இரவலர் அரு நிதி - யாசகருடைய அரிய பொருளை, எறிந்து வவ்வினேன் - (அவர்களைத்) தாக்கி அபகரித்த வனும்.

இதில் ஐந்து பாவிகள் குறிக்கப்பெறுகின்றனர். ஐம்பெருங்குரவ ராவார் : அரசன், உவாத்தியான், தாய், தந்தை, தமையன் என்போர்.

"அரச னுவாத்தியான் தாய்தந்தை தம்முன், நிகரில் குரவ ரிவரிவரைத், தேவரைப் போலத் தொழுதெழுக" (ஆசாரக் கோவை. 16). புரவலன் உறுபொருள், புதையலும் உரியோரின்றிக் கைவிடப்பட்டனவும் போன்ற பொருள்கள்; இவை அரசனைச் சேர்தற்குரியன. அல்லது அரசனுடைமையான பொருள் எனலுமாம். புரவலன் - தன்னைக் காத்தவன் என்று பொருள் கொண்டு, தன்னை ஆதரித்தவனது பெரும் பொருளைக் கரவிற் கவர்தல் என்றலும், புரவு அலன் - பொருளைக் காக்கமாட்டாதவன் என்ற பொருள் கொண்டு, அத்தகைய வனுக்குத் தான் பொருளைப் பாதுகாத்துத் தருவதாகப் பொய் கூறிக் கவர்தல் என்றலும் பொருந்தும். புனைவு - கற்பனை; கவர்தற்குரிய வழிகளைக் காணுதல். வெரிந் இடை விழித்தல் - முதுகைக் காணுதல். அரசனுக்காக அமரிடைச் சென்றவன், முதுகு காட்டாது நின்று பொருதலும், உயிரிழக்க நேரினும் இழத்தலுமே அவனது ஆண் மைக்கும் கடமைக்கும் உரிய செயலாகும். அங்ஙனமன்றிப் புறங் காட்டினால், பழிக்கும் பாவத்துக்கும் ஆளாவான். இரவலர் பொருள், பலவிடத்தும் சென்று பல துன்பங்களுக்குள்ளாகிச் சிறிது சிறிதாகச் சேர்க்கப்படுவதாகலின், 'இரவலர் அருநிதி' என்றார். அதனைக் கவர்தல் எத்தகைய பாவமென்பது சொல்லவேண்டா.

(பி - ம்.) 1. குரவலர் மகளிரை, குரவலர் குழலியை, குழவியை; கொன்றுளோர்.
2. புரவலரொருபொருள், புரவலனொருபொருள்; புனைவில்வெளவி னேன், புவியில் வெளவினேன், புவியினவெளவினேன், வெளவி னோர்; மு. புரவலன் றன்னொடு மமரிற் புக்குடன்.
3. வெரிடை விழிக்கண், வெங்கிடை விழிக்க; மீண்டுளான், மீண்டுளோர்.
4. இரவலரிருநிதி, இரவலனிருநிதி; எறிந்து வெளவினோர், எறிந்த வெண்ணிலான், எண்ணிலோன். (99)

895. தழைத்ததண் டுளவினோன் றலைவ னல்லனென்
றழைத்தவ னருநெறி யந்த ணாளரில்
பிழைத்தவன் பிழைப்பிலா மறையைப் பேணலா
திழைத்தவன் பொய்யெனு மிழுதை நெஞ்சினேன்.

தழைத்த தண் துளவினோன் - செழித்த குளிர்ச்சியையுடைய துளவ மாலை அணிந்த திருமால், தலைவன் அல்லன் என்று அழைத்தவன் - பரம்பொருளல்லன் என்று சொன்னவனும், அரு நெறி அந்தணாளரில் - அரிய ஒழுக்கம் அமைந்த அந்தணரிடத்து, பிழைத்தவன் - பிழை பட்டவனும், பிழைப்பு இலா மறையை - குற்றமற்ற வேத நெறியை, பேணலாது - போற்றாமல், இழைத்தவன் - (வேத நெறிக்கு மாறான செயல்களைச்) செய்தவனும், பொய் எனும் இழுதை நெஞ்சினேன் - பொய் என்னும் பேய்பிடித்த மனமுடையவனும்.

அழைத்தல் - சொல்லுதல். அந்தணாளரில் பிழைத்தல் - அவரை அவமதித்தல், தீங்கு செய்தல் முதலியன. வேத நெறியை இகழ்ந்து அதற்கு மாறாக நடத்தலும் பாவமாம். பொய், ஐம்பெரும் பாவங்களுள் ஒன்று; அஃதொருவனைப் பேய்போலப் பற்றிக்கொள்ளுதலால் 'இழுதை' என்றார். இதிற் கூறப்பட்டவர்களும் பெரும் பாவிகளே.

(பி - ம்.) 1. துளவினன். துமாயினேன்.
2. அழைத்தவனறநெறி, அழைத்தவரறநெறி, அழைத்தவரருநெறி.
3. பிழைத்தவர் பிழைப்பிலா, பிழைத்தவனன்பிலா; மறையைப் பின்னுமின்று, பின்னினின்று, பின்னவற்கு, பின்னவர்க்கு.
4. இழைத்தவருளரெனும், இழைத்தவரிலனெனும், இழைத்தவரருளிலா, இழைத்தவனருளிலா; நெஞ்சினோர், நெஞ்சினர், நெஞ்சினன். (100)

896. தாய்பசி யுழந்துயிர் தளரத் தான்றனிப்
பாய்பெரும் பாழ்வயி றளிக்கும் பாவியும்
நாயகன் படநடந் தவனு நண்ணுமத்
தீயெரி நரகத்துக் கடிது செல்கயான்.

தாய் பசி உழந்து உயிர் தளர - தன்னைப் பெற்ற தாய் பசியால் வருந்தி உயிர் சோர, (அவளை ஓம்பாது) தான் - தான் மட்டும், தனி - தனியாக, பாய் பெரும் பாழ் வயிறு - பரந்த பெரிய (தன்) பாழும் வயிற்றை, அளிக்கும் - சோறிட்டுக் காக்கின்ற, பாவியும்—, நாயகன் பட நடந்தவனும் - (போரிலே) தன் தலைவன் அழியுமாறு (அவனை விட்டு) ஓடியவனும், நண்ணும் - அடையத் தக்க, அ தீ எரி நரகத்து - அந்தத் தீப்பற்றியெரியும் கொடிய நரகத்தில், யான் கடிது செல்க - நான் விரைந்து செல்வேனாக.

இதில் இருபெரும் பாவிகளைக் குறித்தான். 'போரில்' என்றது வருவித்துரைக்கப்பட்டது. தன்னைக் காக்கும் தலைவன்பொருட்டுத் தன்னுயிரையும் கொடுத்தலே ஆண்மையும் அறமும் ஆகும். முந்திய மூன்று பாடல்களிற் கூறப்பெற்றவர்களோடு, இதிற் கூறிய இருவரையுங் கூட்டி, இவர்களெல்லோரும் அடையத்தக்க நரகம் என்க. அத்தகைய கொடு நரகில் யான் கடிது செல்வேனாக என்றான். 'கடிது' என்றதனால், இப்போதே உயிர் நீத்து அங்கே சேர்வேன் என்ற குறிப்பும் கொள்ளத் தகும்.

தீ யெரி நரகம் - நரக வகையுள் ஒன்றென்பர். "தாயர்பசி கண்டு நனி தன்பசி தணிக்கும், நாயனைய புல்லருறு நரகிலுறு வேனான்" (வி. பா. 10—ஆம் போர். 182) என்பதை ஒப்புநோக்க.

(பி - ம்.) 1. பசியுழன்று; பசியுளர்ந்து; தான்றன, தன்றனி, தான்றனது, தானனம், தன்னொரு, தள்ளத்தான்றன.
2. பாய்வரும், ஆய்பெரும்; வயிற்றளிக்கும்.

3. நாயகன்படநடந்துவரும், நாயகன்களப்படத் தவறு; களப்படத் தவ்வ நண்ணுமித்.

4. கடிது செல்க நான், சேர்கயான், சேர்கயானுமே. (101)

897. தாளினி லடைந்தவர் தம்மைத் தற்கொரு
கோளுற வஞ்சியே கொடுத்த பேதையும்
நாளினு மறமறந் தவனு நண்ணுமம்
மீளறு நரகத்துக் கடிது வீழ்கயான்.

தாளினில் அடைந்தவர் தம்மை-தன் பாதங்களில் சரணம் அடைந்தவர்களை, தற்கு ஒரு கோள் உறவு அஞ்சி-(அவர்களைக் காத்தலால்) தனக்கொரு தீங்கு வருதலுக்கு அஞ்சி, கொடுத்த-(பகைவர்பால்)காட்டிக் கொடுத்த, பேதையும்-அறிவிலியும், நாளினும் அறம் மறந்தவனும்-நாள்தோறும் (தன் கடமையான) தருமங்களைச் செய்ய மறந்தவனும்; நண்ணும்-அடையத்தக்க, அ மீள் அறு நரகத்து-அந்த மீளுதலற்ற நரகத்தில், யான் கடிது வீழ்க-நான் விரையில் வீழ்வேனாக.

கொடியோராலும் பகைவராலும் நலிவுற்றுத் தம்மைச் சரணம் அடைந்தவரைத் தம் உயிர் கொடுத்தேனும் காத்தல் கடமையாகும்; அங்ஙனமின்றி, அவரைக் காத்தலால் தமக்குத் தீங்கு நேருமென்று அஞ்சிக் காவாது விடுதல் பெரும்பாவமாகும். “பூரிய ரேயுந் தம்மைப் புகல்புகுந் தோர்க்குப் பொன்ரு, ஆருயிர் கொடுத்துக் காத்தா ரெண்ணிலா வரசர்” (யுத்த. 422); “தஞ்சென அடைந்தவர் தமக்கிடர் நினைக்கும், நஞ்சனைய பாதகர் நடக்குநெறி சேர்வேன்” (வி. பா. 13-ஆம் போர். 183) என்பன காண்க. மீள்: முதனிலைத் தொழிற் பெயர்.

(பி-ம்.) 1. தாளினின், தாணிழல், அடைந்தனர், தாளடைந்துறைபவர், தாளுறவடைந்தவர்; தம்மைத் தாமொரு, தமக்குத் தாங்களும்.

2. கோளுறவஞ்சினன், அஞ்சினர், கோளுறவருதலில், கோளுற லஞ்சியே, கோணுறவஞ்சியே; பேதையர், பேதையை.

3. நாளினுமறங்கரந்தவனும், கவர்ந்தவனும், நாளினுநறை நுகர்ந்தவனும், நுகர்வனும், நன்கிலாதவனும், அறங்கடிந்தவனும்; நண்ணுறும், நண்ணுற, நண்ணுறும், நண்ணிய, நந்தலில், நன்கிலா.

4. மீளருநரகிடைக், நரகத்துக், மீள்விலாநரகத்துக், மீளிலாநரகத்துக்; கடிதின், விரகின், விரைவின்; வீழ்கநான், செல்கயான், வீழ்கயானுமே. (102)

898. பொய்க்கரி கூறினேன் போருக் கஞ்சினேன்
கைக்கொளு மடைக்கலங் கரந்து வவ்வினேன்
எய்த்திடத் திடர்செய்தோ னென்றின் னேர்புகும்
மெய்க்கொடு நரகிடை விரைவில் வீழ்கயான்.

பொய்கரி கூறினேன் - பொய்ச் சான்று சொன்னவனும், போருக்கு அஞ்சினேன் - போருக்கு அஞ்சி ஓடினவனும், கை கொள்ளும் அடைக்கலம் - தன் கையில் கொண்ட அடைக்கலப் பொருளை, கரந்து வவ்வினேன் - (கொடுத்தோரை) மறைத்துக் கவர்ந்து கொண்டவனும், எய்த்த இடத்து - ஒருவர் இளைத்த இடத்தில், இடர் செய்தோன் - (அவ்விளைத்தவர்க்கு) மேலும் துன்பம் செய்தவனும், என்ற இன்னோர் புகும் - என்று சொல்லப்பட்ட இவர்கள் செல்லத்தக்க, மெய் கொடு நரகு இடை - மெய்ம்மையான கொடிய நரகத்தில், யான் விரைவில் வீழ்க - நான் விரைவில் வீழ்வேனாக.

பொய்ச்சாட்சி சொல்லுதல் கொடியது; அடைக்கலம் வெளவுதலும், எய்த்தவிடத்து இடர்செய்தலும் அதனினுங் கொடியன. "அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை" (குறுந். 184). நரகம் உண்டு என்பதை மறுப்பாரும் உளராகலின், 'நரகம் உள்ளதே' என்பான், 'மெய்க்கொடு நரகம்' என்றான். எய்த்திடத்து, என்றின்னோர்: தொகுத்தல் விகாரம்.

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை.

பி - ம்.) 1. கூறினோர், கூறினன், கூறினர்; போரிலஞ்சினன், அஞ்சினர், அஞ்சினேன், போரினஞ்சினேன், அஞ்சினோர்.
2. கைக்கொளும் படைக்கலம், கைப்படுத்தடைக்கலம்; காத்து; வவ்வினோர், வவ்வினன், வவ்வினன்.
3. எய்த்திடத்திடர் செய்தோர், செய்வான், செய்தான், செய்வோன், எய்த்திடத்துயர் செய்தோர், எய்த்தவர்க்கிடர் செய்வோன்; என்றினோர்.
4. பொய்க்கோடு; நரகிடை விரைவின், நரகிடைக்கடிது, நரகத்துக் கடிது, கடுநரகிடையின்; போகயான், நரகத்துவிழ்கயானுமே. (103)

899. அந்தண ருறையுளை யனலி யூட்டினேன்
மைந்தரைக் கொன்றுளோன் வழக்கிற் பொய்த்துளோன்
நிந்தனை தேவரை நிகழ்த்தி னேன்புகும்
வெந்துயர் நரகத்து வீழ்க யானுமே.

அந்தணர் உறையுளை - அந்தணர் வாழும் வீட்டை, அனலி ஊட்டினேன் - தீக் கொளுவினவனும், மைந்தரை கொன்று உளோன் - தன் புதல்வரையே கொன்றவனும், வழக்கில் பொய்த்து உளோன் - பொய் வழக்குத் தொடுத்தவனும், தேவரை நிந்தனை நிகழ்த்தினேன் - தேவர்களைப் பழித்தவனும் (ஆகிய இவர்கள்), புகும் - செல்லத்தக்க, வெம் துயர் நரகத்து - கொடுந் துயரத்துக்கிடமான நரகத்தில், யானும் வீழ்க - நானும் விழுவேனாக.

ஏ : ஈற்றசை.

பொய்க்கரி கூறுதல் முன்னே சொல்லப்பட்டமையின், வழக்கில் பொய்த்தல், பொய்வழக்கு எனப்பட்டது. நிந்தனை நிகழ்த்துதல் - நிந்தனை செய்தல்.

(பி - ம்.) 1. அனலிலூட்டினேன், ஊட்டினோர், அனலினூட்டினேன், அனலியூட்டினோர்.
2. மைந்தரை நோக்கிலார், நோக்கிலான், மைந்தனை நோக்கிலோன், மைந்தனைக் கொன்றுளோர், கொன்றுளோன், மைந்தனை நோக்கலான், வந்தனை நூக்கினேன், நோக்கிலோன், நோக்கிலார், வந்தனை கொன்றுளோன்; பொய்த்துளோர், பொய்த்துளார், வழக்கம் பொய்த்துளான்.
3. தேவரில், தேவரின், வேருள்; நிகழ்த்தினோர்புகும், பெரும்.
4. நரகத்தில், நரகத்தின், நரகிடைக்கடிது வீழ்கயான். (104)

900. கன்றுயி ரோய்ந்துகக் கறந்து பாலுண்டோன்
மன்றிடைப் பிறர்பொருள் மறைத்து வவ்வினேன்
நன்றியை மறந்திடு நயமி லாவினேன்
என்றிவ ருறுகதி யென்ன தாகவே.

கன்று ஓய்ந்து உயிர் உக - கன்று (பாலின்றி) இளைத்து உயிர் விடுமாறு, பால் கறந்து உண்டோன் - (பசுவின்) பாலைக் கறந்து பருகினவனும், மன்றிடை - நீதிமன்றத்தில், பிறர் பொருள் - அயலார் பொருளை, மறைத்து - (பொய்ச் சான்று முதலியவற்றால் உண்மையை) மறைத்து, வவ்வினேன் - தனதாக்கிக் கொண்டவனும், நன்றியை மறந்திடும் - (ஒருவர் செய்த) நன்றியை மறந்துவிடுகிற, நயம் இல் நாவினேன் - நன்மையில்லாத நாக்கையுடையவனும், என்ற இவர் உறு கதி - என்று சொல்லப்பட்ட இவர்கள் அடையும் கதி (நரகம்), என்னது ஆக - எனக்குரியதாகுக.

ஏ : ஈற்றசை.

கன்று சாவப் பால்கறத்தல்: "யாருளரோ, தங்கன்று சாக்கறப்பார்" (பழ. 359). இடத்திற்கேற்பப் பசுவென்பது வருவிக்கப்பட்டது. நன்றி மறந்தவன் பேச்சே நன்றி செய்தோரை வருந்தச் செய்யுமாதலால், 'நயமில் நாவினேன்' என்றான். என்றிவர் : தொகுத்தல் விகாரம்.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

(பி - ம்.) 1. இறந்துகக், உலந்திடக், உலந்துறக், உலைந்துகக்; பாலுண்டோர்.
2. வவ்வினூர்.
3. மறைத்தறம். மாய்த்தறம், மறந்துளோன், மாய்த்தவன்; நயமிலாவினேன், நாவினோர், நாவினூர், மறந்து நன்னெறியை நீங்கினேன், மறந்தறமறந்த நாவினேன், நாவினன், மறந்தறமாய்த்த நாவினேன்.
4. உறுநரகு, உறுதுயர்; என்னதாகுக. (105)

901. ஆறுதன் னுடன்வரு மஞ்சொன் மாதரை
ஊறுகொண் டலைக்கத்தன் னுயிர்கொண் டோடினேன்
சோறுதன் னயலுளோர் பசிக்கத் துய்த்துளோன்
ஏறுமக் கதியிடை யானு மேறவே.

ஆறு - வழிநடையில், தன்னுடன் வரும் - தன்னோடு வருகிற, அம் சொல் மாதரை - அழகிய சொற்களையுடைய பெண்டிரை, ஊறு கொண்டு அலைக்க - (தீயோர்) பற்றிக்கொண்டு வருத்த, (அவர்களை விடுவிக்க முயலாமல்), தன் உயிர் கொண்டு ஓடினோன் - தன்னுயிரைக் காத்துக்கொள்ளத் தப்பியோடினவனும், தன் அயல் உளோர் பசிக்க - தன்னருகில் இருப்போர் பசித்திருக்க, சோறு துய்த்து உளோன் - (தான் மட்டும் வயிற்றை நிரப்பச்) சோற்றைத் தின்றவனும், ஏறும் - செல்லத் தக்க, அ கதி இடை - அந்த நரகத்தில், யானும் ஏற - நானும் சேர்வேனாக.

ஏ : ஈற்றசை.

ஒருவன் வழி நடந்து செல்லும்போது மகளிர் உடன் இருந்தால், அவர்கள் தனக்குத் தொடர்புடையவராயினும் இல்லாதவராயினும் அவர்களைக் காத்தல் ஆண்மகன் கடமையாகும். அணிகலன்களை வெளவும் ஆசையாலும் தீய இச்சையாலும் கள்வர் முதலியோர் மாதரையே முதலிற் பற்றித் தீங்கிழைப்பர். அதனைக் காணும் ஆண்மகன், தன் உயிர் போவதாயினும் பொருட்படுத்தாமல், அவர்களைக் காக்க முயலுதல் வேண்டும்; அது செய்யாதவன் பாவியே. "ஆறுடன் செல்பவ ரரிவை மார்தமை, வேறுளோர் வலிசெயின் விலக்கி வெஞ்சமத், தூறுறத் தம்முயி ருகுப்ப ரென்னையே, தேறினள் புன்கணோய் தீர்க்க கிற்றிலேன்" (கிட்கிந்தா. 214). சோறுதன்... துய்த்துளோன்: 906; "பசைகொண் டவனிற்கப் பாத்துண்ணா னாயின், நசைகொன்றான் செல்லுலக மில்" (பழ. 225).

(பி - ம்.) 2. கூறுகொண்டு, கூறைகொண்டு; அலைக்கத்தான், அலைப்பதன், அலைத்தவர்; உயிர்கொண்டேகினேன், உயிர்கொண்டோடினோர், உயிர்கொண்டோடினோர், உயிரைக கொன்றுளோன்.
3. அயலுளார், அயலவர், அயல்சிலர், அயல்பலர், தன்பாலுளோர், தன்னயல்சிலர்; பதைக்கத் துய்த்துளோர், துய்த்துள்ளோர், தூய்த் துளான், துய்த்தவன், துயத்தவர்.
4. ஏறுசெல்கதியினை, ஏறியகதியிடை, ஏறியதீக்கதி, ஏறியநரகிடை, ஏறிய கொடுநரகு, வீறுறுசெல்கதி; என்னதாகவே, எனக்கும் வீழ்கவே, விழவே. (106)

902. எஃகெறி செருமுகத் தேற்ற தெவ்வருக்
கொஃகின னுயிரலைத் துண்ணு மாசையான்
அஃகலி லறநெறி யகற்றி யொண்பொருள்
வெஃகிய மன்னன்வீழ் நரகின் வீழ்கயான்.

எஃகு எறி செரு முகத்து - படைகள் தாக்குறும் போர் முனையிலே, ஏற்ற தெவ்வருக்கு ஒஃகினன் - எதிர்த்த பகைவருக்கு(அஞ்சிப்) பணிந்தவனும், உயிர் அலைத்து உண்ணும் ஆசையான் - உயிர்களைக் கொன்று தின்னும் ஆசையுடையவனும், அஃகல் இல் - சுருங்குதல்

இல்லாத, அறம் நெறி அகற்றி - தருமமார்க்கத்தைக் கைவிட்டு, (அதரும வழியிலே), ஒண் பொருள் வெஃகிய மன்னன் - மிக்க பொருளைக் கொள்ள விரும்பிய அரசனும் (ஆகிய இவர்கள்), வீழ் நரகின் - விழும் நரகத்தில், யான் வீழ்க - நானும் வீழ்வேனாக.

எஃகு - படைக்கலங்களின் பொதுப் பெயர். ஓஃகுதல் - ஒல்குதல் பொருள் வெஃகல்: "இறலீனும் எண்ணாது வெஃகின்" (குறள். 180).

(பி - ம்.) 2. ஓஃகினன் உயிர்வளர்த்து, உயிர்செகுத்து, உயிர்கொள, ஓஃகினோருயிர் வளர்த்து, ஒல்கினின்றுயிர் வளர்த்து, ஒல்கினன் உயிர்வளர்த்து, உயிரலைத்து, ஒல்கிகின்றுயிர்சுமந்து; ஆசையார், ஆசையால், ஆசையோன், ஓசையான், ஓகையால்.
3. அஃகலினறநெறி, அஃகலின் மறைநெறி, ஆக்கியோன் பொருள், ஆக்கினேன்பொருள், ஆக்கியான்பொருள்.
4. வெஃகியமன்னவன், வெஃகினனவன் விழும்; நரகில் விழ்கயான், நரகின் விழயான். (107)

903. அழிவரு மரசிய லெய்தி யாகுமென்
றிழிவரு சிறுதொழி லியற்றி யாண்டுதன்
வழிவரு தருமத்தை மறந்து மற்றொரு
பழிவரு நெறிபடர் பதக னாகயான்.

அழிவு அரும் அரசியல் எய்தி - கெடுதலில்லாத அரசாட்சியைப் பெற்று, ஆகும் என்று - (நாம் எது செய்யினும்) தகும் என்று கருதி, இழி வரு சிறு தொழில் இயற்றி ஆண்டு - தாழ்வான சிறு தொழில்களைச் செய்து அரசாண்டு, தன் - தனக்குரிய, வழி வரு தருமத்தை மறந்து - வழி வழியே வந்த அரச தருமத்தை மறந்து, பழி வரு மற்று ஒரு நெறி படர் - பழி வளர்தற்கேற்ற வேறொரு (தகாத) வழியிலே செல்லுகிற பதகன், யான் ஆக - பாவி நானாகுக.

அழி வரும் அரசியல் — முன்னோரால் வழி வழியே முறையாக ஆளப் பெற்றுக் கெடுதலின்றி வந்த அரசியல். எய்தி - தான் வருந்தித் தேடாது, 'தந்தைக்குப்பின் தனயன்' என்ற முறையில் எளிதாகப் பெற்று. மற்றொரு பழி வரு நெறி - கோல் கோடிக் குடிகளிடத்து முறையாக அன்றி அவர்கள் வருந்தப் பொருள் கொள்ளல் முதலியன செய்யும் வழி. "மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப், பால்தர வந்த பழவிறற் றாயம், எய்தின மாயின் எய்தினஞ் சிறப்பெனக், குடிபுர விரக்குங் கூரி லாண்மைச், சிறியோன்" (புறநா. 75 : 1 - 5) என்பது ஒப்புநோக்கத்தகும். இழி வரு என்றதில் இழி, முதனிலைத் தொழிற் பெயர்.

(பி - ம்.) 1. அளிவரும்; எய்திபாக்குமென்று, ஆக்குமின்று, பார்க்குமின்று, அகற்றியாகுமென்று, எய்தியவர்க்கும், ஏய்தியார்க்குமின்று.

2. இழிவருசிலதொழில், இனிவருசிறுதொழில், தெளிவருஞ்சிறு தொழில்; இயற்றியாண்டதின், ஆண்டதன், யாண்டுந்தன், மாண்டதன், இயற்றித்தீதிலா.
3. வழிவருந் தருமத்தை, வழிவருகருமத்தை; அறுத்து, மறைத்து.
4. பழிபடர் நெறிபடர், பழிபடர் நெறிவரு. (108)

904. கன்னியை யழிசெயக் கருதி னேன்குரு
பன்னியை நோக்கினேன் பருகி னேனறை
பொன்னிகழ் களவினிற் பொருந்தி னேனெனும்
இன்னவ ருறுகதி யென்ன தாகவே.

கன்னியை - கன்னிப் பெண்ணை, அழி(வு) செய கருதினேன்- கற்பழிக்கக் கருதினவனும், குரு பன்னியை நோக்கினேன் - குரு பத்தினியைத் (தீய கருத்துடன்) பார்த்தவனும், நறை பருகினேன்- கட் குடித்தவனும், பொன் - பொன்னை, இகழ் களவினில் பொருந்தினேன் - இகழ்தற்குரிய களவினால் கைக் கொண்டவனும், எனும் இன்னவர் உறு கதி - என்று சொல்லப்பட்ட இவர்கள் அடையும் தீய கதி (நரகம்), என்னது ஆக - என்னுடையதாகட்டும்.

ஏ : ஈற்றசை.

கன்னி - மணமாகாத பெண். பன்னி : பத்நி என்னும் வடசொல் திரிந்தது. கெடுக்கக் கருதலும், கெட்ட கருத்தோடு நோக்குதலுமே பாவமெனின், கெடுத்தல் பற்றிச் சொல்லவேண்டா. களவினில் பொன் பொருந்தினேன் - களவினால் பொருள் தேடினவன் என்றலுமாம். "கட்டழற் காமத் தீயிற் கன்னியைக் கலக்கி னானும்...குட்டநோய் நரகந் தம்முட் குளிப்பவர்" (சீவக. 253).

சில பிரதிகளில் இதுவும் அடுத்த பாடலும் முன்பின்னாக உள்ளன.

(பி - ம்.) 1. கன்னியைக் கட்டழித்து, கடிதழித்து, கடியழித்து, கற்பழித்து; எய்தினன் குருப், எய்தினேன் குரு, ஏகினன் குரு.
3. பொனனிகழ்களவினுட், களவிடைப், பொன்னினற்களவினிற், பொன்னினற்களவினற், களவினுட், களவிடைப், பொன்னிருங் களவினன்; பொருந்தினேனென, பொருந்தினனெனும், பொய்யன் சூதினன். (109)

905. தஞ்சென வொதுங்கினோர் தனது பாருளோர்
எஞ்சினர் மறுக்கினே டிரியல் போயுற
வஞ்சிசென் றிறுத்தவன் வாகை மீக்கொள
அஞ்சிய மன்னவ னவனு மாகயான்.

தஞ்சு என ஒதுங்கினோர் - (பிற நாட்டவராய்த்) தஞ்சம் என்று தன் நாட்டில் வந்து தங்கியவர்களும், தனது பார் உளோர் - தன் நாட்டில் நிலையாக உள்ள குடிகளும், எஞ்சினர் - (இவரல்லாத)

பிறரும், மறுக்கினேடு இரியல் போய் உற-பெருங் கலக்கத்தோடு அஞ்சியோடுமாறு, வஞ்சி சென்று இறுத்தவன் - (நாடு கொளக் கருதி) வஞ்சிமாலை சூடி வந்து தங்கிய பகைவன், வாகை மீகொள - வெற்றி வாகை சூடும்படி, அஞ்சிய மன்னவன் அவனும் - அஞ்சி எதிர்த்துப் பொராதிருந்த அரசனுகிய அக்கீழ் மகனும், யான் ஆக - நான் ஆகக் கடவேன்.

வஞ்சி - புறத்திணையுள் ஒன்று; போர்மேற் செல்லுதல் பொருளாக உடையது; இதற்கு அடையாளம் வஞ்சி மாலை சூடுதல். எதிர்த்து வந்த பகைவனைத் தானும் எதிர் சென்று பொருது நாட்டையும் குடிகளையும் காத்தல் அரசன் கடமையாகும். அது செய்யாது அஞ்சி அடை மதிற்பட்டிருந்தோ, அஞ்சி ஓடியோ தன் கடமையைச் செய்யாது விட்ட அரசன் பாவியாவான். ஒரு நாட்டில், அந்நாட்டின் நிலையான குடிகளும், பிறநாட்டவராய்ப் பல காரணங்களால் அங்கு வந்து தங்கு வோரும், வாணிபம் முதலியவற்றுக்காக வருவோருமென முத்திறத் தவர் இருப்பர்; போர் நிகழுங்கால், எல்லோரும் அஞ்சியோடத்தக்க வர்களே. ஒதுங்கினேரும், பாருளோரும், எஞ்சினரும் என உம்மை விரிக்க. தஞ்சம், மறுக்கம் என்பன அம் குறைந்து நின்றன. இரியல் போதல் - அஞ்சியோடுதல்.

(பி - ம்.) 1. ஒதுங்கினர்; பாருளோன், பாங்குளோர், போருளோர், தமது பேரருள்.
2. எஞ்சலின் மறுக்கினேடு, மறுக்கமொடு, எஞ்சின, எஞ்சினன், எஞ்சின மனத்தினேடு, மனத்தினேர், வனத்தினேடு, எஞ்சிடவனத் தினேடு, எஞ்சியமறுக்கமோடு, எஞ்சியவினத்தொடும்; இரியல் போயிற; போயிட, போயற, இடியில் போயுற.
4. அஞ்சின, எஞ்சிய; மன்னவன் விருந்து மாகயான், மன்னவனுக யானுமே. (110)

906. மறுவிறெல் குலங்கலை மாசிட் டேற்றினேன்
சிறுவிலை யெளியவ ருணவு சிந்தினேன்
நறியவென் றயலவர் நாவி னீர்வர
உறுபத நுங்கிய வொருவ னுகயான்.

மறு இல் தொல் குலங்களை - களங்கமில்லாத பழைய குடிப்பிறப் பாளரை, மாசு இட்டு ஏற்றினேன் - களங்கம் கற்பித்து மிகுத்துக் கூறியவனும், சிறுவிலை - சிறுவிலைக் காலத்தில், எளியவர் உணவு - எளியவர்க்குக் கிடைக்கும் சிறிதளவு உணவையும், சிந்தினேன் - சிதறுவித்தவனும், உறு பதம் - சிறந்த உணவை, நறிய என்று - (இவை) நறுமணமும் சுவையும் உடையனவென்று, அயல் அவர் நாவில் நீர் வர - அருகில் இருப்போர் நாக்கில் நீருற, நுங்கிய ஒருவன் - தானே (விரைந்து) விழுங்கிய ஒருவனும் (போல), யான் ஆக - நானும் ஆகக் கடவேன்.

நற்குடிப்பிறந்தோரிடத்து இல்லாத களங்கத்தைக் கற்பித்துக் கூறி இகழ்தல் பாவமாகும். உணவைத் தான் உண்ணும்போது சிந்துதலே தவறு; எளியவர்க்கு அரிதாகக் கிடைத்த சிறிதளவு உணவையும் சிந்துவித்தல் பெரும் பாவம். "மருந்தே யாயினும் விருந்தோடுண்" என்பதனைக் கைவிட்டு, அயலிருப்போர் நேரே பார்த்து நாவில் நீர் ஊற, அவர் எதிரிலேயே தான் உண்ணுதல் கொடும் பாவம். அத்தகைய செயலின் இழிவுபற்றி 'நுங்கிய' என்றான். "சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில், பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி, உரைசா லோங்குபுக ழொரீஇய, முரைசுகெழு செல்வர்" (புறநா. 127 : 7-10) என்பது இங்கே ஒப்பிடத் தகும். 901-குறிப்பும் பார்க்க. சிறுவிலை-சிறுவிலைக் காலம்; பஞ்சகாலம்.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை; சிலவற்றில் இதுவும் அடுத்ததும் முன்பின்னாக உள்ளன.

(பி-ம்.) 1. மறுவில் குலங்களை குணங்களை, மறுவிலாக் குலங்களை, மறுவினற் குணங்களை; மாறிட்டேற்றினன்.
3. நறியன வயலவர், நறியவொன்றயலவர், வறியவன் துயல்வர, வறியவன் தையல்வாய்; நாவுநீர்வர, நாவினீரவாய், நாவினீரவர்.
4. உறுபத நீங்கிய, உறுபதனுங்கிய, நுங்கின, உறுபயநுங்கின, உறுதுயர்நுங்கிய, உறுபகற்றூங்கினன்; ஒருவனாகநான். (111)

907. ஊணல வுணர்வழி நாயி னுண்டவன்
ஆணலன் பெண்ணல ளார்கொ லாமென
நாணல னரகமுண் டென்னு நல்லுரை
பேணலன் பிறர்பழி பிதற்றி யாகயான்.

ஊன் அல-நல்லுணவல்லாதவற்றை (உண்ணத் தகாதவற்றை), உணர்வு அழி நாயின் உண்டவன்-அறிவு கெட்ட நாய்போலத் தின்பவனும், ஆண் அலன்-(இவன்) ஆணும் அல்லன், பெண் அலன்-பெண்ணும் அல்லன், ஆர் கொல் என-யாரோ என்று பிறர் இகழவும், நாணலன்-அதற்கு நாணாதவனும், நரகம் உண்டு என்னும் நல் உரை பேண் அவன்-நரகம் என்பதொன்று உண்டு என்னும் வேதப் பிரமாணத்தைப் புறக்கணிப்பவனும், பிறர் பழி பிதற்றி-பிறருடைய குற்றங்களைத் தூற்றித் திரிபவனும் (போல), யான் ஆக-நான் ஆகக் கடவேன்.

ஆர்கொலாம் என்றதில் 'ஆம்' அசை.

முதலடி, பேருண்டியானைக் குறித்ததெனலாம். அவன் உணவின் தகுதியும், அது பெறும் இடத்தின் தகுதியும் பாராமல், எதையும் எவ்விடத்தும் பெற்றுத் தின்று வயிற்றை நிரப்புதலால் பழி பாவங்களுக்குள்ளாவான். 'ஆணலன்......நாணலன்' என்றது பெண் வழிச் செல்பவனையோ, ஆண், பெண் என்ற பாகுபாடு

பாராமல் வாய்க்கு வந்ததைப் பேசும் அறிவிலியையோ குறித்த தெனலாம். பெண்வழிச் செல்வோன், செய்யத் தகாதவற்றையும் துணிந்து செய்து குற்றப்படுவானுதலால் இவ்விருவகையினரும் பழி பாவங்கள் எய்துதற்குரியவர்க ளாவர். பிறருடைய சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்தலே முறையாகலின், பிறர்பழி பிதற்றல் குற்றமுடையதே, அது நன்றன்று என்பான் 'பிதற்றல்' என்ருன். பிதற்றி - பிதற்றுபவன்.

(பி - ம்.) 1. ஊணலது; உண்வழி, உள்வழி, உளவுழி, உணல்வழி, ஒருவழி, வளவழி; உண்டியன், உண்டிவன்.
2. ஆணல்; ஆர்கொலாமிவன்.
3. நாணலனுக முண்டு.
4. பிறன்பழி, பெறும்பழி, பெறுகதி, பேணலனெனப்பிறர்; பிதற்றி வாழ்கயான், பெற்று வாழ்கயான். (112)

908. வில்லினும் வாளினும் விரிந்த வாண்டொழில்
புல்லிடை யுகுத்தனன் பொய்ம்மை யாக்கையைச்
சில்பக லோம்புவான் செறுநர் சீறிய
இல்லிடை யிடுபத மேற்க வென்கையால்.

வில்லினும் வாளினும் விரிந்த - வில்தொழிலாலும் வாள் தொழிலாலும் மிகுந்த, ஆண்தொழில் - ஆண்மைச் செயலாகிய அமுதத்தை, புல் இடை உகுத்தனன் - பயனற்றதாக்கி, பொய்ம்மை யாக்கையை - நிலையில்லாத இவ்வுடம்பை, சில் பகல் ஓம்புவான் - சில காலம் பாதுகாக்க விரும்பி, செறுநர் சீறிய இல் இடை - பகைவர் கோபித்தலால் அடையத்தக்க (சிறையாகிய) இடத்தில், இடு பதம் - (அவர்கள் விரும்பியபோது) இடும் சோற்றை, என் கையால் ஏற்க - என் கையால் (நாணின்றி) ஏற்று உண்டு வாழ்வேனுக.

இதிற் சொல்லியது, அரசர்க்குத் தகாத இழி செயல். புல் இடை - தூய்மையற்ற இடம். புல்லிடையுகுத்தல் - வீணுக்குதல். தன்பால் ஆண்மையாகிய அமுதம் இருக்கவும், அதனை வீணுக்கிவிட்டுப் பகைவர் கையில் சிக்கிச் சிறைப்பட்டு, உயிரினும் சிறந்த மானத்தை நீத்து, சிறைக் காவலர் தாம் விரும்பியபோது தரும் தகுதியற்ற உணவை, இரப்பவன் போலக் கையேற்று உண்டு, நிலையற்ற உடம்பைக் காத்தலின் இழிவு, சொல்லொணுதது; அந்நிலையுற்ற பாவி நாணுகுக என்கின்ருன். "தொடர்படு ஞமலியின் இடர்ப்படுத் திரீஇய, கேளல் கேளிர் வேளாண் சிறுபதம், மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத், தாமிரந் துண்ணு மளவை, ஈன்ம ரோவிவ் வுலகத் தானே" (புறநா. 74) என்ற சேரமான் கணைக்காலிரும்பொறையின் பாடல் இங்கு ஒப்புநோக்கத் தகும். அமுதைப் புல்லிடையுகுத்தல் : 159- ஆம் பாடல் காண்க. உகுத்தனன் ; முற்றெச்சம்.

(பி - ம்.) 1. விரிந்த வொண்டொழில்.
2. உகுத்தனென், உகுத்தவன், உகுத்தெனப்; பொய்மையாக்கையச், போகயாக்கையைச்.
3. ஓம்பினன்; செறுநர்சிரிய, செறுநர்ச் சேர்ந்தவர்.
4. வெல்விடை; இடுபதன், இடுமதின், இடுமதும், இடுபயன்; என்கையான்; இல்விடை, வணங்கினே னென்று மாகயான். (113)

909\. ஏற்றவர்க் கொருபொரு ளுள்ள தின்றென
மாற்றல னுதவலன் வரம்பில் பல்பகல்
ஆற்றின னுழற்றுமோ ராத னெய்துமக்
கூற்றுறு நரகினோர் கூறு கொள்கயான்.

உள்ளது ஒரு பொருள் - தன்பால் உள்ளதொரு பொருளை, ஏற்றவர்க்கு - (வந்து) இரந்தவர்க்கு, உதவலன் - (உடனே) கொடாமலும், இன்று என மாற்றலன் - இல்லையென்று மறுக்காமலும், வரம்பு இல் பல் பகல் - அளவற்ற பல நாட்கள், ஆற்றினன் - காலங் கடத்தி, உழற்றும் - (இரந்தவரை ஆசை காட்டி) அலைக்கழிக்கின்ற, ஓர் ஆதன் - ஓர் அறிவிலி (வீணன்), எய்தும் - அடைதற்குரிய, அ - அந்த, கூற்று உறு நரகின் ஓர் கூறு - கூற்றுவனது ஆட்சிக்குட்பட்ட நரகத்தின் ஒரு பகுதியை, யான் கொள்க - நான் அடைவேனாக.

தன்பால் உள்ளதொன்றை இரப்பவர்க்கு இல்லையென்னாது கொடுத்தல் புகழும் புண்ணியமும் தருவது; கொடுக்க மனமில்லையேல் இல்லையென்று தெளிவாகக் கூறி, இரப்பவன் நசை கொள்ளாதபடி செய்துவிடலாம். அங்ஙனமன்றி, 'நாளை,' பின்னை' என்று அவனுக்கு ஆசைகாட்டிக் காலங் கடத்திக் கடைசியில் 'இல்லை' என்றல் பெரும் பாவமாகும். அவ்வாறு செய்யும் வீணன் அடையத்தக்க நரகம் எனக்கும் உரியதாகுக என்கின்றான். நரக ஆட்சி யமனுக்குரியதாகலின் 'கூற்றுறு நரகு' எனப்பட்டது. "இசைவ கொடுப்பதூஉ மில்லென்பதூஉம், வசையன்று வையத்தியற்கை" (பழ. நன்றியில் செல்வம்.), "வாதவர்கோன் பின்னையென்றான் வத்தவர்கோன் நாளையென்றான், யாதவர்கோன் யாதொன்று மில்லையென்றான்-ஆதலால், வாதவர்கோன் பின்னையினும் வத்தவர்கோன் நாளையினும், யாதவர்கோன் இல்லையினிது" (தமிழ் நாவலர் சரிதை) என்பன காண்க. உதவலன், மாற்றலன் என எதிர்நிரல்நிறையாகக் கொள்க. முற்றுக்கள் மூன்றும் எச்சப் பொருளன.

(பி - ம்.) 1. உள்ளதின்றென்று, உள்ளதென்றபின், உள்ளதேன்றபின், உள்ளதில்லென, உற்றதென்றபின், ஈவனென்றபின்.
2. மாற்றலின், மாற்றினன், மாற்றவன். வறுமையன்; பற்பகல்.
3. ஆற்றினனியற்றுமோர், ஆற்றின லுழற்றுமோர், ஆற்றலனுழற்றுமோர், ஆற்றலிலனைந்துளோர், ஆற்றலினடைத்துமோர், ஆற்றிலனுழற்றுமோர்; ஆதனெய்திய, எய்துமோர.

4. கூற்றுறுநரகிலோர், கூற்றுளநகரத்துக், கூற்றுளநரகிலோர், கூற்றுள நரகிலோர், கூற்றுறழ்நரகிலோர், கூற்றுழைநரகிலோர்; கூறும். (114)

910. பிணிக்குறு முடையுடல் பேணிப் பேணலார்த்
துணிக்குறு வயிரவா டடக்கை தூக்கிப்போய்
மணிக்குறு நகையிள மங்கை மார்கண்முன்
தணிக்குறு பகைஞரைத் தாழ்க வென்றலை.

பிணிக்கு உறு - பல பிணிகளுக்கு இடமாகப் பொருந்திய, முடை உடல் - முடைநாற்றமுள்ள இவ்வுடம்பை, பேணி - பாதுகாத்து, பேணலார் துணிக்க உறு - பகைவரை வெட்டுதற்குரிய, வயிரம் வாள்-வலிய வாளை, தட கை தூக்கி போய் - பெரியகையில் சுமந்துகொண்டு போய், மணி குறுநகை - முத்துப்போன்ற சிறிய பல்வரிசையுடைய, இளம் மங்கைமார் கண்முன் - இளம் பெண்களின் கண்ணெதிரே, தணிக்க உறு பகைஞரை - வென்று அடக்குதற்குரிய (சிறு) பகைவரை, என் தலைதாழ்க - என் தலை வணங்கட்டும்.

'சிறந்த வாள் கையதாகவும், அதனைச் சுமந்துகொண்டு போருக்குப் போய்த் தன்னினும் தாழ்ந்து தான் வென்று அடக்கத்தக்க சிறு பகைவனையும் வெல்லமாட்டாது அவனடி பணிதலின் இழிவு எத்தகையது! அதிலும் மகளிர் கண்டு நகைக்க அந்நிலை யெய்துதல் இழிவினும் இழிவாகும்; அந்நிலையை நான் எய்துக' என்கின்றான். உடம்பின் இழிதன்மையும், மானமிழந்து அதனைப் பேணுதலின் இழிதகவும் புலப்படுத்தப்பெற்றன. இத்தகையவன் வாள் கைப்பற்றுதலின் இழிவு தோன்ற, 'தடக்கை தூக்கிப் போய்' என்றான்.

(பி - ம்.) 1. பிணிக்குறு முடியுடல்; பேணலார், பேணலர், பேணலாற், பேணலான், பேணலர்த், பேணலத்.
2. துணிக்குறும்; வாட்டடக்கை.
3. நகையுள.
4. தணிக்குறும்; பகைவரைத்; தாழ. (115)

911. கரும்பலர் செந்நெலங் கழனிக் கான நா
டரும்பகை கவர்ந்துண வாவி பேணிநின்
றிரும்பலர் நெடுந்தளை யீர்த்த காலொடும்
விரும்பலர் முகத்தெதிர் விழித்து நிற்கயான்.

கரும்பு - கரும்பும், அலர் செந்நெல் - பரந்த செந்நெற் பயிரும் (நிறைந்த), அம் கழனி கானம் நாடு - அழகிய வயற்காடுகள் சூழ்ந்த நாட்டை, அரு பகை கவர்ந்து உண - வெல்லுதற்கரிய பகைவர் கைப்பற்றி அநுபவிக்க, ஆவி பேணி நின்று - உயிரைக் காத்துக்கொண்டு வறிதே நின்று, இரும்பு அலர் நெடுதளை ஈர்த்த காலொடும் - (பகைவர் பூட்டிய) இரும்பாலாகிய பெரிய விலங்கை இழுத்துச் செல்லும்

காலோடு, விரும்பலர் முகத்து எதிர் - பகைவர் முகத்துக்கெதிரே, யான் விழித்து நிற்க - நான் (செயலற்று) விழித்து நிற்பவனாகுக.

முன்னே 908-ஆம் பாடலிலும் இதிலும் ஆண்மையின்றிக் கோழையாகிப் பகைவர் கைப்பட்டு மானமிழந்து நிற்கும் நிலையை யான் அடைக என்கின்றான். அரசனுக்கு இது பேரிழிவாதலுடன், இத்தகையவன் தன் நாட்டைக் காக்க வலியின்றிக் குடிகள் அல்லலுறக் காரணமாவதால் பழியேற்றுப் பாவியாகி நரகமெய்துவானாகலின் இங்ஙனம் கூறினான். முதலடி நாட்டின் வளங்குறித்தது. கானம் என்றது மிகுதிபற்றி; 'வயற்காடு' என்ற வழக்குண்மையும் காண்க. "கரும்பல்லது காடறியாப், பெருந்தண்பணை" (புறநா. 16 : 15 - 6); "கரும்பலாற் காடொன் றில்லாக் கழனி" (சீவக. 2902).

'கைகயர் கோமகள் இழைத்த கைதவம் நீ அறிந்திலை போலும்', (891) என்று கோசலை கூறக் கேட்டுத் துணுக்குற்ற பரதன், 'அவள் வஞ்சனையை நானறிந்து அதற்கு உடந்தையாயிருந்திருப்பின், நான் இவ்வாறுகுக' எனப் பற்பல சூளுரைத்தமை இதுகாறும் கூறப் பெற்றது.

(பி - ம்.) 1. சென்னலம், செங்கலம்; கானகாட்டு.
2. அரும்பகை புகுந்திட; பேணினேன், பேணினென், பெற்றவர்.
3. இரும்பிணி; நெடுந்தளையீர்த்த, தளையிட்ட, தளைசிறந்த, தலையீர்த்த, தொடர்த்த; காலொடு.
4. முகத்திடை; விற்கவே. (116)

912. எனைப்பல சூளுரைத் தென்னை யீன்றவள்
வினைத்திறத் தரசினை விரும்பி னன்னை கேள்
அனைத்துள நரகெனக் காக வென்றவள்
பனிக்கம லப்பதம் பணிந்தி றைஞ்சினான்.

(பரதன்) எனை பல சூள் உரைத்து - (இதுகாறுங் கூறியவாறு) எத்தனையோ பல சூளுரைகளைச் சொல்லி, என்னை ஈன்றவள் வினை திறத்து அரசினை - என்னைப் பெற்ற கைகேயி தன் சூழ்ச்சி வலியாற் பெற்ற அரசை, விரும்பின் - நான் விரும்பினவனானால், அன்னை கேள் - தாயே இது கேட்பாயாக; உள அனைத்து நரகு எனக்கு ஆக - (இன்னும்) உள்ள அத்தனை நரகங்களும் எனக்கு உரியனவாகுக, என்று - என்று சொல்லி முடித்து, அவள் பனி கமலம் பதம் - கோசலையின் குளிர்ந்த தாமரை மலர் போன்ற திருவடிகளில், பணிந்து இறைஞ்சினான் - தாழ்ந்து வணங்கினான்.

தன் குற்றமின்மையைக் கோசலைக்குத் துணிவுறுத்த மிகப் பல சூளுரைத்த பரதன், இறுதியில் இவ்வாறு முடித்து, அவள் பாதங்களில் பணிந்தான். கைகேயியின் சூழ்ச்சியைத் தான் முன்பு அறியாததோடு, அச்சூழ்ச்சியாற் பெற்ற அரசைத் தான் ஏலான் என்பதையும் தெளியக்

கூறினன். கோசலை வாயால் ஆறுதல் மொழி கேட்க விரும்பி, அவள் பாதங்களைப் பற்றிக் கிடந்தவன், அவள் கூறியது கேட்டுத் துணுக்குற்று எழுந்து நின்று, ஆவேசமுற்றவன் போலச் சூளுரைகளைச் சொல்லியபின் தணிந்து, மீண்டும் அவள் பாதம் பணிந்தான்.

இப்பாடல் பல பிரதிகளில் இல்லை; இந்நூல் நிலையத்து முந்திய பதிப்பில் இது மிகைப் பாடலாகக் காட்டப்பெற்றுளது. ஆயினும், பொருட் பொருத்தமும், தொடர்பும் சிறந்திருத்தலின், இதனை மூலத்தோடு சேர்த்துப் பதிப்பிக்கலாயிற்று. இவ்விடத்து, பல அச்சுப் பிரதிகளில்,

"தீயன கொடியவள் செய்த செய்கையை
நாயினே னுணரினன் னெறியி னீங்கலாத்
தூயவர்க் கிடரிழைத் துழலுந் தோமுடை
ஆயவர் வீழ்கதி யதனின் வீழ்கயான்"

என்ற பாடல் காணப்படுகிறது. இவ்விரண்டனுள் முந்தியது சிறப்புடையதாதல் காணத் தகும். அஃதுள்ள பிரதியில், 'பரதன் நகர்புகுபடலம் முற்றும்' என்ற தொடரும், மேலே 'தகனஞ் செய் படலம்' என்ற தலைப்பும் உள. (117)

கோசலை பரதனைத் தழுவுதல்

(வேறு)

913. தூய வாசகஞ் சொன்ன தோன்றலைத்
தீய கானகந் திருவி னீங்கிமுன்
போயி னன்வரக் கண்ட பொம்மலாள்
ஆய காதலா லழுது புல்லினள்.

(பரதன் கூறியவை கேட்ட கோசலை). முன் - முன்னே, திருவின் நீங்கி - அரசச் செல்வத்தின் நீங்கி, தீய கானகம் போயினன் - கொடிய காட்டிடத்தே போன இராமன், வர - மீண்டு வர, கண்ட பொம்மலாள் - (அவனைக்) கண்டது போன்ற மகிழ்ச்சியுடையவளாய், ஆய காதலால்- அவ்வாருகிய அன்போடு, அழுது - கண்ணீர் பெருக்கி, தூய வாசகம் சொன்ன தோன்றலை - தன் மனத்தூய்மையைப் புலப்படுத்தும் வார்த்தைகளைச் சொன்ன பரதனை, புல்லினள் - (இறுகத்) தழுவினள்.

பரதன் வார்த்தைகளால் அவனது மனத்தூய்மை யுணர்ந்த கோசலை, இராமனே திரும்பிவரக் கண்டதுபோன்ற மகிழ்ச்சிகொண்டு அன்பினுல் கண்ணீர் பெருக்கி, பரதனை எடுத்துத் தழுவிக்கொண்டாள். இதனுலும், மேலே வரும் அவள் சொல் செயல்களாலும், அவளுடைய உயர்வு புலனுகும்.

திருவின் நீங்கி - திருவொடும் (சீதாபிராட்டியோடும்) நீங்கி என உரைத்தலுமாம்.

(பி - ம்.) 1. தூயவாசகஞ் சொன்னவத், தூயவின்ன சொல்சொன்ன.
2. கானகத்.
3. போயினர், போயவன்; பொம்மலள்.
4. ஆயகாதலாள், ஆயவன்பினல்; புல்கினள். (118)

914. செம்மை யாமனத் தண்ணல் செய்கையும்
அம்மை தீமையு மறித றேற்றினள்
கொம்மை வெம்முலை குமுறு பாலுக
விம்மி விம்மிநின் றிவைவி ளம்பினள்.

செம்மை ஆம் மனத்து - நேர்மையமைந்த மனமுடைய, அண்ணல் செய்கையையும் - பரதனது நற்செயலையும், அம்மை தீமையும் - அவன் தாயின் தீய செயலையும், அறிதல் தேற்றினள் - தெளிய அறிந்தவளாகி, கொம்மை வெம் முலை - பருத்த வெப்பமுடைய தனங்களில், குமுறு பால் உக-பொங்கிப் பெருகிய பால் வடிய, விம்மி விம்மி நின்று-மிக்க பொருமலுற்று நின்று, இவை விளம்பினள் - இவற்றைச் சொல்லலானள்.

அவள் சொல்லியவை அடுத்த பாடலுள் வரும்.

கோசலை, இராமன் வரக் கண்டது போன்ற உணர்ச்சி யெய்தினமையாலும், பரதனையும் தான் பெற்ற புதல்வனாகக் கருதும் தூய அன்பினலும் அவள் தனங்களில் பால் பெருகலாயிற்று. இலக்குவன் இராமனுடன் போக விடை தந்தபோது சுமித்திரை, "பான்முலை சோர நின்ருள்" (444) என்றது காண்க. அம்மை - தாய். தேற்றினள் : முற்றெச்சம்; தன்வினைப் பொருளில் வந்தது.

(பி - ம்) 1. செம்மைநன்மனத்து, செம்மைமாண்மனத்து.
2. அம்மைசெய்கையும்; அறிதல்தேற்றினள், தேறினள், அறிந்து தேறினள், அறியல் தேற்றினள்.
3. முலைக்குமிறு.
4. விம்மல்விம்ம நின்று; அழுதுவிங்கினள், இவை விளம்புவாள். (119)

கோசலை பரதனைப் பாராட்டி வாழ்த்துதல்

915. முன்னை நின்குல முதலு ளோர்கடாம்
நின்னை யாவரே நிகர்க்கு நீர்மையார்
மன்னர் மன்னவா வென்று வாழ்த்தினள்
உன்ன வுன்னநைந் துருகி யேங்குவாள்.

உன்ன உன்ன-(பரதன் இயல்பை) நினைக்க நினைக்க, நைந்து உருகி ஏங்குவாள் - மனங் கசிந்துருகி ஏங்குகின்ற கோசலை, (பரதனை

நோக்கி) மன்னர் மன்னவா - அரசர்க்கரசே, முன்னை நின் குலம் - பழமையான உன் குலத்திலே, முதல் உள்ளோர்கள் தாம் - முதன்மை பெற்றிருந்தவர்களுள், நின்னை நிகர்க்கும் நீர்மையார் யாவர் - உன்னை யொக்கும் (சிறந்த) தன்மை உடையவர் எவர் இருந்தனர்? (எவரும் இல்லை); என்று - என்று அவனைப் பாராட்டி, வாழ்த்தினள்.

ஏ : அசை நிலை.

பரதன் சக்கரவர்த்தி ஆதற்குரிய மாண்புகள் நிறைந்தவன் என்பாள், 'மன்னர் மன்னவா!' என விளித்தாள். ''மும்மையின், நிறைகுணத்தவன் நின்னினும் நல்லன்ஓர், குறைவிலன்'' (300) என அவள் முன்னர்க் கூறினமையும் நோக்குக. பரதன் பெருமையை, ''மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழை யெல்லாம், உன்புக ழாக்கிக் கொண்டாய்'', ''ஆயிர மிராமர் நின்கே ழாவரோ'' (1032, 1033) எனக் குகப் பெருமான் கூற்றாக அமைத்துள்ளமையும், ''வேறவனி பண்டாண்ட வேந்தரை யிழித்து மேலேறினன்'' (1060) என்றமையும் காண்க.

கீழ்க்காணும் இரண்டு பாடல்கள் இதன்பின் சில சுவடிகளிலும் அச்சுப் பிரதிகளிலும் காணப்படுகின்றன. அவை ஈண்டைக்கு இன்றி யமையாதனவல்லவாதலாலும் 'எந்தை யாண்டையான்' எனப் பரதன் வசிட்ட முனிவனை வினவுதலும் பிறவும் முன்பின்னிகழ்ச்சிக்கு முரண் படுவன ஆதலாலும் அவற்றை மிகைப் பாடலெனக் கொண்டு தனியே காட்டலாயிற்று.

(1) உன்ன வுன்னநைந் துருகு மன்புகூர்
அன்னை தாளில்வீழ்ந் திளைய வள்ளலும்
சொன்ன நீர்மையாற் றொழுது மாழ்கினன்
இன்ன வேலைவாய் முனிவ னெய்தினன்.

(2) வந்த மாதவன் றளில் வள்ளல்வீழ்ந்
தெந்தை யாண்டையா னியம்பு வீரெனு
நொந்து மாழ்கினு னுவல்வ தோர்கிலா
தந்த மாதவ னழுது புல்லினன்.

(பி-ம்.) 1. நுங்குல முதலுளோர்கடாம், முதலினோர்கடாம், நங்குல முதலுளோர்கடாம்.
3. மன்னர் மன்னவ, மன்னர் மன்னுவாய், மன்ன மன்னுவாய்.
4. உன்னவுன்னமின்று, நெஞ்சு, நெக்கு, உன்னவுன்னி நெஞ்சு, உன்னிநின்றுலைந்து, உன்னியுன்னிநைந்து, உன்னி நெஞ்சு நைந்து, உன்னி நைந்து லைந்து, உன்னியுன்னிநின்று; உருகி விம்முவாள், ஓங்குவாள், நைகுவாள், வைகுவாள். (120)

916\. மறுவில் மைந்தனேவள்ள லுந்தையார்
இறுதி யெய்திநா ளேழி றந்தன
சிறுவர் செய்கடன் செய்து தீர்த்தியென்
றுறுதி மேயினு ளுரைவி ளம்பினுள்.

உறுதி மேயினுள் - (பின்பு மனம்) தேறுதலுற்ற கோசலை, (பரதனை நோக்கி) மறு இல் மைந்தனே - களங்கமில்லாத குழந்தாய், வள்ளல் உந்தையார் - வள்ளலாகிய உன் தந்தையார், இறுதி எய்தி - முடிவடைந்து, நாள் ஏழு இறந்தன - ஏழு நாட்கள் கடந்துவிட்டன; சிறுவர் செய் கடன் - புதல்வர் செய்தற்குரிய இறுதிக்கடனை, செய்து தீர்த்தி என்று - நீ செய்து முடிப்பாயாக என்று, உரை விளம்பினுள் - சொன்னுள்.

'மறுவில் மைந்தனே' எனப் பரதனைக் கோசலை விளித்ததில், இருவருடைய மனத்தூய்மையும் புலப்படும். தசரதன் இறந்து நாள் ஏழு இறந்தன என்றது சிந்தித்தற்குரியது; 'நாள் ஏழிரண்டின' என்றும் பாடம் உளது. வான்மீகத்தின்படி, தயரதன் இறந்த மறுநாள் வசிட்ட முனிவன் கேகய நாட்டிற்குத் தூதனுப்பினுக, அவர்கள் மறுநாள் விடியுமுன் கேகயநாடு சேர, செய்தியறிந்த பரதன் உடனே புறப்பட்டு ஏழுநாள் பயணங்கொண்டு எட்டாம் நாள் அயோத்தியடைந்தான் என்று ஏற்படுகிறது. அங்ஙனமாயின் பரதன் வந்து சேர்ந்தது, தசரதனிறந்த பத்தாவது நாளாகும். கம்ப நாடரும், "ஆறுங் கானு மகன்மலையுங்கடந், தேறி யேழ்பக னீந்திப்பின்...கோசல நண்ணினுன்" (813) என்ருர். இவற்ருல், பரதன் அயோத்தி அடைந்தது, தயரதன் இறந்த பத்தாநாட்கு முந்தியில்லை என்பது பெறப்படும். எனவே, 'நாள் ஏழு', 'ஏழிரண்டு' என்ற இரண்டும் பொருந்துவனவாகக் காணவில்லை.

(பி - ம்.) 1. மைந்தனின்; உந்தையான்.
2. எய்திநாள் ஏழிரண்டின, ஏழிரண்டன, ஏழ்கழிந்தன, எய்தியீரேழிறந்தநாள், எய்தியீரேழிறந்தன, எய்தியேழ் நாளிறந்தன, எய்துநாளேழிறந்தன, எய்துநாளேழிறந்தநீ, மேலுநாளேழிறந்தன, மேவுநாளேழிறந்த நீ, மேவுநாளேழிகழ்ந்த நீ, எய்துநாளேழிறந்தென.
3. சிறுவ; செய்துநீர்தி, செய்துபோதி, செய்திதீர்தி, செய்திபோதி.
4. உறுவன்மேயினுள், மேயினுன், உறுதன்மேயினுன், உறுவலன்பினுள், அன்பினுல்; உரையினேயினுள், உரையின்மேயினுன், மேயினுள், மேவினுள், உரையினேயினுன், ஏவினுள். (121)

பரதன் வசிட்டனுடன் சென்று தசரதனது உடலைக் காணுதல்

917\. அன்னை யேவினு ளடியி றைஞ்சினுன்
பொன்னின் வார்சடைப் புனித னேடும்போய்த்
தன்னை நல்கியத் தரும நல்கினுன்
பன்னு தொல்லறப் படிவ நோக்கினுன்.

(பரதன்); ஏவினுள் அன்னை அடி இறைஞ்சினன் - (செய் கடன் செய்யுமாறு) ஏவின தாயின் பாதங்களை வணங்கி, பொன்னின் வார் சடை புனிதனோடும் போய் - பொன்னிறமான நீண்ட சடையை யுடைய தூய வசிட்ட முனிவனுடன் சென்று, தன்னை நல்கி அ தருமம் நல்கினன் - தன்னுயிரைக் கொடுத்து அத்தருமத்தைக் காத்த தசரத னுடைய, பன்னு - புகழ்தற்குரிய, தொல் அறம் படிவம் - பழமையான தருமத்தின் வடிவான உடம்பை, நோக்கினன் - பார்த்தான்.

எழுவாய் வருவித்துரைக்கப்பெற்றது. ஏவினவளாகிய அன்னை என்க. இறைஞ்சினன் : முற்றெச்சம். கடன்கள் செய்வித்தற்குரியவன் வசிட்டனாதலால், 'புனிதன்' என்றது வசிட்டனை. தசரதன் அறங் காத்தற் பொருட்டு உயிர் கொடுத்ததனால், 'தன்னை நல்கியத் தருமம் நல்கினன்' என்றார். நல்கினன் : வினைப்பெயர். அ : உலகறி சுட்டு. நல்கல் இரண்டனுள், முதலது கொடுத்தல், இரண்டாவது காத்தல். பன்னுதல் - சொல்லுதல்; இங்கே புகழ்ந்து பேசுதல். அறப்படிவம் : "நல்லற மூர்த்தி யன்னான்" (பால. 169).

(பி - ம்.) 2. புனிதனோடு.
3. நல்கிய; தருமநல்கினள், தருமத்தாதைதன்.
4. பன்னுநல்லறப், பன்னுந்தொல்லறப், பன்னுந்தன்னறப். (122)

பரதன் அழுதல்

918. மண்ணின் மேல்விழுந் தலறி மாழ்குவான்
அண்ண லாழியா னவனி காவலான்
எண்ணெ யுண்டபொன் னெழில்கொண் மேனியைக்
கண்ணி னீரினாற் கழுவி யாட்டினன்.

(தந்தையின் உடம்பைக் கண்டவுடன்), மண்ணின்மேல் விழுந்து - தரையில் விழுந்து, அலறி மாழ்குவான் - கதறிக் கலங்குகிற பரதன், அண்ணல் ஆழியான் - பெருமை மிக்க ஏக சக்கராதிபதியாய், அவனி காவலான் - உலக முழுதுங் காத்த தசரதனது, எண்ணெய் உண்ட எழில்கொள் - எண்ணெயாட்டப் பெற்ற அழகைக் கொண்ட, பொன் மேனியை - பொன் போன்ற உடம்பை, கண்ணின் நீரினால் கழுவி - தன் கண்களினின்றும் பெருகிய நீரால் கழுவி, ஆட்டினன் - (அதனில்) மூழ்குவித்தான்.

பரதன் தந்தையின் உடம்பைக் கண்டவுடன், உள்ளடங்கியிருந்த துயரம் மீண்டும் மேலிட்டெழ, வாய்விட்டலறியழுது கண்ணீர் பெருக்கினான். இரண்டாமடி தசரதன் நாடுகாத்தற் சிறப்புக் குறித்தது. ஆழியானாகிய அவனி காவலான் என்க; ஆனை மூன்றனுருபாகக் கொண்டு கூறினும் அமையும். தசரதன் மேனி பொன் மேனி; அஃதெண்ணெய்க் கடாரத்துட் கிடந்து எண்ணெயுண்டதனால் ஒரு

தனி அழகு பெற்றது; அதனை எண்ணெய் போக நீராட்டுதலும் உரியதே.

(பி-ம்.) 1. அலறிமாழ்கினன், அழுதுமாழ்குவான்.
2. காவலன்.
4. கண்ணநீரினற், கண்ணனீரினற். (123)

### தசரதனது உடலை விமானத்தில் வைத்தல்

919. பற்றி யவ்வயிற் பரிவின் வாங்கினர்
சுற்று நான்மறைத் துறைசெல் கேள்வியார்
கொற்ற மண்கணை குமுற மன்னனை
மற்றோர் பொன்னின் மா மான மேற்றினர்.

நால் மறை துறை செல் கேள்வியார் - நான்கு வேதங்களின் துறைகளில் மிக்க பயிற்சியுடைய அந்தணர், மன்னனை - மன்னனது உடம்பை, சுற்றும் பற்ற - சுற்றிலும் இருந்து தாங்கி, பரிவின் - இரக்கத்தோடு, அ வயின் வாங்கினர் - அவ்விடத்தினின்றும் (எண்ணெய்க் கடாரத்தினின்றும்) எடுத்து, கொற்றம் மண்கணை குமுற - அரச மரியாதைக்குரிய வாச்சியங்கள் முழங்க, ஓர் பொன்னின் மா மானம் ஏற்றினர் - பொன்னாலியன்ற சிறந்ததொரு விமானத்தில் வைத்தனர்.

மற்று : அசை.

சக்கரவர்த்தி யாதல்பற்றிச் சடங்குக்கு உரியவற்றை அந்தணரே செய்தனர். மண்கணை ஒரு வகைக் குடமுழவு. வாங்கினர்:முற்றெச்சம். மானம் : முதல் குறைந்தது.

(பி-ம்.) 1. அவ்வழி, அம்பியிற், வல்லையிற்; பரிவின்வாங்கினன், பரிவில் வாங்கினர், பரிவிற்றுங்கினர்.
2. சுற்றநான்மறைத்; துறைசெய், துறைசொல்.
3. கொற்றமங்கலம்.
4. பொன்னின்மாவிமானம், பொன்னுயர்மானம், பொன்னுலாமானம், பொன்னெனுமானம். (124)

### மந்திரி பிரதானிகள் நண்பர்கள் வருந்துதல்

920. உந்து பொற்றடந் தேர்வ லானொடு
மந்தி ரப்பெருந் தலைவர் மற்றுளோர்
தந்தி ரத்தனித் தலைவர் நண்பினோர்
வந்து சுற்றுமுற் றழுது மாழ்கினர்.

பொன் தடம் தேர் உந்து வலானொடு - பொன்னாலியன்ற பெரிய தேரைச் செலுத்துதல் வல்ல சுமந்திரனோடு, மந்திரம் பெரும் தலைவர் - மந்திரச் சுற்றமாகிய பெருந்தலைவர்களும், தனி தந்திரம் தலைவர் -

ஒப்பற்ற சேனுபதிகளும், மற்று உளோர் - மற்றுமுள்ள அரசியலாயத்தாரும், நண்பினோர் - நட்பினரும், வந்து சுற்றும் உற்று - (அங்கு) வந்து சூழ்ந்து, அழுது மாழ்கினர் - அழுது வருந்தினர்.

சுமந்திரன், சாரதியோடு மந்திரச் சுற்றத் தலைவனும் மன்னனுக்கு மிகவும் உற்றவனும் ஆதலால், அவனை முதலில் வைத்துக் கூறினர். மற்றுளோர்-எண்பேராயத்தார். அவராவார்: "கரணத் தியலவர், கரும வாதிகள், கனகச் சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், நளிபடைத் தலைவர், யானைவீரர், இவுளி மறவரென்று, இணைய ரெண்பே ராய மென்ப" என்றதனால் அறிக.

இப்பாடல், பல சுவடிகளிலும், சில அச்சுப் புத்தகங்களிலும் இல்லை. சிலவற்றில் இதுவும் அடுத்ததும் முன்பின்னாக உள்ளன. இதனை மிகைப் பாடலாகக் கொண்டு காட்டினர் சிலர்.

(பி - ம்.) 2. மந்திரிப்பெரும்.
3. நண்பினர்.
4. வந்துசுற்றுமுற்று, வந்தசுற்றமுற்று, வந்தசுற்றைமுற்று. (125)

உடல்தாங்கிய விமானத்தை யானைமேற் கொண்டு செல்லுதல்

921. கரைசெய் வேலைபோ னகரி கையெடுத்
துரைசெய் பூசலிட் டுயிர்து ளங்கவே
அரச வேலைசூழ்ந் தழுது கைதொழப்
புரசை யானையிற் கொண்டு போயினர்.

நகரி - நகர மக்களெல்லாம், கை எடுத்து - கைகளை உயரத் தூக்கி, கரை செய் வேலை போல் - ஒலிக்கும் கடலைப் போல, உரை செய் பூசல் இட்டு - (மன்னனைப் பற்றிச்) சொல்லும் ஆரவாரங்கொண்டு, உயிர் துளங்க - உயிர் நடுக்குறவும், அரசர் வேலை - அரசர் கூட்டமாகிய கடல், சூழ்ந்து அழுது கைதொழ - (நாற்புறமும்) சூழ்ந்து அழுது கொண்டு அஞ்சலி செய்யவும், புரசை யானையில் - கழுத்திடு கயிற்றையுடைய யானையின்மேல் (விமானத்தை) வைத்து, கொண்டு போயினர்—.

எழுவாய் ஏற்றவாறு வருவிக்க.

அரசர் கூட்டத்தின் மிகுதிபற்றி 'வேலை' என்றார். அரசர்களும் அணுக்கராகிய பலரும் யானையை அணுகிச் சூழ்தலைக் கடலாகவும், நகர மக்கள் புறத்தே சூழ்தலைக் கடலின் கரையாகவும் கொண்டு, வேலை செய்கரைபோல் நகரி (சூழ்ந்து) உயிர் துளங்க என உரைத்தலுமாம்.

(பி - ம்.) 1. வேலையோன்.
2. பூசலிட்டுரை, பூசல்போயுயிர்; துளக்குற, துளங்குவார்.
3. அரசைவேலை, அரசர்வேலை; சூழ்ந்தவனி, கொந்தழுது; கைதொழாப். (126)

### வாத்தியங்களின் முழக்கம்

922. சங்கு பேரியுந் தழுவு சின்னமும்
எங்கு மெங்குநின் றிரங்கி யேங்குவ
மங்கு ரேய்நகர் மகளி ராமெனப்
பொங்கு கண்புடைத் தழுவ போன்றவே.

சங்கு - சங்குகளும், பேரியும் - முரசங்களும், தழுவு சின்னமும் - (அவற்றைத் தழுவி ஒலிக்கும்) சின்னங்களும், எங்கும் எங்கும் நின்று - (நகரின்) பல விடங்களிலும் நின்று, இரங்கி ஏங்கும் - இரக்கக் குறிப்போடு ஒலிப்பவை, மங்குல் தோய் நகர் - மேகங்கள் படிதற்கிடமான அந்நகரத்திலுள்ள, மகளிர் என - பெண்களைப் போல (ஆகி), பொங்கு கண்புடைத்து - (நீர்) பொங்கும் கண்களில் மோதிக்கொண்டு, அழுவ போன்ற - அழுவன போன்று தோன்றின. ஏ : ஈற்றசை.

பெருந்துக்கத்தால் அழும்போது கண் புடைத்துக்கொள்ளல் இயல்பு: 1152 - பார்க்க. கண் - விழி, அடிக்குமிடம். சங்கும், பேரியும் இணைத்துக் கூறப்படுவன. 'சங்கும்' என உம்மை விரிக்க. சின்னம் - சிறு காளம்; இரட்டையாக ஊதப்படுவது. 'மாடங்கள் அழுவ போன்ற' என்றார் முன்னே; 493 - பார்க்க.

(பி - ம்.) 1. சங்கபேரியும், சங்கம்பேரியும், தங்குபேரியும்; தாளசின்னமும்.
2. இரங்கியேங்குறும்.
3. மகளிராலெனப், மு. மங்கு ரேய்மதிற் குடுமிமாநகர்.
4. பொங்குகையெடுத்து; அழுவபோன்றதே. மு. மங்கை கண்புகைத் தழுதல் மானுமே. (127)

### சரயு நதிக்கரையை அடைதல்

923. மாவும் யானையும் வயங்கு தேர்களும்
கோவு நான்மறைக் குழுவு முன்செலத்
தேவி மாரொடுங் கொண்டு தெண்டிரை
தாவு வார்புனற் சரயு வெய்தினர்.

மாவும் - குதிரைப் படைகளும், யானையும் - யானைப் படைகளும், வயங்கு தேர்களும் - விளங்கும் தேர்ப்படைகளும், கோவும் - அரசர் கூட்டமும், நால் மறை குழுவும் - நான்கு வேதங்களையும் உணர்ந்த மறையவர் கூட்டமும், முன் செல - (விமானந்தாங்கிய யானைக்கு) முன்னே செல்ல, தேவிமாரொடும் - (பின் தொடர்ந்து வந்த) அறுபதினாயிரம் தேவிகளுடனே, கொண்டு - யானையை நடத்திக்கொண்டு, தென் திரை தாவு - தெள்ளிய அலைகள் தாவி வருகிற, வார்புனல் - மிக்க நீரையுடைய, சரயு எய்தினர் - சரயு நதிக் கரையை அடைந்தனர்.

மன்னனுடம்பு சென்ற ஊர்வலத்தின் முறையைக் கூறினர். மனைவிமார் அறுபதினாயிரவர் முன்னரே உயிர் விடத் துணிந்தவரை,

வசிட்ட முனிவன் தடுத்து, "இவற்குரிமை செய்யுநாளிற் செந்தீயில் ஆவி போக்கிர்" (609) என்றமையின், அவர்கள் இப்போது அவ்வாறு செய்யக் கருதிப் பின் தொடர்ந்து வந்தனர். 'கோ' என்றது பரதனைக் குறித்ததெனக் கொள்ளுதலும் ஒன்று.

(பி - ம்.) 1. வயங்குதானையும், வயங்குந்தேர்களும், வழங்குதேர்களும்.
2. நான்மறைக் குருவும்.
4. தாவும்வார்புனற், தாவுவண்புனற்; எய்தினன். (128)

மன்னனுக்குத் தீயிட மறையோர் பரதனை அழைத்தல்

924. எய்தி நூலுளோர் மொழிந்த யாவையும்
செய்து தீத்தலந் திருத்திச் செல்வனை
வெய்தி னேற்றினர் வீர நுந்தைபால்
பொய்யின் மாக்கடன் கழித்தி போந்தென்றார்.

எய்தி - (நதிக்கரையில் சடங்கு செய்தற்கமைந்த இடத்தை) அடைந்து, நூல் உளோர் - அறநூல்களில் தேர்ச்சியுள்ள மறையவர்கள், மொழிந்த யாவையும் செய்து - (தீயிடுமுன் செய்தற்குரியன வாக நூல்கள்) சொல்லிய சடங்குகளையெல்லாம் செய்து, தீ தலம் திருத்தி - தீயிடுதற்குரிய ஈமப் பள்ளியைத் திருந்த அமைத்து, செல்வனை - சக்கரவர்த்தியின் உடம்பை, வெய்தின் ஏற்றினர் - துக்கத்துடன் (ஈமப் பள்ளியில்) வைத்து, (பின்பு பரதனை நோக்கி), வீர - வீரனே, போந்து - (நீ) வந்து, நுந்தைபால் பொய் இல் மா கடன் - உன் தந்தைக்குச் செய்யவேண்டிய வழுவில்லாத சிறந்த ஈமக் கடனை, கழித்தி என்றார் - செய்வாயாக என்றனர்.

தரும சாத்திரங்கள் வல்ல புரோகிதர்கள், தகனத்தின் முன் செய்தற்குரியவற்றைச் சாத்திர விதிப்படி செய்து, தீயிடுதற்குப் பரதனை அழைத்தனர்.

நூலுளோர் என்றார் என முடிக்க. தீத்தலம் - ஈமப்பள்ளி. நுந்தை பால் : வேற்றுமை மயக்கம். மகன் செய்ய வேண்டிய அச்சடங்கின் சிறப்புப்பற்றிப் 'பொய்யில் மாக்கடன்' என்றார்.

(பி - ம்.) 1. எய்துநூலுளோர்.
2. தீக்கலஞ்செலுத்திச், செலுத்தும், தீக்கடன் செலுத்திச், திருத்திச், திக்கடஞ்செலுத்தச்; நீர்த்திலந்திருத்திச், நீத்திலன் திருத்திச்; மு. செய்து செல்வனைத் தீக்கொளீமமேல்.
3. ஏற்றிப்பின், ஏவினர்; வீரனுந்தைபால், வீரவுந்தைபால், வீர நுந்தைக்குச்.
4. கழித்திபோந்தென்றான், போதென்றார், கழித்துப் போதென்றார், கழித்திபோயென்றார். மு. செய்பு மாக்கடன், செய்கென் றேதினர். (129)

வசிட்ட முனிவன் சொல்லுதல்

925. என்னும் வேலையி லெழுந்த வீரனை
அன்னை தீமையா லரச னின்னையும்
துன்னு துன்பத்தாற் றுறந்து போயினான்
முன்ன ரேயென முனிவன் கூறினான்.

என்னும் வேலையில் - (மறையோர் பரதனைத் தீயிடச்) சொன்ன போது, எழுந்த வீரனை - (அதன் பொருட்டு) எழுந்த பரதனை (நோக்கி), முனிவன் - வசிட்ட முனிவன், முன்னரே - முன்னே, அன்னை தீமையால் - உன் தாய் செய்த கொடுமையால் (வந்த), துன்னு துன்பத்தால் - மிக்க துன்பத்தினால், அரசன் - சக்கரவர்த்தி, நின்னையும் துறந்து - உன்னையும் (உரிமைக்காகாய் என) நீக்கி, போயினான் என கூறினான் - உயிர் நீத்தான் என்று சொன்னான்.

தீக்கடன் செய்ய எழுந்த பரதனை, 'நீ அதற்குரியையல்லை' என்று வசிட்ட முனிவன் காரணங் காட்டிக் கூறித் தடுத்தான். "சொன்னே னின்றே யிவளென் றுர மல்ல டுறந்தேன், மன்னே யாவான் வருமப் பரதன் றனையும் மகனென், றுன்னேன் முனிவா வவனென் னுரிமைக் காகான்" (345) என முனிவனைச் சான்றாக வைத்து முன்னமே தசரதன் கூறியிருத்தலால், இப்போது அவன் பரதனைத் தடுக்க நேர்ந்தது. நின்னையும் என்ற உம்மை, தாயைத் துறந்ததோடு உன்னையும் என இறந்தது தழுவியது. குற்றமற்ற உன்னையும் அப்போதுண்டான துன்பமிகுதியால் துறந்தான் என உயர்வு சிறப்பாக்கினும் அமையும்.

(பி - ம்.) 1. என்னும் வேலையின், ஏல்வையின்; எல்லையில் எழுந்த, எய்து, என்னு மாத்திரையெழுந்த.
2. அன்னை நீர்மையாலரசனுன்னையும்.
4. முன்னரேயென. (130)

926. துறந்து போயினா னுந்தை தோன்றனீ
பிறந்து பேரறம் பிழைத்த தென்றபோ
திறந்து போயினா னிருந்த தாண்டது
மறந்து வேறொரு மனத்த னாய்க்கொலாம்.

(முனிவன், மேலும்) தோன்றல் - தோன்றலே, (பரதா), நுந்தை - உன் தந்தை, நீ பிறந்து - நீ பிறத்தலால், பேர் அறம் பிழைத்தது என்றபோது - (வழிவழி வந்த) பெரிய தருமம் தவறிற்று என்ற எண்ணம் உண்டானபோது, (அவ்வருத்த மிகுதியினால்), மறந்து - (உன் இயல்பை) மறந்து, வேறு ஒரு மனத்தனாய்கொல் - வேறுபட்ட ஒரு மனமுடையவனாகிப் போலும், துறந்து போயினான் - (உன்னைத் துறந்து சென்றான்; இறந்து போயினான் - (பின்னர்) இறந்தும் போய்

விட்டான்; ஆண்டு இருந்தது அது - அப்போதிருந்த நிலைமை அதுவாகும் (என்றான் என முடிபு வருவிக்க).

'உன் தாயோடு உன்னையும் மன்னன் துறந்தான்' என்று கூறிய முனிவன், அதனால் பரதன் மனம் பெரிதும் நோதல் கூடுமேயென்று கருதி, 'தந்தை உன்னைத் துறந்தது உன்மீது வெறுப்பினாலன்று; அப்போதுண்டான வருத்தமிகுதியால், உன் இயல்பை மறந்து மனந் தடுமாறியே அங்ஙனஞ் செய்திருத்தல் கூடும்' எனப் பரதனுக்கு ஆறுதலாகக் கூறினான். பேரறம்: 'மூத்தவற்குரித்து அரசு' என்றது; அவ்வறம், 'பரதனொருவன் பிறந்ததால்தானே பிழைத்தது' என்ற எண்ணம் மன்னனுக்குண்டாகி, நீ குற்றமற்றவன் என்பதை மறந்து உன்னைத் துறந்திருத்தல் கூடும்; இறவாதிருந்திருப்பின், இப்போது உன் தன்மையைக் கண்டறியலாம்; அதற்கும் இடமின்றி இறந்துவிட்டான்' என்றான் முனிவன்.

தோன்றல் : அண்மை விளி.

(பி - ம்.) 1. போயினானெனவே, போயினனெனவே, போயினனுந்தை.
2. பிழைத்ததென்றல்போல், பிழைத்ததென்றுபேர்ந்து.
3. இருந்ததாண்டனும், இருந்த நாடனும், என்னநட்பினும், மு. இறந்து போனபின் கடனுமிம்மையின்.
4. மைந்தனுங்கொலாம், மைந்தனுய்கொலாம், மைந்தனுய்க்கொலாம், மைந்தனுக்கொலாம், மன்னனுய்கொலாம், மன்னனுய்க்கொலாம், மன்னனேகொலாம். மு. மறந்துமற்றொரு மன்னனாகவே. (131)

முனிவனுரை கேட்ட பரதன் நிலை

927. என்று கொண்டுமா தவனி யம்புரு
நின்று நின்றுதா னெடிது யிர்த்தனன்
நன்று நன்றென நகைமு கிழ்த்தனன்
குன்று குன்றுறக் குலவு தோளினான்.

என்று கொண்டு - என்றிவ்வாறாக, மா தவன் - பெருந்தவமுடைய வசிட்ட முனிவன், இயம்பு உரு - சொல்லி, நின்று நின்று - தயங்கித் தயங்கி, தான் நெடிது உயிர்த்தனன் - தானும் பெருமூச்செறிந்தானாக, குன்று குன்று உற குலவு தோளினான் - மலையும் (தன் பெருமையும் திண்மையும்) குறைவுபடுமாறு விளங்கும் தோள்களையுடைய பரதன், நன்று நன்று என - நல்லது நல்லது என்று, நகை முகிழ்த்தனன் - (இகழ்ச்சி) நகை அரும்பியவனாகி.

இஃது அடுத்த பாடலோடு தொடர்ந்து முடியும்.

வசிட்ட முனிவன் நிகழ்ந்தது கூறி, வருத்தத்தால் தானும் பெருமூச்செறிய, பரதன் தன் இழிதகை நிலை கருதி முதலில் நகைத்துப் பின்பு பெருந் துயரால் அழிந்து நொந்து பல கூறலானான்; அவை மேலே நான்கு பாடல்களாற் கூறப்படும்.

இயம்புரு : செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம், உறு: துணைவினைப் பகுதி. உயிர்த்தனன் 'ஆக' என்றது வருவிக்க. 'நன்று நன்று' என்ற அடுக்கு இகழ்ச்சிபற்றியது. முகிழ்த்தனன் : முற்றெச்சம். 'குன்றும்' எனற்பால உயர்வு சிறப்பும்மை தொக்கது.

இப்பாடல் பல பிரதிகளில் இல்லை; ஐயரவர்கள் கைப்புத்தகத்தில் இஃதிவ்விடத்துக் குறிக்கப்பெற்றுள்ளது.

(பி - ம்.) 1. இயம்பலும், இயம்புற.
2. தாநெடிது; உயிர்த்தலும், உயிர்த்திது.
3. நன்றென.
4. குன்றிறக், குன்றுறும்; குலாவு, குவவு, குலவுத். (132)

928. இடிக்கு வாளரா விடைவ தாமெனப்
படிக்கண் வீழ்ந்தனன் பதைக்கு நெஞ்சினன்
தடுக்க லாகலாத் துயரந் தன்னுளே
துடிக்க விம்மிநின் றழுது சொல்லினன்.

(பரதன்), இடிக்கு வாளரா இடைவது ஆம் என - இடிக்கு அஞ்சிக் கொடிய பாம்பு நிலைகெடுவதுபோல, படி கண் வீழ்ந்தனன் - தரையில் விழுந்து, பதைக்கும் நெஞ்சினன் - துடிக்கும் மனமுடைய வனாய், தடுக்கல் ஆக அல்லா துயரம் - (வெளிப்படுத்தாமல்) தடுக்க இயலாத பெருந்துயரம், தன் உள்ளே துடிக்க - தன் மனத்துள்ளே பதைக்க, விம்மி நின்று - (அது) மேலிடப்பெற்று நின்று, அழுது - வாய் விட்டழுது, சொல்லினன் - சொல்லலுற்றான்.

பெருந்துயரம் உண்டானபோது அதனை உள்ளடக்கி வைத்தல் இயலாது; பிறரிடம் வெளிப்படுத்திச் சொன்னாலன்றி அது தணி யாதாகலின், பரதன் தன் மனத்தில் உண்டான தடுக்கமுடியாத துயரத்தை வெளிப்படுத்தி அழுது சொல்லுகின்றான். பாம்பு இடிக்குப் பெரிதும் அஞ்சும். "பாம்புபட விடிக்கும் கடுவிசை யுருமு" (குறுந். 158); "இடியே றுண்ட நாகம்" (பெருங். 2. 10 : 112).

(பி - ம்.) 1. இடிக்கண், இடிக்கும்; இடைவதாமெனப், இடைந்ததாமெனப், இடைந்ததாமெனப், இடைந்தவாமெனப்.
2. படிக்கண் விழ்ந்தகம், விழ்ந்துறப், படிக்குள் வீழ்ந்தகம்; நெஞ்சினன்.
4. விம்மினன்றழுது, விம்மினன்றழுது, விம்மினனழுது, விம்மு வானழுது; சொல்லுவான். (133)

பரதன் கூறுதல்

929. உரைசெய் மன்னர்மற் றென்னின் யாவரே
இரவி தன்குலத் தெந்தை முந்தையோர்
பிரத பூசனைக் குரிய பேறிலேன்
அரசு செய்யவோ வாவ தாயினேன்.

பிரத பூசனைக்கு உரிய பேறு இலேன் - பிரேத பூசை செய்தற்குரிய பேறில்லாத நான், அரசு செய்யவோ ஆவது ஆயினேன் - அரசாள மட்டுமோ உரியவனுனேன் (இது நன்று!); இரவிதன் குலத்து - இச்சூரிய குலத்தில், எந்தை - என் தந்தையும், முந்தையோர் - முன்னோர்களுமான, உரை செய் மன்னர் - புகழ்பெற்ற அரசர்கள், என்னின் மற்று யாவர் - என்னைப்போல வேறு யாவருளர்? (ஒருவரும் இல்லை).

பிரேத பூசை (இறுதிக்கடன்) செய்தவர் அவ்விறந்தவருடைய சொத்துக்கு உரியவராதல் முறை; 'அப்பேறும் இல்லாத நான் அரசாளத் தகுதியுடையவனுதல் எங்ஙனம்?' என்கின்ருன். 'உரை செய் மன்னர் என்னில் யாருளர்' என்றது தன்னைப்பற்றிய இகழ்ச்சிக் குறிப்பு. உரை - புகழ். பிரதம் : பிரேதம் என்ற வடசொற் சிதைவு; பிரேதம் - பிணம்.

(பி - ம்.) 1. மன்னன்மற்று; உன்னிலென்னில்யார், உன்னில் யாவரே, என்னில் யாருளர், என்னின்யாவரே.
2. இரவி நன்குலத்து.
3. பிரேதபூசனைக்கு, பிரசபூசனைக்கு; உரியபெற்றிலேன், உரிமை பெற்றிலேன்.
4. அரைசு செய்யவோ, அரைசு செய்வதோ; ஆவதாயினன், அமைவதாயினேன், ஐயதோன்றினேன்; மு. அரைசர் செய்தவா அழகிதேயெனு. (134)

930. பூவி னன்முகன் புதல்வ னதியாம்
தாவின் மன்னர்தந் தரும நீதியால்
தேவ ராயினர் சிறுவ னகியே
ஆவ நான்பிறந் தவத்த னனவா.

பூவில் நான்முகன் புதல்வன் ஆதி ஆம் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் புதல்வனை காசிபன் முதலாக வந்த, தா இல் மன்னர் - குற்றமற்ற (இக்குலத்து) மன்னர்கள், தம் தருமம் நீதியால் - தம்முடைய தருமந் தவருத நீதி நெறியாலே, தேவர் ஆயினர் - தேவரானர்கள்; ஆவ - ஐயோ, நான் பிறந்து - நான் ஒருவன் (இக்குலத்திலே) பிறந்து, சிறுவன் ஆகி - அற்பனுகி, அவத்தன் ஆனவா(று) - வீணன் (நரகத்துக்குரியவன்) ஆனவகைதான் என்னே!

பிரமன் புதல்வன் காசிபப் பிரசாபதி; அவன் மகன் விவசுவான் என்ற சூரியன்; அவன் மகன் வைவச்சுத மனு என்று இவ்வாறு பிரமனை முதலாகக்கொண்டது சூரிய குலமாகலின், 'நான்முகன் புதல்வனுதியாம் மன்னர்' என்ருன். 'இக்குலத்தில் இதுகாறும் என்னைப்போலப் பழியேற்ருர் எவருமிலர்; முன்னோரனைவரும், தம் நெறியால், உள்ளபோதே தேவராக மதிக்கப்பெற்று, இறந்தும்

தேவரானுர்; அத்தகைய குலத்திற் பிறந்த நான் பழியேற்ற இழி தகவுதான் என்னே!' என இரங்குகின்ருன்.

ஆவ : இரக்கக் குறிப்புணர்த்தும் இடைச்சொல். அவத்தன் - வீணன். ஆனவா : இறுதி தொக்கது.

(பி - ம்.) 1. புதல்வனுதியாய்த், புதல்வனுதியாத், புதல்வராதியாம், புதல்வராதியாய்த், புதல்வராதியர், முதல்வனுதியாய்த்.
2. தரும நீதியார்.
3. தேவராகினுர், தேவராதியர், தேவராதியார்; சிறுவனுகவே, சிறுவனுகியும், சிறுவராலெனு,
4. ஆவாநான்பிறந்து, ஆவனேன்பிறந்து ஆவயான்பிறந்து, ஆவியான் பிறந்து, யாவர் நான்பிறந்து, இயாவரென்னே நேர்; அவத்தனுயினேன், அவத்தமானவா, அவத்தமானதே, அவத்தமாயவா.

(135)

931. துன்னு தாள்வளஞ் சுமந்த தாழையின்
பன்னு வான்குலேப் பதடி யாயினேன்
என்னே யென்னேயே யீன்று காத்தவென்
அன்னே யாரெனக் கழகு செய்தவா.

வளம் துன்னு தாள் சுமந்த தாழையில் - வளம் மிக்க அடிமரம் தாங்கும் தென்னேயில், பன்னு வான் குலே - சிறப்பித்துச் சொல்லப்படும் பெரிய குலேயில் உள்ள, பதடி ஆயினேன் - உள்ளீடற்ற காய்போல (நான்) ஆனேன்! என்னே ஈன்று காத்த என் அன்னேயார் - என்னேப் பெற்று வளர்த்த என் தாயார், எனக்கு செய்த ஆறு - எனக்குச் (சிறப்பு உண்டாகச்) செய்த வகை, என்னே அழகு - என்ன அழகாயிருக்கின்றது!

'என்னே அரசனுக்கிச் சிறப்பிக்கக் கருதி என் தாய் செய்த செயல் எவ்வளவு அழகானது!' எனப் புகழ்வதுபோலப் பழிக்கின்ருன். சூரிய குலம், வளமான தென்னே; அக்குலத்து அரசர்கள், அத்தென்னேயின் பெரிய குலேயில் உள்ள சிறந்த தேங்காய்கள்; பரதன், அவற்றிடையே வந்த பதடி என உவமை கொள்க. பதடி - உள்ளீடற்றது; 'மக்கட் பதடி' என்ருற்போல. தேங்காய்க்குலேயில் நல்ல காய்களுக்கிடையே பதடியும் இருக்கும்; அதனேத் 'தேரை யுண்ட காய்' என்பர். அவ்வாறு இருப்பது குலேயின் குற்றமன்று; தேரை நோய் பற்றலாலேயே அஃதவ்வாருகின்றது; அதுபோல, தன் தாயின் செயலே தனக்குத் தேரை நோயாயிற்று என்பதுபடக் கூறினுன். செய்தவாறு என்றதன் இறுதி தொக்கது.

(பி - ம்.) 1. தாள்வலம், நல்வளம், வான்வளம்; தாழையின்.
2. வான்குலப் பதடி.
3. என்னேயேயின்று, என்னேயேயீறு, அன்னேயேயின்மு; காத்தலென், காத்தவெம்.
4. அன்னேயாரெமக்கு, அன்னேயாமெனக்கு.

(136)

### முனிவன் சத்துருக்கனால் கடன்செய்வித்தல்

932. என்று கூறிநொந் திடரின் மூழ்குமத்
துன்று தாரவற் கிளைய தோன்றலால்
அன்று நேர்கட னமைவ தாக்கினான்
நின்று நான்மறை நெறிசெய் நீர்மையான்.

என்று கூறி - என்று இவ்வாறு பலபடியாகச் சொல்லி, நொந்து - மனம் நொந்து, இடரில் மூழ்கும் - துன்பத்துள் அழுந்துகின்ற, அ துன்று தாரவற்கு - (பூக்கள்) நெருங்கிய மாலையணிந்த பரதனுக்கு, இளைய தோன்றலால் - இளையவனான சத்துருக்கனைக்கொண்டு, அன்று நேர் கடன் - அப்போது செய்தற்குரிய கடன்களை, நால்மறை நெறி நின்று செய் நீர்மையான் - நான்கு வேதங்களும் கூறும் நெறியிலே நின்று (எதனையும்) செய்யும் தன்மையையுடைய வசிட்ட முனிவன், அமைவது ஆக்கினான் - பொருந்துவதாகச் செய்வித்தான்.

பரதன் கடன்கள் செய்தற்காகாமையின், வசிட்ட முனிவன், சத்துருக்கனைக் கொண்டு அவற்றை முறையாகச் செய்வித்தான். 'என்று' என்றது, முந்திய பாடல்களுட் கூறியவற்றின் அநுவாதம். அமைவது ஆக்குதல் - பொருத்தமுறச் செய்வித்தல்.

இறுதிக் கடனைப் பரதனே செய்ததாக வான்மீகம் கூறுகின்றது.

ஒரு பிரதியில், இதன்பின் கீழ்க்காணும் பாடல் ஒன்று உள்ளது.

அன்ன தாகவங் காறு பத்தெனச்
சொன்ன வாயிரந் தோகை மார்களும்
துன்னி வந்தனர் சோர்வி லாதவர்
மின்னு வாளெரி மீது வீழவே.

(பி - ம்.) 1. கூறிநின்று, கூறிநொய்து; மூழ்குறத், மூழ்கிநல்.
3. நோக்கடன்.
4. நின்றநான்மறை; நெறிசெய்நேமியான், நெறிசெல்நீர்மையான், நீதியான், நேமியான், மேனியான், நெறிசொல் நீர்மையான், நெறியின் நீர்மையால், முறைசொல் நீர்மையான். (137)

### அறுபதினாயிரம் தேவியரும் தீப்புகல்

933. இழையு மாரமு மிடையு மின்னிடக்
குழையு மாமலர்க் கொம்ப னார்கடாம்
தழையின் முண்டகந் தழுவு கானிடை
நுழையு மஞ்ஞைபோ லெரியின் மூழ்கினார்.

இழையும் - அணிகலன்களும், ஆரமும் - முத்துவடங்களும், இடையும்—, மின் இட - மின்னொளி வீச, குழையும் மாமலர் கொம்பு அன்னார்கள் தாம் - துவளும் பெரிய பூங்கொம்பு போன்றவர்களான

தேவிமார் அறுபதினுயிரவரும், தழை இல் - இலைகளில்லாத, முண்டகம் தழுவு கான் இடை - செந்தாமரை மலர்கள் செறிந்த காட்டிலே, நுழையும் - புகுகின்ற, மஞ்ஞைபோல் - மயில்களைப் போல, எரியில் மூழ்கினர் - ஈமத்தீயில் முழுகினர்.

தசரதன் தேவிமார் அறுபதினுயிரவரும், அவன் இறந்தவுடனே தாமும் உயிர்விடத் துணிந்தபோது, வசிட்ட முனிவன் ஆணையால் அது செய்யாது நின்று, இப்போது இவ்வீமத் தீயில் மூழ்குதற் பொருட்டே வந்தவர்களாதலின், சிறிதும் வருத்தமின்றி மகிழ்ச்சியோடு தீப்புகுந் தனர்; அதற்குக் குளிர்ந்த தாமரைக் காட்டிலே புகும் மயில்களை உவமையாக்கினர். இலைகளின் இடையீடில்லாத தாமரை மலர்க் கூட்டம் தீப்பரப்புப் போல்வது. "புண்டரிகம் தீயெரிவ போல்விரியப் பூம்புகைபோல், வண்டிரியும்" (நள. 141). கான் என்றது மிகுதிபற்றி மகளிரின் இடையை 'மின்னற்கொடி' என்பராகலின், இடையும் மின்னிட என்றார். கணவரை இழந்த பத்தினிப் பெண்டிர் தீப்புகுதல்: "பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற, வள்ளித ழவிழ்ந்த தாமரை, நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே" (புறநா. 246); "காதல ரிறப்பின்......நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர் ... பத்தினிப் பெண்டிர்", "காதலன் வியக் கடுந்துய ரெய்தி.......நளியிரும் பொய்கை யாடுநர் போல, முளியெரி புகூஉம் முதுக்குடிப் பிறந்த, பத்தினிப் பெண்டிர்" (மணி. 2 : 42 - 48; 18 : 11 - 15) என்பவற்றைக் காண்க.

(பி - ம்.) 1. மின்னிடைக், மன்னிடக்.
2. குழையுநாண்மலர்க், குழையினுண்மலர்க்; கொம்பனார்களும், கொம்பனாரெரி.
3. தழையின் முள்ளியம், முள்ளிலம், முள்ளிலவு மூளெரித், முன்னெரி முள்ளிய, தழையுமுண்டகம், நாணுமலர், முள்ளிலவு, முள்ளிலம் முள்ளியம், முள்ளிலம்; தழையும் வேய்வனம், தடவுகானிடை, உலவுகானிடை, தங்கிவீழ்மயிற்.
4. முழையும், முழையின், மு. கிளைகள் போலெரிகெழும மூழ்கினர்.

(138)

934. அங்கி நீரினுங் குளிர வம்புயத்
திங்கள் வாண்முகந் திருவி லங்குறச்
சங்கை தீர்ந்துதங் கணவர் பின்செலும்
நங்கை மார்புகு முலக நண்ணினர்.

(ஈமத் தீயிற் புகுந்த அத்தேவிமார்), அங்கி - அத்தீயானது, நீரினும் குளிர - தண்ணீரினும் குளிர்ச்சியுடையதாக, அம்புயம் திங்கள் வாள் முகம் - தாமரைக் காட்டினிடையே (தோன்றும்) சந்திரன் போன்ற ஒளியமைந்த (தம்) முகங்கள், திரு விளங்குற - (மேலும்) அழகோடு விளங்க, தம் கணவர் பின் - (இறந்த) தம் கணவர் பின்னே,

சங்கை தீர்ந்து செல்லும் - ஐயத்தை விட்டுச் செல்லுகிற, நங்கை மார்புகும் - பத்தினிப் பெண்டிர் அடைதற்குரிய, உலகம் - புண்ணிய உலகத்தை, நண்ணினர் - அடைந்தார்கள்.

சககமனம் செய்யும் பத்தினிப் பெண்டிர், அவ்வாறு செய்தலில் தமக்கு நற்கதி உளதாகுமோ ஆகாதோ என்ற ஐயம் இன்றித் துணிந்து செய்தல் வேண்டும். அத்தகைய பெண்டிரே நல்லுலகமெய்துவர்; இத்தேவிமாரும், அத்தகையராய் அந்நல்லுலகடைந்தனர். அதனிலுள்ள மகிழ்ச்சியால் அவர்கள் முகங்கள் மேலும் அழகோடு விளங்கின. தீயைத் தாமரைக்காடு என்றமையின், அதனிடையே சந்திரன்போல் விளங்கும் முகமென்றார். கற்பின் மேன்மையால், தீயும் அவர்களைச் சுடாதென்பார், 'அங்கி நீரினுங் குளிர' என்றார்.

(பி-ம்.) 1. அம்புத, அம்புபாய், அம்புலாம், ஆம்பல்வாய்த்.
2. வாண்முகத், வாழ்முகம், பாய்முகம்; விளக்குறச், விளங்கிடச்.
3. தீர்தவம், தீர்தவன், தீர்தரத், தீர்வுறத், தீர்ந்தவத்; கணவர் சார்வுறும், கணவனேகலும், கணவர்கற்புடை, கணவர்ச்சார்வுறும், தழுவுகற்பினர், தழுவுகற்பினின், கற்புடை, தழுவுங்கற்புடை, தழுவு கற்பிணை, தழுவுகற்பினன்.
4. மங்கைமார்களும்; உலகமன்னினர், உலகு நண்ணினர், அரசை நண்ணினர். (139)

## பரதன் மனையை அடைதல்

935. அனைய செய்கையா லரசர் கோமகற்
கினைய நற்கட னியன்ற தென்றபின்
மனையி னெய்தினன் மரபின் வாழ்வினை
வினையி னெய்துமோர் பிணியின் வெஃகலான்.

அனைய செய்கையால் - (சத்துருக்கனைக் கொண்டு) செய்வித்த அவ்வகையினால், அரசர் கோமகற்கு - சக்கரவர்த்திக்குரிய, இனைய நல் கடன் இயன்றது - இந்த இறுதிச் சடங்கு நடந்தேறியது; என்றபின் - அவ்வாறான பிறகு, மரபின் வாழ்வினை - தன் மரபுக்குரிய அரசவாழ்க்கையை, வினையின் எய்தும் ஓர் பிணியின் - தீவினையால் வந்த ஒரு நோய்போலக் (கருதி), வெஃக அலான் - விரும்பாதவனாகிய பரதன், மனையின் எய்தினன் - அரண்மனையை அடைந்தான்.

முதல்நாட் சடங்கு சத்துருக்கனால் நடந்தேறியபின், அனைவரும் அரண்மனையைச் சேர்ந்தனர். ஏனைநாட் சடங்குகளும் முடிந்தபின், அரசேற்க வேண்டிய நிலைவரினும், அதனை விரும்பாதவன் பரதன் என்பார், 'மரபின் வாழ்வினைப் பிணியின் வெஃகலான்' என்றார். வெஃகலான் : தொகுத்தல் விகாரம்.

(பி-ம்.) 1. அனையர்; செய்கையாலரசு, செய்கையாவரசர், செய்கையாலான, செய்கையானரசர், தன்மையாலரசர், மாதவனரசர்.

2. இனைய தன்மையால், தன்மையான், செய்கையால்; இயைவ, இசைவ; செய்துபின், செய்தபின்.
3. மனையிலெய்தினன், மனையினெய்தினர்; மரபின் வந்தது, வரம்பின் வாழ்வினை.
4. வினையள்; பிணியின் வேலையான்; விம்முவான், வேகுவான். (140)

## இறுதிக் கடன்கள் இயன்று முடித்தமை

936. ஐந்து மைந்துநா ளூழி யாமென
மைந்தன் வெந்துயர்க் கடலின் வைகினான்
தந்தை தன்வயிற் றருமம் யாவையும்
முந்து நூலுளோர் முறையின் முற்றினார்.

மைந்தன் - பரதன், ஐந்தும் ஐந்தும் நாள் - பத்து நாட்கள், ஊழி ஆம் என - ஓர் ஊழிக்காலம் போல (நீடிக்க), வெம் துயர் கடலின் வைகினான் - கொடிய துன்பக்கடலில் மூழ்கி இருந்தான்; தந்தை தன் வயின் - தந்தை திறத்துச் செய்தற்குரிய, தருமம் யாவையும் - சடங்குகளை எல்லாம், முந்து நூல் உளோர் - பழமையான தரும சாத்திரங்களில் வல்ல மறையோர், முறையின் முற்றினர் - முறையாகச் செய்வித்து முடித்தனர்.

முதல்நாள் ஈமச் சடங்கு கழிந்தபின், ஏனை நாட்களிலும் செய்ய வேண்டுவனவற்றை, மறையோர் முறையாகச் செய்வித்துச் சடங்குகளை முற்றுவித்தனர். பரதன் இராமபிரானைக் காணாத ஏக்கத்தால் துடிப்பவனாகலின், அந்த நாட்களையெல்லாம் மிக்க துயரோடு அரிதாகக் கழித்தான் என்பார், 'ஊழியாமென வெந்துயர்க் கடலின் வைகினான்' என்றார்.

(பா - ம்.) 1. உந்துமன்னைமார் ஒழிய மன்னவன்.
2. கடலின் வைகுவான், மூழ்கினான்.
3. தந்தைதன்மையிற்.
4. முற்றினன். (141)

## முனிவருடன் பரதனை அடைந்து வசிட்டன் கூறத் தொடங்கல்

937. முற்று முற்றுவித் துதவி மும்மைநூற்
சுற்றம் யாவையுந் தொடரத் தோன்றினான்
வெற்றி மாதவன் வினைமு டித்தவக்
கொற்ற வேனெடுங் குமரற் கூறுவான்.

வெற்றி மா தவன் - தவத்தின் வெற்றியினையுடைய வசிட்ட முனிவன், முற்றும் முற்றுவித்து - (சடங்குகளை) முழுதும் முடிப்பித்து, உதவி - (பலவகையான தானங்களையும் உரியார்க்குக்) கொடுத்து (எல்லாம் முடிந்தபின்), மும்மை நூல் சுற்றம் யாவையும் தொடர -

மூன்று வேதங்களிலும் வல்ல மறையவர் கூட்டம் முழுதும் தொடர்ந்துவர, வினை முடித்த - தீவினைகளை வென்றொழித்த, அ அந்த, கொற்றம் வேல் - வெற்றி தரும் வேலேந்திய, நெடு குமரன் - பெரியோனாகிய பரதனுக்கு, கூறுவான் - (மேல் நிகழவேண்டுவன பற்றிக்) கூறும் பொருட்டு, தோன்றினான் - (அவன்பால்) வந்தான்.

சடங்குகளெல்லாம் முடிந்தபின், வசிட்ட முனிவன், மேல் நிகழ்தற்குரியவற்றைப் பரதனுக்குச் சொல்லும் பொருட்டு, மறையவர் திரள் புடைசூழப் பரதனிடம் வந்தான். சடங்கு பதின்மூன்று நாள் நடந்ததாக முதனூல் கூறுதலின், 'முற்றும்' என்றது, முன் கவியிற் கூறிய பத்து நாட்களுக்கு மேலும் நடக்கவேண்டிய எல்லாவற்றையும் குறித்ததெனலாம்.

உதவி - தனக்கு (வசிட்டனுக்கு) உதவியாயிருந்த என்றும், மும்மை நூல் - முப்புரி நூல் என்றும் உரைப்பினுமாம். வேதம் நான்கினுள், முதல் மூன்றுமே பழமையும் முதன்மையும் வாய்ந்தவை யாதலான், மும்மை நூல், மூன்று வேதம் எனலாயிற்று. அதனால் வேதத்துக்குத் திரயீ என்று ஒரு பெயர் உண்டு. வெற்றி மா தவன் - தவவலியால் விசுவாமித்திரனை வென்று, தவத்தின் பெருமையை நிலைநாட்டியவன். 'வினை முடித்த' என்பதனை அவனுக்கு விசேடண மாக்கியுரைத்தலும் அமையும்.

சில பிரதிகளில் இப்பாடல் இல்லை.

(பி - ம்.) 1. உதவி முந்நூற், முன்னைநூற், உதவு மும்மைநூற், அரிய மும்மைநூற்.
2. சுற்றம் யாவரும், சுற்றும் யாவரும்; தோன்றின, தோன்றாள், தோமிலா.
3. வினைமுடித்தவன், முடித்தவர், முடித்தவண், முடித்தபிற், முடிந்த பிற்.
4. கொற்றவநெடும்; குமரர் கூடினன், கூறினன், கூறினர், கூறுவார், குமரன் கூறினன்.

(142)

மந்திரச் சுற்றமும் அறிஞரும் பரதனைக் காண வருதல்

938. மன்ன ரின்றியே வையம் வைகருன்
தொன்மை யன்றெனத் துணியு நெஞ்சினர்
அன்ன மாநிலத் தறிஞர் தம்மொடும்
முன்னை மந்திரக் கிழவர் முன்னினர்.

முன்னை மந்திரம் கிழவர் - பழைய மந்திரிமார்கள், வையம் - நாடானது, மன்னர் இன்றி வைகல் - அரசரின்றி இருத்தல், தொன்மை அன்று என - மரபன்று என்று, துணியும் நெஞ்சினர் - தெளிந்த மனம் உடையவராய், அன்ன மாநிலத்து அறிஞர் தம்மொடும் - அந்தப்

பெரிய நாட்டில் உள்ள நல்லறிஞர் பலரோடு, முன்னினர் - (பரதனைக் காண) முற்பட்டனர்.

நாடு அரசனின்றி யிருத்தல் பல தீங்குகளுக்கிடமாகு மாகலின், பரதனை அரசனாக்கவேண்டும் என்ற கருத்துடன் பழைய (தசரத னுடைய) மந்திரிமாரும், பேரறிஞர் பலரும், பரதன்பால் வந்தனர்.

அராஜகமான ஜநபதத்தில் (அரசன் இல்லாத நாட்டில்) விளையும் தீங்குகளைக் குறித்து வான்மீகி முனிவர் ஒரு சருக்க முழுதும் கூறியுள்ளார்.

ஏ, தான் : அசைகள்.

இப்பாடலும் சில பிரதிகளில் இல்லை. இதன்பின் இரண்டு பாடல்கள் உண்டென்று ஐயவரவர்கள் குறிப்பொன்று கூறுகின்றது. அவை கிடைக்கவில்லை. ஒரு பிரதியில் இங்கே 'தகனஞ் செய் படலம் முற்றும்' என்பது காணப்படுகின்றது.

(பி ◦ ம்.) 1. மன்னனின்றியே, மன்னரன்றியே; வையம்வைகுருத், வைக வையகம், வைகவையமுன், வைகல்வைகருன், வைகும்வைகருன், வைகும்வையகம், வைகும் வையமுன்.
2. தொன்மையின்றெனத்; நெஞ்சினன்.
4. முன்னர் மந்திரக், முன்னு மந்திரக், முன்ன மந்திரிக்; முந்தினர்.

(143)

பள்ளிபடைப் படலம் முற்றும்.

# 11. ஆறுசெல் படலம்

**வ**ழிச் செல்லுதலைக் கூறும் படலம் என இதன் பொருள் விரியும். பரதன், இராமபிரானை அழைத்து வந்து முடிசூட்டுவித்தற் பொருட்டுச் சேனையுடன் அயோத்தியினின்றும் புறப்பட்டுக் கானம் நோக்கிச் சென்ற செய்தியை விரித்துக் கூறுவது இது. இப்படலப் பெயர் சுவடிகளில், 'ஆற்றுப் படலம்', 'பரதன் எழுச்சிப் படலம்', 'கங்கை யாற்றுப் படலம்' எனப் பலவாறு காணப்படுகின்றது. ஒரு சுவடியில் இதுமுதல் இக்காண்ட முடிவுவரை உள்ள பகுதி 'ஆறு சென்று அடிதொழுத படலம்' என்ற பெயரோடு காணப்படுகின்றது. இப்படலத்துப் பாடல்கள், 59.

மந்திரிமார் முதலியோர் வசிட்ட முனிவனோடு பரதன் இருந்த அவையைச் சேர்தல்

(கலிவிருத்தம்)

939. வரன்முறை தெரிந்துணர் மறையின் மாதவத்
தருநெறி முனிவனு மாண்டை யானென
விரைவின்வந் தீண்டினர் விரகி னெய்தினர்
பரதனை வணங்கினர் பரியு நெஞ்சினர்.

பரியும் நெஞ்சினர் - (நாட்டுக்கு அரசன் இல்லாமை குறித்து) வருந்தும் மனமுடையவர்களாகிய பலர், வரன்முறை தெரிந்து உணர் - அரசர்க்குரிய மரபுகளை ஆராய்ந்து உணர்ந்த, மறையின் - வேத அறிவையும், மா தவத்து அருநெறி - சிறந்த தவமாகிய அரிய ஒழுக்கலாற்றையும் உடைய, முனிவனும் - வசிட்ட முனிவனும், ஆண்டையான் என - (பரதனுடன்) அவ்விடத்தில் உள்ளான் என்று அறிந்து, விரைவின் வந்து ஈண்டினர் - விரைவாக (அவர்கள் இருந்த இடத்திற்கு) வந்து கூடி, விரகின் எய்தினர் - (பரதனை அரசனுக்கும்) உபாயம் நாடி அடைந்து, பரதனை வணங்கினர் —.

பரியும் நெஞ்சினர் இன்னர் என்பதை அடுத்த கவியிற் கூறுகிறார்.

முந்திய படலத்தின் இறுதிக் கவியில் கூறியபடி, பரதனைக் காண முற்பட்டவர்கள் ஒருங்கு கூடிப் பரதன் வசிட்ட முனிவனோடு இருந்த இடத்தை விரைந்து அடைந்து பரதனைப் பணிந்தனர். வசிட்ட முனிவனும் உடன் இருத்தலால் தங்கள் கருத்து முற்றுறும் என்ற எண்ணத்தோடு அவர்கள் வந்தனர்.

(பி - ம்.) 1. தெரிந்துயர், தெரிந்துளர், தெரிந்துளார், தெரிந்தனர்; மரபின்.
2. அருநெறி முனிவரும், அருநெறி வசிட்டனும்; ஆண்டையார்களும், ஆண்டையாரென, ஆண்டையோனென, யாண்டையானென, யாண்டையாரென, யாண்டையார்களும்.
3. விதியினெய்தினர், விரதமாதவப்; மெலியு நெஞ்சுடை.
4. பரிவி னெஞ்சினர். (1)

940. மந்திரக் கிழவரு நகர மாந்தரும்
தந்திரத் தலைவருந் தரணி பாலரும்
அந்தர முனிவரோ டறிஞர் யாவரும்
சுந்தரக் குரிசிலை மரபிற் சுற்றினர்.

மந்திரம் கிழவரும் - மந்திரிமாரும், நகரம் மாந்தரும் - நகரத்துப் பெருமக்களும், தந்திரம் தலைவரும் - சேனாதிபதிகளும், தரணி பாலரும் - அரசர்களும், அந்தரம் முனிவரோடு - ஆகாய சாரிகளான முனிவர்களோடு, அறிஞர் - நல்லறிஞர்களுமாகிய, யாவரும் - எல்லோரும், மரபின் - முறைப்படி, சுந்தரம் குரிசிலை - அழகனான அப்பரதனை, சுற்றினர் - சூழ அமர்ந்தனர்.

மந்திரக் கிழவர் முதலியோர் முறைப்படி அவரவர்க்கு உரிய இடங்களில் அமர்ந்தனர்.

(பி - ம்.) 1. நகரின், நகருள், கிழவருந் தமரும்.
2. தந்திரக் கிழவரும்; தரணி வாணரும்.
3. அந்தணர்.
4. முறையிற். (2)

### சுமந்திரன் வசிட்டனை நோக்குதல்

941. சுற்றின ரிருந்துழிச் சுமந்திரப்பெயர்ப்
பொற்றடந் தேர்வலான் புலமை யுள்ளத்தான்
கொற்றவக் குரிசிலைக் குறித்த கொள்கையான்
முற்றுணர் முனிவரன் முகத்தை நோக்கினான்.

சுற்றினர் இருந்த உழி - மேற்கூறியவாறு எல்லோரும் பரதனைச் சூழ்ந்து அமர்ந்திருந்தபோது, புலமை உள்ளத்தான் - நுண்ணறிவமைந்த மனமுடையவனான, சுமந்திரன் பெயர் - சுமந்திரன் என்ற பெயருடைய, பொன் தட தேர் வல்லான் - பொன்னாலியன்ற பெரிய தேரைச் செலுத்தலில் வல்ல அவன், கொற்றம் அ குரிசிலை குறித்த கொள்கையான் - அரசுக்குரிய அப்பரதனைப்பற்றிய உட்கருத்தோடு, முற்று உணர் முனிவரன் முகத்தை நோக்கினான் - எல்லாம் உணர்ந்த முனிசிரேட்டனான வசிட்டன் முகத்தை(ஏறிட்டு)ப் பார்த்தான்.

அனைவரும் அமர்ந்து அமைதியுற்றபின், அங்கிருந்த எல்லோர் கருத்தும் பரதனை அரசனாக்க வேண்டுமென்பதே யாகலின் அதனைப்

பரதனுக்கு ஏற்றவாறு உணர்த்த வல்ல திறனும் தகுதியுமுடையவன் வசிட்ட முனிவனே எனத் துணிந்து, அதனை அவன் செய்தல் வேண்டுமென்ற குறிப்போடு, சுமந்திரன் முனிவன் முகத்தை நோக்கினான்.

முனிவன், தவவலியால் எல்லாம் உணர்தலோடு, குறிப்பிற் குறிப்புணரும் ஆற்றலும் மிக்கவனாதலால் 'முற்றுணர் முனிவரன் எனப்பெற்றான். மந்திரிக்குரிய சூழ்ச்சித்திறனும் பிறவும் பெற்றுக் குலகுருவாயும் இருத்தலால், ஏனையோரினும் அவனே முதலிற் சொல்லுதற்குரியவனாகின்றான். சாரதியாதலோடு மந்திரியாகவும் அமைந்தவன் சுமந்திரன் என அவனது தகுதியும் உணர்த்தப்பெற்றது. குரிசிலைக் குறித்த கொள்கையாவது, அவன் அரசேற்றல் வேண்டு மென்பது. கொற்றம் - அரச உரிமை; (பெருங். 2.5:73; மணி: 23: 11.

(பி - ம்.) 1. சுற்றினன்.
2. தேரினான்.
3. கொற்றவற் குறுபொருள், கொற்றமாக் குரிசிலைக், குற்றமில் பரதனைக் குறித்துக்.
4. முனிவனை முகத்து. (3)

வசிட்டமுனிவன் பரதனுக்குக் கூறத் தொடங்குதல்

942. நோக்கினாற் சுமந்திர னுவல லுற்றதை
வாக்கினா லன்றியே யுணர்ந்த மாதவன்
காக்குதி யுலகுநின் கடனி தாமெனக்
கோக்கும ரனுக்கது தெரியக் கூறுவான்.

சுமந்திரன்—, வாக்கினால் அன்றியே - (தன்) வாய்ச்சொல்லால் அன்றியே, நோக்கினால் நுவலல் உற்றதை - பார்வையினாற் சொல்லி யதை, உணர்ந்த மாதவன் - உணர்ந்துகொண்ட வசிட்ட முனிவன், அது - அதனைக் குறித்து, கோ குமரனுக்கு - சக்கரவர்த்தி குமாரனான பரதனுக்கு, உலகு காக்குதி - நாட்டை நீ காப்பாயாக, இது நின் கடன் ஆம் என - இது உன் கடமையாகும் என்று, தெரிய - விளக்க மாக, கூறுவான் - சொல்லலானான்.

சுமந்திரன் குறிப்பால் உணர்த்திய அவையினரின் கருத்தைப் பரதனுக்குத் தெரியச் சொல்லுதல் தன் கடனென்று உணர்ந்த முனிவன் அவனை நோக்கிக் கூறலானான்.

'நாடு அரசின்றி யிருத்தல் தகாது; அரசாட்சி உன்னைத் தேடி வந்துளது; ஆதலால் அரசையேற்று நாட்டைப் பாதுகாத்தல் உன் கடமையாகும்' எனப் பரதனுக்கு முனிவன் கூறியவை மேல் ஏழு கவிகளிற் கூறப்படும். பெருமைக்காக அன்றிக் கடமையை நோக்கிப் பரதன் அரசேற்றல் வேண்டுமென்பது முனிவன் குறிப்பு.

(பி - ம்.) 1. நோக்கிய, நோக்கின.
3. உலகமின், உலகையின், உலகைநீ; கடவதாமெனக்.
4. குமரனுக்கிது; கூறினன். (4)

வசிட்டன் கூற்று

943. வேதிய ரருந்தவர் விருத்தர் வேந்தர்கள்
ஆதியர் நின்வயி னடைந்த காரியம்
நீதியுந் தருமமு நிறுத்த நீயிது
கோதறு குணத்தினய் மனத்துட் கோடியால்.

கோது அறு குணத்தினய் - குற்றமற்ற குணங்களையுடைய பரத, வேதியர் - மறையவரும், அரு தவர் - அரிய தவசிகளும், விருத்தர் - மூதறிஞரும், வேந்தர்கள் ஆதியர் - அரசர்களும் முதலாகவுள்ள அனைவரும், நின் வயின் அடைந்த காரியம் - உன்பால் இப்போது வந்திருக்கும் காரியம், நீதியும் தருமமும் நிறுத்த - (நாட்டில்) அரச நீதியையும் தருமத்தையும் நிலைபெறச் செய்யவே யாகும்; நீ இது மனத்துள் கோடி - நீ இதனை (முதலில்) மனத்துட் கொள்வாயாக.

"இப்போது இங்குக் கூடியுள்ளார் அனைவரும் உன்னை நாடிவந்த காரியம், நாட்டிற்கு அரசு நிலையிட்டு அறத்தைக் காத்தற்பொருட்டே யாகும்; இதனை நீ முதலில் மனத்துக்கொண்டாயானல் மேலே நான் சொல்லப் போவனவற்றின் தகுதியை நீ உணர்வாய்'' என வசிட்ட முனிவன் முதலில் அடிப்படை அமைத்துக்கொள்கின்றான். நீ அரசேற்று நாடுகாத்தல் வேண்டுமென்பது இதன் குறிப்பு.

பரதன் நற்குணங்கள் நிறைந்தவனாதலால், கோதறு குணத்தினய் என விளித்தான்.

(பி - ம்.) 2. ஆதியாய்; அடைந்த காரணம்.
3. நிறுவ, நிறுத்தி, நிறுத்தும்; நீயது. மு. நீதியினீயுலகளித்தனேயமால்.
4. மனத்தினய், மனத்தினல்; குறித்துக் கோடியால், மதித்துக் கோடியால், மனத்துக் கொண்டியால். (5)

944. தருமமென் றொருபொரு டந்து நாட்டுதல்
அருமையென் பதுதெரிந் தறிதி யையநீ
இருமையுந் தருவதற் கியைவ தீண்டிது
தெருண்மனத் தார்செயுஞ் செயலி தாகுமால்.

ஐய-ஐயனே, தருமம் என்ற ஒரு பொருள்-தருமம் என்ற ஒப்பற்ற பொருளை, தந்து - (நாட்டுக்குத்) தந்து, (நாட்டினர் கொள்ளச் செய்து), நாட்டுதல்- (அதனை) நிலைநிறுத்துதல், அருமை என்பது - அருமையான (இன்றியமையாத) செயலென்பதை, நீ தெரிந்து அறிதி-நீ நன்கு

உணர்வாய்; ஈண்டு இது - இப்போது உன்முன் நிற்கும் இது, இருமையும் தருவதற்கு இயைவது - இம்மை மறுமை இரண்டின் நற்பயனையும் தருதற்குப் பொருந்தியதாகும்; தெருள் மனத்தார் செயும் செயல் இது ஆகும்- தெளிந்த மனமுடையார் செய்தற்குரிய காரியமும் இதுவேயாகும்.

ஆல்: அசை.

முன் கவியில், 'இவர்களெல்லோரும் உன்னை நாடி வந்தது, நாட்டில் நீதியையும் தருமத்தையும் நிலைபெறுத்தும் பொருட்டே' என்று கூறிய முனிவன், 'அது நிகழ்தல் அரசனாலேயாகும்; அவ்வரசு பெறுதற்கரியது; தன்னைப் பெற்றோர்க்கு இம்மையில் புகழை யும் இன்பத்தையும் தருவதோடு, மறுமையில் நல்லுலகப் பேற்றையும் அளிக்கும்' என அரசாட்சியின் சிறப்பைக் கூறி, 'நீ அதனை ஏற்றல் வேண்டும்' என்பதைக் குறிப்பித்து, 'தருமத்தை நிலைநாட்டுதலும் ஒரு தருமமாதலால் தெருண்ட மனமுடையோர் செய்தற்குரிய செயலும் இதுவே' என்றான்.

(பி - ம்.) 1. ஒருபொருள் எடுத்துக்காட்டுதல்; தக்க நாடுதல், தரித்து நாட்டுதல்.
2. பெரிதறிதி.
3. தருமதற்கு; இசைய வீண்டது, இசைவ தீண்டிது, இசைந்த தீண்டிது.
4. தெருண்மருந்தன்னது, தெருண்மனத்தார்க்கலால், மனத்தார்க்கது, மனத்தெனக்கொரு, மனந்தனக்கொரு, திருமனந்தனிலவை, மனந் தனிலிவை. (6)

945. வள்ளுறு வயிரவா ளரசில் வையகம்
நள்ளுறு கதிரிலாப் பகலு நாளொடும்
தெள்ளுறு மதியிலா விரவுந் தேர்தரின்
உள்ளுறை யுயிரிலா வுடலு மொக்குமால்.

தேர்தரின் - ஆராய்ந்து பார்த்தால், வள் உறு வயிரம் வாள்-உறை யிற் பொருந்தும் உறுதியான வாளை உடைய, அரசு இல் வையகம்-அரச னது காப்பில்லாத நாடு, நள் உறு - (யாவரும்) விரும்புகின்ற, கதிர் இலா பகலும் - சூரியனில்லாத பகற்போதும், நாளொடும் - நட்சத்திரங்க ளுடனே, தெள் உறு மதி இலா-தெளிவுடைய சந்திரன் இல்லாத, இரவும்-இராப்போதும், உள் உறை உயிர் இலா உடலும் - உள்ளே தங்கும் உயிர் இல்லாத உடம்பும் (பிணமும்), ஒக்கும் - போன்றதாகும். ஆல் : அசை.

அரசனில்லாத நாடு பயனற்றதென்பதனை உபமானங்களால் வலியுறுத்துகின்றான் முனிவன். வள்-கூர்மையும் ஆம். வையகம் - நாடு;

நள் உறு - (பல கிரகங்களுக்கும்) நடுவில் அமைந்த எனவுமாம். நாள் - நாண்மீன். மதிக்குத் தெளிவு ஒளியும் குளிர்ச்சியும் பற்றியது.

(பி - ம்.) 1. வள்ளுறை.
2. நாடொறும், நாளினும்.
3. தேர்ந்திடில், தேர்ந்திடின், தேர்வரின்.
4. உள்ளுறுமுயிரிலா; உடலுமொக்குமே, உடம்புமொக்குமே. (7)

946. தேவர்த முலகினுந் தீமை செய்துழல்
மாவலி யவுணர்கள் வைகு நாட்டினும்
ஏவெவை யுலகமென் றிசைக்கு மன்னவை
காவல்செய் தலைவரை யின்மை கண்டிலம்.

தேவர் தம் உலகினும் - (நன்மை செய்யும்) தேவர்களுலகத்திலும், தீமை செய்து உழல் - (பிறர்க்குத்) தீமையே செய்து திரியும், அவுணர்கள் வைகும் நாட்டினும் - அசுரர்கள் தங்கும் நாட்டிலும், ஏ எவை உலகம் என்று இசைக்கும் - (இன்னும்) எவ்வெவை உலகம் என்று சொல்லப்படுமோ, அன்னவை - அவைகளிலெல்லாமும், காவல் செய் தலைவர் இன்மை - (அவ்வவற்றைக்) காக்கும் தலைவர் இல்லாமையை, கண்டிலம் - கண்டதில்லை.

முன் கவியில், அரசனில்லாத நாடு பயனற்றதெனக் கூறியவன் உலகம் நாடு என்று சொல்லப்படுவன எவையோ, அவையெல்லாம் ஆளுந் தலைவரொருவரைப் பெற்றே யிருத்தல் மரபு என்பதனை நாம் காண்கின்றோம் என அதனைத் தெளிவிக்கின்றான் முனிவன்.

எவ்வெவை என்பது எதுகை நயங் கருதி விகாரப்பட்டது. தலைவரை: ஐ, சாரியை.

(பி - ம்.) 3. ஏவவை, ஏவையும், யாவதும், ஏவகையுலகினும்; இசைக்கிலன்னது, அன்னவை, இசைக்குமன்னது, இசைக்கு நல்லது, இசைக்கினல்லது, இசைக்கினல்லவை, இசைப்பினன்னவை, இருக்கிலல்லது, இருக்குமங்கணும், இருக்குமன்னது, இருப்பினன்னவை.
4. கண்டிலேம்; காட்டியால், காட்டுமோ, காண்டியால், காண்டிலம். (8)

947. முறைதெரிந் தொருவகை முடிய நோக்குறின்
மறையவன் வகுத்தன மண்ணில் வானிடை
நிறைபெருந் தன்மையி னிற்ப செல்வன
இறைவனை யில்லன யாவுங் காண்கிலம்.

முறை தெரிந்து - முறைமை அறிந்து, ஒருவகை - ஒருவகையாக, முடிய நோக்கு உறின் - (உலகங்கள்) முழுதும் ஆராய்ந்து பார்ப்போமாயின், மறையவன் வகுத்தன - பிரமன் படைத்தனவாய், மண்ணில் - இவ்வுலகத்திலும், வானிடை - வானுலகத்திலும், நிறை பெரு தன்

மையின் - நிறைந்த பேரளவினவான, நிற்ப - நிலையியற் பொருள் களுள்ளும், செல்வன - இயங்கியற் பொருள்களுள்ளும், இறைவனை இல்லன - அரசனைப் பெற்றில்லாதன, யாவும் காண்கிலம் - எவற்றையும் காண்கின்றேமில்லை.

உயர்திணையுயிர்களாகிய மக்கள், தேவர் முதலியோரை யன்றி, அஃறிணை உயிர்களான சராசரங்களெல்லாமும் அரசின்றி இல்லையென, அரசின் இன்றியமையாத தன்மையை இதனாலும் விளக்குகின்றான் முனிவன்.

மரங்களின் அரசன், அரசமரம்; விலங்குகளின் அரசன், சிங்கம்; பறவைகளின் அரசன், கருடன் என்ற வழக்கும் காணத் தகும்.

(பி ‧ ம்.) 1. முறை செறிந்து, அறிந்து; ஒருவழி.
2. வகுத்தகம்.
3. தனிமையின் நிற்ப.
4. இறைகளையில்லன, இறைவரையில்லன; காண்கில, காண்கிலேம், காண்கிலோம், சாண்டிலேம். (9)

948. பூத்தநாண் மலரயன் முதல புண்ணியர்
ஏத்துவான் புகழின ரின்று காறுமுன்
காத்தனர் பின்னொரு களைக ணின்மையால்
நீத்தநீ ருடைகல நீர தாகுமால்.

பூத்த நாள் மலர் - (திருமாலின் உந்தியில்) மலர்ந்த செவ்வி கெடாத தாமரை மலரில் வீற்றிருக்கின்ற, அயன் முதல புண்ணியர் - பிரமன் முதலான புண்ணியர்களும், ஏத்து - போற்றுதற்குரிய, வான் புகழினர் - சிறந்த புகழைப் பெற்ற இக்குல மன்னர்கள், முன் - உனக்கு முன்னே, இன்று காறும் - இந்நாள்வரை, காத்தனர் - (இந்நாட்டை முறையாகக்) காத்தார்கள்; பின் - இதன்பின், (நீ அரசேலாவிடின்), ஒரு களைகண் இன்மையால் - ஒரு பற்றுக் கோடில்லாமையால் (இந்த நாடு), நீத்தம் நீர் - கடலின் நடுவே, உடை - உடைந்த, (மீகாம னில்லாத) கலம் நீரது ஆகும் - மரக்கலத்தின் தன்மை உடைய தாகும்.

ஆல் : அசை.

'புகழ்மிக்க உன்குல முன்னோர்கள், இதுகாறும் இடையீடின்றி ஒருவர்பின் ஒருவராய் இந்நாட்டை முறைப்படி பாதுகாத்து வந்துள்ளனர்; இனி நீ அரசேலாவிடின், நடுக்கடலில் அகப்பட்டு மீகாமனின்றி உடைந்த மரக்கலம் போல நாடு நிலைகெடும்; இதனை நீ நினைத்தல் வேண்டும்' என்கின்றான்.

நாண்மலர் - எப்போதும் செவ்வி கெடாது அன்று பூத்தது போன்றிருப்பது. நீத்தம், கடலைக் குறித்தது.

(பி - ம்.) 1. ஆதிப்புண்ணியர்.
2. ஏத்துவார்; புகழினை, அன்றளவு, இன்றுகாறுங்கூக்.
3. பின்னொரு கவலையானிலம்.
4. நீத்தனருடைகலம், நீர்த்தனருடைகலம், நீர்த்தருமுடைகலம், நீத்தருமுடைகலம், நீத்தமதுடைகலம்; ஆகுமே, ஆகுமோ. (10)

949. உந்தையு மிறந்தன னும்மு னீத்தனன்
வந்தது மன்னைதன் வரத்தின் மைந்தநீ
அந்தமில் பேரர சளித்தி யன்னது
சிந்தனை யெமக்கெனத் தெரிந்து கூறினான்.

மைந்த - பரத, உந்தையும் இறந்தனன் - உன் தந்தையாகிய சக்கர வர்த்தியும் (வாய்மை காத்து) இறந்து பட்டான், உம் முன் நீத்தனன் - உன் தமையனை இராமனும் (தந்தை சொல் காக்க) நாட்டை விட்டுப் போனான்; (எனவே நாடு காத்தற்குரியார் இலதாயிற்று); அந்தம் இல் பேரரசு - எல்லை இல்லாத பெருமையை உடைய இவ்வரசாட்சி, வந்ததும் (உனக்கு) வந்ததும், அன்னைதன் வரத்தின் - உன் தாய் வரத்தினால் பெற்றதாகும், (ஆதலால்) நீ அளித்தி - நீ (ஏற்றுக்) காப்பாயாக; எமக்கு சிந்தனை அன்னது - எம் கருத்து அதுவேயாகும், என - என்று, தெரிந்து கூறினான் - நன்கு ஆலோசித்துக் கூறி முடித்தான் வசிட்ட முனிவன்.

இதுகாறும் குறிப்பாகக் கூறிவந்த முனிவன், முடிவில் 'இவ் வரசினை ஏற்று ஆள்வது உன் கடமை; அதுவே எம்மெல்லோருடைய கருத்துமாகும்' என வெளிப்படக் கூறி முடித்தான். 'இவ்வரசு உன் தாய் வரத்தால் பெற்று உனக்களித்த தாகலின், முன்னவன் இருக்க நீ அரசேற்றாய் என்ற குற்றம் உன்னைச் சாராது; நீ குற்ற மற்றவன், இப்போது நீ அரசேற்றல் உனக்குரிய தருமமே யாகும்' என்று புலப்படுத்தினான்.

(பி - ம்.) 1. உந்தையோ; இறந்தனன னும்முனீக்தனன்.
2. வாக்கின்.
3. அளித்தலன்னது.
4. எமதெனத்; தெரித்துக் கூறினான்; முனிவன் செப்பவே. (11)

முனிவன் மொழிகளைக் கேட்ட பரதனது நிலை

950. தஞ்சமிவ் வுலகநீ தாங்கு வாயெனச்
செஞ்செவே முனிவரன் செப்பக் கேட்டலும்
நஞ்சினை நுகரென நடுங்கு வாரினும்
அஞ்சின னயர்ந்தன னருவிக் கண்ணினான்.

இ உலகம் தஞ்சம் - இந்நாடு (உன்) பாதுகாப்புக்கு உரியது, நீ தாங்குவாய் என - நீ பாதுகாப்பாயாக என்று, முனிவரன் -

வசிட்ட முனிவன், செஞ்செவே செப்ப கேட்டலும் - செவ்வையாக (வெளிப்படையாக) சொல்லக் கேட்ட அளவில் (பரதன்), நஞ்சினை நுகர் என - நீ நஞ்சை உண்க என்று (ஒருவர்) சொல்ல, (அது கேட்டு) நடுங்குவாரினும் - நடுக்கம் அடைபவரினும் பார்க்க, அஞ்சினன் - அஞ்சினவனாய், அருவி கண்ணினன் - நீர் அருவி போலச் சொரியும் கண்களோடு, அயர்ந்தனன் - சோர்வுற்றான்.

குறிப்பாகப் பலவற்றைக் கூறி வந்த வசிட்ட முனிவன், இறுதியில், 'இந்நாட்டு அரசை ஏற்றுத் தாங்குதல் உன் கடமை; நீ அதனைச் செய்க' என வெளிப்படக் கூறக் கேட்ட பரதன், தன் கருத்துக்கு மாறான அதனை ஏற்க மிக அஞ்சி வருந்தினான். அஃது அவனுக்கு நஞ்சுண்ணுமாறு வற்புறுத்துவது போன்று இருந்தது என அவன் தன்மையை விளக்கினார். பிறர்க்கு அமுதாகத் தோற்றுவது அவனுக்கு நஞ்சாயிற்று.

(பா - ம்.) 1. உலகுநீ, உலகைநீ.
2. கேட்டதும்.
3. அயர்த்தனன். (12)

951. நடுங்கின னாத்தடு மாறி நாட்டமும்
இடுங்கினன் மகளிரி னிரங்கு நெஞ்சினன்
ஒடுங்கிய வுயிரின னுணர்வு கைதரத்
தொடங்கின னரசவைக் குள்ளஞ் சொல்லுவான்.

மகளிரின் - பெண்களைப்போல, இரங்கும் நெஞ்சினன் - மிகவும் வருந்தும் மனமுடைய பரதன், நடுங்கினன் - நடுக்கமுற்றவனாய், நா தடுமாறி - (பேச இயலாதபடி) நாக்குத் தடுமாறி, நாட்டமும் இடுங்கினன் - கண்களும் இடுங்கப்பெற்று, ஒடுங்கிய உயிரினன் - (சிறிது போது) உயிர் ஒடுங்கினவன் (மூர்ச்சை யுற்றவன்) ஆனான்; (பின்பு) உணர்வு கைதர - தன்னுணர்வு தோன்ற, அரசு அவைக்கு—, உள்ளம் - தன் மனக்கருத்தை, சொல்லுவான் தொடங்கினன் - சொல்லத் தொடங்கினான்.

துயர மிகுதியால் பரதன் சோர்ந்து மூர்ச்சையுற்று, பின்பு தெளிந்து தன் கருத்தைச் சபையோருக்குச் சொல்லலானான். மகளிர் துயரம் சிறிதும் தாங்காத நெகிழ்ந்த மனம் உடையவராகலின், 'மகளிரின் இரங்கும் நெஞ்சினன்' என்றார். துயரமிகுதியால் தோன்றும் அழுகையினால் கண்கள் இடுங்குதல் இயல்பு. ஒடுங்கிய உயிரினன் - உயிர் ஒடுங்கினவன். கைதரல் - உதவி செய்தல், தோன்றுதல். உள்ளம் - உள்ளக் கருத்து.

நாட்டம் இடுங்கினன் : சினை, முதல் வினை கொண்டது.

(பி - ம்.) 2. நெஞ்சினன்.
3. ஒடுங்கின; உணர்வும்; கைத்தெழப்.
4. மு. பிடுங்கிய மொழியினன் அவைக்குப் பேசுவான். (13)

### பரதன் அவையோர்க்குத் தன் முடிவுரைத்தல்

952. மூன்றுல கினுக்கொரு முதல்வ னுய்முதல்
தோன்றின னிற்கயான் மகுடஞ் சூடுதல்
சான்றவ ருரைசெயத் தரும மாயதேல்
ஈன்றவள் செய்கையி லிழுக்குண் டாகுமோ.

மூன்று உலகினுக்கு - மூவுலகங்களுக்கும், ஒரு முதல்வன் ஆய் - ஒப்பற்ற தலைவனுகி, முதல் தோன்றினன் - முதலில் (மூத்தவனுகப்) பிறந்த இராமன், நிற்க - இருக்கவும், யான் மகுடம் சூடுதல்—, சான்றவர் உரை செய - பெரியோர்கள் சொல்லுதலால், தருமம் ஆயதேல் - தருமமாய்விடின், ஈன்றவள் செய்கையில் - (என்னைப்) பெற்ற கைகேயியின் செயலில், இழுக்கு உண்டு ஆகுமோ - குற்றம் உளதாகுமோ ?

பரதன் இவ்வாறு கூறியது, 'நீங்கள் சொல்வது தருமமாகாது; குற்றமே' என்ற குறிப்பை அடக்கியது. 'மூத்தவன் இருக்க நான் முடி சூடுதல் எவ்வகையினும் தகாதது; அன்னை செய்ததும் பெருங் குற்றம்' என்பதே பரதன் கருத்து. 'இராமன் இவ்வுலக மட்டுமின்றி மூவுலகங்களையும் தாங்கும் தகுதியும் ஆற்றலும் உடையவன்; மூத்தவனுகப் பிறந்ததே முடிசூடுதற்கு உரியதாயிற்று; நான் எவ்வகையிலும் அதற்குப் பொருந்தியவனல்லன்' என்கின்ருன்.

மூன்றுலகினுக்கு : முற்றும்மை தொக்கது.

(பி - ம்.) 1. மூன்றுலகினுக்குமோர்.
2. தோன்றினனிருக்க, தோன்றினனிற்ப; சூடெனச்.
3. உரை செய்த; தருமமாதலால், தருமமாயதே, தருமமாகியது.
4. செய்கையின், செய்கையும். (14)

953. அடைவருங் கொடுமையென் னன்னை செய்கையை
நடைவருந் தன்மைநீர் நன்றி தென்றிரேல்
இடைவரு காலமீண் டிரண்டு நீத்திது
கடைவருந் தீநெறிக் கலியி னுட்சியோ.

அடைவு அரும் கொடுமை - (எவரும்) அடைதலில்லாத கொடுமையையுடைய, என் அன்னை செய்கையை - என் தாயின் கொடுஞ்செயலை, நடை வரும் தன்மை நீர் - நன்னடையிற் செல்லும் தன்மையுடைய நீவிர், நன்று இது என்றிரேல் - இது நல்லதே என்று சொல்வீராயின், இது-இக்காலம், ஈண்டு இடைவரு காலம் இரண்டும் நீத்து - இப்போது இடையில் உள்ள (திரேதாயுகம், துவாபரயுகம் என்ற)

இரண்டும் தள்ளி, கடை வரும் - கடைசியில் உள்ள, தீ நெறி - தீயொழுக்கங்களுக்குக் காரணமான, கலியின் ஆட்சியோ - கலிபுருடனின் ஆட்சிக்கு உரிய கலிகாலமோ?

அவையோர் கருத்தாக வசிட்டமுனிவன் கூறியது தருமமன்று என்பதனையே மீண்டும் பிறவகையாற் கூறுகின்றான் பரதன். இராமாயணம் நிகழ்ந்தது திரேதாயுகம்; அதுவும், அடுத்ததாகிய துவாபரயுகமும் நன்னெறியுடையோர் அதருமத்திற் செல்லுதற்குரிய காலமல்ல. கடைசியில் உள்ள கலிகாலமே தருமந் தடுமாறி அதருமம் ஓங்குதற்கு உரியது; ஆதலால், 'இது கலியின் ஆட்சியோ?' என இகழ்ச்சியாகக் கூறினான்.

கலிகாலத்தின் தன்மையைப் பல நூல்களும் கூறும். "ஒலிகடலுலகந் தன்னி லூர்தரு குரங்கின் மாடே, கலியது காலம் வந்து கலந்ததோ" (கிட்கிந்தா. 309) என வாலி கூற்றாக வந்துள்ளதும் காண்க. எவரிடத்துங் காண முடியாத பெருங் கொடுமையுடையவள் என்கின்றான் தாயை. நடை - நல்லொழுக்கம்.

(பி-ம்.) 1. கொடுமையொன்றன்னை, அடைவரு தீமையென்னன்னை; செய்கையின், செய்வகை.
2. நடைவருந் தன்மையீர், நடைதரு தன்மையீர், நன்மையீர்; நன்றிதென்றநீர், நன்றிதென்றனிர், நன்றிதென்றலின், நன்றதென்றநீர், நன்றன்றென்றிலீர்.
3. நீத்தது.
4. கடைவருகாலத்தின், காலமாம், கடைவருங்காலத்தின், காலத்துக்; கலியனாட்சியே, கலியின் காட்சியே, காட்சியோ, மாட்சியோ, கலியினாட்சியோ. (15)

954. வேத்தவை யிருந்தநீர் விமல னுந்தியில்
பூத்தவன் முதலினர் புவியிற் றோன்றினார்
மூத்தவ னிருக்கவே முறைமை யானிலங்
காத்தவ ருளரெனிற் காட்டிக் காண்டிரால்.

வேந்து அவை இருந்த நீர் - அரசவையில் இருந்து பழகிய நீங்கள், விமலன் உந்தியில் பூத்தவன் முதலினர் - திருமாலின் உந்தியில் உதித்த பிரமனை முதலாகக் கொண்டவராய், புவியில் தோன்றினார் - இவ்வுலகில் தோன்றிய அரசர்களுள், மூத்தவன் இருக்கவே - (அரசுக்குரிய) மூத்த புதல்வன் இருக்கச் செய்தே, முறைமையால் - முறையாக, நிலம் காத்தவர் - நாட்டை ஆண்டவர்கள், உளர் எனில் - (எவரேனும்) இருப்பாரானால், காட்டிக்காண்டிர் - (அத்தகையவரை) காட்டுங்கள்.

ஆல் : அசை.

'நீங்கள் சக்கரவர்த்தியின் அரசவையில் இருந்து பழகியவர்கள்' என்பான், 'வேத்தவை இருந்த நீர்' என்றான். 'விமலன் உந்தியில்...

தோன்றினர்' என்றது மனுகுல மன்னரைச் சுட்டியது. காட்டிக் காண்டிர்: ஒரு சொல் நீர்மையது; காட்டுங்கள் என்றபடி. தொடர் மொழியாகவே கொண்டு, காட்டி - (எனக்கு) எடுத்துக்காட்டி, (அதன்பின்), காண்டிர் - (என்னை அரசனுக்கும் உங்கள் முயற்சியைச்) செய்யுங்கள் என உரைத்தலுமாம்.

பரதன் வசிட்டனை நேரே நிந்தித்ததாக வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 2. மூத்தவன் முதலிய, முதலவர், முதலினோர்; புவியுட்டோன்றினர், தோன்றினோர்.
3. முத்தவர் இருக்கவும்.
4. காட்டிக் காட்டிரால், காட்டுவீரென்றான், கண்ணிற் காண்டிரால். (16)

955. நன்னெறி யென்னினு நானிந் நானில
மன்னுயிர்ப் பொறைசுமந் திருந்து வாழ்கிலேன்
அன்னவன் றனைக்கொணர்ந் தலங்கன் மாமுடி
தொன்னெறி முறைமையிற் சூட்டல் காண்டிரால்.

நல் நெறி என்னினும் - மூத்தவன் இருக்க இளையவன் அரசாள்வது) நல்ல நெறியே என்று எவர் கூறினும், நான் —, இ நால் நிலம் - இவ்வுலகிலுள்ள, மன் உயிர் பொறை சுமந்து இருந்து - நிலைபெற்ற உயிர்களைக் காத்தலாகிய பாரத்தைச் சுமந்துகொண்டு (அரசனாக இருந்து), வாழ்கிலேன் - வாழமாட்டேன்; அன்னவன் தனை - அதற்குரிய அவ்விராமபிரானை, கொணர்ந்து - (மீள) அழைத்து வந்து, தொல் நெறி முறைமையின் - தொன்றுதொட்டு வந்த முறைப்படி, அலங்கல் மாமுடி சூட்டல் - மாலையையுடைய முடியை (அவனுக்கு நான்) சூட்டுதலை, காண்டிர் - காண்பீர்கள்.

ஆல்: அசை.

நான் அரசேற்று வாழேன் என்று தன் மனவுறுதியை இதனுல் தெளிவுறுத்தினன். மேலும் தன் முடிவான கொள்கையை அடுத்த கவியாற் கூறுகின்றான். நன்னெறி என்னினும் என்றது, அஃதன்று என்ற எதிர்மறை குறித்தது. நால் நிலம் - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு பாகுபாடுடைய பூமி.

(பி - ம்.) 1. நானிலத்து.
2. இன்னுயிர்ப்பொறை சுமந்திருக்க.
4. தொன்னெடு, சொன்னநன், சொன்னெறி; சூட்டக்காண்டிரால். (17)

956. அன்றெனி னவனொடு மரிய கானிடை
நின்றினி தருந்தவ நெறியி னூற்றுவென்
ஒன்றில தெனினென துயிரை நீக்குவென்
என்றன னென்றலு மிருந்த பேரவை.

அன்று எனின் - (இராமபிரானுக்கு முடிசூட்டல்) ஆகாததாயின், அவனொடும் - அவனுடனே, அரிய கான் இடை நின்று - (தங்குதற்கு) அரிய அக்காட்டிலேயே (நானும்) தங்கி, இனிது - இனிதாக, நெறியின் - முறைப்படி, அரு தவம் ஆற்றுவென் - அரிய தவத்தைச் செய்வேன்; ஒன்றிலது எனில் - (அதுவும்) கைகூடாதாயின், எனது உயிரை நீக்குவென் - (உடனே) என் உயிரைவிடுவேன் (இதுவே என் உறுதி), என்றனன் —; என்றலும் - (அவன்) அவ்வாறு கூறியவுடன், இருந்த பேர் அவை - அங்கே கூடியிருந்த பெரிய சபையோர்.

இது மேலே தொடர்ந்து, 958-ஆம் பாடலின் இறுதியில் வரும் 'வாழ்த்தினர்' என்பதனோடு முடியும். 'இராமபிரான் வந்து முடிசூட மறுத்தால், நானும் காட்டிலேயே தங்கித் தவம் மேற்கொள்வேன்; அவன் அதனையும் மறுத்து என்னை அரசேற்குமாறு வற்புறுத்தினால் அதன்பின் உயிரோடிரேன்' எனத் தன் மனவுறுதியை முடிவாகக் கூறி முடித்தான் பரதன்.

அவை என்றது ஆகுபெயராய் அவையிலுள்ளாரை உணர்த்திற்று.

(பி - ம்.) 2. *நின்றுநான், நின்றனன்; இருந்தவநெறியின், இருந்தவநெடிது; இயற்றுவன்.*
3. *ஒன்றினியுரைக்கிலென், உரைப்பிலென், ஒன்றினிதுரைப்பினென், ஒன்றினியுரைப்பதென், ஒன்றுநீருரைப்பினென்.*
4. *என்னலும், என்றபோது.* (18)

அவையினர் பரதனை வியத்தல்

957. ஆன்றபே ரரசனு மிருப்ப வையனும்
ஏன்றனன் மணிமுடி யேய்ந்த வேந்தனீ
வான்றொடர் திருவினை மறுத்தி மன்னிளந்
தோன்றல்கள் யாருளர் நின்னிற் றேன்றினர்.

ஆன்ற பேர் அரசனும் இருப்ப - குணங்களால் நிறைந்த சக்கரவர்த்தியும் இருக்கும்போதே, ஐயனும் - இராமபிரானும்கூட, மணி முடி ஏந்த ஏன்றனன் - மணிகள் பதித்த கிரீடம் தாங்க இயைந்தனன்; ஏந்தல்-மிக்க பெருமை உடையவனே, நீ—, வான் தொடர் திருவினை மறுத்தி - வானளவு உயர்ந்த அரசச் செல்வத்தை மறுக்கின்றாய்; மன் இளந் தோன்றல்கள் - அரச குமாரர்களுள், நின்னின் தோன்றினர் யார் உளர் - உன்னைப் போல் பிறந்தார் (இதுகாறும்) யார் இருக்கின்றனர்? (ஒருவரும் இல்லை).

சபையோர் பரதனைப் புகழ்ந்து உபசாரமாகக் கூறியது இது. 'தந்தை இங்கிருந்தபோதே இராமன் முடிசூட இயைந்தான்; நீயோ தாய்தந்தை இருவருமாக உனக்குத் தந்த அரசை இராமன் இங்கில்லாத போதும் மறுக்கின்றாய். உன்னைப்போலச் சிறந்த குணம் படைத்தோர் அரசகுலத்தில் இதுகாறும் தோன்றினரில்லை' என்கின்றனர். தந்தை

தான் இருக்கும்போதே மூத்த மகனுக்கு முடிசூட்டி, தான் தவமேற் கொள்ளல் மரபாதலின், தந்தை இருக்கும்போதே இராமன் முடிசூட இயைந்தமையைக் குறைபோல எடுத்துக் கூறியது பரதனை உயர்த்த வேண்டியே யாகும்.

(பி - ம்.) 1. அரசனுமிருக்க.
2. ஏன்றன னிருமிலம்; ஏந்தல் வேந்தேநீ, ஏந்தலேந்த நீ, ஏத்த வேந்தநீ, இகந்த வேந்தநீ, உகந்த வேந்தநீ, என்பதொக்கு நீ, எய்த வேந்தநீ. (19)

958. ஆழியை யுருட்டியு மறங்கள் போற்றியும்
வேள்வியை யியற்றியும் வளர்க்க வேண்டுமோ
ஏழினொ டேழெனு முலக மெஞ்சினும்
வாழிய நின்புக ழென்று வாழ்த்தினர்.

ஆழியை உருட்டியும் - (நீ அரசேற்று) ஆணைச் சக்கரத்தைச் செலுத்தியும், அறங்கள் போற்றியும் - தருமங்களைப் பாதுகாத்தும், வேள்வியை இயற்றியும்-யாகங்களைச்செய்தும், வளர்க்க வேண்டுமோ- (உன் புகழை) வளர்க்க வேண்டுமோ ? (வேண்டுவதில்லை); ஏழினொடு ஏழ் எனும் உலகம் எஞ்சினும் - கீழேழும் மேலேழும் என்று சொல்லப் படும் பதினான்கு உலகங்களும் அழிந்தாலும், நின் புகழ் - (இப்போது நீ பெற்றுள்ள) உன் உயர்ந்த புகழ், வாழிய என்று - என்றும் அழியாது வாழ்வதாக என்று, வாழ்த்தினர்—.

'நீ அரசையேற்று, உன்தந்தையைப்போலச் சிறப்பாக எல்லாம் செய்து பெறும் புகழினும், அரசை மறுத்து நீ பெற்ற புகழ் பெரிது; அஃது என்றும் வாழ்க' எனப் பரதனைச் சிறப்பித்தனர் அவையோர்.

956-இல் உள்ள 'இருந்த பேரவை' என்பது எழுவாய்; அது 'வாழ்த்தினர்' என்றதனோடு முடிந்தது. எஞ்சினும் என்ற உம்மை எதிர் மறையாக எஞ்சாமை குறித்தது. உலகங்களெல்லாம் உள்ள அளவும் அவற்றிலெல்லாம் உன்புகழ் சிறந்து விளங்குக என்பது கருத்து.

(பி - ம்.) 1. உருட்டியு மவனி தாங்கியும்,
2. விளங்க வேண்டுமோ.
4. வாழியாய்; என்றும் வாழ்த்தினர். (20)

பரதன் சத்துருக்கனுக்கு இட்ட கட்டளை

959. குரிசிலுந் தம்பியைக் கூவிக் கொண்டலின்
முரசறைந் திந்நகர் முறைமை வேந்தனைத்
தருதுமீண் டென்பது சாற்றித் தானையை
விரைவினி லெழுகென விளம்பு வாயென்றான்.

குரிசிலும் - பரதனும், (உடனே), தம்பியை கூவி - சத்துருக்கனை அழைத்து, இ நகர் - இந்த நகரத்திலே, முறைமை வேந்தனை - முறைப்படி அரசனுதற்குரிய இராமபிரானை, ஈண்டு தருதும் என்பது - இங்கே அழைத்து வருவோம் என்பதை, கொண்டலின் முரசு அறைந்து சாற்றி - மேகமுழக்கம்போல முரசடித்துச் சொல்லி, தானையை - சேனைகளையும், விரைவினில் எழுக என விளம்புவாய் - விரைவில் (காடு நோக்கிச் செல்ல) எழுமாறு கூறுவாயாக, என்றான் - என்று கூறினான்.

பரதன் தன் கருத்தின்படி இராமபிரானை அழைத்து வருதலில் காலந்தாழ்ப்பின், வேறு புதிய இடையூறேதேனும் உளதாகுமோ வென்ற அச்சத்தால், சிறிதும் தாழ்த்தலின்றி அதற்குரியவற்றைச் செய்விக்கின்றான். இராமபிரான் இங்கு இல்லாமையால், பரதனே அரசனாகப்போகிறான் என்று எதிர்பார்த்திருக்கும் மக்களுக்கு, இராமபிரானை அழைத்து வருதல் என்ற செய்தியில் ஐயுறவு தோன்றாதபடி சத்துருக்கனே அதனை நகருக்குச் சொல்லவேண்டுமென்றான்; தான் அரசேற்கப் போவதில்லை என்பது தெளிவுபட, 'முறைமை வேந்தனைத் தருதும் என்பது சாற்றுக' என்றான்.

தசரதனுக்குரிய இறுதிக் கடன்கள் முடிந்த மறுநாள், முடிசூட்டு தற்குரியோர் பரதனிடம் வந்து அவனை முடிசூட்டுக்கொள்ளும்படி கூற, அவன் அதனை மறுத்துத் தான் வனம் சென்று இராமனை அழைத்து வருதற்குரிய ஏற்பாடுகளைச் செய்விக்குமாறு கூற, அதன்படி, செல்லுதற்குரிய வழியெல்லாம் அவ்வத் தொழில் வல்லாரைக் கொண்டு செப்பனிட்டு அலங்கரித்து அமைக்கப்பெற்றன என்பதை விரிவாக வான்மீகம் கூறும். சுமந்திரனால் சேனையைச் சித்தஞ் செய்வித்ததாகவும் அது கூறுகின்றது.

(பி - ம்.) 1. தம்பியை நோக்கி. (21)

### நகரத்தாரின் மகிழ்ச்சி

960. நல்லவ னுரைசெய நம்பி கூறலும்
அல்லலி னழுந்திய வளவின் மாநகர்
ஒல்லென விரைத்ததா லுயிரில் யாக்கையச்
சொல்லெனு மமுதினாற் றுளிர்த்த தென்னவே.

நல்லவன் உரைசெய - நல்லவனான பரதன் (சத்துருக்கனிடம்) சொல்ல, நம்பி - சத்துருக்கன், கூறலும் - (அதனை நகரத்தாருக்குத் தெரியச்) சொன்ன அளவில், அல்லலின் அழுந்திய - (இராமபிரானைப் பிரிந்ததாகிய) துன்பத்தில் மூழ்கியிருந்த, அளவு இல் மா நகர் - எல்லையற்ற அப்பெரிய நகர முழுதும், உயிர் இல் யாக்கை - உயிர் நீங்கிய உடம்புகள், அ சொல் எனும் அமுதினால் - (சத்துருக்கன் கூறிய)

அந்தச் சொற்களாகிய அமுதத்துளிகளால், துளிர்த்தது என்ன - துளிர்த்து (உயிர் பெற்று) எழுந்தாற்போல, ஒல் என இரைத்தது- ஆரவாரம் எழுந்தது.

பரதன் இராமபிரானை அழைத்துவரச் செல்லும் செய்தியை நகரத்தாருக்கும் சேனைகட்கும் முரசறைந்து தெரிவித்தல் பின்னே கூறப்படுதலின், இப்போது சத்துருக்கன் கூறியது முரசறையும் வள்ளுவருக்கோ அல்லது நகரத்தாருள் முதன்மையுடையார்க்கோ என்னலாம்; அது விரைவில் எங்கும் பரவுதல் இயல்பே.

நல்லவன்-குணங்களாலும் செயலாலும் நல்லவன்; திரிகரணங்களாலும் நல்லவன். நகர், ஆகு பெயராய் நகரமக்களைக் குறித்தது. கோசல நாடு முழுதும் 'ஆவி நீத்த வுடலென வாயது' (822) என முன்னர்க் கூறினமையின், நகரமும் அவ்வாறுகியிருந்து இப்போது இந்நற் செய்தியாகிய அமுதத் துளிகளால் மீண்டும் உயிர்பெற்றுத் தளிர்த் தது என்பதுபடக் கூறுகின்றார். ஆரவாரம் எழுந்தது மகிழ்ச்சியால். ஒல் : ஒலிக்குறிப்பு. ஆல், ஏ : அசைகள்.

(பி - ம்.) 2. அல்லலில் அழுங்கிய, அழுங்கின; அன்பின் மாநகர்; அளவின் மாக்களும், மாக்களுக்கு.
3. ஒல்லென ஒலித்ததால், ஒலித்ததவ்.
4. துளித்தது, தளிர்த்தது. (22)

961. அவித்தவைம் புலத்தவ ராதி யாவுள
புவித்தலை யுயிரெலா மிராமன் பொன்முடி
கவிக்குமென் றுரைக்கவே களித்த லாலது
செவிப்புல நுகர்வதோர் தெய்வத் தேன்கொலாம்.

இராமன் பொன்முடி கவிக்கும் - இராமபிரான் (மீண்டு வந்து) பொன்னாலாகிய மகுடம் சூடுவான், என்று உரைக்கவே - என்று சொன்னவளவிலே, அவித்த ஐம்புலத்தவர் ஆதியாக - ஐம்புலன்களை யும் அடக்கிய ஞானியர் முதலாக, புவித்தலை உள உயிர் எலாம்- பூமியிலுள்ள எல்லா உயிர்களும், களித்தலால்—, அது - அச்சொல், செவி புலம் நுகர்வது ஓர்-செவிப்புலனால் நுகர்தற்குரியதொரு, தெய்வம் தேன் கொல் - தெய்வத்தன்மையுள்ள தேன்போலும்!

ஆம்: அசை.

இராமபிரான் மீண்டுவந்து முடிசூடுவான் என்பதைக் கேட்ட வுடனே உயர்ந்தோரும் தாழ்ந்தோருமாகிய எல்லோரும் களிப்பெய் தினர் என்றால், அதனை என்னவென்பது என்று வியக்கின்றார் கம்பர். நாவினால் சுவைத்துப் பருகிக் களிக்கும் தேனினும் வேறாகக் காதினாற் சுவைத்துப் பருகத்தக்கதொரு புதிய தெய்விகமான தேன்போலும் அது என்கின்றார். தேனின் செயல் களிப்பிப்பது. களிப்பு- மகிழ்ச்சி மிகுதி. இன்ப துன்பங்களை ஒப்ப மதிக்கும் ஞானியரே களித்தனர்

எனின், ஏனையோர் களித்தமை சொல்லவேண்டா; இராமன் வனம் புகும் செய்தி கேட்டபோது, "பருவரல் இன்பமென் றிரண்டும், ஒக்க நோக்கிய யோகரும் அருந்துய ருழந்தார்" (509) என்ருர். இப்போது அவர்கள் மீண்டும் களிப்பெய்துகின்ருர். அவித்த ஐம்புலத்தவர் - ஐம்புலம் அவித்தவர்; வடமொழி முடிபு.

(பி - ம்.) 1. ஆதியாயுள.
3. உணர்த்தவே, உலகெலாம்; களித்ததாலது.
4. செவிப்புலன், செவித்தலன்; கவர்வதோர். (23)

962. படுமுர சறைந்தனர் பரதன் றம்முனைக்
கொடிநகர்த் தருமவற் கொணரச் சேனையும்
முடுகுக வென்றசொன் மூரி மாநகர்
உடுபதி வேலையி னுதயம் போன்றதே.

பரதன் தம்முனை கொடி நகர் தரும் - பரதன் தன் தமையனை இராமபிரானைக் கொடிகளாடும் அயோத்தி நகருக்கு அழைத்து வருவான்; அவன் கொணர - அவ்வாறு இராமபிரானை அழைத்து வருதற்கு, சேனையும் முடுகுக-சேனையும் விரைந்தெழுக, என்ற சொல்- என்ற செய்தியை, படுமுரசு அறைந்தனர் - ஒலிக்கும் முரசறைந்து (வள்ளுவர்) நகருக்குத் தெரிவித்தனர்; (அதுகேட்டவளவில்) மூரி மா நகர் – பெருமைமிக்க அயோத்தி நகரம், வேலையின் உடுபதி உதயம் போன்றது - கடலில் சந்திரன் உதயமானுற் போன்ருகியது.

ஏ: ஈற்றசை.

சேனை எழுதற்பொருட்டும், நகரமக்கள் அனைவரும் அறிதற் பொருட்டும் முறைப்படி முரசறைந்தனர்; அது கேட்டு நகரத்தார் கிளர்ந்தெழுந்தனர். சந்திரோதயத்தால் கடல் பொங்கிக் கொந்தளிக் கும்; அதுபோல நகரமும் கிளர்ந்தது என உவமை காண்க. தரும்: செய்யுமென் முற்று. சொல்: சொற்களாகிய செய்தி. அறைந்தனர் என்றதற்குரிய எழுவாய் வருவித்து உரைக்கப்பெற்றது.

(பி - ம்.) 1. அறைதலும்.
2. சேனையை.
3. முடுகுகவென்றலும், முடுகவென்றமைந்த சொல், முடுகவென் றறைந்தசொல்; மாநகர்க்கு, மாணகர், மாணகர்க்கு.
4. போன்றவே, போர்த்ததே. (24)

### சேனையின் எழுச்சி

963. எழுந்தது பெரும்படை யேழு வேலையின்
மொழிந்தபே ரூழியின் முழங்கி முந்தெழ
அழிந்தது கேகயன் மடந்தை யாசைபோய்க்
கழிந்தது துயர்நெடுங் காத றூண்டவே.

பெருபடை - பெரிய படைத் தொகுதியானது, (முரசறைந்த கட்டளையால்) மொழிந்த பேர் ஊழியின் - (நூல்கள்) சொல்லிய பேரு ழிக் காலத்தில், ஏழு வேலையின் - ஏழுகடல்களும் பொங்கி எழுதல் போல, முழங்கி எழுந்தது - ஆரவாரித்து எழுந்தது; முந்து எழ - அவ்வாறு படை முந்திக்கொண்டு எழாநிற்க, கேகயன் மடந்தை ஆசை—, அழிந்தது—; நெடும் காதல் தூண்ட - இராமபிரானிடம் உள்ள காதல் தம்மை எழும்படி தூண்ட, துயர் - மக்கள் கொண் டிருந்த துயரம், போய் கழிந்தது- அவர்களிடமிருந்து சென்று நீங்கியது. ஏ: ஈற்றசை.

முரசறைந்தது கேட்டுச் சேனை எழ, அது கண்டு பரதன் நாடாள வேண்டும் என்ற கைகேயியின் ஆசை அழிந்தது; இராமன் வந்து முடிசூடுவான் என்ற எண்ணத்தால் மக்களின் துயரம் நீங்கியது என்க.

(பி - ம்.) 2. முழங்கின சங்கினம், முழங்கி மூழ்த்தெழ, முற்றெழ, ஆர்த்தெழ, சூழ்ந்தெழ.
4. துயர்பெருங், துயரமும்.

(25)

964. பண்ணின புரவிதேர் பகடு பண்டியும்
மண்ணினை மறைத்தன மலிந்த மாக்கொடி
விண்ணினை மறைத்தன விரிந்த மாத்துகள்
கண்ணினை மறைத்தது கமலத் தோனையே.

பண்ணின - அலங்கரிக்கப்பெற்ற, புரவி - குதிரைகளும், தேர் - தேர்களும், பகடு - யானைகளும், பண்டியும் - வண்டிகளும், மண்ணினை மறைத்தன - தரையிடம் முழுவதும் மறைத்துவிட்டன; மலிந்த மா கொடி - நிறைந்த பெரிய துகிற் கொடிகள், விண்ணினை மறைத்தன - ஆகாய முழுதும் மறைத்துவிட்டன; விரிந்த மா துகள் - (படைகளால் எழுந்து) பரந்த பெரும் புழுதி, கமலத்தோனை கண்ணினை மறைத்தது - பிரமதேவனுடைய கண்களை மறைத்து விட்டது.

படைகளின் மிகுதி புலப்படுமாறு உயர்வு நவிற்சியாகக் கூறுகின்றார். புழுதி, படைகள் புடைபெயர்தலால் எழுவது. மாத்துகள் - குதிரைகளால் உண்டான புழுதியெனலுமாம்.

(பி - ம்.) 1. பண்ணியல்; புரவித்தேர்ப்; பகடும் பண்டியும், புரவி பண்டியும், பகடு பாண்டிலும்.
2. விண்ணினை; வளர்ந்த, விரிந்த, வகிர்ந்த.
3. மண்ணினை; மறைத்தது; விரிந்ததூளி போய்க், விரிந்த மாக்கள் சூழ், மடுத்த மாத்துகள், மலிந்த மாத்துகள், மிகுந்த மாத்துகள், மேவு மாத்துகள், வளர்ந்த மாத்துகள்.
4. கண்ணிணை.

(26)

965 ஈசனிவ் வுலகினை யழிக்கு நாளெழும்
ஓசையி னிமிர்ந்துள தொல்லென் பேரொலி
காசையிற் கரியவற் காண மூண்டெழும்
ஆசையி னிமிர்ந்ததவ் வனிக ராசியே.

ஈசன் - உருத்திர மூர்த்தி, இ உலகினை அழிக்கும் நாள் - இவ்வுல கங்களை அழிக்கும் மகாசங்கார காலத்தில், எழும் ஓசையின் - எழுகின்ற பேரொலியிலும், ஒல் என் பேர் ஒலி - (படையெழுச்சியில் உண்டான) ஒல்லென்ற பேரோசை, நிமிர்ந்துளது - மிகுவதாயிற்று; காசையின் கரியவன் காண - காயாம்பூப் போலுங் கருநிறமுடைய இராமபிரானைக் காணுதற்கு, மூண்டு எழும் - (ஒவ்வொருவரிடமும்) மேலிட்டெழுகின்ற, ஆசையின் - பேராவலினும், அனிகம் ராசி நிமிர்ந்தது - அச்சேனையின் திரள் மிக்கிருந்தது.

ஏ: ஈற்றசை.

படைகள் தொகுமிடத்து ஆரவாரம் மிகுதல் இயல்பு; அவ்வார வாரத்துக்கு, மகாசங்கார காலத்தில் அண்டகடாகங்கள் வெடித்தலால் உண்டாகும் பயங்கரமான பேரோசையை உவமித்தார். சேனையிலுள் ளார்க்கும் மாநில மக்களுக்கும் ஒருங்கே இராமபிரானைக் காணும் ஆவல் மேலிடுதலால், அம்மிகுதியைச் சேனையின் மிகுதிக்கு ஒப்பிட் டார். "அம்மன்னர் சேனைதம தாசைபோ லாயினவால்" (பால.763) என முன்னும் ஆசையை உவமை கூறியது காண்க. மரத்தைக் குறிக்கும் 'காயா' என்பது 'காசா' எனவும், 'காசை' எனவும் வழங்குதலுண்டு; இங்கே 'காசை' என்றது ஆகுபெயராய் அதன் பூவை உணர்த்தியது. "காசை மலர்போலு மிடற்றூர்" (தே), "காசைக் கருங்குழலார்" (பதினோராந். ஆளு. திரு. 130), "மென்காசை மாமல ரன்னமெய் யாற்கும் விரிஞ்சனுக்கும்" (தென்காசிச் சாசனப் பாடல்) என்பவற் றுட் காசையென்ற வழக்குக் காண்க.

(பி - ம்.) 1. உலகளித்தழிக்கும், உலகிழைத்தழிக்கும், ஒழிக்கும், உலகெலா மொழிக்கும்; நாள்மழை.
2. நிமிர்ந்துளவொல்லென்.
4. நிமிர்ந்தவிவ், நிமிர்ந்தன. (27)

களிறுகள் பிடிகளுடன் செல்லுதல்

966. படியொடு திருநகர் துறந்து பன்மரம்
செடியொடு தொடர்வன நோக்கிச் சீதையாம்
கொடியொடு நடந்தவக் கொண்ட லாமெனப்
பிடியொடு நடந்தன பெருங்கை வேழமே.

படியொடு – (கோசல) நாட்டுடனே, திருநகர் - செல்வமிக்க அயோத்தி நகரையும், துறந்து - கைவிட்டு, செடியொடு-செடிகளுடன்,

பல மரம் தொடர் - பல மரங்கள் நெருங்கியுள்ள, வனம் நோக்கி - காட்டை நோக்கி, சீதை ஆம் கொடியொடும் நடந்த - சீதையாகிற கொடியுடன் நடந்து சென்ற, அ கொண்டல் என - அம்மேக வண்ணனை இராமனைப்போல, பெரு கை வேழம்-பெரிய துதிக்கையையுடைய ஆண் யானைகள், பிடியொடும் நடந்தன - பெண்யானைகளுடன் சென்றன.

இராமபிரான் களிறும், பிராட்டி பிடியுமாகக் கொள்க. "நாகந் தனி வருகின்றது பிடியோடென நடவா" (623) என முன்னர்க் கூறியுள்ளது இங்கே நினைக்கத் தகும். வனத்திலும் ஆண்களைப்போல மரங்களும், பெண்களைப்போலச் செடிகளும் கலந்துள்ளன என்ற குறிப்பும் அங்கே கொடியொன்றும் போய்ச் சேர்தலால் மரம், செடி, கொடி என இயைக்குமாறு அமைந்துள்ள அழகும் நோக்குக. படி - பூமி; நாட்டைக் குறித்தது.

கொண்டல்: ஆகுபெயர்.

(பி - ம்.) 1. பன்மலர், துறந்த பன்மரம்.
2. செடியொடு கொடுவனம்.
3. கடந்தவக், தொடர்ந்தவக்,
4. நடந்தவப், நடந்ததப், கடந்தன. (28)

பெண்கள் பிடிகளின்மேல் செல்லுதல்

967. சேற்றிள மரைமலர் சிதைந்த வாமெனக்
காற்றளம் பொலிதரு கன்னி மாரொடும்
ஏற்றிளம் பிடிக்குல மிகலி யின்னடை
தோற்றிள மகளிரைச் சுமப்ப போன்றவே.

சேறு இளம் மரை மலர் - சேற்றில் தோன்றும் தாமரையின் இளம் பூக்கள், சிதைந்த ஆம் என - (பாதங்களுக்குத் தோற்றுக்) கெட்டன என்னும்படி, கால் தளம் பொலிதரு - பாதங்கள் (அழகோடு) விளங்குகின்ற, கன்னிமாரொடும் - இள மகளிரோடு, இளம் பிடி குலம் - இளம் பெண் யானைகள், இகலி - (நடைக்கு) மாறுபட்டு, ஏற்று - (அவர்களோடு) போரேற்று, இன் நடை தோற்று - (அவர்களின்) அழகிய நடைக்குத் தோற்று, இளம் மகளிரை - அவ்விளம் பெண்களை, சுமப்ப போன்ற - சுமந்து செல்வன போன்றன.

ஏ: ஈற்றசை.

பெண்கள் பெண் யானைகளின் மேலேறிச் செல்லுதலை, அந்த யானைகள் அப்பெண்களோடு நடையழகு குறித்து மாறுகொண்டு தோற்று, அத்தோல்விக்கு அறிகுறியாக அவர்களைச் சுமந்து செல்வது போன்று இருந்தது என ஏதுத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார். தோற்றவர் வென்றவரைச் சுமப்பது ஒரு வழக்கு; திருவால. திருவிளை.

57: 12, 32 பார்க்க. பெண்களின் அடிக்கும் நடைக்கும் உவமையாகக் கூறப்படுவன முறையே அவ்விரண்டுக்கும் தோற்றன என்கின்றார். மரை: முதற்குறை.

(பி-ம்.) 1. சிறந்தவாமெனக், சிறந்ததாமெனக், சிவந்ததாமெனக்.
2. காற்றலம்.
3. இகலிமின்னிடை, இகலிமென்னடை.
4. தோற்றன மகளிரைச்; போன்றன. (29)

கொடிகளின் வருணனை

968. வேதனை வெயிற்கதிர் தணிக்க மென்மழைச்
சீதநீர் கொடுநெடுங் கொடியுஞ் சென்றன
கோதைவெஞ் சிலையவன் கோலங் காண்கிலா
மாதரி னுடங்குவ வரம்பில் கோடியே.

வேதனை - துன்பம் தருகிற, வெயில் கதிர் தணிக்க - சூரிய கிரணங்களின் வெப்பத்தைத் தணிக்குமாறு, மழை மென் சீதம் நீர்கொடு - மேகங்களின் மென்மையான குளிர்ந்த நீரைக் கொண்டு, வரம்பு இல் கோடி - அளவற்ற கோடிக்கணக்கான, நெடு கொடியும் - நீண்டுயர்ந்த துகிற் கொடிகளும், கோதை வெம் சிலையவன்-மாலை சூட்டிய கொடிய வில்லேந்திய இராமபிரானது, கோலம் - அழகிய திருமேனியை, காண்கிலா - காணவியலாது சோர்கின்ற, மாதரின் - பெண்களைப்போல, நுடங்குவ சென்றன - துவள்வனவாய்ச் சென்றன.

ஏ: ஈற்றசை.

உயரத் தூக்கிப் பிடிக்கப்பெற்ற அளவிறந்த துகிற் கொடிகள், மேகங்களைத் தொட்டு அவற்றின் குளிர்ந்த நீரை இழுத்துக்கொண்டு, கீழே செல்வோருக்கு வெயிலின் வெப்பந் தணியுமாறு அந்நீரைச் சிதறிக்கொண்டு துவண்டசைந்து சென்றன. 'சிலையவன் கோலங் காண்கிலா மாதரின் நுடங்குவ' என உவமை கூறியதனால், அம்மாதர் வருந்தித் துவண்டு கண்ணீர் சிந்திச் செல்வதுபோலக் கொடிகளும் துவண்டு நீர் சிந்தின என்றவாறு. கொடியும் என்றதில், உம்மை இறந்தது தழுவியது. கோடி – பேரெண்.

(பி-ம்.) 1. தணிப்ப; மேலதாய்ச்.
2. சீதநீரொடு, சீதளங்கொடு; கொண்டல் சென்றெனக். (30)

பல மன்னர்கள் வெண்குடை நிழற்ற யானைகளின்மேல் செல்லுதல்

969. வெண்மதி மீச்செல மேக மூர்ந்தென
அண்ணல்வெங் கதிரவ னளவில் மூர்த்தியால்
மண்ணிடை யிழிந்தொரு வழிக்கொண் டாலென
எண்ணரு மன்னவர் களிற்றி னேகினர்.

அண்ணல் - பெருமையிற் சிறந்த, வெம் கதிரவன் - வெம்மையான கிரணங்களையுடைய சூரியன், அளவு இல் மூர்த்தி ஆய் - எண்ணிறந்த வடிவங்கொண்டவனாய், மண் இடை இழிந்து - பூமியில் இறங்கி, மேகம் ஊர்ந்தென - மேகங்களை ஊர்ந்து, வெண்மதி மீ செல - வெள்ளிய சந்திரன் (பல குடைகளின் வடிவங்கொண்டு) தனக்கு மேலே செல்ல, ஒரு வழி கொண்டால் என - ஒரு வழியாகப் பயணஞ் செய்தாற்போல, எண்ண அரு மன்னவர் - எண்ணுதற்கரிய (பெருந் தொகையினரான) அரசர்கள், களிற்றின் ஏகினர் - ஆண்யானைகளின் மேல் (வெண்குடை நிழற்றப்) போனார்கள்.

அரசர் பலர், மேலே வெண்குடை நிழற்றக் களிறூர்ந்து சென்ற காட்சியை, இல்பொருளுவமை கூறிச் சிறப்பிக்கின்றார். அரசர் ஒவ்வொருவரும் சூரியனைப் போன்ற சிறப்புடையவர் என்பார், சூரியன் பல வடிவு கொண்டு வந்தாற்போல என்றார். அரசர்கள், சூரியன்; யானைகள், மேகம்; குடைகள், பல வடிவுகொண்ட சந்திரன். சூரியன் பல அரசர்களாகி வந்ததனால், சந்திரனும் பல குடைகளாகி வந்து அவர்களுக்கு நிழல் செய்தான் என்றவாறு.

ஊர்ந்தென : செய்தென என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

(பி - ம்.) 1. மேகமூர்ந்தன, மேகமூர்ந்திடு, வேதமூர்ந்தென.
3. வழிக்கொண்டானென, வழிச்செல்வானென. (31)

### நாற்படைகளின் செலவு

970. தேர்மிசைச் சென்றதோர் பரவை செம்முகக்
கார்மிசைச் சென்றதோ ருவரி கார்க்கடல்
ஏர்முகப் பரிமிசை யேகிற் றெங்கணும்
பார்மிசைச் சென்றது பதாதி வேலையே.

ஓர் பரவை - ஒரு கடல், தேர்மிசை சென்றது - தேரின் மேலேறிச் சென்றது; ஓர் உவரி - மற்றொரு கடல், செம்முகம் கார்மிசை சென்றது - செம்புகர் அமைந்த முகங்களையுடைய மேகம் போன்ற யானைகளின் மேலேறிச் சென்றது; கார் கடல் - (மற்றொரு) கருங்கடல், ஏர்முகம் - அழகான முகங்களையுடைய, பரிமிசை ஏகிற்று - குதிரைகளின் மேலேறிப் போயிற்று; பதாதி வேலை - காலாட்கடலொன்று, பார்மிசை - தரையின்மேல், எங்கணும் சென்றது - எங்கும் (பரந்து) சென்றது.

ஏ: ஈற்றசை.

தேர், யானை, குதிரை, காலாள் என்ற நால்வகைப் படைகளையும் தனித்தனி ஒவ்வொரு கடலாக உருவகித்து, அவை சென்ற வகையைச் சிறப்பிக்கின்றார். பரவை, உவரி, கடல், வேலை என்பன ஒரு பொருட் பல சொல்: கார்; கடலுக்கு இயற்கை விசேடணம்.

(பி - ம்.) 1. ஓர்சிந்து.
2. கார்மிசைக் கழிந்ததோர், கலியொர் உவரியேழ் கடல், உவரிக் கார்கடல்.
3. ஏர்மிசையிவுளிமேல்; ஏகிற்றென்பரால்.
4. சென்றதோர்; வெள்ளமே; மு. பார்மிசைப் படர்ந்தது பதாதிப் பௌவமே. (32)

### வாத்தியங்களின் வருணனை

971. தாரையுஞ் சங்கமுந் தாளங் கொம்பொடு
வார்விசி பம்பையுந் துடியு மற்றவும்
பேரியு மியம்பல சென்ற பேதைமைப்
பூரியர் குழாத்திடை யறிஞர் போலவே.

தாரையும் - தாரைகளும், சங்கமும் - சங்குகளும், தாளம் - கஞ்ச தாளங்களும், கொம்பொடு - ஊது கொம்புகளும், வார் விசி - வாரினால் இறுக்கப்பட்ட, பம்பையும் - பம்பைகளும், துடியும் - துடிகளும், மற்றவும் - (இவைபோன்ற) பிற தோற்கருவிகளும், பேரியும் - பேரிகை களும், பேதைமை பூரியர் குழாத்திடை - அறிவில்லாத கீழ்மக்கள் கூட்டத்தின் நடுவே, அறிஞர் போல - சிறந்த அறிவுடையோர் (பேசாது செல்லுதல்) போல, இயம்பல சென்ற - ஒலி செய்யாது சென்றன.

ஏ: ஈற்றசை.

தாரை, சங்கு, கொம்பு - ஊது கருவிகள்; இரண்டாம் அடியுட் கூறப்பெற்றவை தோற் கருவிகளாகலின் 'வார்விசி' என்ற தனைத் தனித்தனி கூட்டுக. துடி - உடுக்கை. வாச்சியங்கள் ஒலித்தல் மகிழ்ச்சிக்கு அறிகுறி; இப்போது அஃதின்மையின் அவை வாளா சென்றன. இராமபிரானைத் திருப்பி அழைத்து வரும்போது அரசனுக் குரிய எல்லாச் சிறப்புக்களுடனும் வருதற்பொருட்டுப் படை முதலிய எல்லாம் இப்போது சென்றனவெனக் கொள்க. பூரியரிடையே அறிஞர் பேசுதல் பெருமை தராது; அதுபோலத் துயரச் குழ்நிலையில் மங்கல வாச்சியங்கள் ஒலித்தல் பொருந்தாது. பூரியரிடை அறிஞர் ; "செல்லிடத் தல்லதொன் றுரைத்தல் செய்கலா, நல்லறி வாளரின்" (கிட்கிந்தா : 546); "புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவை யுள், நன்கு செலச்சொல்லு வார்", "அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்தர், அல்லார்முற் கோட்டி கொளல்" (குறள் : 719, 720). கருவிகள் ஒலியாமையைப் பின்னும் வேறொருவகையாற் கூறுவர்; 987-பார்க்க.

(பி - ம்.) 1. தாளத்திட்டமும், தாளவீட்டமும், காளங்கொம்புகள், கொம்புந் தாளமும்.
2. வார்மிசைப், வார்விசைப், வாரிசைப், வாருற.
4. வறிஞர்போலவே, அறிஞர்போன்றவே. (33)

### மாதர் வழியே செல்லுதல்

972. தாவரு நாண்முத லணிய லாற்றகை
மேவரு கலன்களை வெறுத்த மேனியர்
தேவரு மருள்கொளத் தெரியுங் காட்சியர்
பூவுதிர் கொம்பென மகளிர் போயினர்.

தேவரும் மருள்கொள - தேவர்களும் (தம்மைக் கண்டு இவர்கள் தெய்வ மாதரோ என) மயங்குமாறு, தெரியும் - விளங்குகின்ற, காட்சியர் - இயற்கையழகுடையவரான, மகளிர் - பெண்கள், தா அரு நாண் - குற்றமற்ற மங்கல நாணாகிய, முதல் அணி அல்லால் - முதன்மையான அணியையன்றி, தகை மேவரு கலன்களை - செயற்கையழகு தரும் (பிற) அணிகலன்களை, வெறுத்த மேனியர் - (பூணாது) வெறுத்தொதுக்கிய உடம்போடு, பூ உதிர் கொம்பு என - பூக்கள் உதிரப்பெற்ற பூங்கொம்புகளைப்போல, போயினர் - போனார்கள்.

மங்கல மகளிர், பிற அணிகலன்களை அணியக் காரணமாக, இன்றியமையாததாக இருப்பது மங்கல நாணே யாகலின், 'நாண் முதலணி' என்றார். அதனை அவர்கள் அகற்றல் ஒல்லாது; எனவே, அஃதொன்று தவிரப் பிற அணிகளுள் எதனையும் அவர்கள் பூணாராயினர். காரணம் வெளிப்படை. மங்கல நாணின் பெருமை : பால. 1200; சுந்தர. 1523 - பார்க்க. பூவுதிர்கொம்பென : "பூவுதிர்த்ததோர் கொம்பெனப் புவிமிசைப் புரண்டாள்" (184). காட்சி - இயற்கையழகு; தகை - செயற்கையழகு,

(பி - ம்.) 1. நாண்முதறணியலால், நாண்முதற்றணியலால், நாண்முழுதணியலால், நாண்மலர்க்கைகளால்; மு. தரவருதாளமுந் தணியலாற்றசெம், தாவருமணியினுற்றகைத்த பொன்னினுன்.
2. கலங்களை.
3. மருள்செயத்தெரிந்த.

(34)

### குடைகளின் நிலை

973. அதிர்கடல் வையக மனைத்துங் காத்தவன்
விதிவருந் தனிக்குடை மீதி லாப்படை
பொதிவரு கவிகைமீன் பூத்த வாயினும்
கதிர்மதி நீங்கிய கங்குல் போன்றதே.

அதிர் கடல் - ஒலிக்கும் கடல் சூழ்ந்த, வையகம் அனைத்தும் காத்தவன் - உலக முழுதுங் காத்த சக்கரவர்த்தியின், விதி வரும் தனி குடை - முறைப்படி வருதற்குரிய ஒப்பற்ற பெருங்குடை, மீது இலா படை - (எல்லாவற்றிற்கும்) மேலாகக் கவிக்கப் பெறாத அப் படைத் தொகுதியானது, பொதி வரு கவிகை மீன் பூத்த ஆயினும் - நெருங்கி வருகின்ற (வேறு பல) குடைகளாகிற விண்மீன்கள்

(அங்கே) தோன்றியிருப்பினும், கதிர்மதி நீங்கிய கங்குல் போன்றது - ஒளிமிக்க சந்திரனில்லாத இரவுபோலப் பொலிவற்றிருந்தது.

'பொதிவரு கவிகை மீன்' என்றது அப்படைத்திரளோடு வரும் பல சிற்றரசர்களின் குடைகளே; அவை அளவிற் சிறியனவாதலால் அவற்றை விண்மீன்களென்றும், அவற்றினும் பெரிதாய்ச் சிறந்து விளங்கும் சக்கரவர்த்தியின் கொற்றக் குடையை மதியென்றும் உரு வகித்து அக்குடை உயர்த்தப்பெறுமலே சென்றமையின், 'மதிநீங்கிய' என்றார். அஃதெல்லாவற்றிகும் மேலாக விரித்துயர்த்தப் பெறுதல் முறையாகலின், 'விதிவரும் தனிக்குடை மீதிலா' என அதனைச் சிறப்பித்தார். விண்மீன்கள் எத்தனை பூத்துத் தோன்றினும் மதி யின்றேல் இரவு சிறவாதது போல, அரசர் பலருடைய குடைகள் மிகப் பலவாயிருப்பினும் சக்கரவர்த்தியின் பெருங்குடையின்மையாற் படை பொலிவிழந்திருந்தது என்பது கருத்து.

(பி - ம்.) 2. விதிவருமதிக், விதிதருந்தனிக்.
3. பொதிதரு, பொதிபல, பொதிவரும், பொதிமலர்; கவிகைமீப், கவிகைகள், கவிகையிற்; பூத்ததாகிலும்.
4. போன்றவே. (35)

### சேனையின் மிகுதி

974. செல்லிய செலவினுற் சிறிய திக்கெனச்
சொல்லிய சேனையைச் சுமந்த தேயெனின்
ஒல்லியல் வேலைநீ ருடுத்த பாரையோர்
மெல்லிய லென்றவர் மெய்ய ரேகொலாம்.

செல்லிய செலவினுல் - (பரவிச்) சென்ற (தன்) போக்கினுல், திக்கு சிறிய என சொல்லிய - திகந்தங்களும் சிறியன (தமக்குப் போதா) என்று வெளிப்படுத்திய, சேனை - அப் பெரும்படையை, சுமந்ததே எனின் - (பூமி) தாங்கிற்றேயானுல், ஒல் இயல் வேலை நீர் உடுத்த - ஒலி பொருந்திய கடல் நீரை (ஆடையாக) உடுத்த, பாரை - இப் பூமியை, ஓர் மெல்லியல் என்றவர் - ஒரு பெண் (நிலமகள்) என்று சொல்வோர், மெய்யரே கொல் - உண்மை உரைப்பவர் ஆவரோ? (ஆகார்).

ஆம்: அசை. திகந்தங்களெல்லாம் தமக்கு இடம் போதா என்னும்படி உள்ள இப் பெரும் படையைத் தாங்கும் ஆற்றலுடைய பூமியை 'நிலமகள்' எனப் பெண்ணுகக் கூறுவது பொருந்தாது என்னும் முகத்தால் படையின் மிகுதியைச் சிறப்பிக்கின்றார்.

செல்லிய - சென்ற. சொல்லிய என்றது, கிளவாததனைக் கிளந் ததுபோலச் சொல்லிய வழுவமைதி. மெல்லியல் - அபலை யென்னும் வடசொற் பொருள் கொண்டது. பால. 888; கலிங். 348 - இப் பாட லோடு ஒப்பு நோக்கத் தகும்.

(பி - ம்.) 1. சொல்லிய, சிறிய திங்கெனச்.
2. சுமந்ததேயினி, சுமந்ததேயெனின்.
3. ஒல்லொலி.
4. மெய்யரோ, மெலியரே. (36)

## பெண்களின் நகிலின் வருணனை

975. தங்குதண் சாந்தில கலவை சாத்தில
குங்குமங் கோட்டில கோவை முத்தில
பொங்கிளங் கொங்கைகள் புதுமை வேறில
தெங்கிள நீரெனத் தெரிந்த காட்சியே.

பொங்கு இளம் கொங்கைகள் - பூரித்த இளமையான நகில்கள், தங்கு தண் சாந்து இல - (தம்மீது அப்புதலால்) தங்குதற்குரிய குளிர்ந்த சந்தனக் குழம்பில்லாதனவாயும், கலவை சாத்தில - (பிற நறுமணக்) கலவையும் அப்பப் பெருதனவாயும், குங்குமம் கோட்டு இல - குங்குமக் குழம்பால் (தொய்யில்) எழுதப் பெருதனவாயும், கோவை முத்து இல - முத்து வடங்கள் பூணுதனவாயும், வேறு புதுமை இல - வேறு வகையான புதுமை (செயற்கையழகு) ஒன்றும் இல்லாதனவாயும், தெங்கு இளநீர் என - தென்னையின் செவ்விளநீர் போல, காட்சி தெரிந்த - இயற்கையழகுடன் விளங்கின.

மகளிர், மங்கலநாணொழிந்த பிற அணிகலன் ஏதுமின்றிச் சென்றனர் (972) என்றவர், இங்கே அம்மகளிரின் நகில்களைத் தனியே விதந்தது, அவை எவ்வகைச் செயற்கையழகுமின்றி இயற்கையாக 'இளநீர்' என்பதற்குப் பொருந்த இருந்தன என்கின்றார்.

குங்குமம் கோட்டுதல் - குங்குமக்குழம்பால் தொய்யில் எழுதல். கோவை முத்து - கோக்கப்பட்ட முத்து; முத்து வடம். மகளிர் கொங்கைக்கு இளநீரை உவமை கூறுதல் மரபு; "செம்மாந்த தெங்கின் இளநீரையோர் செம்மல் நோக்கி, அம்மா இவை மங்கையர் கொங்கைகளாகு மென்ன" (பால. 982).

(பி - ம்.) 1. தங்குபூண்; சேர்ந்தில, சந்தகில்; கலவை சார்த்தில; சேர்கில, சாந்தில; மு. தங்குசெஞ் சாந்தகிற் கலவை சார்கில.
2. கொட்டில, கோட்டிய.
4. தெரிந்த காட்சிய, தெளிந்த காட்சியே. (37)

## இளைஞர்களின் தோள் வருணனை

976. இன்றுணை யவர்முலை யெழுது சாந்தினும்
மன்றலந் தாரினு மறைந்தி லாமையால்
துன்றிளங் கொடிமுதற் றூறு நீங்கிய
குன்றெனப் பொலிந்தன குவவுத் தோள்களே.

குவவு தோள்கள் - (மைந்தரின்) திரண்ட தோள்கள், இன் துணையவர் முலை எழுது சாந்தினும் - (தம்) இனிய வாழ்க்கைத் துணையான மனைவியரின் தனங்களில் (தொய்யில்) எழுதிய குங்குமச் சாந்து படிதலாலும், மன்றல் அம் தாரினும் (தாம் அணியும்) மணம் பொருந்திய அழகிய மாலையாலும், மறைந்து இலாமையால் - (இயற்கைத் தோற்றம்) மறைக்கப்பட்டில்லாமையால், துன்று இளம் கொடிமுதல் - அடர்ந்த இளங்கொடிகள் முதலான, தூறு நீங்கிய - புதர்கள் நீங்கப் பெற்ற, குன்று என - மலைகள்போல, பொலிந்தன - (இயற்கையாக) விளங்கின.

ஏ! ஈற்றசை.

முன் கவியில் மகளிரின் தனங்களைக் கூறியதுபோல, இங்கே ஆடவர்களின் தோள்களைக் கூறுகின்றார். ஆடவர்களும், வருத்தத்தால் தம் மனைவிமாரைக் கூடுதல் இன்மையின் தாம் மகிழ்ச்சிக்குரிய மாலை பூணாமலும், மனைவியரின் சாந்து தோயப்பெறாமலும், தம் தோள்கள் இயற்கைப் பொலிவோடு விளங்குமாறு இருந்தனர் என்கின்றார்.

முந்திய பாடல் இல்லாத பிரதியில் இந்தப் பாடலும் இல்லை.

(பி - ம்.) 1. இன்றுணைவியர்; சாந்தினம்.
2. தாரினம்.
3. கொடிமுகிற்றூசு, முதற்றூசு; நீங்கின, நீக்கிய. (38)

பெண்களுடைய கண்களின் வருணனை

977. நறையறு கோதையர் நாட்செய் கோலத்தின்
துறையற வஞ்சனந் துறந்த நாட்டங்கள்
குறையற நிகர்த்தன கொற்ற முற்றுவான்
கறையறக் கழுவிய கால வேலையே.

நறை அறு கோதையர் - நறுமணமற்ற கூந்தலையுடைய மகளிர், நாள் செய் கோலத்தின் துறை அற - நாள்தோறும் (தாம்) செய்து கொள்ளும் அலங்கார வகைகளைக் கைவிட்டதனால், அஞ்சனம் துறந்த நாட்டங்கள்-மையைப் பெறாது நீத்த (அவர்களுடைய) கண்கள், கொற்றம் முற்றுவான் - வெற்றியை முடித்த ஒருவன், கறை அற கழுவிய - குருதிக்கறை போகுமாறு கழுவிய, காலன் வேலை - யமன் போன்ற (கொலைத் தொழிலையுடைய) வேலை, குறை அற நிகர்த்தன - முழுதும் ஒத்திருந்தன.

ஏ : அசை.

மகிழ்ச்சி யின்மையால் மகளிர் தம் நாளொப்பனையை முழுதும் கைவிட்டிருந்தமை கூறுகின்றார். கூந்தலுக்கு மணம் அகிற்புகை, மயிர்ச்சாந்து, மலர் முதலியவற்றால் உளதாவது. கண்களுக்கு மை தீட்டுதலும் மகிழ்ச்சிக் காலத்து நாள்தோறும் உளதாவது. இப்போது

அவற்றுள் ஒன்றும் இல்லை. வடிவத்தாலும் தொழிலாலும் வேல் மகளிர் கண்களுக்கு உவமை. மை தீட்டிய கண், கறை படிந்த வேல்; அஃதில்லாத கண், கறை கழுவிய வேல்.

கொற்றம் முற்றுவான் - வெற்றி கொண்டவன்; முற்றுவான்: வினையாலணையும் பெயர். "செங்கயல் நெடுங்கண் அஞ்சன மறப்ப," "மையிருங் கூந்தல் நெய்யணி மறப்ப" (சிலப். 4 : 53, 56) என்பவற்றை இங்கே ஒப்புநோக்குக. இவைபோலக் கண்ணகியைப் பற்றிக் கூறியன பிறவும் (சிலப். 4 : 47-57) இங்கே மகளிரைப்பற்றி வந்தனவும் இனி வருவனவுமாகியவற்ேறாடு ஒப்பிடத் தகும்.

(பி - ம்.) 1. நடைசெய்.
2. துறைவரும், துறைதெரி, துறையறி; துறந்த வாட்கண்கள்.
3. குறைவற.
4. கழுவின; காலவேலினை. (39)

**மாதர்கள் மேகலையும் சிலம்பும் அணியாமை**

978. விரிமணி மேகலை விரவி யார்த்தில
தெரிவைய ரல்குற்று ரொலியி றேரெனப்
பரிபுர மார்த்தில பவளச் சீறடி
அரியின மார்த்திலாக் கமல மென்னவே.

தெரிவையர் அல்குல் - மகளிரின் அல்குல் தடங்கள், தார் ஒலி இல் தேர் என - மாலையான மணிகளின் ஓசை இல்லாத தேரைப்போல, விரி மணி மேகலை விரவி ஆர்த்தில - விரிந்த மணிகளின் கோவையாலான மேகலையணி பூண்டு ஒலிக்கப்பெற்றிலவாயின; பவளம் சிறு அடி - (தெரிவையரின்) பவளம் போன்ற செந்நிறம் பொருந்திய சிறிய பாதங்கள், அரி இனம் ஆர்த்து இலா கமலம் என்ன - வண்டின் கூட்டம் ஒலித்தலில்லாத தாமரை மலர்களைப்போல, பரிபுரம் ஆர்த்தில - சிலம்புகள் (பூண்டு) ஒலிக்கப் பெறுவாயின.

மகளிர் இடையணியும் காலணியும் அணியவில்லை என்பதனை ஒவ்வோர் உவமையோடு கூறி விளக்குகின்றார். தேர்த்தட்டு அல்குலுக்கு உவமை கூறப்படுவதாகலின் தேரையும், தாமரை மலர் அடிகளுக்கு உவமை கூறப்படுவதாகலின் அதனையும் ஒவ்வொரு விசேடணத்தோடு குறித்தார். மணிகளால் இயன்ற எட்டுக் கோவை யுடையது மேகலையாகலின், 'விரி மணிமேகலை' என்றார்.

விரவுதல் - பூணுதல். தார் - மணிமாலை. கமலம், ஆகுபெயராய் அதன் மலரை உணர்த்திற்று. தெரிவையர் என்றது பருவங் குறியாது 'மகளிர்' என்பதுகுறித்து நின்றது. "அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய, மென்றுகி லல்குல் மேகலை நீங்க" (சிலப். 4 : 47 - 8).

975, 976–ஆம் பாடல்கள் இல்லாத பிரதியில் இந்தப் பாடலும் இல்லை.

(பி - ம்.) 1. விரியணிநூ விரவியார்க்கில, விரைவினூர்க்கில; மு. விரிமணிப்பகுதி மேகலைகளார்த்தில.
2. அல்குருன்; ஒலியிற்றேரெனப்.
3. பரிபுரம் ஆர்க்கில.
4. அரியினம் ஆர்க்கிலாக், ஆர்த்திடாக்; கமலமன்னவே. (40)

### அவர்கள் மணிவடம் பூணுமை

979. மல்கிய கேகயன் மடந்தை வாசகம்
நல்கிய தரிவையர் நடுவிற் கேகொலாம்
புல்கிய மணிவடம் பூண்கி லாமையால்
ஒல்கிய வொருவகைப் பொறையு யிர்த்தவே.

மல்கிய - (வளம்) நிறைந்த, கேகயன் மடந்தை வாசகம்-கேகய வரசன் மகளான கைகேயியின் வார்த்தை, நல்கியது - உதவிசெய்தது, அரிவையர் நடுவிற்கேகொல் - பெண்களின் இடைக்கு மட்டுமே போலும்; (எவ்வாறெனில்), புல்கிய மணிவடம் பூண்கிலாமையால் - நெருங்கிய மணிமாலைகளை (அவர்கள்) அணியாமையால், ஒல்கிய - (முன்னே சுமையால்) ஒசிந்த இடைகள், ஒருவகை பொறை உயிர்த்த - (இப்போது) ஒருவகைச் சுமை குறையப் பெற்றனவாயின.

ஏ: ஈற்றசை. கைகேயியின் வார்த்தை ஒருவகை நன்மை செய்தது என்று புகழ்வார் போலப் பழிக்கின்றார். அவள் வார்த்தையாவது, 'இராமன் காடு போகவேண்டும்' என்றது. அதனால் அவளுக்கும், வேறு யார்க்கும் நன்மையில்லை; இங்கும், மகளிர் மணி பூணுது வருந்தச் செய்ததேயன்றிப் பிறிதில்லை. ஆனால் அவர்கள் மணி பூணுமையால் இடைகள் பொறை தவிர்ந்தன; அவற்றிற்கு நன்மை யாயிற்று என்றபடி. மல்குதல் - நிறைதல். நல்குதல் - உதவுதல். நடுவிற்கே: ஏகாரம், பிரிநிலை. ஆம்: அசை. ஒல்கிய: வினையாலணையும் பெயர். அரிவையர்: பருவங்குறித்ததன்று.

(பி - ம்.) 1. கைகயன் மடந்தை.
2. நல்கிய தெரிவையர்.
3. புணர்கிலாமையால்.
4. ஒல்கியதொருவகை; பொறையுயிர்க்கவே. (41)

### சேனையின் வருணனை

980. கோமகன் பிரிதலிற் கோல நீத்தனள்
தாமரைச் செல்வியுந் தவத்தை மேவினள்
காமனு மருந்துயர்க் கடலின் மூழ்கினன்
ஆமெனக் கழிந்ததவ் வளவில் சேனையே.

கோமகன் பிரிதலின் - சக்கரவர்த்தி குமாரனான இராமபிரான் பிரிந்திருந்ததால், கோலம் நீத்தனள் - அழகு செய்தலை விடுத்த

வளாகிய, தாமரை செல்வியும் தவத்தை மேவினுள் ஆம் - திருமகளும் (தவக்கோலத்தோடு) தவம் மேற்கொண்டாளாம், காமனும் அரு துயர் கடலில் மூழ்கினுன் ஆம் - மன்மதனும் மீளுதற்கரிய துன்பக்கடலுள் மூழ்கிவிட்டானும், என - என்று எண்ணும்படி, அ அளவு இல் சேனை - அந்த அளவில்லாத பெரிய படை, கழிந்தது - (செல்வப் பொலிவும் காதற் கிளர்ச்சியுமின்றிச்) சென்றது.

கோமகன் இருப்பின், மகிழ்ச்சி நிலவ, மகளிரும் மைந்தரும் எல்லா நலன்களும் பொருந்த, அவர்களிடையே செல்வச் சிறப்பும் காதற் கிளர்ச்சியும் புலப்படும். இப்போது அவை யாவும் இலவாயின என்பது கருத்து.

(பி - ம்.) 1. கோமகற் பிரிதலின், நீத்துள.
2. தாமரைத் தேவியும்.
3. கடலுள்.
4. ஆமென நிகழ்ந்ததவ் (42)

981. மண்ணையும் வானையும் வயங்கு திக்கையும்
உண்ணிய நிமிர்கட லொக்கு மென்பதென்
கண்ணினு மனத்தினுங் கமலத் தண்ணறன்
எண்ணினு நெடிதவ ணெழுந்த சேனையே.

அவண் எழுந்த சேனை - அங்கே எழுந்த சேனையானது, மண்ணையும் - பூவுலகத்தையும், வானையும் - விண்ணுலகத்தையும், வயங்கு திக்கையும் - விளங்கும் (எட்டுத்) திசைகளையும், உண்ணிய- அழித்தற்பொருட்டு, நிமிர் - (பிரளய காலத்தில்) பொங்கி எழுகிற, கடல் ஒக்கும் என்பது - கடலைப்போற் பெரிது என்று சொல்வது, என் - என்ன பயன்? கமலத்து அண்ணல் தன் கண்ணினும் - தாமரையில் வீற்றிருக்கும் பிரமதேவனுடைய கண் பார்வையினும், மனத்தினும்—, எண்ணினும் - (அம் மனத்துள் நிகழும்) கருத்துக்களினும், நெடிது - பெரிது (என்பதே அமைவுடையது).

ஏ : ஈற்றசை.

அளவின்மைக்குப் பொதுவாகக் கடலையும், ஊழிக்காலத்துப் பொங்கிப் பரவும் கடலையும் உவமை கூறுவர்; இச் சேனையின் பரப்புக்கு அவையும் உவமை கூறப் போதா; பிரமதேவனுடைய கண் பார்வை, மனம், எண்ணம் ஆகியவற்றினும் பெரிது என உறழ் பொருளாகக் கூறுதலே அமைவுடையதாகும் என்றது உயர்வு நவிற்சி. பிரமதேவன், வானினும் மேலேயுள்ள தன் உலகத்திலிருந்து, தன் படைப்புக்குரியனவாக எல்லா உலகத்திலும் உள்ள பொருள்களைப் பார்த்தலால் அவன் பார்வையின் விரிவு பெரிது; மனமும் கருத்தும் அவன் பார்வைக்கும் செயலுக்கும் கருவியாதலின், அவை ஒன்றினென்று விரிவுடையன. கண் - கண்பார்வை.

(பி - ம்.) 1. வாங்கு திக்கையும்.
2. உண்ணியநீர்க்கடல்; மு. உண்ணியநிமிர்கென வோங்குமென்பதென். (43)

982. அலைநெடும் புனலறக் குடித்த லாற்புவி
நிலைபெற நிலைநெறி நிறுத்த லானெடு
மலையினை மண்ணுற வழுத்த லாற்றமிழ்த்
தலைவனை நிகர்த்ததத் தயங்கு தானையே.

அ தயங்கு தானை - விளங்குகின்ற அச்சேனை, அலை நெடு புனல் அற குடித்தலால் - அலைகளையுடைய மிக்க நீர் முழுதும் குடித்துவிடுதலாலும், புவி நிலைநெறி நிலைபெற நிறுத்தலால் - பூமி நிலையான ஒரு முறையிலே நிலைபெறும்படி நிறுத்துதலாலும், நெடு மலையினை மண் உற அழுத்தலால் - பெரிய மலைகளைத் தரைமட்டமாகும்படி அழுத்தி விடுதலாலும், தமிழ் தலைவனை நிகர்த்தது - தமிழுக்கு முதல்வனான அகத்திய முனிவனை ஒத்ததாயிற்று.

ஏ : ஈற்றசை.

அப்பெரும் படைக்கும் அகத்திய முனிவனுக்கும் சிலேடை வகையால் ஒப்புமை கூறுவது இக்கவி. படை தான் செல்லும் வழியிலுள்ள ஆறு, குளம் முதலியவற்றில் நீரறக் குடித்துவிடுகின்றது; பூமி சூரிய குலத்தரசரிடமிருந்து கை மாறாதபடி ஒரு நிலையாக அவர்களிடமே இருக்கக் காரணமாகிறது; செல்லும் வழியிலுள்ள மலைகளை ஏறி மிதித்தலால் தரையில் அழுத்திவிடுகின்றது. அகத்திய முனிவனுக்குக் கூறும்போது, அலைநெடும் புனல் - கடல்; கடல் நீர் முழுதும் அவன் குடித்தான்; சிவபெருமான் திருமணக் காலத்தில், தேவரும் பிறருமாக அளவிறந்தோர் கயிலையில் கூடியதனால், பூமி வடதிசையில் தாழ்ந்து, தென்றிசையில் உயர்ந்ததாக, அப்போது சிவபெருமான் கட்டளைப்படி அவன் தென்றிசை வந்து பொதிய மலையில் தங்கவே, பூமி சமமாகி ஒரு நிலைப்பட்டது; அவன் வரும் வழியில் விந்திய மலை வழிக்கிடையூறாக ஓங்கி நின்றதனை அழுத்தித் தரைமட்டமாக்கினான்; இவ்வாறு செயலால் ஒப்புமை காண்க. அகத்திய முனிவன், "தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தவன்" ஆகலின், 'தமிழ்த்தலைவன்' என்றார்.

(பி - ம்.) 1. அலைகடல் நெடும்புனல்; குடித்தலால் அகம், அறம்.
2. நிலைபெற நிலைபெற, நிலைபெற நிலநெறி.
4. தலைவனை நிகர்த்தது, ஒத்ததத்; தயங்குசேனையே. (44)

அயோத்தியின் நிலை

983. அறிஞருஞ் சிறியரு மாதி யந்தமாச்
செறிபெருந் தானையுந் திருவு நீங்கலால்
குறியவன் புனலெலாம் வயிற்றிற் கொண்டநாள்
மறிகட லொத்ததவ் வயோத்தி மாநகர்.

அறிஞரும் சிறியரும் ஆதி அந்தம் ஆக - அறிவுடைய பெரியோர் முதல் சிறியோர் ஈருக, செறி - கலந்து நெருங்கியுள்ள, பெரும் தாஜனயும் - அந்தப் பெரிய சேஜனயும், திருவும் - செல்வப்பொலிவும், நீங்கலால் - நீங்கியதனுல், அ அயோத்தி மா நகர் - பெருமை மிக்க அவ்வயோத்திமா நகரம், குறியவன் - குறுமுனிவன், புனல் எலாம் வயிற்றில் கொண்ட நாள் - நீர் முழுதும் குடித்துத் தன் வயிற்றில் அடக்கிக்கொண்ட நாளில், மறி கடல் ஒத்தது - தன் நிஜல கெட்ட (வறிதாகிய) கடஜலப்போல் ஆயிற்று.

சேஜனயோடு பரத சத்துருக்னரும் கோப்பெருந்தேவியர் முதலாஞேரும் நகரமக்களும் நகரைவிட்டு நீங்கிச் சென்றமையின், அது பொலிவிழந்து வெறிச்சோடிக் கிடந்த தன்மையைக் குறு முனிவனுல் நீரற வற்றிப்போன கடஜல உவமையாக்கிக் கூறுகின்ருர். நீர் சிறிதும் இல்லாதபோது, அது கடல் எனத் தகுதியற்றதாவது போல, அயோத்தி நகரமும் மாநகர் எனத் தகுதியற்றதாயிற்று.

மறிதல் - நிஜலகெடுதல்; கடலுக்கு இயற்கையடை எனினுமாம்.

(பி - ம்.) 1. *அறிவரும் சிறுவரும்; அந்தமாம், அந்தமா.*
4. *அவ்வயங்குமாநகர்.* (45)

### சேஜன செல்லும் வழி

984. பெருந்திரை நதிகளும் வயலும் பெட்புறு
மரங்களு மஜலகளு மண்ணுங் கண்ணுறத்
திருந்தலி னயோத்தியாந்தெய்வ மாநகர்
அருந்தெரு வொத்ததப் படைசெ லாறரோ.

பெரும் திரை நதிகளும் - மிக்க அஜலகஜளயுடைய ஆறுகளும், வயலும் - வயல்களும், பெட்பு உறு மரங்களும் - விரும்பத்தக்க மரங் களும், மஜலகளும்—, மண்ணும் - வெற்றிடங்களும், கண் உற - (யாவரும் விரும்பிக்) காணுமாறு, திருந்தலின் - (வழியமைப்போரால்) திருந்தி இருந்தமையின், அ படை செல் ஆறு - அச்சேஜன சென்ற வழி, அயோத்தி ஆம் - அயோத்தியாகிற, தெய்வம் மாநகர் - தெய்விகம் பொருந்திய நகரத்தின், அரும் தெரு ஒத்தது - அருமை யான தெருக்கஜளப் போன்றிருந்தது.

அரோ: அசை.

காட்டுப் பிரதேசங்களில் பல இடையூறு உடையனவாயிருந்த வழி களெல்லாம் படைகள் செல்லுதற்கேற்றவாறு செப்பனிட்டுத் திருத்தி அமைக்கப்பெற்று, நகரத் தெருக்கஜளப் போலத் தடையின்றி நடக்கத் தக்கனவாயின என்றபடி.

அவ்வத் தொழில் வல்லார் பலரைக் கொண்டு முன்னே வழிகள் திருத்தி அலங்கரிக்கப்பட்டமையை வான்மீகம் விரிவாய்க் கூறு கின்றது. காண்போருக்கு வெறுப்புத் தரும் இடையூறுள்ள இடங்க ளெல்லாம், இப்போது விரும்பிக் காணுமாறு திருத்தம்பெற்றன என்பார், 'கண்ணுறத் திருந்தலின்' என்றார். நகரம் பாழாயிற்று; காடு, நாடும் நகரமும் போலாயிற்று. ''பிறந்துலகம், முற்றுடைய கோவைப் பிரியாது மொய்த்தீண்டி, உற்றுறைதும் யாரும் உறையவே சின்னுளிற், புற்றுடைய காடெல்லாம் நாடாகிப் போம்'' (404) என்ற நகர மக்கள் கூற்று இங்கே நினைக்கத் தகும்.

(பி - ம்.) 1. பெட்புற.
2. மரங்களுஞ் செடிகளும் மண்ணும் மண்ணுறத்.
3. செல்வமாநகர், தேவமாநகர். (46)

### சேனையின் நிலை

985. தார்கடாங் கோதைதாந் தாமந்தாந்தகை
ஏர்கடாங் கலவைதாங் கமழ்ந்தின் றென்பரால்
கார்கடா மெனமிகக் கடுத்த கைம்மலை
வார்கடா மல்லதம் மன்னன் சேனையே.

அ மன்னன் சேனை - அந்தச் சக்கரவர்த்தியின் சேனைத் திரளில், கார்கள் தாம் என - (இவை) மேகங்களே யென்னுமாறு, மிக கடுத்த - மிகவும் ஒப்புமை அமைந்த, கை மலைவார் கடாம் அல்லது - யானைகள் ஒழுக்கும் மதநீர் (கமழ்தலை) அல்லாமல், தார்கள் தாம் - ஆண்கள் அணியும் மாலைகளோ, தாமம் தாம் - அழகுக்கணியும் பெரிய மாலைகளோ, தகை ஏர் கடாம் - பெருமையும் அழகும் தருகின்ற, கலவை தாம் - நறுமணக் கலவைப் பூக்களோ, கமழ்ந்தது இன்று என்பர் - மணம் வீசுதல் இல்லை என்பர்.

ஆல், ஏ: அசை. யானையின் மதநீர் மணமுடையது; அந்த மணம் தவிர, வேறு எவ்வகை மணமும் அங்கே வீசவில்லை என்றபடி. நறுமணங் கமழ்தற்குரிய பொருள்களைக் கூறி, அவற்றின் இன்மை குறித்தலால், அவற்றை எவரும் அணியவில்லை என்பது பெறப்படும். 'கடாவும்' என்ற செய்யுமென் எச்ச ஈற்று அயல் உயிர்மெய் சென்றது. கமழ்ந்த தின்று எனற்பாலது தொகுத்தல் விகாரம் பெற்றது. கடுத்தல்- ஒத்தல். கைம்மலை - கையையுடைய மலைபோன்ற யானை. தாம் என்றது ஓசையின்பங் கருதி மீண்டும் மீண்டும் வந்தது. ஏர்கள் தாம் எனக் கொண்டு, ஏர்கள் - அழகு தரும் பொருள்கள் என ஆகு பெயராக்கி உரைத்தலுமாம்.

(பி - ம்.) 1. தார்கள்தாழ்; சாந்தத்தாம்புகை, சார்ந்திலாவகை.
2. கலவைதான்; கமழ்ந்ததின்றென, நிகழ்ந்ததன்றென்பார்; மகிழ்ந் தின்றென்பரால், அமைந்ததின்றெனக்.

3. கார்கடாமெனமுகம்; அனையகைமலை.
4. வார்கடாமணந்தரும், வார்கடாமல்லவம், வார்கடாமன்னவர், வார்கடாமில்லதம்; (47)

986. ஆளுலாங் கடலினு மகன்ற வக்கடல்
தோளுலாங் குண்டல முதல தொல்லணி
கேளுலா மின்னொளி கிளர்ந்த தில்லையால்
வாளுலா நுதலியர் மருங்கு லல்லதே.

கடலினும் அகன்ற - (நீர் உலாவும்) கடலினும் பெரிதான, ஆள் உலாவும் அ கடல் - ஆட்கள் மிகப் பொருந்திய அந்தச் சேனைக் கடலில், வாள் உலாவும் நுதலியர் - ஒளி பொருந்திய நெற்றியையுடைய மகளிரின், மருங்குல் அல்லது - இடையை அல்லாது, தோள் உலாவும் குண்டலம் முதல - தோள்களில் வந்து பொருந்தும் குண்டலம் முதலான, தொல் அணி - பழமையான அணிகலன் ஒன்றும், கேள் உலாவும் மின் ஒளி கிளர்ந்தது இல்லை - (நல்ல) நிறம் அமைந்த மின்னல் போன்ற ஒளிதந்து விளங்கியதில்லை.

ஆல், ஏ! அசை.

அங்கே, ஆடவர் மகளிர் ஆகிய இருதிறத்தாருள் எவரும் எவ்வணியும் அணிந்தாரில்லை என்பது கருத்து; அணிகள் இன்மையால் அவற்றின் ஒளியும் இல்லை. தொல் அணி என்றது வழக்கமாக அணியும்வற்றை. மகளிரின் இடையை மின்னற்கொடி என்பராகலின், அவை ஒளிவீசின என்றார். உலாவும் என்ற செய்யுமென் எச்சத்து ஈற்றயல் உயிர் மெய்கெட்டது. கேழ் - நிறம்; எதுகை நோக்கிக் கேள் என விகாரப்பட்டது.

(பி - ம்.) 2. சொல்லணி.
3. கேளுலாமீனொளி, கேளிலாமின்னொளி, கேழிலாமின்னொளி.
4. வாளுலாம் விழியினர், கன்னியர்; மருங்குல்போலவே. (48)

987. மத்தள முதலிய வயங்கு பல்லியம்
ஒத்தன சேறலி னுரையி லாமையின்
சித்திரச் சுவர்நெடுஞ் சேனை தீட்டிய
பத்தியை நிகர்த்ததப் படையி னீட்டமே.

அ படையின் ஈட்டம் - அப் படைத் தொகுதியானது, உரை இலாமையின் - (மக்கள்) பேச்சு இல்லாமையாலும், மத்தளம் முதலிய வயங்கு பல் இயம் - மத்தளம் முதலியனவாக விளங்கும் பல வாத்தியங்களும், ஒத்தன சேறலின் - (மக்களை) ஒத்தனவாய் (ஒலியின்றிச்) செல்லுதலாலும், சுவர் தீட்டிய - சுவரில் எழுதிய, நெடு சேனை - பெருஞ்சேனையின், சித்திரம் பத்தியை நிகர்த்தது - சித்திர வரிசையை ஒத்திருந்தது.

ஏ: ஈற்றசை.

படையில் எவ்வகை ஒலியும் இல்லாமையால், சுவரில் எழுதிய சித்திரம் போன்றிருந்தது அப்படைத் தொகுதி என்கின்ருர். தாரை முதலியன ஒலியாது சென்றனவென (971) முன்னும் கூறினுர்; அங்கே கூருத மத்தளம் முதலிய பிற வாத்தியங்களும் ஒலித்தில; மக்களும் பேசவில்லே; ஆதலால் சித்திரம் போன்றிருந்தது சேனே என்ருர்.

(பி-ம்.) 2. உரையிலாமையால்,
3. சித்திரச் சுவரொடும்; நீட்டி,
4. பத்தியைமிகர்த்தவப். (49)

988. ஏடறு கோதையர் விழியி னெய்தகோல்
ஊடுற வுரந்தொளேத் துயிரு ணுவகை
ஆடவர்க் கரும்பெருங் கவச மாயது
காடுறை வாழ்க்கையைக் கண்ண னண்ணலே.

கண்ணன் - யாவர்க்கும் கண்போல்வானுன இராமபிரான், காடு உறை வாழ்க்கையை நண்ணல் - காட்டில் தங்கும் வாழ்க்கையை மேற்கொண்டது, ஏடு அறு கோதையர் - பூச்சூடுதலற்ற கூந்தலே யுடைய மகளிர், எய்த விழியின் கோல் - (ஆடவர்மீது) எய்த கண் களாகிற அம்புகள், உரம் ஊடு உற தொளேத்து - (ஆடவர்களின்) மார்பினூடே பாய்ந்து தொளேத்து, உயிர் உண்ணுவகை - உயிரை யுண்ணுதபடி, ஆடவர்க்கு—, அருபெரும் கவசம் ஆயது - அரிய வலிய கவசம்போல் ஆயிற்று.

ஏ : அசை.

துன்பவுணர்ச்சியால், அங்கே ஆடவரும் மகளிரும் காதற்குறிப்புச் சிறிதுமின்றிச் சென்றனரென்றபடி. முன்பெல்லாம் ஆடவர் மார்பிற் பாய்ந்து காதற்குறிப்பைத் தூண்டி வருத்தவல்ல மகளிர் கண்கள், இப்போது அத்தகைய சிறப்பு நோக்கை இழந்தன; ஆடவர் கண்க ளும் அவ்வாறே மகளிரைச் சிறப்பு நோக்கொடு நோக்கிற்றில; எனவே ஆடவர் உயிர் பிழைத்தனர். கண் - கண்பார்வை; மகளிரின் இயற்கைபற்றி அதனே அம்பாக்கிக் கூறினுர். அவ்வம்பு பாய்ந்து வருத்துதற்கிடமின்றித் துன்பவுணர்ச்சி கவசம்போல் ஆகியது,

இராமபிராணேக் 'கண்ணன்' எனல்: 659, 1119, 1123; பால. 1145, பார்க்க. ஏடு, ஆகுபெயராய்ப் பூவையுணர்த்தியது.

(பி-ம்.) 1. ஏடுறு, ஏடுறை,
2. அரும்பெறற்கவசம்,
3. வாழ்க்கையக்; நண்ணவே, (50)

989. கனங்குழைக் கேகயன் மகளிற் கண்ணிய
சினங்கிடந் தெரிதலிற் றீய்ந்த வேகொலாம்
அனங்கனைங் கொடுங்கணை கடந்த வாடவர்
மனங்கிடந் துண்கில மகளிர் கொங்கையே.

கனம் குழை-கனத்த குண்டலங்களை அணிந்த, கேகயன்மகளில் - கேகயவரசன் மகளான கைகேயியிடத்தில், கண்ணிய - (ஆடவர்க்கு) உண்டான, சினம் - கடுங்கோபமாகிய தீ, கிடந்து எரிதலின் - (அவர்கள் மனத்தில்) தங்கிக் கொழுந்துவிட்டெரிதலால், அனங்கன் ஐங் கொடும் கணை - மன்மதனுடைய ஐந்தாகிய கொடிய மலரம்புகள், தீய்ந்தவே கொல் - (அத்தீயினால்) கருகிப்போயின போலும்; (எனவே) கடந்த ஆடவர் மனம்-(அவ்வாறு காமன் அம்புகளை) வென்று விட்ட ஆடவர்களின் மனம், மகளிர் கொங்கை கிடந்து - மகளிரின் தனங்களிலே (சென்று) தங்கி, உண்கில - (அவற்றின் அழகு முதலிய வற்றை) நுகர்ந்தில வாயின.

ஏ: ஈற்றசை.

ஆடவர்க்குக் கைகேயிபால் உண்டான கடுஞ்சினமாகிய தீ, அவர்கள் மனத்தில் நின்று எரிதலால், அது காமன் அம்புகளையும் தீய்த்துத் தம்மீது பாய வலியற்றனவாக்கிவிடவே, அவர்கள் மனத்திற் காம விகாரங்களுக்கு இடமே இல்லை என, ஏதுத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார்.

கனங்குழை: கைகேயிக்கு அடை. மகளிற் கண்ணிய - மகளால் உண்டான என ஏதுப்பொருளாக்கி உரைப்பினும் ஆம். எரிதல் கூறுதலால், சினத்தீ எனலாயிற்று.

(பி - ம்.) 1. கைகயன்மடந்தை.
2. சினங்கடந்து; அரிதலிற்றீர்ந்த, றிந்த.
3. கடுங்கணைக்கு, அனங்கனைந்தடுகணைக்கு; கிடந்தவாடவர், கிடைத்த வாடவர், அடருமாடவர், அடர்ந்தவாடவர், இடைந்தவாடவர், மிடைந்தவாடவர். (51)

பரத சத்துருக்னர் புறப்படுதல்

990. இன்னண நெடும்படை யேக வேந்தலும்
தன்னுடைத் திருவரை சீரை சாத்தினன்
பின்னிளை யவனொடும் பிறந்த துன்பொடும்
நன்னெடுந் தேர்மிசை நடத்தன் மேயினன்.

நெடும் படை - அப்பெரும்படை, இன்னணம் ஏக - இவ்வாறு செல்லாநிற்க, ஏந்தலும் - பரதனும், தன் உடை(ய) திரு அரை - தன்னுடைய அழகிய அரையில், சீரை சாத்தினன் - மரவுரி தரித்தவனும், பின் இளையவனொடும் - (எப்போதும் தன்னைப்) பின்பற்றும்

தம்பியாகிய சத்துருக்கனேடும், பிறந்த துன்பொடும் - (தன் மனத்தில்) தோன்றும் துன்பத்தோடும், நல் நெடு தேர்மிசை - நல்ல பெரிய தேரில் (ஏறி), நடத்தல் மேயினுன் - செல்லலானுன்.

படைகளை முன்னே செல்லவிட்ட பரதன், தானும் தன் தம்பியுமாக இராமபிரானைப்போலவே தவக்கோலத்திற்குரிய மாவுரி தரித்துத் தேரேறிப் புறப்பட்டான். சத்துருக்கன் பரதனை நிழல் போலத் தொடர்பவனுதலால், அவனும் சீரை சாத்தினுனென்பது கூறவேண்டா தாயிற்று.

பிறந்த துன்பு - இராமபிரானைப்பற்றி நினைக்குந்தோறும் எழுந்து தோன்றும் துன்பம். சாத்தினுன்: முற்றெச்சம், மேயினுன் என்றது கொண்டு முடிந்தது. திருவரைச் சீரை சாத்தினுன்: "திருவரைத் துகிலொரீஇச் சீரை சாத்தியே" (445) என்றுர் முன்னும். ஏந்தல் - ஆடவரிற் சிறந்தோன்.

(பி - ம்.) 1. இன்னன; ஏகவேந்தனும்.
2. தன்னுடை நெடுவரைச், தன்னுடையரையினில்; சிரஞ்சாத்தினுன். (52)

தாயர் முதலியோர் உடன்வரச் செல்லுதல்

991. தாயரு மருந்தவத் தவருந் தந்தையின்
ஆயமந் திரியரு மளவில் சுற்றமும்
தூயவந் தணர்களுந் தொடர்ந்து சூழ்வரப்
போயினன் றிருநகர்ப் புரிசை வாயிலே.

தாயரும் - தாய்மார் மூவரும், அரும் தவத்தவரும் - அரிய தவசியரும், தந்தையின் ஆய-தந்தைபோல(த் தன்பால்) அன்புடைய, மந்திரியரும் - மந்திரிமாரும், அளவு இல் சுற்றமும் - அளவில்லாத சுற்றத்தவரும், தூய அந்தணர்களும்—, தொடர்ந்து சூழ்வர - (தன்னைப்) பின் தொடர்ந்து சுற்றிலும் வர (போய்), திருநகர் - செல்வமிக்க நகரத்தின், புரிசை வாயில் போயினன் - மதில்வாயிலை அடைந்தான்.

ஏ: ஈற்றசை.

தாயர் - பட்டத்துத் தேவியர் மூவர். தந்தையின் ஆயம் எனப் பிரித்துத் தந்தையின் மந்தணத்துக்குரியவரான என்றலுமாம். சுற்றம் - ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்பவற்றுள் மந்திரிமாரொழிந்த ஏனையோர் எனலுமாம். வாயில் போயினுன் - வாயிலைக் கடந்து போனுன் என்றுமாம்.

(பி - ம்.) 1. நெடுந்தவத்தவரும்; தாதையின்; தன்கிளை.
2. மந்திரிகளும்; அளவிச்.
3. சூழ்தரப்.
4. புரிசை நீங்கியே, புறத்துவாயிலே. (53)

கூனியைக் கண்டு கொல்லச்சென்ற சத்துருக்கனைப் பரதன் விலக்கல்

992. மந்தரைக் கூற்றமும் வழிச்செல் வாரொடும்
உந்தியே போதல்கண் டிளவ லோடிப்போய்
அந்தரத் தேற்றுவா னழன்று பற்றலும்
சுந்தரத் தோளவன் விலக்கிச் சொல்லுவான்.

மந்தரை கூற்றமும் - மந்தரையாகிய யமனும், வழி செல்வாரொடும் - வழிநடந்து செல்லும் அக்கூட்டத்தாரோடு, உந்தியே போதல் - உந்திக்கொண்டே நடந்து போதலை, இளவல் கண்டு - சத்துருக்கன் கண்டு, அழன்று - சினங்கொண்டு, ஓடி போய் - (அவளருகில்) ஓடிப்போய், அந்தரத்து ஏற்றுவான் - (அவளை) வானில் ஏற்றக் கருதி, பற்றலும் - பிடித்த அளவில், சுந்தரம் தோள் அவன் - அழகிய தோள்களையுடைய பரதன், விலக்கி - (சத்துருக்கனை) விலக்கி, சொல்லுவான் - (அவனுக்குச்) சொல்லுகின்றான்.

மந்தரை - கூனி. இராமபிரான் வனம் போகவும், சக்கரவர்த்தி உயிர்போகவும் காரணமாயிருந்தமையின் அவளைக் கூற்றம் என்றார். அத்தகையவள் நாணுது பலரிடையே நடந்து சென்ற இழிவு தோன்ற, கூற்றமும் என இழிவு சிறப்பும்மை தந்து கூறினர். கூனியாகலின் அவள் நடையை உந்தும் நடை என்றார். அந்தரத்து ஏற்றுதல் - கொல்லுதல்; அவளைப் பந்துபோலத் தூக்கி ஆகாயத்தில் எறிதல் என்ற குறிப்பும் தோன்றவைத்தார்; எற்றுவான் என்ற பாடமும் உளது.

(பி - ம்.) . செல்வாருடன்.
2. உந்தினள், முந்தினள், உய்ந்தனள்; இளவலோடியே, இளவலோடியார்த்து, இளவல் பொங்கியார்த்து; மு. உந்தினனவள்கண்டிழிந்தங் கோடியே.
3. அந்தரத்தெற்றுவான்; அழன்று பார்த்தலும்.
4. சொல்லினன். (54)

993. முன்னையர் முறைகெட முடித்த பாவியைச்
சின்னபின் னஞ்செய்தென் சினத்தைத் தீர்வெனேல்
என்னையின் றென்னையன் றுறக்கு மென்றலால்
அன்னையென் றுணர்ந்திலெ னைய னேயென்றான்.

முன்னையர் முறைகெட முடித்த - (நம் மரபில்) முன்னோரின் (வழி வழி வந்த) முறை கெடுமாறு (சூழ்ந்து) முடித்த, பாவியை - (பெரும்) பாவியான கைகேயியை, சின்ன பின்னம் செய்து - சித்திரவதை செய்து, என் சினத்தை தீர்வெனேல் - என் கோபத்தை ஆற்றிக் கொண்டிருப்பேனேல், என் ஐயன் இன்று என்னை துறக்கும் - என் தலைவனான இராமபிரான் இப்போது என்னைத் துறந்துவிடுவான், என்று அல்லால் - என்று அஞ்சியே அல்லாமல், அன்னை என்று உணர்ந்திலென் - தாய் என்று கருதி (அவளைக் கொல்லாது) விட்டே

னில்லை; ஐயனே - என் ஐயா, (இதனை ஓர்ந்து பார்), என்றான் - என்று கூறினான்.

முன்னையர் முறை - மூத்தவற்குரியது அரசு என்ற முறை. கடுங் கோபத்தால் கைகேயியைப் 'பாவி' என்றான். அவளை ஒரே வீச்சில் கொல்லாமல், சித்திரவதை செய்யவேண்டுமென்ற அத்துணை மனக் கொதிப்பு அவனுக்கு. அவளை அவன் தாய் எனக் கருதிலன் என்பதும் இராமபிரானுக்கஞ்சியே அவளைக் கொல்லாது விட்டான் என்பதும், "ஆயவன் முனியுமென் றஞ்சி னேனலால், தாயெனும் பெயரெனைத் தடுக்கற் பாலதோ" (867) என முன்னமே அவன் கூறியதனாலும் அறியலாம். சத்துருக்கன் சினந் தணிதற் பொருட்டு, 'ஐயனே!' என நயந்து கூறினான்.

(பி - ம்.) 2. சினத்தைத்தீர்வனென்.
3. என்னையின்றென்னையும், என்னையென்றென்னையன், என்னையன் றென்னையன்; துறக்குமென்னலால், துறக்குமாதலால், வெறுக்கு மென்றலால்.
4. உணர்ந்திலன்; ஐயநானென்றான், யானென்றான். (55)

**பரதன் சத்துருக்கனைத் தெருட்டி அழைத்துச் செல்லல்**

994. ஆதலான் முனியுமின் றைய னந்தமில்
வேதனைக் கூனியை வெகுண்டு மென்னினும்
கோதிலா அருமறை குலவு நூல்வலாய்
போதுநா மென்றுகொண் டரிதிற் போயினான்.

ஆதலால் - அவ்வாறாகலின், கோது இலா அரு மறை - குற்றமற்ற அரிய வேதமும், குலவும் நூல் - விளங்கும் நீதி நூல்களும், வல்லாய் - வல்லவனே, இன்று - இப்போது, அந்தம் இல் வேதனை கூனியை வெகுண்டும் என்னினும் - எல்லையற்ற துன்பத்துக்குக் காரணமான இக்கூனியை நாம் கோபித்தாலும், ஐயன் முனியும் - இராமபிரான் நம்மை வெறுப்பான்; நாம் போதும் என்று - நாம் போவோம் என்று சொல்லி, அரிதின் கொண்டுபோயினான் - அரிதாக அழைத்துச் சென்றான். (பரதன் என்ற எழுவாய் வருவிக்க).

'கைகேயியை நான் கொன்றிருப்பேன்; அது செய்யின் இராம பிரான் வெறுப்பான்; ஆதலால் அதனைக் கைவிட்டேன்; இப்போது இவளைக் கோபித்தால்கூட ஐயன் நம்மை வெறுப்பான் எனின் கொல்லுதல் தகுமோ? நீ நீதியெல்லாம் உணர்ந்தவனாதலால் இதனை ஓர்ந்து இச்செயலைக் கைவிடு' என்று சத்துருக்கனுக்கு அறிவுரை கூறி அவனை அழைத்துச் சென்றான். இதனால் பரதனுக்கு இராமபிரான் பக்கலில் உள்ள பக்தியின் அளவு புலப்படும். இப்போது சத்துருக்கனை விலக்காவிடின், அவன் கூனியைக் கொன்ற குற்றம் தன்னையும் சாருமாதலால், வெகுண்டும் என்னினும் என உளப்பாட்டுப் பன்மையாற் கூறினான்.

தன்னை அலங்கரித்துக்கொண்டு கூட்டத்தோடு வந்த கூனியைச் சத்துருக்கன் கண்டு அவளைச் சிட்சிக்கும்போது கைகேயி அவளுக்குப் பரிந்து வரவே அவளையும் அவன் கடிந்தானாக, அவள் அஞ்சிப் பரதனிடம் சரண் புகுந்தாளென்றும், பரதன் அவனை விலக்கினானென்றும் வான்மிகம் கூறும்.

இப்பாடல் பல பிரதிகளில் இல்லை.

(பி - ம்.) 1. முனியுமென்று.
2. வெகுள்வதென்னினிக்; மு. வேதனைக் கூனிதன்மேல் வெகுண்டிடில்.
4. போயினர். (56)

## இராமன் தங்கிய சோலையில் பரதன் தங்குதல்

995. மொய்பெருஞ் சேனையு முடிவின் மன்னரும்
கைகலந் தயலொரு கடலிற் சுற்றிட
ஐயனுந் தேவியு மிளைய வாளியும்
வைகின சோலையிற் றானும் வைகினன்.

மொய் பெரும் சேனையும் - நெருங்கிய பெரும்படைத்திரளும், முடிவு இல் மன்னரும் - அளவற்ற அரசர்களும், கைகலந்து - ஒன்று கூடி, அயல் - தன் பக்கலில், ஒரு கடலின் சுற்றிட - ஒரு கடலைப் போலச் சூழ்ந்திருக்க, (பரதன்), ஐயனும் - இராமபிரானும், தேவியும் - பிராட்டியும், இளைய ஆளியும் - இளைய சிங்கமான இலக்குவனும், வைகின - சோலையில் - (முன்னே) தங்கின சோலையில், தானும் வைகினன் - தானும் (அன்று) தங்கினன்.

இராமபிரான் காட்டுக்குப் புறப்பட்டபோது, தன்னைத் தொடர்ந்த நகரமக்களும் பிறருமான அனைவருடனும் அவன் நகர்ப்புறத்துச் சோலையொன்றில் தங்கினமையைச் சுமந்திரனால் அறிந்து, அவ்விடத்திலேயே பரதனும் அன்று தங்கினன்.

ஆளி: உவமையாகுபெயர்.

(பி - ம்.) 1. சேனையுமுரிஞாலமும், மூரித்தேர்களும், மூரிமாக்களும்.
2. கையயள்தனயனைக், கைபரந்தயலொரு; கடலிற்சுற்றுற.
3. இளையயானையும், அண்ணலும்.
4. வைகிய. (57)

## பரதன் அங்கே பொழுது நீத்த வகை

996. அல்லணை நெடுங்கணீ ரருவி யாடினன்
கல்லணை கிழங்கொடு கனியு முண்டிலன்
வில்லணை துயர்ந்ததோள் வீரன் வைகிய
புல்லணை மருங்கிற்றன் பொடியின் வைகினன்.

(பரதன்), அல் - அன்று இரவில், கண் அணே நெடு அருவிநீர் ஆடினன் - (தன்) கண்களில் தோன்றிப் பெருகிய பேரருவி போன்ற நீரில் மூழ்கியவனாய், கல் அணே கிழங்கொடு - மலேயில் உண்டாகும் கிழங்குகளோடு, கனியும் - பழங்களேயுங்கூட, உண்டிலன் - உண்ணுமல், வில் அணைந்து உயர்ந்த தோள்-வில்லேத் தழுவி அழகும் திண்மையும் மிக்க தோள்களேயுடைய, வீரன் வைகிய - இராமபிரான் படுத்திருந்த, புல் அணே மருங்கில் - புல் பரப்பிய படுக்கையின் பக்கத்தில், தான்—, பொடியின் வைகினுன் - புழுதியில் படுத்திருந்தான்.

இராமபிரான் முன்பு தங்கிய சோலேயிலே தானும் தங்கிய பரதன், அண்ணல் சயனித்த இடத்தைக் கேட்டறிந்து, அதனே மிதிக்கவும் அஞ்சி, அதன் பக்கத்தில் புழுதிபடிந்த வெறுந்தரையில் அன்றிரவைக் கழிக்கலானுன். அறுசுவை உண்டியை நீத்த அவன் கிழங்கும் கனியுங்கூட உண்ணுமல் பட்டினியோடு, கண்ணீர் பெருக்கிக் கொண்டிருந்தான் என அவனது துன்ப நிலேயைச் சிறப்பித்தார்; அதற்கேற்பக் கண்ணீர்ப் பெருக்கை அருவியாக உருவகித்து அவ்வருவியில் நீராடினுன் எனவும், நீராடினவன் யாதும் உண்டிலன் எனவுங் கூறினுர்.

ஆடினன், உண்டிலன்: முற்றெச்சங்கள்.

(பி. ம்.) 1. அல்லணேநெடுநதி.
2. உண்ணலன், உண்டனன்.
3. வில்லணேத்துயர்ந்ததோள், வில்லணேமருங்கிற்றன், மருங்கினன், மருங்கிள.
4. புல்லணே மருங்கினிற் றுனும் புல்லினுன். (58)

பரதன் ஊர்தியின்றி நடந்து சென்றமை

997. ஆண்டுநின் றுண்டகை யடியி னேகினுன்
ஈண்டிய நெறியெனத் தானு மேகினுன்
தூண்டிய தேர்களுந் துரக வெள்ளமும்
காண்டகு கரிகளுந் தொடரக் காலினே.

ஆண்டுநின்று - அவ்விடத்தினின்றும், ஆண்தகை-ஆண்மையிற் சிறந்த இராமபிரான், ஈண்டிய நெறி- (மேலே) நெருங்கிய (காட்டு) வழியில், அடியின் ஏகினுன் என - காலால் நடந்துசென்றுனென்று அறிந்து, தானும் - பரதனும், தூண்டிய தேர்களும் - தூண்டிச் செலுத்துந் தேர்களும், துரகம் வெள்ளமும் - அளவிறந்த குதிரைகளும், காண்தகு கரிகளும் - காணுதற்கினிய யானேகளும், தொடர - பின் தொடர்ந்துவர; காலினே ஏகினுர் - காலாலே நடந்து சென்றுன்.

இராமபிரான் அச்சோலேயிலிருந்து புறப்பட்டுக் காட்டு வழியிற் சென்றபோது, ஊர்திகள் எவையும் இல்லாமையால் காலால் நடந்து

சென்றான். ஆதலின் பரதனும் அவ்வாறே நடந்தான். இதனாலும் அவன் இராமபிரான்பால் வைத்துள்ள பெருமதிப்புப் புலனாகும். குதிரைகளின் மிகுதிபற்றி 'வெள்ளம்' என்றார். படைகளுட் சிறந்தது யானைப் படையாகலின் 'காண்டகு கரிகள்' என விசேடித்தார்.

இதன்பின் ஒரு பிரதியில் 'பரதன் எழுச்சிப் படலம் முற்றும்' என்று காணப்படுகிறது.

(பி - ம்.) 1. எய்தினான், நோக்கினான்; அடிகொடே நடந்து.
3. தூண்டிடு; தரகராசியும், தரங்கராசியும். (59)

ஆறுசெல் படலம் முற்றும்.

# 12. கங்கைகாண் படலம்

கங்கையைப் பரதனும் பிறரும் காணும் படலம் என இதன் பொருள் விரியும்.

பரதன் இராமபிரானைக் காணும் பொருட்டுச் சேனையும் பரிவாரமும் சூழ அயோத்தியினின்றும் புறப்பட்டுச் சென்று கங்கையின் வடகரையை அடைந்து, அங்கிருந்து குகனது உதவியால் கங்கையைக் கடந்து தென்கரை சேர்ந்து, அங்கிருந்து போய்ப் பரத்துவாசனது ஆச்சிரமம் அடைந்தது வரை உள்ள செய்திகள் இப்படலத்துட் கூறப்படும். குகன் முதலில் பரதனை ஐயுற்றதும், பின்பு அவனது உண்மை நிலை அறிந்து வருந்தி அவனோடு மனங்கலந்த நட்புக்கொண்டு அவனுடைய பரிவாரங்களுடன் கங்கையைக் கடக்க உதவியதும் கூறும் பகுதி மிகச் சிறந்ததாகும்.

பெரும்பான்மையான அச்சுப் புத்தகங்களில் 'குகப் படலம்' என்பது இப்படலத்தின் தலைப்பாக உள்ளது.

பரதன் சேனையுடன் கங்கையை அடைதல்

(கலிவிருத்தம்)

998. பூவிரி பொலன்கழற் பொருவி றானையான்
காவிரி நாடன்ன கழனி நாடொரீஇத்
தாவர சங்கம மென்னுந் தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை யெய்தினான்.

பூ விரி - பொலிவுமிக்க, பொலன் கழல் - பொன்னாலாகிய வீரக் கழலை அணிந்தவனும், பொரு இல் தானையான் - ஒப்பில்லாத பெரும் படையை உடையவனுமான பரதன், காவிரி நாடு அன்ன - காவிரி பாயும் வளமிக்க புனல் நாட்டைப்போன்ற, கழனி நாடு ஒரீஇ - வயல்கள் நிறைந்த கோசலநாட்டெல்லையைக் கடந்து, தாவரம்-நிலைத் திணையும், சங்கமம் - இயங்கு திணையும், என்னும் - என்று சொல்லப் படுகிற, யாவையும் - எல்லாப் பொருள்களும், இரங்கிட - (தன் நிலையைக் கண்டு) இரங்குமாறு (சென்று), கங்கை எய்தினான்-கங்கைக் கரையை அடைந்தான்.

பரதனுடைய துயரநிலை கண்டோர் எவரும் இரங்குமாறு இருந்த தென்பார், உலகில் உள்ள சர அசரப் பொருள்களாகிய எல்லாம் இரங்க என்றார். தாவரம் - ஸ்தாவரம்; நிலைத்திணை. சங்கமம்-ஜங்கமம்; இயங்குதிணை. குகன் பரதனைக் காணுமிடத்து, "கற்கனியக் கனிகின்ற

துயரானைக் கண்ணுற்றான்" (1026) என்கின்றார். ஊர்தியின்றி நடந்தே சென்றதனால், அவனை யாவரும் எளிதிற் காணவும் இரங்கவும் ஏது வாயிற்று. கோசல நாட்டுக்குக் காவிரி நாட்டை உவமை கூறுதலின், கம்பரது பிறந்தநாட்டுப் பற்றுப் புலனாகும்.

பூவிரி - பூ வேலைப்பாடு மிக்க என்றுமாம்; "பூவரு பொலன்கழற் பொருவின் மன்னவன்" (5).

(பி - ம்.) 1. பூவரு; பொலங்கழல்; புனைவிற்றானையான், பொலியுந்தானையான், பொருவில்தாளினான், பொலியுந்தாளினான்.
2. கழனிநாடுபோய்த்.
3. தன்மையாம்.
4. யாவருமிரங்கிடக். (1)

## சேனையிலுள்ள யானையின் மிகுதி

999. எண்ணருஞ் சுரும்புதம் மினத்துக் கல்லது
கண்ணகன் பெரும்புனற் கங்கை யெங்கணும்
அண்ணல்வெங் கரிமதத் தருவி பாய்தலால்
உண்ணவுங் குடையவு முரித்தன் றாயதே.

கண் அகல் - இடம் அகன்ற, பெரும் புனல் - மிக்க நீரையுடைய, கங்கை எங்கணும்-கங்கையாற்றின் எல்லாத் துறைகளிலும், அண்ணல்- பெருமை வாய்ந்த, வெம் கரி - வெவ்விய யானைகளின், மதம் அருவி பாய்தலால் - மதநீர் அருவிபோலப் பாய்ந்து (நீரோடு) கலத்தலால் (அவ்வாறாகிய நீர்), எண்ண அரு சுரும்பு இனத்துக்கு அல்லது- அளவற்ற வண்டின் கூட்டத்துக்கல்லாது, உண்ணவும் குடையவும் - (மக்கள்) பருகவும் முழுகவும், உரித்து அன்று ஆயது - தகுதியற்ற தாயிற்று.

ஏ : ஈற்றசை.

இதனால், பரதனோடு வந்த யானைகளின் மிகுதி கூறியவாறாயிற்று. வண்டுகள் யானை மதத்தை விரும்பியுண்ணுமாதலால், அது கலந்த நீரையும் அவ்வாறு உண்ணும். மதநாற்றத்தாலும், தூய்மையற்றதனாலும் அந்நீர் மக்கள் பருகவும் முழுகவும் தகுதியில்லாததாயிற்று.

குடைதல் - முழுகுதல். தம் : சாரியை.

(பி - ம்.) 1. சுரும்புதன்; மு. அண்ணரிதாஞ்சுரும் பினத்திற்கல்லது.
3. அண்ணல்தன்கரி, அண்ணலங்கரி.
4. ஆயவே. (2)

## குதிரைகளின் மிகுதி

1000. அடிமிசைத் தூளிபுக் கடையத் தேவர்தம்
முடிமிசைப் பரந்ததோர் முறைமை தேர்ந்திலேம்
நெடிதுயிர்த் துண்டவு நீந்தி நின்றவும்
பொடிமிசைப் புரண்டவும் புரவி யீட்டமே.

நெடிது உயிர்த்து - பெருமூச்செறிந்துகொண்டு, உண்டவும் (நதியின் நீரை) உண்டனவும், நீந்தி நின்றவும் - (நதியில்) நீந்திக் கொண்டிருந்தனவும், பொடிமிசை புரண்டவும்-(தரையில்) புழுதியிலே புரண்டனவும் (ஆகிய), புரவி ஈட்டம் - (சேனையில் உள்ள) குதிரை களின் கூட்டம், அடிமிசை தூளி அடைய புக்கு - (அவற்றின்) கால் களால் எழுந்த புழுதி முழுவதும் போய், தேவர்தம் முடிமிசை பரந்தது ஓர் முறைமை - தேவர்களுடைய முடிகளிலே பரவிப் படிந்ததொரு செய்தியை, தேர்ந்து இலேம் - (நேரே) அறிந்தோம் இல்லை.

ஏ : அசை.

குதிரைகள் வழிவந்த களைப்புத் தீர நீரைப் பருகிக்கொண்டும், நீந்திக்கொண்டும், தரையில் புரண்டுகொண்டும் பலவாருக இருந்தன; ஆயினும், முன்பு அவை நடந்துவரும்போது எழுந்த தூளி வானை அளாவப் பரவி, அங்கே தேவர்களின் முடிகளில் படிந்திருக்க லாமென்று ஊகிக்கும்படி இருந்தது. அதனை நேரே கண்டறிய வியலா தன்றோ என்றது, குதிரைகளின் மிகுதியைக் குறித்தபடி. தேர்தல் - அறிதல்.

(பி - ம்.) 1. அடியுறத்தூளி மற்றடைந்த, அடிமிசைத்தூளிபுக் கடைந்த; வானவர்.
2. முடியுறப் பரந்ததோர், புகுந்ததோர், புனைந்ததோர், படர்வதோர், பாய்ந்ததோர்; தேர்ந்திலம் தோய்ந்தில, தோய்ந்திலா; நேர்தர, நோக்கித்தான்.
3. நீந்தி நின்றவை.
4. பொடியிடைப் புரண்டதப். (3)

### கங்கையின் நிலை

1001. பாலையேய் நிறத்தொடு பண்டு தான்படர்
ஓலையேய் நெடுங்கட லோடிற் றில்லையால்
மாலையேய் நெடுமுடி மன்னன் சேனையாம்
வேலையே மடுத்ததக் கங்கை வெள்ளமே.

மாலை ஏய் நெடு முடி மன்னன் - மாலை பொருந்திய பெருமைமிக்க முடியணிந்த தசரத சக்கரவர்த்தியின், சேனை ஆம் வேலையே-பெரும் படையாகிய கடலே, அ கங்கை வெள்ளம் மடுத்தது - அந்தக் கங்கை நீர் முழுதும் குடித்துவிட்டது; (அதனால் அந்த நீர்) பாலை ஏய் நிறத் தொடு - பாலைப்போன்ற வெண்ணிறத்தோடு, பண்டு தான் படர் - முன்னே தான் ஓடிச் சேர்வதான, ஓலை ஏய் நெடு கடல் - ஒலியை உடைய பெருங்கடலில், ஓடிற்று இல்லை - (அன்று) ஓடிச் சேரவில்லை.

ஆல், ஏ: அசை.

இயல்பாக ஓடிக் கடலில் கலக்கும் கங்கையின் நீரை அன்று சக்கரவர்த்தியின் சேனைத்திரளாகிய மற்றொரு கடல் குடித்துவிட்ட

தனுல், நீர் கடலை எட்டாததாயிற்று. நீர் ஓடிக் கடலோடு கலத்தற்கு மாருகக் கடல் வந்து நீரைக் குடித்ததென்றது நயம். இதில் சேனை என்றது காலாட்படையைக் குறிக்குமென்பாரும் உளர். கங்கைநீர் வெண்ணிறமுடையதாதலின் 'பாலையேய் நிறத்தொடு' என்ருர். நில வொளி பாய்தலால் வேறு பல ஆறுகளும் கங்கை போல் ஆயின (பால. 1041) என்ருர் முன்னே. ஓல் - ஒலி.

(பி - ம்.) 2. *நீலயேய்; நிறத்தொடு; ஒடிற்றில்லையாம், நீடிற்றில்லையால், நீட்டிற்றில்லையாம்; மு. ஓலவா ரியினிடை யோடுகிற்றில;*
3. *மாலைசேர்; வரதன் சேனையாம், பரதன்சேனையாம்.*
4. *மடுத்தது.* (4)

### சேனையின் அளவு

1002. கான்றலை நண்ணிய காளை பின்படர்
தோன்றலை யவ்வழி தொடர்ந்து சென்றன
ஆன்றவ ருணர்த்திய வக்கு ரோணிகள்
மூன்றுபத் திரட்டியா யிரத்தின் முற்றுமே.

கான்தலை நண்ணிய - காட்டை அடைந்த, காளைபின் - இராமபிரானுக்குப் பின்னே, படர் - (அக்காடு நோக்கிப்) போதலுற்ற, தோன்றலை - பரதனை, அ வழி - அப்போது, தொடர்ந்து சென்றன - பின்பற்றிச் சென்ற படைகள், ஆன்றவர் உணர்த்திய - பெரியோர்கள் (மகாசக்கரவர்த்திக்கு உரியனவென்று) சொல்லிய, மூன்று பத்து இரட்டி ஆயிரம் அக்குரோணிகள் முற்றும் - அறுபதினுயிரம் அக்குரோணியளவாக நிறையும்.

ஏ : அசை.

மகாசக்கரவர்த்திகளுக்கு மந்திரிமாரின் எண் முதலிய பலவும் அறுபதினுயிரமெனக் கூறல் மரபாகலின், 'ஆன்றவர் உணர்த்திய' என்ருர். மூன்று பத்து - முப்பது; அதன் இரட்டி-அறுபது; அதனேடு தொடர்ந்த ஆயிர - அறுபதினுயிரம். அக்குரோணி: அக்ஷௌஹிணீ என்ற வடசொல்லின் சிதைவு. பத்தின் இரட்டி - இருபது; மூன்று இருபது - அறுபது எனவுமாம். அக்குரோணி ஒன்றுக்கு அளவு: தேர் : 21870; யானை: 21870; குதிரை: 65610; (யானையைப்போல மூன்று மடங்கு); காலாள்: 109350: ஆக மொத்தம் : 218700. இதனுல், தயரத சக்கரவர்த்திக்கு உரியனவாயிருந்த படைகள் முழுதும் பரதனைத் தொடர்ந்து சென்றன என்பதாயிற்று. காளை : உவமையாகு பெயராய் இராமபிரானைக் குறித்தது. தோன்றல் - ஆண்களிற் சிறந்தோன்; பரதன்.

(பி - ம்.) 1. *கான்றனில், கான்றனை; பின்றொடர்.*
2. *சென்றவை, சென்றுள.*
4. *மூன்று பத்தாயிரத்திரட்டி, மூன்றுபத்திரட்டியாயிரத்து.* (5)

**படையைக் கண்ணுற்ற குகன் செயல்**

1003. அப்படை கங்கையை அடைந்த வாயிடைத்
துப்புடைக் கடலினீர் சுமந்த மேகத்தை
ஒப்புடை யண்ணலோ டுடற்ற வேகொலாம்
இப்படை யெடுத்ததென் றெடுத்த சீற்றத்தான்.

அ படை - (பரதன்பின் வந்த) அந்தப் பெரும்படையானது, கங்கையை அடைந்த ஆயிடை - கங்கையின் வடகரையை அடைந்த அப்போதே, (அதனைப் பார்த்து) துப்பு உடை (ய)-பவளத்தையுடைய, கடலின் நீர் சுமந்த - கடல் நீரை (உண்டு) தாங்கிய, மேகத்தை ஒப்பு உடை(ய)-கருமேகத்தை யொத்த, அண்ணலோடு-இராமபிரானுடன், உடற்றவே - போர் செய்வதற்கே, இ படை எடுத்தது கொல் என்று - இப்படை ஏன்று வந்துள்ளது போலும் என்று கருதி, எடுத்த சீற்றத் தான் - மேலிட்ட சினமுடையவனாய்.

இதுமுதல் ஆறு கவிகள் ஒரு தொடர்; பரதனது படையைக் கண்டு சினமூண்ட குகனுடைய எண்ணங்களையும் செயல்களையும் கூறுவன. இராமபிரான்பாலுள்ள பேரன்பால் குகன், பரதனுடைய படையைக் கண்டவுடன், ‘இராமபிரானைப் பொருது அழிப்பதற்கே இப்படை வந்துளது போலும்’ என்று மாறாகக் கருதிப் பெருஞ்சினங் கொண்டு, அதனைத் தடுத்து அழித்துவிட எண்ணி அதற்குரியன செய்யலானான்; அவை மேலே ஐந்து கவிகளாற் கூறப்படும்.

ஆம்: அசை. துப்புடைய என்றது கடலுக்கு அடை. துப்பு - நுகர் பொருள்களுமாம்.

(பி - ம்.) 3. அண்ணலொடுருத்தவே, அண்ணலோடமருக்கே,
4. இப்படையெனமனத். (6)

1004. குகனெனப் பெயரிய கூற்றி னாற்றலான்
தொகைமுரட் சேனையைத் துகளி னோக்குவான்
நகைமிகக் கண்கடீ நாற நாசியிற்
புகையுறக் குனிப்புறும் புருவப் போர்விலான்.

குகன் என பெயரிய - குகன் என்ற பெயரையுடைய, கூற்றின் ஆற்றலான் - எமனைப்போன்ற வலிமையுடையவன், தொகை முரண் சேனையை - தொகைப் பெருக்கும் வலியும் உடைய அப்படையை, துகளின் நோக்குவான் - தூசிபோல (அற்பமாக) மதித்து, நகைமிக - (சினத்தால் ஆன) சிரிப்புத் தோன்ற, கண்கள் தீ நாற-கண்களில் தீப் பொறி தோன்ற, நாசியில் புகை உற - மூக்கில் (அச்சினத்தீயின்) புகை உண்டாக, குனிப்பு உறும் - வளைதலுற்ற, புருவம் - புருவங்களாகிற, போர் வில்லான் - (ஒன்றையொன்று) நெருங்கிய இரு விற்களை உடையவனானன்.

இதனால், குகனிடத்துச் சினத்தால் தோன்றிய மெய்ப்பாடுகள் கூறப்பெற்றன. சினத்தைத் தீயாக உருவகித்து, புகையோடு கூடிய அத்தீ, கண்களாலும் மூக்காலும் வெளிப்பட்டது என்றார். புருவங்களை வில்லாகக் கூறி, அவை வளைந்து மேலேறி ஒன்றையொன்று நெருங்கிக் காணப்பட்டன என்றார்.

(பா-ம்.) 1. குகனெனும் பெயரினன், குகனெனப்பெயரியல், பெயருடைக், பெரியதோர்; கொற்றவேலினன்.
2. தொகையுடைச்; நோக்கிவால், நோக்கினன்.
3. தீகான்ற.
4. புகையுகக், புகைபுகக், புகைமிகக், புகைபெறக்; புருவக்கோணினன், கோளினன், கோளனன். (7)

1005 மையுற வுயிரெலா மிறுதி வாங்குவான்
கையுறு கவரயில் பிடித்த காலன்றான்
ஐயைந்நூ றுயிர முருவ மாயின
மெய்யுறு தானையான் வில்லின் கல்வியான்.

(அக்குகன்) மை உறவு உயிர் எலாம் - குற்றமுடைய உயிர்களையெல்லாம், இறுதி - (அவற்றின் ஆயுள்) முடிவில், வாங்குவான் - கவர்தற் பொருட்டு, கை உறு - கையில் பொருந்திய, கவர் அயில் - முத்தலைச் சூலத்தை, பிடித்த - தாங்கிய, காலன்தான் - எமனே, ஐ - அழகிய, ஐ நூறுயிரம் உருவம் ஆயின-ஐந்து நூறுயிரம் (ஐந்திலக்கம்) உருவம் கொண்டாற்போன்ற, மெய் உறு உடலமைப்புடைய, தானையான் - காலாட்படைகளை உடையவன்; வில்லின் கல்வியான் - விற்றொழிற் பயிற்சி மிக்கவன்.

குகன், தன் குறிப்பின்படி நடக்க வல்ல வில்வீரரான ஐந்திலக்கம் பேர்களைக் கொண்ட காலாட்படையை உடையவன்; தானும் விற்றொழிலில் வல்லவன் என்கின்றது இக்கவி. அப்படைவீரர்களில் ஒவ்வொருவனும் யமனே உருவெடுத்து வந்தாற்போன்ற தோற்றமும் ஆற்றலும் உடையவன். "ஐயிரு பத்தோடைந் தாயிர ருளராணை, செய்குநர் சிலைவேடர் தேவரின் வலியாரால்" (677) என இப்படைவீரர் தன்மையைக் குகன் கூறினமை நோக்குக. மையுறவு - குற்றம் பொருந்துதல். உயிர்களுக்கு விதித்த இறுதிக்காலத்தைப் பார்த்திருந்து, அக்காலத்திலேயே அவற்றைக் கவர்பவனுதலால், 'இறுதி வாங்குவான்' என்றார். "சாற்றுநா ளற்ற தெண்ணித் தருமம் பார்த்தேற்றும் விண்" (பால: 398): "காலனுங் காலம் பார்க்கும்" (புறநா: 41: 1) என்பன காண்க.

(பா-ம்.) 1. எய்யுறும்; இறுதியாக்குவான், இறுத்துவாங்குவான்.
2. கையுறை; கவரயிற் காலனென்னும்பேர், கவரயிற்கால காலனென்று.

3. ஐயிரண்டாயிரம், ஐயிருநூறுபத்து, ஐயிருபத்து நூறு, ஐயுறுமாறுதான், ஐயுறு மாற்றத்தான், ஐயுறு முருவினன், உருவமாயினன், உருவ மாறினன்; ஆயிரம் பெயர், அமரின்மோதுறும்.
4. மெய்யொரு தானையான். (8)

1006. கட்டிய சுரிகையன் கடித்த வாயினன்
வெட்டிய மொழியினன் விழிக்குந் தீயினன்
கொட்டிய துடியினன் குறிக்கும் கொம்பினன்
கிட்டிய தமரெனக் கிளருந் தோளினன்.

(அத்தகைய குகன்) அமர் கிட்டியது என - போர்கிடைத்தது என்று, கிளரும் தோளினன் - பூரித்த தோள்களை உடையவனாய், கட்டிய சுரிகையன் - உடைவாளை (இடையில்) கட்டி, கடித்த வாயினன் - வாயைக் கடித்து, வெட்டிய மொழியினன் - வெட்டுதல் போன்ற வீரமொழிகளைக் கூறி, விழிக்கும் தீயினன் - தீயெழ விழித்து, கொட்டிய துடியினன் - துடிப்பறையைக் கொட்டி, குறிக்கும் கொம்பினன் - ஊதுகொம்பை ஊதி.

இது, அடுத்த பாடலில் வரும் 'கூவினன்' என்பது கொண்டு முடியும். குகன், தான் போருக்கு ஆயத்தமாகித் தன் படையைக் கூட்ட முற்பட்டமை கூறுகின்றது இது. வாய் கடித்தல் - பல்லால் உதட்டைக் கடித்தல்; பற்களை நெறு நெறெனக் கடித்தலுமாம். வெட்டிய மொழி : சொல்லின் கடுமை குறித்தது. வாய் கடித்தலும் தீயெழ விழித்தலும் சினக் குறிப்பு. துடி கொட்டலும், கொம்பூது தலும் படையினரை அழைத்தற்கு. போரில் விருப்பமும், அது கிட்டிய போது தோள் பூரித்தலும் வீரர் இயல்பு; "போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொ டிண்டோள், மாரன் னனையான்" (பால. 984) என்பதும் அதன் விசேடக் குறிப்பும் பார்க்க; "செருவேட்டுச் சிலைக்குஞ் செங்க ணுடவர்" (அகநா. 157:4); "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்" (புறநா : 31); "செருவென்ற மாற்றங் கேட்டுச் சிந்தையி னுவகை பொங்க,...வாகுபூ தரமும் பூரித்து" (வி. பா. நிவாத. 17); "பொருமாறிற் கிளர் தடந்தோள்" (திருவிளை. கடவுள். 12).

(பி - ம்.) 1. கறித்த.
2. வெட்டிய சொல்லினன்; விழிக்கட்டியினன், விழிக்குந்தியவன், விரிக்குந்தியினன்
4. கிளர்ந்த. (9)

1007. எலியெலா மிப்படை யரவம் யானென
ஒலியுலாஞ் சேனையை யுவந்து கூவினன்
வலியுலா முலகினில் வாழும் வள்ளுகிர்ப்
புலியெலா மொருவழிப் புகுந்த போலவே.

இ படை எல்லாம் எலி - இப்படை முழுதும் எலிகள், யான் அரவம் - நான் (அவ்வெலிகளையுண்ணும்) பாம்பு, என உவந்து - என்று மகிழ்ச்சி கொண்டு, ஒலி உலாம் சேனையை - ஆரவாரம் பொருந்திய (தன்) படையை, கூவினன் - அழைத்தானாக, உலகினில் வாழும் - உலகத்தில் வாழ்கின்ற, வலி உலாம் - வலிமை மிக்க, வள் உகிர் புலி எல்லாம் - கூரிய நகங்களையுடைய புலிகளெல்லாம், ஒரு வழி புகுந்தபோல - ஓரிடத்தில் (வந்து) கூடினபோல.

ஏ: அசை.

இதுவும் அடுத்த பாட்டும் குளகம்.

குகன், தன் வலிமையும் வீரமும் தோன்ற, 'இவையெல்லாம் எலி; நான் நாகம்' என்றான். "எலிப்பகை, நாக முயிர்ப்பக் கெடும்" (குறள் 763); "தொகை முரண்சேனையைத் துகளின் நோக்குவான்" (1004) என முன்னும் அப்படையை இழிவாக எண்ணினன். புலியெலாம் ஒருவழிப் புகுந்தபோல, ஒருங்கடை நெடும்படை (1008) என இயையும். வீரர்களுக்குப் புலி தொழிலால் உவமை. உலாம்: செய்யுமென் எச்ச ஈற்றயல் உயிர்மெய் கெட்டது.

(பி - ம்.) 2. உமையிற், உளைவிற், ஒல்லை கூயினன்.
4. புகுந்தவென்னவே, புகுந்ததென்னவே, புகுந்தபோன்றவே. (10)

1008. மருங்கடை தென்கரை வந்து தோன்றினன்
ஒருங்கடை நெடும்படை யொல்லெனார்ப்பினோ
டருங்கடை யுகந்தனி லசனி மாமழை
கருங்கடல் கிளர்ந்தெனக் கலந்து சூழவே.

ஒருங்கு அடை நெடும் படை - ஒருங்கு திரண்ட பெரும்படையானது, அரு கடையுகம் தனில் - (உயிர்கள் பிழைத்தற்கு) அரிய யுக முடிவுக் காலத்தில், அசனி மா மழை - இடியோடு கூடிய கரிய மேகங்களும், கரும் கடல் - பெரிய கடல்களும், கிளர்ந்த என - பொங்கி எழுந்தாற்போல, ஒல் என் ஆர்ப்பினோடு - பேரிரைச்சலோடு, கலந்து சூழ - (தன்னைச்) சார்ந்து சூழ்ந்துகொள்ள (அப்படையோடு), மருங்கு அடை - அருகில் உள்ள, தென்கரை வந்து தோன்றினன் - (கங்கையின்) தென்கரையில் வந்து நின்றான்.

ஏ: ஈற்றசை.

(1007) சேனையைக் கூவினனாக, புலியெலாம் ஒருவழிப் புகுந்த போல, (1004) ஒருங்கு அடை நெடும்படை, கலந்து சூழ, வந்து தோன்றினன் என முடிக்க.

படையில் ஒலி, வீரர்களின் வீர வார்த்தைகளால் எழுவது; அவ்வொலிக்கு யுகாந்த காலத்து மேக முழக்கத்தையும், கொந்தளிக்கும் கடலின் ஆரவாரத்தையும் உவமை கூறினர்.

ஒல் : ஒலிக்குறிப்பு. பரதன் படைகளோடு தங்கியவிடம் கங்கையின் வடகரை; அதற்கு நேரெதிரே தென்கரையில் குகன் தன் படைகளோடு வந்து நின்றான்.

(பி - ம்.) 1. மருங்குடைத், தோன்றினர்.
2. ஒருங்குடன், ஒருங்குடை, ஒல்லெனார்ப்பினன்.
3. புகந்தனின், புகத்தினில், உலகத்தில்; அசனியார்மழை.
4. பரந்தெனக்; சுற்றவே. (11)

1009. தோன்றிய புளிஞரை நோக்கிச் சூழ்ச்சியின்
ஊன்றிய சேனையை யும்ப ரேற்றுதற்
கேன்றனெ னென்னுயிர்த் துணைவற் கீகுவான்
ஆன்றபே ரரசுநீ ரமைதி ராமென்றான்.

(குகன்), தோன்றிய புளிஞரை நோக்கி - (தன்னைச் சூழ) நின்ற வேடர்களாகிய படைவீரரைப் பார்த்து, என் உயிர் துணைவற்கு - என்னுயிர்த் தோழனான இராமபிரானுக்கு, ஆன்ற பேர் அரசு - (உரிமையாக) அமைந்த பெரிய இராச்சியத்தை, ஈகுவான் - (நிலையாக்கித்) தரும்பொருட்டு, சூழ்ச்சியின் ஊன்றிய சேனையை - (அரசைக் கெடுக்கும்) சூழ்ச்சியோடு வந்து (எதிரில்) ஊன்றியுள்ள சேனையை, உம்பர் ஏற்றுதற்கு ஏன்றனென் - விண்ணுலகில் ஏற்றுதற்கு அமைந்து நின்றேன்; நீர் அமைதிர் என்றான் - நீங்களும் (அதற்கு) ஆயத்தமாகுங்கள் என்றான்.

'இராமபிரான் பதினான்காண்டுகள் கழித்துத் திரும்பிவந்து அரசைக்கொள்ள இடமின்றி, இப்போதே அவனைத் தொலைக்கும் சூழ்ச்சியோடு இப்படை வந்துளதாகலின், அது மேலே செல்லாதவாறு இங்கே அதனை அழித்துவிட நான் உறுதி பூண்டுள்ளேன்; அதற்கு நீங்களும் துணையாயிருந்து செய்து முடித்தல் வேண்டும்' என்று, படைகளை அழைத்ததன் காரணத்தைக் கூறினான் குகன்.

அமைதிராம்: ஆம், அசை.

(பி - ம்.) 1. புளினரை; சுட்டினன், சுட்டினான், சுற்றினான், சூட்டினான்.
3. இன்னுயிர்த்; ஈகுவன்.
4. ஆன்றபேருரிமைநீர், ஆன்றவோராசுநீர்; அமைதிர்போர்க்கென்றான், போர்க்கென, (12)

1010. துடியெறி நெறிகளுந் துறையும் சுற்றுற
ஒடியெறி யம்பிகள் யாவு மோட்டலிர்
கடியெறி கங்கையிக் கரைவந் தோர்களைப்
பிடியெறி படவெனப் பெயர்த்துங் கூறுவான்.

துடி எறி - போர்ப்பறையை முழக்கு; நெறிகளும் - வழிகளிலும், துறையும் - நீர்த்துறைகளிலும், சுற்றுற - எப்புறமும், ஒடி எறி - (வழியின்றி) மரம் முதலியவற்றை வெட்டிச் சாய்த்துவிடு; அம்பிகள் யாவும்

ஓட்டலிர் – ஓடங்கள் எவற்றையும் ஆற்றில் செலுத்தாதீர்கள்; கடி எறி-(பலவிடங்களிலும்) காவலை மிகுத்திடு; கங்கை இ கரை வந்தோர்களை - கங்கையின் இக்கரை வந்து சேர்பவரை, பிடி—; பட எறி-(அங்கேயே அழியும்படி) வெட்டு; எனு - என்று முழக்கி, பெயர்த்தும் கூறுவான் - மேலும் கூறுவான். அவை மேலே பத்துப் பாடல்களுள் வரும்.

வடகரையில் தங்கும் படையிலுள்ளார் ஒருவரும் தென்கரை சேரவும் மேலே செல்லவும் வழியின்றிச் செய்யுங்கள் என்பான், படையினருக்கு அதனை வகைப்படுத்திக் கூறுகின்றான் குகன். தனித்தனி உள்ளவர்களையும், கூட்டத்தினையும் பார்த்து மாறிமாறிக் கூறுதலின், ஒருமையே வலும், பன்மையேவலும் மயங்கி வந்தன. துடி - உடுக்கை; இங்கே போர்ப்பறைப் பொதுவைக் கருதியது. ஒடியெறிதல் - மரம் முதலியவற்றை வெட்டி வீழ்த்தி, வழியைத் தடை செய்தல். வலை வீசுதல் எனவும், கவணெறிதல் எனவும் சிலர் கூறுவர். கடி எறி - காவலான கரையை அழிக்கின்ற; மணம் வீசுகின்ற எனப் பொருள் கொண்டு, அதனைக் கங்கைக்கு அடையாக்கிக் கூறுதலுமாம். ஆற்றைக் கடக்க ஓடம் ஒன்றும் விடுதல் கூடாது என்று கூறி, எவரேனும் நீந்தியோ, வேறு வகையாலோ இக்கரை வந்தால் அவர்களைப் பிடித்து, அங்கேயே தாக்கிக் கொன்றுவிடு என்றும் கூறினான்- "ஆறு கடந்திவர் போவாரோ" (1012) என்பதும் காண்க. எறிதல் : கொட்டுதல், வெட்டுதல் என்ற பொருள்களில் வந்தது.

(பி - ம்.) 1. துடியறை; சுற்றிட.
2. ஓட்டன்மின், ஓடமோட்டலிர்.
3. கங்கையின் கரை, கங்கையிற்கரை.
4. பெயர்த்து கூறினான், (13)

குகன் கூற்று
(கலிநிலைத்துறை)

1011. அஞ்சன வண்ணனென் னுருயிர் நாயக னாளாமே
வஞ்சனை யாலரசெய்திய மன்னரும் வந்தாரே
செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ
உஞ்சிவர் போய்விடி னுய்க்குக னென்றெனை யோதாரோ.

அஞ்சனம் வண்ணன் – மை போலும் நிறமுடையவனும், என் ஆர் உயிர் நாயகன் - எனது அரிய உயிருக்குத் தலைவனுமான இராமபிரான், ஆளாமே - ஆள வொட்டாதபடி, வஞ்சனையால் அரசு எய்திய மன்னரும்-வஞ்சனையினால் அரசைக் கைப்பற்றிய அரசரும்; வந்தாரே- இங்கே வந்துவிட்டாரே; செம் சரம் என்பன-(என்னுடைய) செம்மையான அம்புகள், தீ உமிழ்கின்றன செல்லாவோ - தீயைக் கக்குவனவாய் (அவர்கள் மேல்) பாயாவோ? இவர் உஞ்சு போய்விடின் - இவர்கள் (என்னைத்) தப்பிப் போய்விட்டால், எனை நாய் குகன் என்று ஓதாரோ – என்னை நாயைப் போன்ற குகன் என்று (உலகத்தார்) இழித்துக் கூறமாட்டார்களோ?

பரதன், தன் தாயைத் தூண்டி, வரம் என்ற பெயரால் அரசை வாங்குவித்திருப்பான் என்பது குகன் கருத்தாகலின், 'வஞ்சனையால் அரசெய்திய மன்னர்' என்றான். மன்னர், வந்தார் என்று பன்மையிற் கூறியது இகழ்ச்சிக் குறிப்பு. அத்தகையவனை, நாமே அவனிருக்கும் இடம் சென்று அழித்தலினும், நமக்கு எளிதாக அவனே இங்கு வந்து விட்டான் என்பான் வந்தாரே என்றான். ஒருவனை இழித்துக் கூறு மிடத்து, 'நாய்' எனல் இயல்பாகலின், அவ்வாறு உலகத்தார் என்னை இகழ்ந்து கூறுவர் என்றான். நாய் நன்றி யுடையதாயினும், யார் யார் உணவு தருகிறார்களோ, அவர்களுக்கெல்லாம் வாலாட்டிப் பணிவது; அதுபோல இராமனைப் பணிந்த குகன் பரதன் கூறிய ஆசை வார்த்தை களால் அவனுக்கும் பணிந்தான் என்று உலகம் கூறுமே என்றான். படையெடுத்து வந்துள்ள பரதனையும் அவன் படைகளையும் நான் அழித்தே தீர்வேன் என்று குகன் வீரம் பேசியவை இது முதல் பத்துப் பாடல்களில் வரும். உஞ்சு : உய்ந்து என்பதன் போலி, அம்பு தீயு மிழுமென்றது அதன் கடுமை குறித்தது; இலக்கணை; "ஆயுத வாயுமிழ் பொங்கழலால்" (தக்க. 602).

(பி - ம்.) 1. ஆளாதே.
2. வந்தாரிச்.
4. உஞ்சவர், இஞ்சிவர்; போயிடின்; நாய்குகன் என்றெமை, நாயென வென்றனை, நாயெனவென்னையும். (14)

1012. ஆழ நெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ
ஏழைமை வேட னிறந்தில னென்றெனை யேசாரோ.

ஆழம் - மிக்க ஆழமும், நெடு திரை - பெரிய அலைகளும் கொண்ட, ஆறு கடந்து - இந்தக் கங்கையாற்றைக் கடந்து, இவர் போவாரோ - (என்னையும் மீறி) இவன் போய்விடுவானோ? நெடுவேழம் படை கண்டு - (இவனுடைய) பெரிய யானைப் படையைக் கண்டு, விலங்கிடும் வில் ஆளோ - (அஞ்சி) விலகிவிடத்தக்க வில்லாளனோ நான்? தோழமை என்று - நீ எனக்குத் தோழன் என்று, அவர் சொல்லிய சொல் - அவ்விராமபிரான் சொல்லிய வார்த்தை, ஒரு சொல் அன்றோ - ஒப்பற்ற (மாறுத) வார்த்தையன்றோ? (நான் இவர்களைப் போகவிடின்) ஏழைமை வேடன் - அறிவிலியாகிய இவ்வேடப் பயல், இறந்திலன் என்று - (இன்னும்) இறவாமல் இருக்கிறானேயென்று, எனை ஏசாரோ - (உலகத்தார்) என்னை இகழாரோ?

"என்னை ஒரு பொருளாக மதித்து, 'நீ என்னுயிர்த் தோழன்' என்று இராமபிரான் சொன்ன அந்த ஒரு வார்த்தையின்பொருட்டு'

உயிரைக் கொடுத்தேனும் இவர்களைத் தடுத்து அழிப்பது என் கடமை; அதை நான் செய்யாவிடில், உலகத்தாரின் இகழ்ச்சிக்கு ஆளாவேன்'' என்கின்றான், இவர்களைத் தடுத்து அழிக்கும் முயற்சியில் தோல்வியுற்று மானமிழக்க நேர்ந்தால், அப்போதே உயிர்விடக் கடவேன் என்பது அவனுட்கோள். அவனோடு இராமபிரான் தோழமை பாராட்டிய வகை 688-பார்க்க. இராமபிரான் சொன்ன சொல் மாறுதவனாதலின் அவன் கூறியதை ஒரு சொல் என்றான்.

(பி - ம்.) 1. ஆழநெடும்புனல்; கங்கை கடந்திவர்; போவாராம், போவாரேல்.
2. கண்டு நடுங்கிடும், நடுங்குறும்.
3. முன்னொரு சொல்லிய சொல்லுண்டே. (15)

1013. முன்னவ னென்று நினைந்திலன் மொய்புலி யன்னானோர்
பின்னவ னின்றன னென்றில னன்னவை பேசானேல்
என்னிவ னென்னை யிகழ்ந்ததிவ் வெல்லை கடந்தன்றோ
மன்னவர் நெஞ்சினின் வேடர் விடுஞ்சரம் வாயாவோ.

இவன் - இந்தப் பரதன், முன்னவன் என்று நினைந்திலன் - (இராமன் தனக்கு) முன் பிறந்த தமையன் என்று நினைந்தானில்லை; மொய்புலி அன்னான் ஓர் பின்னவன் - வலிய புலிபோல்வானொரு தம்பி (இலக்குவன்), நின்றனன் என்றிலன் - அவனைக் காத்து நின்றானென்பதையும் எண்ணினானில்லை; அன்னவை பேசானேல் - அவற்றையெண்ணாவிடினும், என்னை இகழ்ந்தது என் - என்னை அலட்சியம் செய்தது என்ன காரணம்? இவ்வெல்லை கடந்து அன்றோ - (அது செய்யத்தக்கது, என் ஆட்சிக்குட்பட்ட) இந்த இடத்தைக் கடந்த பிறகன்றோ? வேடர் விடும் சரம் - வேடர்கள் விடும் அம்பு, மன்னவர் நெஞ்சினில் வாயாவோ - அரசர் மார்பில் (போய்ப்) பாயாவோ?

'பரதன் தனக்கு அரசு நிலைபெறும் ஆசையால், தமையனென்றும் கருதாது இராமபிரானை அழிக்கத் துணிந்தாலும், இலக்குவன் இருக்கும்போது அவ்வெண்ணம் நிறைவேறுமா என்பதை எண்ணினானோ? அது கிடக்க, நானொருவன் இங்கிருப்பதை இவன் மறந்துவிட்டானா? அன்றி என்னைப் பொருட்படுத்தவில்லையா? அரசர் உயர்ந்தோர், வேடர் தாழ்ந்தோர் என்பதனால், வேடர் விடும் அம்பு அரசர்மேல் தைக்காதோ? நான் அதைப் பார்க்கிறேன்; இவனை அழித்தே தீர்வேன்' என்கின்றான் குகன். வாய்த்தல் - குறியை அடித்தல்; இங்கே தைத்தலைக் குறித்தது. பேசானேல் என்பதன் ஈற்றில் உம்மை விரிக்க.

(பி - ம்.) 1. முன்னவனென்ன.
2. என்றிலனன்னது, பின்னவனென்று நினைந்திலனன்னது; பேசானே, பேசாரோ, பேணானேல்.

3. என்னவன்; இகழ்ந்ததிவ்வேலே, இகழ்ந்து மிவ்வெல்லே, இகந்ததிவ் வெல்லே.
4. வேடர்நெடுஞ்சரம், வேடன் விடுஞ்சரம்; வாயாதோ. (16)

1014. பாவமு நின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமு மென்பவை மண்ணுல காள்பவ ரெண்ணுரோ
ஆவது போகவென் னுருயிர்த் தோழமை தந்தான்மேற்
போவது சேனையு மாருயி ருங்கொடு போயன்றே.

மண் உலகு ஆள்பவர் - பூமியை ஆளக் கருதும் அரசர்கள், பாவமும்-(தம் செயலால்) உளதாகும் பாவமும், நின்ற பெரும் பழியும் (அப் பாவச் செயலால் தோன்றி) நிலைக்கும் பெரும் பழியும், பகை நண் போடும்-இவர் பகை இவர் நட்பு என்பதும், ஏவமும் - (இவை பாராது செய்தலால் வரும்) குற்றமும், என்பவை - என்ற இவற்றையெல்லாம், எண்ணுரோ - எண்ணமாட்டார்களோ? ஆ - இஃதென்ன வியப்பு! அது போக - அது கிடக்கட்டும்! என் ஆர் உயிர் தோழமை - என் அரிய உயிர்போலும் நட்புரிமையை, தந்தான் மேல் - எனக்கு அளித்த என் தலைவன்மேல், போவது - (இவன் படையெடுத்துச்) செல்வது, சேனையும் - தன் சேனையையும், அரு உயிரும் - அரிய உயிரையும், கொடுபோய் அன்றே - அழியவிடாது காத்துக்கொண்டு போன பிறகன்றே?

'மண்ணுசை பிடித்த மன்னர், அவ்வாசையால், எத்தகைய தீங்கையும் எண்ணுது செய்வர் போலும்; பிறர் அவ்வாறு செய்யினும் இராமபிரான் பின்பிறந்தவர் செய்யத் தகாததை இவன் செய்யத் துணிந்துவிட்டான். அத்துணிவு நிறைவெய்துவது, இவன் தன் படையோடு என்னைத் தப்பிப் போனலன்றே ஆகும்? நான் அவ்வாறு போகவிடேன்' என்கின்றுன். தன்னை இராமபிரான் தோழமை பாராட்டியது, அவன் நெஞ்சில் ஆழப் பதிந்துள்ளது. ஏவம் - குற்றம்; "ஏவம் பாரராய்" (223).

(பி - ம்.) 2. என்பவை நீனுலகு, என்பதை மண்ணுலகு.
3. என்னுள் வினைத், ஆவதுவோவென தாள் வினை.
4. போயன்றே. (17)

1015. அருந்தவ மென்றுணை யாள விவன்புவி யாள்வானே
மருந்தெனி னன்றுயிர் வண்புகழ் கொண்டுபின் மாயேனே
பொருந்திய கேண்மை யுகந்தவர் தம்மொடு போகாதே
இருந்தது நன்று கழிக்குவெ னென்கட னின்றேடே.

என் துணை - என்னுயிர்த் துணைவனான இராமபிரான், அரு தவம் ஆள - செய்தற்கரிய தவத்தை மேற்கொள்ள, இவன் - இப் பரதன், புவி ஆள்வானே - (அரசனுகிப்) பூமியை ஆள்வானே? உயிர் மருந்து எனின் - உயிரானது அமுதம் போன்றது (விடத்தகாதது) என்றால்,

அன்று - (எனக்கு அவ்வாறு) அன்று; (ஆதலால்) வண்புகழ் கொண்டு - (என் கடமையைச் செய்தலால்) சிறந்த கீர்த்தியைப் பெற்று, பின் மாயேனோ - பின்பு இறக்கமாட்டேனோ? (அவ்வாறே செய்வேன்); பொருந்திய கேண்மை உகந்தவரொடு - (மனத்தொடு) பொருந்திய நட்பை (என்மாட்டு) விரும்பிய என் தலைவரோடு, போகாதே இருந்ததும் நன்று - (நான்) போகாமல் இருந்ததும் நல்லதாயிற்று; என் கடன் - என் கடமையை, இன்றேடே கழிக்குவென் - இன்றே செய்து முடிப்பேன்.

'அரசாளப் பிறந்த என் தலைவன் இராமபிரான் அதற்கு மாறுன தவம் மேற்கொள்ள, அரசுரிமை இல்லாத இவன் தவறுன முறையில் அரசைக் கைக்கொண்டு ஆள்வதோ? அதற்கு நான் இடங் கொடேன்; இவனைத் தடுத்து அழித்தலாகிய என் கடமையை இப்போது செய்து, அதனாலாகும் புகழைப் பெறுவேன்; உயிர்விட நேரின் அதற்கும் பின்னிடேன்' என்கின்றான். முன்னே இராம பிராளுேடு தானும் வனத்திற் செல்ல முற்பட்டு, அது அப்பிரானுல் தடையுண்டது குறித்து வருந்தியவன், இப்போது அதுவும் நல்ல தாயிற்றென்று மகிழ்கின்றான். தம்: சாரியை. கழிக்குவென் என்றதில் கு சாரியை. "மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை, பீடழிய வந்த விடத்து." (குறள், 968) என்பது இரண்டாம் அடியோடு ஒப்பிடத்தகும்.

(பி - ம்.) 1. மு. அருந்திற லென்றுணை யாள விவன்புவி யாளாதே.
2. மருந்தெனலன்று, மருந்தெனன்றுயர்; வன்பழி கொண்டுபின், மு. வருந்திற னன்றிவன் வாழுயிர் கொன்றினி மாயேனோ, வாழேனோ.
3. கேண்மையுவந்தவர், புணர்ந்தவர். (18)

1016. தும்பியு மாவு மிடைந்த பெரும்படை சூழ்வாரும்
வம்பிய ளூரிவர் வாள்வலி கங்கை கடந்தன்றோ
வெம்பிய வேட ருளீர்துறை யோடம் விலக்கீரோ
நம்பிமுன் னேயினி நம்முயிர் மாய்வது நன்றன்றோ.

தும்பியும் மாவும் மிடைந்த - யானைகளும் குதிரைகளும் நெருங்கிய, பெரும் படை சூழ்வு ஆரும் - பெரிய சேனை பொருந்திய, வம்பு இயல் தார் இவர் வாள் வலி - மணம் பொருந்திய மாலையணிந்த இப் பரதனது வாட்போர் வலிமை (பயன்படுவது), கங்கை கடந்து அன்றோ - இவன் கங்கையைக் கடந்து போனபின் அன்றோ? வெம்பிய வேடர் உளீர் - சினம் மிக்க வேடராக உள்ளவர்களே, துறை ஓடம் விலக்கீரோ - துறையிலுள்ள ஓடங்களை அகற்றீரோ? இனி - இப்போது, நம்பி முன்னே - இராமபிரானுக்கு முந்தியே, நம் உயிர் மாய்வது நன்று அன்றோ - நம் உயிர் அழிவது நல்லதன்றோ?

பரதனைப் படையோடு ஆறு கடந்து போகவிடலாகாதென் பதையே திரும்ப வலியுறுத்துகின்றான் குகன். முன்னே அம்பிகள் யாவும் ஓட்டலிர் என்றவன் அவ்வாறு ஓட்டாவிடினும், துறையில் ஓடம் ஏதும் இருப்பின் அவர்களே அதனைச் செலுத்திக்கொண்டு வருதல் கூடுமாகலின், அதற்கும் இடமின்றி அவற்றை அகற்ற விரைகின்றான். பரதனைத் தடுக்கும் முயற்சியில் வென்றாலும், தோற்று உயிரிழந்தாலும் புகழேயென்ற கருத்தைத் தன் படையினரும் கொள்ளும்படி, 'நம்முயிர் மாய்வது நன்றன்றோ' என்கின்றான்.

வாள்வலியைக் கூறினும், உபலட்சணத்தால் பிற படைவலியும் கொள்ளத் தகும். நம்பி முன்னே – நம்பிக்கு முன்னே.

(பி - ம்.) 1. நெடும்படை; சூழ்போதும்.
3. விலக்கிடுமின், விலக்கிடுவீர்;
4. மாள்வது, போவது; நன்றென்றான். (19)

1017. போன படைத்தலை வீரர் தமக்கிரை போதாவிச்
சேனை கிடக்கிடு தேவர் வரிற்சிலை மாமேகம்
சோனை படக்குடர் சூறை படச்சுடர் வாளோடும்
தானை படத்தனி யானை படத்திரள் சாயேனோ.

போன - (போர்த்துறையில்) முடிவுபோன, படைதலை வீரர்தமக்கு-நம் படையிலுள்ள சிறந்த வீரர்களுக்கு, இரை போதா - இரையாகதற்குப் பற்றாத, இ சேனை கிடக்கிடு – இந்தச் சேனை கிடக்கட்டும்; தேவர் வரின்- (பரதனுக்காகத்) தேவர்களே ஒன்று திரண்டு வந்தாலும், சிலை மா மேகம் - என் கை வில்லாகிய பெரிய மேகத்தினின்றும், சோனை பட - அம்பு மழை பொழிதலால், குடர் சூறைபட - (அப்படையிலுள்ளோர்) குடல்களெல்லாம் சிதறவும், தானை - காலாட்படை முழுதும், சுடர் வாளோடும் பட – (கையில் பிடித்த) ஒளி பொருந்திய வாட்களோடும் அழிந்தொழியவும், தனி யானை பட - சிறந்த யானைப் படையும் அழியவும், திரள் - (தேவர்களும் உட்பட) அத்திரள் முழுவதும், சாயேனோ - (நான் ஒருவனாகவே) அழித்துவிட மாட்டேனோ?

'நம்முயிர் மாய்வது நன்றன்றோ' என்றவன் தன் படைவீரரை ஊக்குவானாகி, 'நம் ஆற்றலுக்கு இப்படை சிறிது போதும் எதிர் நிற்க மாட்டாது; இதற்கு மேலும் தேவர்களே திரண்டு பரதன்பொருட்டுப் போரென்று வரினும், நானொருவனாகவே அவ்வனைவரையும் அழிக்க வல்லேன்; நீவிர் சிறிதும் அஞ்சன்மின்' என்கின்றான். போன படைத் தலைவர் என்பதற்குக் காட்டுக்குச் சென்ற படைவீரராகிய இராம இலக்குவர் எனலுமாம். இரை போதா இச்சேனையென்றது, படை வீரரை ஊக்குதற் பொருட்டு. கிடக்கிடு: வேடர் சொல் வழக்கு. வரின் என்பதன்பின் உம்மை விரிக்க. சிலை மேகம்: உருவகம்.

மேகம் என்பதற்கேற்பச் சோனை கூறினன். அம்பென்பது வருவித்து உரைக்கப்பெற்றது. சோனை - விடாமழை. குடர் : இறுதிப் போலி.

(பி - ம்.) 1. படைத்தொழில்.
2. வரிற்சில, வரிச்சிலையாமேகம், மாமேகம்,
4. யானைபடக்கடை, படத்தனி. (20)

1018. நின்ற கொடைக்கையெ னன்ப னுடுக்க நெடுஞ்சீரை
அன்று கொடுத்தவண் மைந்தர் பலத்தையெ னம்பாலே
கொன்று குவித்த நிணங்கொள் பிணக்குவை கொண்டோடித்
துன்று திரைக்கடல் கங்கை மடுத்திடை தூராதோ.

நின்ற கொடை கை—நிலைபெற்ற கொடை அமைந்த கையை யுடைய, என் அன்பன் உடுக்க - என் அன்புக்குரிய இராமபிரான் உடுக்குமாறு, நெடு சீரை அன்று கொடுத்தவள் மைந்தர் - பெரிய மர வுரியை முன்னே கொடுத்தவளான கைகேயியின் மகன் பரதனுடைய, பலத்தை - பெருஞ்சேனையை, என் அம்பாலே கொன்று குவித்த—, நிணம் கொள் பிணம்குவை-கொழுப்பைக் கொண்ட பிணக்குவியலை, கங்கை கொண்டு ஓடி - (இந்தக்) கங்கையாறு அடித்துக்கொண்டு போய், துன்று திரை - செறிந்த அலைகளையுடைய, கடலிடை மடுத்து - கடலிற் புகுத்தி, தூராதோ - (அக் கடலைத்) தூர்த்துவிடாதோ?

'திரள் சாயேனோ' எனத் தனதாற்றலைக் கூறிய குகன், அவ்வாறு என்னால் கொன்று குவிக்கப்படும் பிணக் குவியலைக் கங்கையீர்த்துச் சென்று கடலிடைப் புகுத்திக் கடலைத் தூர்த்துவிடும் என மற்றொரு வகையால், தான் சாய்த்தல் உறுதி என்பதனை மீண்டும் குறிக்கின்றான்.

இங்கே கைகேயியைச் சுட்டியுள்ள வகையும், அவள் மைந்தர் எனப் பரதனைப் பன்மையாற் சுட்டியதும் இகழ்ச்சிக் குறிப்பு. பலம் - சேனை. மூலபலம் என்ற வழக்கும், ''தன் பெரும் பலத்தைச் சார்ந்தான்'' (யுத்த. 128) என்பதும் காண்க.

(பி - ம்.) 1. கொடைக்கையனன்பன், படைக்கையென்னன்பன்; நெடுஞ்சீரம்.
4. துன்றுதிரக்கடல். (21)

1019. ஆடு கொடிப்படை சாடி யறத்தவ ரேயாள
வேடு கொடுத்தது பாரெனு மிப்புகழ் மேவீரோ
நாடு கொடுத்தவென் னுயக னுக்கிவர் நாமாளும்
காடு கொடுக்கில ராகி யெடுத்தது காணீரோ.

நாடு - (தான் ஆளுதற்குரிய) நாட்டை, கொடுத்த - (இவனுக்குக்) கொடுத்துவிட்ட, என் நாயகனுக்கு - என்னுயிர்த் தலைவனாகிய

இராமபிரானுக்கு, இவர் - இந்தப் பரதன், நாம் ஆளும் காடு (உம்) கொடுக்கிலர் ஆகி - வேடர் ஆளுதற்குரிய காட்டையும் (இருக்கக்) கொடுக்க மனமில்லாதவனாய், எடுத்தது காணீர் - படையெடுத்து வந்ததைப் பாரீர்; ஓ - என்ன கொடுமை ! (ஆதலால்), ஆடு கொடி படை சாடி - அசைகின்ற கொடிகளையுடைய இப்படையை அழித்து (அதன் மூலம்), பார் - நாட்டை, அறத்தவரே ஆள - அறத்தின் வடிவான இராமபிரானே ஆளும்படி, வேடு கொடுத்தது எனும் - வேட்டுவச் சாதி மீட்டுக் கொடுத்தது என்று (உலகோர்) சொல்லும், இ புகழ் - இவ்வுயர்ந்த புகழை, மேவீரோ - (நீங்கள்) அடையமாட்டீர்களோ? (அடையுங்கள் என்றபடி).

பின் இரண்டடிகளில் பரதனுடைய கொடுமையைச் சுட்டி, 'இக் கொடியவனைப் படையோடு நாம் அழித்தலால், இராமபிரானுக்குரிய அரசை அவனுக்கு நிலையிட்ட பெருமையும், அதனாலாகும் புகழும் நம்மைச் சாரும்' என்று தன் படைவீரரை ஊக்குகின்றான்.

அறத்தவரே: ஏகாரம், பிரிநிலை; ஆளுதற்குரியவன் பரதனல்லன், இராமபிரானே என்பது குறித்தது. வேடர் குலத்துக்கே அது பெருமையென்பான், 'வேடு கொடுத்தது எனும் இப் புகழ்' என்றான். நாமாளும் காடு என்றது, நம்முடைய ஆட்சிக்கு உட்பட்ட காட்டில் இவன் வந்து புகுந்து செயல் செய்தற்கு நியாயம் இல்லை என்ற குறிப்பை உடையது.

(பி - ம்.) 1. அறத்தவரே வாழ.
2. கொடுத்ததிப்பார்; மெய்ப்புகழ்.
3. கொடுத்தநம்; இவர்தாமாளக், நாமாளக், இனி நாமாளும்.
4. கொடுக்கிலனாகி, கொடுத்திலனாகி, கொடுத்திலராகி; எடுப்பது, அடுத்தது. மு. காடு கொடுத்தவராமிவரைக் கொலை காணிரோ. (22)

1020. மாமுனி வர்க்குற வாகிவ னத்திடை யேவாழும்
கோமுனி யத்தகு மென்று மனத்திறை கொள்ளாமே
ஏமுனை யுற்றிடி லேழு கடற்படை யென்றாலும்
ஆமுனை யிற்சிறு கூழென விப்பொழு தாகாதோ.

மா முனிவர்க்கு உறவு ஆகி - பெருமைமிக்க முனிவர்களுக்கு நட்புடையவனாகி, வனத்து இடை வாழும் கோ-காட்டில் வாழும் என் தலைவன் (இராமபிரான்), முனிய தகும் என்று-(இச்செயலை) வெறுக்கக் கூடுமென்று, மனத்து இறை கொள்ளாமே - என் மனத்தில் சிறிதும் (ஐயம்) கொள்ளாமல், ஏ முனை உற்றிடில் - நான் அம்பு செலுத்த முனைந்தால், ஏழு கடல் படை என்றாலும் - (இப்படையேயன்றி இன்னும்) ஏழுகடல்கள் போன்ற பெரும்படையானாலும், இ பொழுது- இப்போதே (மிக விரைவில் என்றபடி), ஆ முனையில் - பசு மேய

முனைந்தால், சிறுகூழ் என- (அதன் கண்ணிற்பட்ட) சிறிதளவேயுள்ள இளம் பயிர் (அழிவது)போல, ஆகாதோ - (அப்படை முழுதும்) ஆகிவிடாதோ? (அழிந்து போகாதோ என்றபடி).

இதுகாறும் கடுஞ்சினத்தால் வீரமொழி புகன்ற குகன் மனத்துள், 'தம்பியை அழித்தலால் இராமபிரானுக்கு நம்மீது வெறுப்பு உண்டாகுமோ' என்ற அச்சம் சிறிது தோன்றினமையை முதலிரண்டடிகள் புலப்படுத்தின. அவ்வச்சம் காரணமாகச் சிறிதும் தயங்காமல் நான் முனைந்தால் எத்துணைப் பெரும்படையையும் அழித்தல் அரிதன்று என்கின்றான். பரதன் தன் மனத்தில் சிறிதும் எண்ணாமல் அம்பை விடும் போர்முனையில் வந்தடைந்தால் என்பதும் ஒன்று. சிறிதளவேயுள்ள இளம்பயிர் பசியுடைய பசுவின் கண்ணிற் பட்டால், அதன் வாயாலும் கால்களாலும் அப்பயிர் மிக விரைவில் அழிதல் உறுதி. ஆ முனையின் - ஆவின் முன்னம் என்னலும் ஆம்.

(பி - ம்.) 1. உறவாக.
2. கொள்ளாதே, கொள்ளானேல், கொள்ளேமேல், கொள்ளேனேல்.
3. முனையுற்றிட, முனையுற்றிடின், முனையுற்றிவண்.
4. ஆமுனியிற்சிறு; கூழெனவிப்பகல், கூழெனவப்பொழுது, தூளெனவப்பொழுது. (23)

சுமந்திரன் பரதனுக்குக் குகனைப்பற்றி அறிவித்தல்

1021. என்பன சொல்லி யிரும்பன மேனிய ரேனோர்முன்
வன்பணை வில்லினன் மல்லுயர் தோளினன் வாள்வீரற்
கன்பனு நின்றன னின்றது கண்டரி யேறன்ன
முன்பனில் வந்து மொழிந்தனன் மூரிய தேர்வல்லான்

வல் பணை வில்லினன் - வலிய பெரிய வில்லையுடையவனும், மல் உயர் தோளினன் - மற்போரில் வல்ல உயர்ந்த தோள்களையுடையவனும், வாள் வீரற்கு அன்பன் - வாளேந்திய வீரனான இராமபிரான்பால் மெய்யன்புடையவனுமான குகன், இரும்பு அன்ன மேனியர் ஏனோர்முன் - இரும்புபோலும் உடம்புடைய ஏனைய வேட்டுவ வீரர்களெதிரில், என்பன சொல்லி - முன் கவிகளில் கூறியவற்றைச் சொல்லிக்கொண்டு, நின்றனன் —; நின்றது - (அவ்வாறு அவன்) நின்றதை, மூரிய தேர்வல்லான் கண்டு - வலிய தேரைச் செலுத்தலில் வல்ல சுமந்திரன் பார்த்து, அரி ஏறு அன்ன முன்பனில் வந்து - ஆண் சிங்கம் போலும் வலிமையையுடைய பரதனிடம் வந்து, மொழிந்தனன் - சொல்லலுற்றான்.

சுமந்திரன் குகனை முன்னமே அறிந்தவனாகலின், அவனைப்பற்றிப் பரதனிடம் கூறுகின்றான். அவன் கூறியவை மேலே இரண்டு கவிகளிற் கூறப்படும். நிறத்தாலும் வன்மையாலும் இரும்பு வேடருடம்

புக்கு உவமை. சுமந்திரனைத் தேர்வல்லான் என்று பலவிடத்தும் கூறுவர்.

(பி - ம்.) 2. வில்லின் மருங்குயர்; வாழ்வீரற்கு.
3. அரியேறன்னன், அரியேருகும், அரியேறுனன்.
4. முன்பினில்; வந்துரை முந்தினன்; மூதுணர்தேர்வல்லான். (24)

(தரவு கொச்சகக் கலிப்பா)

1022. கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
உங்கள்குலத் தனிநாதற் குயிர்த்துணைவ னுயர்தோளான்
வெங்கரியி னேறனையான் விற்பிடித்த வேலையினன்
கொங்கலரு நறுந்தண்டார்க் குகனென்னுங் குறியுடையான்.

கங்கை இரு கரை உடையான் - கங்கையின் இரு கரைகளிலு முள்ள நிலப் பகுதியைத் (தன் ஆட்சியில்) உடையவன்; கணக்கு இறந்த நாவாயான் - அளவற்ற ஓடங்களை உடையவன்; உங்கள் குலம் தனி நாதற்கு - உங்கள் குலத்தில் ஒப்பற்ற தலைவனான இராமனுக்கு, உயிர் துணைவன் - உயிர்த் தோழன்; உயர் தோளான் - உயர்ந்த தோள்களை உடையவன்; வெம் கரியின் ஏறு அனையான் - சினமுள்ள ஆண் யானையைப் போன்றவன்; வில் பிடித்த வேலையினன் - வில்லேந்திய (படையாகிய) கடலை உடையவன் (ஆகிய சிவன்), கொங்கு அலரும் - தேன் பரவிய, நறு தண் தார் - நறுமணம் பொருந்திய குளிர்ந்த மாலையை அணிந்த, குகன் என்னும் குறி உடையான் - குகன் என்னும் பெயரை உடையவன்.

குகனால் தமக்கு உண்டாகும் உபகாரத்தை நினைப்பூட்டுவானாகி, அவன் கங்கைக் கரைக்குத் தலைவன் என்றும், படை முழுதும் கடத்துவதற்கு ஏற்றபடி பல நாவாய்களை உடையவனென்றும் முதலில் கூறினான். பிறகு, அவனுக்கும் நமக்கும் ஒருவகையில் தொடர்புளது என்பதை உணர்த்த, 'உங்கள் குலத் தனி நாதற் குயிர்த் துணைவன்' என்றான்.

(பி - ம்.) 2. உயிர்த்தோழன்.
3. வேலையான், வேளனையான்.
4. கொங்கலருந் தண்டாரான், பெயருடையான். (25)

1023. கற்காணுந் திண்மையான் கரைகாணக் காதலான்
அற்காணி கண்டனைய வழகமைந்த மேனியான்
மற்காணுந் திருநெடுந்தோண் மழைகாணு மணிநிறத்தாய்
நிற்காணு முள்ளத்தா னெறியெதிர்நின் றனனென்றான்.

மல் காணும் திரு நெடு தோள் - மற்போரிற் பயின்ற அழகிய உயர்ந்த தோள்களையும், மழை காணும் மணி நிறத்தாய் - மேகம் போன்ற அழகிய நீலநிறத்தையும் உடைய பரதனே, கல் காணும் திண்

மையான் - மலையைக் கண்டாற் போன்ற திண்மையை உடையவன்; கரை காணு காதலான் - எல்லை காணமுடியாத அன்புடையவன்; அற்கு ஆணி கண்டனைய - இருளுக்கு உரையாணி கண்டாற் போன்ற, அழகு அமைந்த மேனியான் - அழகு பொருந்திய நிறத்தை உடையவனுகிய அவன், நின் காணும் உள்ளத்தான் - உன்னைக் காணும் உள்ளமுடையவனுய், நெறி எதிர் நின்றனன் - நாம் செல்ல இருக்கும் வழியின் எதிரில் நின்றுன், என்றுன் - என்று சுமந்திரன் கூறினுன்.

இருளுக்கெல்லாம் மேலான அடர்ந்த இருள் போன்ற நிறத்தான் என்பதை, 'அற்கு ஆணி கண்டனைய மேனியான்' என்முர். 'அற்காணிற் கண்டனைய' என்ற பாடத்துக்கு, 'கண்டால் இருளைக் கண்டாற் போன்ற' என்று பொருள் கொள்க.

(பி - ம்.) 1. திண்புயத்தான்; காதலுளான்.
2. அற்காணிற் கண்டனைய, அற்காணு நிறத்தொளிரும்; மேனியினுன்.
3. திரடிண்டோள்; திருநிறத்தாய், மைக்காணும் வன்மையோய். (26)

### பரதன் எழுதல்

1024. தன்முன்னே யவன்றன்மை தந்தைதுணை முந்துரைத்த
சொன்முன்னே யுவக்கின்ற துரிசிலாத் திருமனத்தான்
மன்முன்னே தழீஇக்கொண்ட மனக்கினிய துணைவனேல்
என்முன்னே யவற்காண்பென் யானேசென்றெனவெழுந்தான்.

தன் முன்னே அவன் தன்மை - தன்னெதிரே (மறுகரையில்) இருந்த குகனது இயல்பை, தந்தை துணை - தன் தந்தையின் (மந்திரத்) துணைவனுன சுமந்திரன், முந்து உரைத்த - முற்படச் சொல்லிய, சொல் முன்னே - சொல் செவிப்படு முன்னே, உவக்கின்ற - மகிழ்ச்சியுற்ற, துரிசு இலாத திருமனத்தான் - குற்றமில்லாத நன்மனமுடைய பரதன் (குகனைக் குறித்து), மன் - அரசனுன இராமபிரான், முன்னே தழீஇ கொண்ட - முன்னமே ஏற்றுக்கொண்ட, மனக்கு இனிய துணைவனேல் - மனத்துக்கினிய தோழனுனுல்,(அவன்) என் முன்னே- என் தமையனே யாவான்; யானே சென்று - நானே (முந்திப்) போய், அவன் காண்பென் என - அவனைக் காண்பேனென்று சொல்லிக் கொண்டு, எழுந்தான் - புறப்பட்டான்.

சுமந்திரன் குகனைப்பற்றிக் கூறியவற்றுள், 'உங்கள் குலத் தனி நாதற்குயிர்த்துணைவன்; கரைகாணுக் காதலான்' என்பவை தன் மனத்தைக் குகன்பால் ஈர்த்தமையின், அவனைக் காணப் பரதன் விரைந்தான்; அவனைத் தன் முன்னவனுகவும் கருதினுன். முன் - முன்னவன்; தமையன். கம்பர் வாக்கின்படி, இராமபிரான் குகனைச் சந்தித்து நட்புக்கொள்ளு முன்னமே சுமந்திரன் பிரிந்து அயோத்தி சென்றுவிட்டானுயினும், இராமபிரான்பால் பேரன்புடைய அவன்,

அவ்வப்போது இராமபிரானைப்பற்றிய செய்திகளை அறிந்திருத்தல் கூடும். குகனை இராமபிரான் சந்தித்தபோது சுமந்திரன் உடனிருந்த தாக வான்மீகம் கூறுகின்றது. 'சொன்முன்னே உவக்கின்ற' என்றது விரைவு குறித்தது. மனக்கு - மனத்துக்கு; அத்துச்சாரியை கெட்டது.

(பி - ம்.) 1. தன் முன்னம்.
2. திருமுகத்தான்.
3. மனத்தினிய; துணைவனே.
4. காண்பன், காண்பேன். (27)

பரதனது தோற்றம் கண்ட குகன் நிலையும் செயலும்

1025. என்றெழுந்து தம்பியொடு மெழுகின்ற காதலொடும்
குன்றெழுந்து சென்றதெனக் குளிர்கங்கைக் கரைகுறுகி
நின்றவனை நோக்கினன் திருமேனி நிலையுணர்ந்தான்
துன்றுகரு நறுங்குஞ்சி யெயினர்கோன் றுண்ணென்றான்.

என்று எழுந்து - (யானே சென்றவற் காண்பேன்) என்று புறப்பட்டு, தம்பியொடும் - (தன் நிழல்போன்ற) சத்துருக்கனோடும், எழுகின்ற காதலொடும் - மேன்மேலெழும் அன்போடும், குன்று எழுந்து சென்றது என - மலை ஒன்று எழுந்து நடந்து சென்றதுபோலச் சென்று, குளிர் கங்கை கரை குறுகி நின்றவனை - குளிர்கின்ற கங்கையின் கரையோரமாக அணுகி நின்ற பரதனை, துன்று- அடர்ந்த, கரு நறு குஞ்சி - கரிய நல்ல தலைமயிரையுடைய, எயினர் கோன் - வேடர்தலைவனான குகன், நோக்கினன் - பார்த்து, திருமேனி நிலை உணர்ந்தான் - (அவனுடைய) திருமேனியின் (பொலிவிழந்து வாடிய) தன்மையைக் கண்டு, துண் என்றான் - துணுக்குற்றான்.

பரதன் குகனது பார்வையிற் படுமாறு வந்து நிற்க, குகன் அவனைக் கண்டவுடன், அவனது உடம்பின் சோர்வும் வருத்தம் தேங்கிய முகமும் குகனைத் திடுக்கிடச் செய்தன. குகன் எண்ணிய படி பரதன் இராமபிரானோடு போர் குறித்து வந்திருப்பின், அவன் சோர்ந்திரானாதலால், குகன் தான் எண்ணியது தவறென்று உணர்ந்தான்.

நோக்கினன், உணர்ந்தான் என்பன முற்றெச்சம். நோக்கினன், உணர்ந்தான், துண்ணென்றான் எனக் கூட்டி முடிக்க. 'என்றெழுந்து' என்றது, முன் பாட்டின் இறுதியை அநுவதித்தது.

இறந்த தத்தைக்குத் தர்ப்பணம் செய்யும் பொருட்டுப் பரதன் கங்கைக் கரையில் படையோடு தங்கியிருக்க, குகன் பரதனை ஐயுற்றுத் தன் படைகளைத் திரட்டி அவர்களை எச்சரிக்கையாயிருக்கும் படி செய்துவிட்டு, பரதனது உள்ளக் கருத்தை உணரும்பொருட்டுப் பல காணிக்கைப் பொருள்களோடு தான்மட்டும் வடகரைக்கு

வந்தானாக, அப்போது சுமந்திரன் குகனைப் பரதனுக்கு அறிமுகம் செய்வித்ததாக வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. என்றெழுந்த.
2. செல்வதெனக்; கரைக்குறுகி. (28)

1026. வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்.

வற்கலை உடையானை - மர உரி உடுத்தவனும், மாசு அடைந்த மெய்யானை - அழுக்கடைந்த உடம்பை உடையவனும், நல் கலை இல் மதி என்ன - நல்ல ஒளி இல்லாத (ஒளி மழுங்கிய) சந்திரனைப்போல, நகை இழந்த முகத்தானை - பொலிவிழந்த முகமுடையவனும், கல் கனிய - கல்லும் இளகும்படி, கனிகின்ற துயரானை - முதிரும் துயர முடையவனுமான பரதனை, கண்ணுற்றான் - நன்கு நோக்கிய குகன், வில் - தான் பிடித்திருந்த வில்லானது, கையினின்று இடை வீழ - பிடி (நழுவிக்) கையிலிருந்து தரையில் விழ, விம்முற்று நின்று ஒழிந்தான் - விம்மிதத்தால் செயலற்று நின்றுவிட்டான்.

பரதனைக் கண்டவுடனே துணுக்குற்ற குகன், அவனைக் கூர்ந்து நோக்கியபோது, தாவர சங்கமம் எல்லாம் கண்டு இரங்குமாறு இருந்த அவனது திருமேனி நிலை விம்மிதத்தில் ஆழ்த்தியது. பரதன் நன்னீராடலும் நல்லுணவும் உறக்கமும் துறந்து, இராமபிரானைப்பற்றிய சிந்தனையே மிக்கவனாயிருந்தமையின், அவனுடம்பு மாசடைந்து அவனைக் கண்டார் யாவரும் இரங்கத் தக்கதாகவே இருந்தது. அவன் மரவுரி தரித்தமை, "தன்னுடைத் திருவரைச் சீரை சாத்தினான்" (990) என முன்னர்க் கூறப்பெற்றது.

இராமபிரான் சடை தரித்து மரவுரியுடுத்துத் தவக்கோலத்தோடு சென்றமையைக் குகனால் அறிந்து, அதன்பின் தானும் அக் கோலமே கொள்ள நிச்சயித்தான் பரதன் என்று வான்மீகம் கூறும்.

வற்கலையின்: இன், அல்வழிச் சாரியை. கல்லும் கனிய என உம்மை விரிக்க. கனிதல் இரண்டினுள், முன்னது இளகுதல்; பின்னது முதிர்ச்சி.

பி - ம்.) 1. மாசடைந்தவுடலானை.
3. கரைகின்ற.
4. நின்றழிந்தான். (29)

1027. நம்பியுமென் னாயகனை யொக்கின்றா னயனின்றான்
தம்பியையு மொக்கின்றான் றவவேடந் தலைநின்றான்
துன்பமொரு முடிவில்லை திசைநோக்கித் தொழுகின்றான்
எம்பெருமான் பின்பிறந்தா ரிழைப்பரோ பிழைப்பென்றான்.

நம்பியும் - பரத நம்பியும், என் நாயகனை ஒக்கின்றான் - என் தலைவனான இராமபிரானைப் போலவே இருக்கின்றான்; அயல் நின்றானும் - பக்கத்தில் நிற்கும் சத்துருக்கனும், தம்பியை ஒக்கின்றான் - (இராமபிரானுடன் சென்ற) தம்பியான இலக்குவனை ஒத்திருக்கின்றான்; (மேலும் பரத நம்பி) தவம் வேடம் தலை நின்றான் - தவ வேடமும் தாங்கியுள்ளான்; துன்பம் ஒரு முடிவு இல்லை - (அவனுக்குள்ள) துன்பம் எல்லையற்றதாயுளது; திசை நோக்கி தொழுகின்றான் - (இராமபிரான் சென்ற) திக்கை நோக்கி வணங்குகின்றான்; எம்பெருமான் பின் பிறந்தார் - எம் தலைவனுக்குத் தம்பியாகப் பிறந்தவர்கள், பிழைப்பு இழைப்பரோ - தவறு செய்வார்களோ? (நான் எண்ணியதே தவறு); என்றான் - என்று தன் மனத்துட் கொண்டான்.

பரதன் நிறத்தாலும் வடிவாலும் இராமபிரானைப் போன்றவன். பரதனைக் குறித்து, ''எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இவ்விருந்த, வள்ளலையே அனையானை'' (பால: 732) என விசுவாமித்திர முனிவன் கூறியதும் இங்கே நினைக்கத் தகும். சத்துருக்கன் இலக்குவனைப் போன்றவன். அவ்வடிவொப்புமையை முதலிற் கூறிப் பின்பு பரதனிடம் கண்ட சிறப்பியல்புகளைக் கூறி, இராமபிரானுடன் பிறந்தவர்கள் தவறு செய்யார் என்பதையும் நினைக்கின்றான். பெரியோரையும் கடவுளரையும் திசைநோக்கித் தொழுதல் மரபு; ''தென்றிசைச் செங்கை கூப்பி'' (1035); ''மன் பெரிய மாமனடி மகிழ்ந்துதிசை வணங்கி'' (சீவக: 849) என்பன காண்க. சுந்தர. 1266-ம் பார்க்க.

நம்பி - ஆடவரிற் சிறந்தவன்; 'கல்யாண குணபூரணன்' என்பர் பெரியவாச்சான்பிள்ளை (பெரிய திருமொழி. 7. 1 : 1.) தம்பியையும் : உம்மை, பிரித்துக் கூட்டப்பெற்றது.

(பி - ம்.) 1. நம்பிவன்.
2. தவவேடம் தலைநின்றார், தலைக்கொண்டான், கொண்டிருந்தான்.
3. தொழுகின்றார்.
4. இழைப்பரே; பிலைபென்றான். (30)

1028. உண்டிடுக்க ணொன்றுடையா னுலையாத வன்புடையான்
கொண்டதவ வேடமே கொண்டிருந்தான் குறிப்பெல்லாம்
கண்டுணர்ந்து பெயர்கின்றேன் காமின்க ணெறியென்னுத்
தண்டுறையோர் நாவாயி லொருதனியே தான்வந்தான்.

(குகன் மேலும் பரதனைக் குறித்து) உண்டு இடுக்கண் ஒன்று உடையான் - உண்டாகிய பெருந் துன்பம் ஒன்று உடையவன், உலையாத அன்புடையான் - இராமபிரான்பால் கெடாத அன்புடையான் - கொண்டதவ வேடமே - இராமபிரான் மேற்கொண்டுள்ள தவக் கோலத்தையே, கொண்டு இருந்தான் - (இவனும்)கொண்டிருக்

கிருன்; குறிப்பு எல்லாம் - அவன் மனக் கருத்தை எல்லாம், கண்டு - (நேரில் சென்று) கண்டு, உணர்ந்து - (அவன் வாயிலாக) அறிந்து, பெயர்கின்றேன் - திரும்பி வருகின்றேன்; நெறி காமின்கள் - (அது காறும்) வழியைக் காப்பீராக; என்ன - என்று (தன் படையினருக்குச் சொல்லி), தண் துறை - குளிர்ந்த நீர்த்துறையில் (இருந்த), ஓர் நாவாயில் - ஒரு படகில், தான் ஒரு தனியே வந்தான் - தான் மட்டும் தனியாக (வடகரை நோக்கி) வந்தான்.

'பரதன் தோற்றத்தால் நாம் எண்ணியவாறு குற்றமுடையவனுகக் காணப்படவில்லை; இராமபிரான்பால் உள்ள அன்பினுல் அவனைக் காணவே வருகின்ருனென்று தோற்றுகின்றது; ஆயினும், நேரே போய்க் கண்டு அவனது கருத்தை அறிந்து வருவேன்; அதுவரை வழியை நன்கு காத்திருங்கள்' என்று படையினர்க்குக் கூறிவிட்டுப் பரதனைக் காணத் தான்மட்டும் தனியே வடகரை நோக்கி வந்தான்.

(பி - ம்.) 1. உண்டிடுக்கமொன்றுடையான்; உலையாவன்புடையான்ருன்.
2. கொண்டிருந்த; இவனேயும்.
3. பேர்கின்றேன், மீள்கின்றேன், வருகின்றேன்.
4. தண்டுவலி நாவாயில், தண்டுடையோர் நாவாயில்; ஒருதமியே.
(31)

### குகன் பரதனைக் கண்டு வணங்குதல்

1029. வந்தெதிரே தொழுதானை வணங்கினுன் மலரிருந்த
அந்தணனும் தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்
தந்தையினுங் களிகூரத் தழுவினுன் றகவுடையோர்
சிந்தையிலுஞ் சென்னியிலும் வீற்றிருக்குஞ்சீர்த்தியான்.

எதிரே வந்து தொழுதானை - தன்னெதிரில் வந்து அஞ்சலி செய்த குகனை, மலர் இருந்த அந்தணனும் தாமரை மலரில் தங்கும் பிரமனும், தனை வணங்கும் அவனும் - தன்னை வணங்கத் தக்க (பெருமையை உடைய பரதனும்), வணங்கினுன் - தலையைத் தாழ்த்தி வணங்கினுன்; அவன் - குகன், அடிவீழ்ந்தான் - (தன்னை வணங்கிய) பரதனுடைய பாதங்களில் விழுந்து பணிந்தான்; தகவு உடையோர் - பெருந் தகுதி உடைய பெரியோரின், சிந்தையிலும் சென்னியிலும் - மனத்திலும் சிரத்திலும், வீற்றிருக்கும் சீர்த்தியான் - இருந்து விளங்கத்தக்க புகழையுடைய பரதன், தந்தையினும் களிகூர - தந்தையைக் காட்டிலும் மகிழ்ச்சி மிக, தழுவினுன் - (தன் அடியில் விழுந்து வணங்கியகுகனை எடுத்துத்) தழுவிக் கொண்டான்.

குகன் வடகரைக்கு வந்து சேர்ந்து தன்னை எதிர்நோக்கியிருந்த பரதனுக்கு அஞ்சலி செய்ய, பரதனும் அக்குகனை வணங்கினுனுக, குகன் பரதனுடைய பாதங்களில் விழுந்து பணியவே, பரதன் குகனை எடுத்து மார்புறத் தழுவிக்கொண்டான்.

தொழுதல், வணங்குதல், அடிவீழ்தல் என்பன வெவ்வேறு வகைச் செயல்கள். ஒருவர் தம் அடியில் வீழ்ந்தால் வீழப்பெற்றவர் வீழ்ந்தாரைத் தழுவுவதாக அமைப்பது கம்பர்வழக்கம், எனவே, இங்கே அடிவீழ்ந்தவன் குகனென்றும், தழுவினவன் பரதனென்றும் கொள்க. "மீட்டும்மண் அதனில் வீழ்ந்தான்" என்று பின் வருவதும் காண்க.

(பி - ம்.) 1. தொழுதவனை; மு:வந்தெதிரே விழுந்தவனும் வணங்கினன் வணங்காமுன்.
2. அந்தணனும் தலைவணங்கும்; அவனுமவனியில்; அந்த நெடுந்திரள் புயத்தான்; தழுவினன்றழுவியபின்.
3. இந்த விடர்வடி வுடனீயெங்கெழுந்தாய் இமையோர்தம்.
4. கீர்த்தியாய். (32)

குகனது வினவும் பரதனது விடையும்

(வேறு)

1030. தழுவின புளிஞர் வேந்தன் றாமரைச் செங்க ணானை
எழுவினு முயர்ந்த தோளா யெய்திய தென்னை யென்ன
முழுதுலகளித்த தந்தை முந்தையோர் முறையினின்றும்
வழுவினனதனை நீக்க மன்னனைக் கொணர்வா னென்றான்.

தழுவின - (பரதனால்) தழுவப்பெற்ற, புளிஞர் வேந்தன் - வேட அரசனான குகன், தாமரை செம் கண்ணானை - தாமரை போலும் செவ்விய கண்களையுடைய பரதனை (நோக்கி), எழுவினும் உயர்ந்த தோளாய் - கணைய மரத்தினும் சிறந்த தோள்களை உடையவனே, எய்தியது என்னை என்ன - (நீ இவ்வாறு) வந்த காரியம் யாது என்று வினவ, (பரதன்), முழுது உலகும் அளித்த தந்தை - உலகம் முழுதும் காத்த தந்தையாகிய சக்கரவர்த்தி, முந்தையோர் முறையின் நின்றும் வழுவினன் - (இம் மரபில்) முன்னோரின் முறையிலிருந்து தவறி விட்டான்; அதனை நீக்க - அம் முறை தவறுதலைப் போக்குமாறு, மன்னனை கொணர்வான் - (முறைப்படி) மன்னனான இராமபிரானை அழைத்து வரும்பொருட்டு (வந்தேன்), என்றான் - என்று விடை தந்தான்.

'நீ வந்த காரியம் என்ன?' என்று வினவிய குகனுக்கு, 'அயோத்திக்கு உரிய அரசனை அழைத்துவருதற்கு' என்று சுருக்கமாக விடை அளித்தான் பரதன். இம் மரபில் வழிவழியே வந்த முறை, 'மூத்தவற்கு உரியது அரசு' என்பது; தந்தை அம்முறை தவறி, அரசை எனக்கு அளித்ததை மாற்றி முறைப்படி உள்ள அரசனை அழைத்து வருதற்பொருட்டு வந்தேன் என்றான். இராமபிரானை 'மன்னன்' என்றே குறித்தான். பரதன் இராமபிரானையே

ஒத்தவனுதலால், 'தாமரைச் செங்கணுனை' என்ருர். திண்மையாலும் வடிவினுலும் கணையமரம் பரதன் தோள்களுக்கு உவமை; "தூண்டர நிவந்த தோளான்" (1038) என்பர் பின்னும். அளித்த - முதலில் இராமபிரானுக்குச் கொடுத்த என்று உரைத்தலுமாம்.

பரதன் கூறியது கேட்ட குகன், 'இராமபிரானுக்குத் தீமை விளைக்க நீ போகவில்லையோ? அங்ஙனமாயின், இப்பெருஞ் சேனை எதற்கு? உன்மேல் எனக்கு ஐயமுண்டாகின்றது' என்று வெளிப்படக் கூறியதாக வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. தழுவிய.
3. முறைமையீண்டு, முறையினீடு.
4. நீக்கி; கொணர்வான் வந்தேன். (33)

பரதன் கூறியதைக் கேட்ட குகனது மகிழ்ச்சி

1031. கேட்டனன் கிராதர்வேந்தன்கிளர்ந்தெழு முயிர்ப்பனுகி
மீட்டுமண் ணதனில்வீழ்ந்தான் விம்மின னுவகைவீங்கத்
தீட்டரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவிற்
பூட்டிய கையன் பொய்யி லுள்ளத்தன் புகல லுற்ருன்.

கேட்டனன் கிராதர் வேந்தன் - (பரதன் சொல்லியதைக்) கேட்டவனுன வேடர் தலைவன் (குகன்), உவகை வீங்க - மகிழ்ச்சி மேலிடலால், கிளர்ந்து எழும் உயிர்ப்பன் ஆகி - பொங்கி எழும் பெருமூச்சு உடையவனுய், விம்மினன் - பூரித்து, மீட்டும் - மீளவும், மண் அதனில் வீழ்ந்தான் - (பரதன் எதிரில்) தரையில் விழுந்து, தீட்ட அரு மேனி மைந்தன் - எழுத அரிய திருமேனியுடைய பரதனது, செம்மை அடிகமலம் பூவில் - சிவந்த திருவடிகளான தாமரைப்பூவில் (பாத தாமரைகளை), பூட்டிய கையன் - கோத்த கைகளோடும், பொய் இல் உள்ளத்தன் - பொய்ம்மை இல்லாத மனத்தோடும், புகலல் உற்ருன் - (சில) சொல்லானுன்.

குகன் சொல்லியவை, மேல் இரண்டு கவிகளுள் வரும். குகன், பரதனைப்பற்றித் தான் தவருக எண்ணியதற்கு அவன்பால் மன்னிப்புக் கேட்பான்போல் மீண்டும் அவனைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, மகிழ்ச்சி மேலிட்டவனுகி, அவனைப் புகழ்ந்து சில சொல்லலானுன்.

முகஸ்துதியாக அன்றி, உண்மையாகவே புகழ்ந்தான் என்பார், 'பொய்யில் உள்ளத்தன்' என்ருர். "எழுதரிய திருமேனிக் கருங்கடல்" (பால. 731) என முன்னே இராமபிரானைக் குறித்ததுபோல, இங்கே பரதனைத் 'தீட்டருமேனி மைந்தன்' என்ருர். கேட்டனன், வீழ்ந்தான், விம்மினன், கையன், உள்ளத்தன் என்பன முற்றெச்சம். மீட்டும் என்றது இறந்தது தழுவியது.

(பா-ம்.) 1. உயிரனுகி, உயிர்ப்பிறேடு; அன்புகூர.
2. பொன்னடியின்; உவகை பொங்கத், உருகியார்க்கும்.
3. கமலப்பூமேற். (34)

குகன் கூறுதல்

1032. தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத்
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்துத் தேக்கிப்
போயினை யென்ற போது புகழினேய் தன்மை கண்டால்
ஆயிர மிராமர் நின்கே ழாவரோ தெரியி னம்மா.

புகழினேய் - சிறந்த புகழைக் கொண்டவனே, தாய் உரை கொண்டு - தாயின் சொல்லை ஏற்றுக்கொண்டு, தாதை உதவிய தரணி தன்னை - தந்தை (உனக்குக்) கொடுத்த இராச்சியத்தை, தீவினை என்ன நீத்து - ஏற்றுக்கொள்ளுதல் தீவினை என்று எண்ணிக் கைவிட்டு, சிந்தனை - (இராமபிரானைக் குறித்த) மனக்கவலையை, முகத்து தேக்கி - முகத்தில் நிறைவித்து, போயினை என்றபோது - (இராமபிரானை அழைக்க) நீயும் காடு போனய் என்பதை எண்ணும்போது, தன்மை கண்டால் - (உனது) இவ் வியல்பைப் பார்த்தால், தெரியின் - (அதனை) ஆராய்ந்து உணர்ந்தால், ஆயிரம் இராமர் - ஆயிரம் இராமர் (சேர்ந்தாலும்), நின் கேழ் ஆவரோ - உனக்கு ஒப்பாவாரோ! (ஆகார்), அம்மா: வியப்புக் குறிப்பு.

'பரதா, இராச்சியத்தைப் பெற நீயாக விரும்பவில்லை; தாய் தந்தையர் இருவரும் மனமொப்பிக் கொடுத்தது மறுக்கத் தக்கதன்று; அதனையும் மறுத்துக் கவலையை மேற்கொண்டு இராமபிரானை அழைக்கப்போகும் உனது இச்செயல், பிறரால் நினைத்தற்கும் அரியதாகும். நான் இராமபிரானையே பெரிதும் மதித்தேன்; நீ உன் உயர் குணத்தால் அவனையும் விஞ்சிவிட்டாய்' என்று மனமாரப் புகழ்ந்தான் குகன்.

உன் மனக்கவலையை முகம் காட்டுகின்றதென்பான், 'சிந்தனை முகத்தில் தேக்கி' என்ருன். தேக்குதல் - நிறைவித்தல், கேழ் - ஒப்பு. தெரியின்: பிறவினைப் பொருள் குறித்தது; 'தெரிப்பின்' என்ற பாடமும் உளது.

(பா-ம்.) 2. தியவாமென்ன, தியனவென்ன; நீக்கும்; முகத்திற்றீரப், முகத்துக் கோப்பப்.
3. தன்னைக் கண்டால்.
4. நின்போலாவரோ, நின்னேராவரோ; உரைப்பின. (35)

1033. என்புகழ் கின்ற தேழை யெயினனே னிரவி யென்பான்
தன்புகழ்க் கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்கு மாபோல்
மன்புகழ் பெருமை நுங்கள் மரபினேர் புகழை யெல்லாம்
உன்புக ழாக்கிக் கொண்டா யுயர்குணத் துரவுத் தோளாய்.

உயர் குணத்து - உயர்ந்த குணங்களையும், உரவு தோளாய் - வலிமிக்க தோள்களையும் உடையவனே, ஏழை எயினனேன் - அறிவற்ற வேடனாகிய நான், என் புகழ்கின்றது - (உன்னை) என்ன வென்று புகழ்வது? இரவி என்பான் தன் - சூரியன் என்று சிறப் பித்துச் சொல்லப்படுகிறவனுடைய, புகழ் கற்றை - புகழ்தற்கு உரிய கதிர்த்தொகுதி, மற்றை ஒளிகளை - பிற எல்லாச் சோதிகளையும், தவிர்க்குமாறுபோல் - தன்னுள் அடக்கி மேம்படுவது போல, மன் புகழ் பெருமை - பிற குலத்து மன்னர்கள் யாவரும் புகழ்கின்ற பெருமையை உடைய, நுங்கள் மரபினோர் புகழை எல்லாம் - உங்கள் குலத்து முன்னோரான அரசர் பலருடைய புகழை எல்லாம், உன் புகழ் ஆக்கி கொண்டாய் - உன்னுடைய புகழாகச் செய்து கொண்டாய்.

'குணங்களால் மேம்பட்டவனே, நான் அறிவில் தாழ்ந்த வேடனாதலால், உன் பெருமையைப் பலவாறு எடுத்துச் சொல்லும் ஆற்றல் எனக்கில்லை; சுருங்கச் சொல்லுமிடத்து, ஒவ்வொரு வகையில் சிறந்து புகழோடு விளங்கிய சூரியகுலத்து அரசர் எல்லாருடைய புகழும் உன் புகழுக்குள் அடங்குமாறு, நீ எல்லா வகையிலும் மேம்பட்டு விளங்குகின்றாய்' என்றான் குகன்.

'கதிரவன் ஒளியின்முன் வேறு எந்த ஒளியும் மழுங்கிவிடுதல் போல, உன் புகழுக்குமுன் பிறர் புகழெல்லாம் மழுங்கிவிடும்' என உவமையைப் பொருத்திக் காண்க. 'உன் குல முதல்வனான சூரியனைப் போல நீ விளங்குகின்றாய்' என்பது கருத்து.

"முன்னை நிள்குல முதலு ளோர்கடாம், நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்" (915) என்ற கோசலையின் கூற்றும் இங்கே நினைவுகூரத் தகும். இராமபிரான் புகழை எடுத்துக்கூறும், "ஆர்கலி யகழ்ந்தோர்" (277) என்று தொடங்கும் பாடலும் இங்கே ஒப்புநோக்கத் தகும். தவிர்க்குமா : இறுதி விகாரத்தால் தொக்கது.

(பி - ம்.) 1. எயினரேம்.
2. தன்கதிர்க் கற்றை, தன்சுடர்க்கற்றை.
3. புகழ்களெல்லாம், பெருமையெல்லாம். (36)

1034. எனவிவை யன்ன மாற்ற மியைவன பலவுங் கூறிப்
புனைகழற் புலவுவேற்கைப் புளிஞர்கோன் பொருவில் காதல்
அனையவற் கமைவிற் செய்தா னரவற் கன்பி லாதார்
நினைவருங் குணங்கொ டன்றோ விராமன்மே னிமிர்ந்த காதல்.

என இவை அன்ன - என்று இவை போன்ற, இயைவன மாற்றம் பலவும் கூறி - பொருத்தமான உபசார மொழிகள் பலவற்றையும் சொல்லி, புனை கழல் - அணிந்த வீரக் கழலையும், புலவு வேல் கை - புலால் நாறும் வேல் தாங்கிய கையையுமுடைய, புளிஞர்கோன் -

வேடர் தலைவனான குகன், அமைவின்-மனம் பொருந்தி, அனையவற்கு - அப் பரதனிடம், பொரு இல் காதல் செய்தான் - ஒப்பற்ற அன்பு செலுத்துவானானான்: அவற்கு அன்பு இலாதார் ஆர் - அவன்பால் அன்பிலாதார் எவர்? நினைவு அரும் குணம் கொடு அன்றோ - எண்ணு தற்கரிய நற்குணங்களால் அன்றோ, இராமன்மேல் காதல் நிமிர்ந்த(து)- இராமன்பால் (எவர்க்கும்) அன்பு மிக்கது.

இராமபிரானிடம் அன்பு செய்தற்கு அவனிடம் உள்ள குணச் சிறப்பே காரணம். ஆகவே, பரதனிடமும் உள்ள குணங்களைக் கண்டு குகன் அவன்பால் ஈடுபட்டான்.

(பி - ம்.) 1. எனவிவையினிய மாற்றம், இவையனைய மாற்றம்; மு. எனவிவை பலவும் பன்னி யிணையடி தொழுது பின்னும்.
2. புனைபுகழ்ப் புளினர்; பொதுவில் காதல்.
4. குணங்கடம்மால், மு. நினைவருமிராமன் மேனி காணவே நிமிர்ந்த காதல். (37)

பரதன் குகனை வினவுதல்

1035. அவ்வழி யவனை நோக்கி யருடரு வாரி யன்ன
செவ்வழி யுள்ளத் தண்ணல் தென்றிசைச் செங்கை கூப்பி
எவ்வழி யுறைந்தா னம்மு னென்றலு மெயினர் வேந்தன்
இவ்வழி வீர யானே காட்டுவெ னெழுக வென்றான்.

அ வழி - அப்போது, அருள் தரு வாரி அன்ன - கருணையைத் தரும் கடல் போன்ற, செ வழி உள்ளத்து அண்ணல் - நேர்மையான வழியிற் செல்லும் மனமுடைய பரதன், அவனை நோக்கி - அவனைப் பார்த்து, தென்திசை செம் கை கூப்பி - தென்திசை நோக்கித் தன் செவ்விய கைகளைக் கூப்பிக்கொண்டு, நம்முன் - நம் அண்ணனான இராமபிரான், எ வழி உறைந்தான் — எவ்விடத்தில் தங்கியிருந்தான், என்றலும் - என்று வினவியவளவில், எயினர் வேந்தன் - வேடர்க்கு அரசனான குகன் (பரதனை நோக்கி), வீர - வீரனே, இ வழி - இவ் விடமே; யானே காட்டுவென் - நானே (அவ்விடத்தைக்) காட்டு வேன், எழுக என்றான் - வருக என்றான்.

வாரி அன்ன உள்ளம், செவ்வழி உள்ளம் என இயைக்க. பரதன் குகனைத் தன் அண்ணனைப் போலவே பாவித்தானாதலால், 'நம்முன்' என இராமபிரானைச் சுட்டினான். தென்றிசைச் செங்கை கூப்பி! "திசை நோக்கித் தொழுகின்றான்" (1018).

(பி - ம்.) 3. உறைந்ததெம்முன்.
4. வருதியானே, விரைவின்பானே; காட்டுவலெழுக, காட்டுவனினிதின். (38)

### பரதன் செயல்

1036. காரெனக் கடிது சென்ருன் கல்லிடைப் படுத்த புல்லின்
வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான்
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான்பருவரற்பரவைபுக்கான்
வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ ராட்டுங் கண்ணுன்.

(பரதன் குகனைத் தொடர்ந்து), கார் என கடிது சென்ருன் - மேகம் போல விரைந்து சென்று, வார் சிலை தட கை வள்ளல் வைகிய - நீண்ட வில்லைப் பிடித்த பெரிய கையையுடைய இராமபிரான் படுத்திருந்த, கல் இடை படுத்த புல்லின் பள்ளி - கல்லின் இடையே பரப்பிய புல்லாகிய படுக்கையை, கண்டான் - பார்த்து, பதைத்து பார்மிசை வீழ்ந்தான் - துடித்துத் தரையில் விழுந்து, பருவரல் பரவை புக்கான் - துன்பக் கடலுள் மூழ்கி, வார்மணி புனலால் - ஒழுகும் முத்துப் போன்ற கண்ணீரால், மண்ணை - தன் மேனியில் படிந்த மண்ணை, மண்ணும் நீர் ஆட்டும் கண்ணுன் - நீராட்டுவிக்கும் கண்களை உடையவனுனன்.

கீழே விழுந்தமையால் புழுதி போர்த்த திருமேனியை அவன் கண்ணினின்று பெருகிய நீர் கழுவியது. இதிலுள்ள முற்றுக்கள் எச்சப்பொருளிற் பயின்றன. மண்ணு நீராட்டல் - மாசு போக நீராடச் செய்தல். நிறத்தாலும், தண்ணளியாலும், விரைவாலும், நீர் பொழிதலாலும், கார் பரதனுக்கு உவமை. கார் விரைந்து செல்லுதல்! "நின்னே யுள்ளி வந்தனென், நன்னுத லரிவை காரினும் விரைந்தே" (ஐங்குறு. 491). வள்ளல் - இராமபிரான்.

(பி - ம்.) 1. கடிது சென்று; கல்விடை யடுத்த புல்லின்.
2. அண்ணல் வைகியே.
4. மண்ணி நீராட்டும். (39)

1037. இயன்றதென் பொருட்டி னுலிவ் விடருனக் கென்ற போதும்
அயின்றனை கிழங்குங் காயு மமுதென வரிய புல்லில்
துயின்றனை யெனவு மாவி துறந்திலென் சுடருங் காசு
குயின்றுயர் மகுடஞ் சூடுஞ் செல்வமுங் கொள்வென் யானே.

உனக்கு—, இ இடர் - இத்தகைய துன்பம், என்பொருட்டினுல் இயன்றது என்றபோதும் - என் நிமித்தமாக நிகழ்ந்தது என்று அறிந்த போதும், கிழங்கும் காயும் - (நீ உண்ணத் தகாத) கிழங்குகளையும் காய்களையும், அமுது என அயின்றனை - அமுதம்போல உண்டாய், அரிய புல்லில் துயின்றனை - (நீ தீண்டுதற்கும்) அரிய புல்லில் (பஞ்சணை போலக் கருதித்) துயின்ருய், எனவும் - என்றறிந்த போதும், ஆவி துறந்திலென் - நான் உயிர் நீத்தேனல்லேன்; (அதற்கு மாருக), சுடரும் காசு குயின்று - ஒளிவீசும் மணிகள் பதித்து, உயர் - சிறந்துள்ள, மகுடம் சூடும் செல்வமும் - முடிசூடி ஆளும் அரசச்

செல்வத்தையும், யான் கொள்வென் - நான் கைக்கொள்பவனுவேன்.

ஏ: ஈற்றசை. என்றான் என வருவித்து முடிக்க.

நானொருவன் பிறந்ததனுல் உனக்கு இத்தகைய துன்பங்கள் நேர்ந்தன என்பான், 'என் பொருட்டினுல் இயன்ற திவ்விடர்' என்றான். 'அமுதென' என்று உணவுக்குக் கூறியதற்கு இயைய, 'அணைபோல' என்பது படுக்கைக்கு வருவித்து உரைக்கப்பெற்றது.

(பி - ம்.) 1. என்பொருட்டினாலே; என்ற போழ்தும்.
2. அமிர்தென; வலிய; அருந்திப்.
3. செம்பொன்.
4. குயின்றநன்; சுட்டும், (40)

பரதன் வினவுதல்

1038. தூண்டர நிவந்ததோளான் பின்னருஞ் சொல்லுவானந்
நீண்டவன் றுயின்ற சூழ லிதுவெனி னிமிர்ந்த நேயம்
பூண்டவன் றொடர்ந்து பின்னே போந்தவன் பொழுது நீத்த
தியாண்டென வினிது கேட்டா னெயினர்கோ னிதனைச்
சொன்னான்.

தூண் தர நிவந்த தோளான் - தூணைப்போல உயர்ந்த தோள்களை உடைய பரதன், பின்னரும் சொல்லுவான் - மேலும் சொல்வானாய், (குகனை நோக்கி) அ நீண்டவன் துயின்ற சூழல் - நெடியவனான அவ்விராமபிரான் துயின்ற இடம், இது எனின் - இதுவானால், நிமிர்ந்த நேயம் பூண்டவன் - (அவன்பால்) ஓங்கிய அன்புடையவனாய், தொடர்ந்து பின்னே போந்தவன் - (அவனை) நிழல்போலத் தொடர்ந்து பின்னே வந்த இலக்குவன், பொழுது நீத்தது - பொழுதைக் கழித்தது, யாண்டு என - எவ்விடம் என்று, இனிது கேட்டான் - இனிதாகக் கேட்டான்; எயினர்கோன் - வேடர் தலைவனான குகன், இதனை சொன்னான் - (அதற்கு விடையாகப் பின்வரும்) இதனைச் சொல்லலானான்.

இராமபிரான் பிராட்டியோடு துயின்றதால், இலக்குவன் அருகில் இருக்க நியாயமில்லை; ஆயினும், அவன் அவர்கள் காவலில் கண்ணும் கருத்தும் உடையவனாதலின், உறங்கியிருக்கவும் மாட்டான் என்று கருதி, 'பின்னே போந்தவன் பொழுது நீத்தது யாண்டு' என்றான். 'இனிது கேட்டான்' என்றது, மனநெகிழ்ச்சியோடு மெல்லக் கேட்டான் என்றபடி. தர: உவமவுருபு. "எழுவினும் உயர்ந்த தோளாய்" (1030) என்றதும் காண்க. நீண்டவன் - குணங்களாலும் பெருமையாலும் உயர்ந்தவன்; நெடுமால் என்பதனைக் குறித்ததெனலுமாம்.

(பி - ம்.) 1. தாண்டர நிமிர்ந்த' பின்னையும்.
2. இதுவெனினிவந்த.
3. போது நீத்தது.
4. சொல்வான். (41)

### குகன் கூறிய விடை

1039. அல்லையாண் டமைந்த மேனி யழகனு மவளுந் துஞ்ச
வில்லையூன் றியகை யோடும் வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லையாண் டுயர்ந்த தோளாய் கண்கணீர் சோரக் கங்குல்
எல்லைகாண் பளவு நின்று னிமைப்பில னயன மென்றான்.

கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய் - மலையையும் கீழ்ப்படுத்தி மேம்பட்ட தோள்களை உடையவனே, அல்லை ஆண்டு - இருளைக் கீழ்ப்படுத்தி, அமைந்த - (கருமை) வாய்ந்த, மேனி - திருமேனியை உடைய, அழகனும் - பேரழகினனான இராமபிரானும், அவளும் - பிராட்டியும், துஞ்ச - உறங்க, வீரன் - (இளைய) வீரனான இலக்குவன், நயனம் இமைப்பு இலன் - கண்களை இமைத்தலும் இலனாகி, (விழித்த கண் விழித்தபடியே) வில்லை ஊன்றிய கையோடும் - வில்லை ஊன்றிப் பிடித்த கையுடனும், வெய்து உயிர்ப்போடும் - (துயரத்தால்) வெப்பமான பெருமூச்சுடனும், கங்குல் எல்லை காண்பு அளவும் - இரவின் முடிவைக் காணுமளவும் (விடியும் வரையில்), கண்கள் நீர் சோர நின்றான் - (விழித்த) கண்களினின்றும் நீர் பெருகி வழிய நின்றுகொண்டிருந்தான், என்றான்—.

இராமபிரான்பால் தோன்றி எழுந்த பேரன்பினால், குகன் இலக்குவனை ஐயுற்று, அவன் செயல்களை இரவு முழுதும் விழிப்போடு இருந்து கவனித்தவனாதலால், இலக்குவனைப்பற்றி அவன் இவ்வாறு தெளிவாகக் கூறினான் என்பர். 'இலக்குவனால் இராமனுக்கு ஏதேனும் துன்பம் விளையுமோ என்று கருதி, அவன் செல்லுமிடமெல்லாம் நான் அடியொற்றிச் சென்று காவல் புரிந்து வந்தேன்' என்று குகன் பரதனிடம் தெரிவித்ததாக வான்மீகம் கூறும்.

வீரன்: இடம் நோக்கி இலக்குவன் என்று கொள்க. இராமபிரான் திருமேனிக்கு இருள்: பரி. 2: 52; 13: 42; 15: 27, 50. அழகன்: கிட்கிந்தா. 7: 37, சுந்தர. 2: 102, யுத்த. 15: 354. வில்லை ஊன்றி நிற்றல்: "தேற லாந்துணை யுஞ்சிலை யூன்றியே, ஆறி நின்றன னுற்றவிற் றேற்றலான்" (யுத்த. 18: 126.) இலக்குவன் காவல்: 668-பார்க்க.

(பி - ம்.) 1. அமைந்து வந்த.
2. வெய்துயிர்ப்போடும் விம்மா.
4. இமைத்திலனயனம். (42)

### பரதன் இலக்குவனைப் பாராட்டி வருந்துதல்

1040. என்பத்தைக்கேட்ட மைந்த னிராமனுக் கிளையா ரென்று
முன்பொத்த தோற்றத் தேமில் யானென்று முடிவிலாத
துன்பத்துக் கேது வானே னவனது துடைக்க நின்றான்
அன்பத்துக் கெல்லை யுண்டோ வழகிதென் னடிமை
யென்றான்.

என்பதை - (என்று குகன்) கூறியதை, கேட்ட மைந்தன்-கேட்ட பரதன், முன்பு - முன்னே, இராமனுக்கு இளையார் என்று - இராமபிரானுக்குத் தம்பிகள் என்று, ஒத்த தோற்றத்தேயில் - ஒத்த பிறப்புடைய எங்களுள், யான் - நான், என்றும் முடிவு இல்லாத துன்பத்துக்கு ஏது ஆனேன் - (இராமபிரானுக்கு) என்றும் தீராத துன்பத்துக்குக் காரணமானேன்; அவன் - அவ்விலக்குவன், அது துடைக்க நின்றான் - அத்துன்பத்தைப் போக்க உறுதி பூண்டுள்ளான்; அன்புக்கு - அவனுடைய அன்பாகிய அருங்குணத்துக்கு, எல்லை உண்டோ - ஓர் அளவுண்டோ? என் அடிமை அழகிது-(இராமபிரான் பால்) எனது அடிமைத்திறம் மிக அழகாக இருக்கின்றது, என்றான் —.

'நானும் இராமபிரானுக்கு ஆட்செய்பவன் என்று சொல்லிக் கொள்கின்றேன்; அது செயலில் நிகழவில்லை; மாறாக, அவன் பெருந் துன்பமுறக் காரணமாயுள்ளேன்; இலக்குவனோ, தான் அடியவன் என்பதைச் செயலால் உணர்த்துகின்றான்; என்னால் என்ன பயன்?' என்று தன்னை நொந்துகொண்டான் பரதன்.

'என்பதை' எனற்பாலது எதுகை நோக்கி 'என்பத்தை' என விரித்தல் விகாரம் பெற்றது. அன்பத்துக்கு: அத்து, சாரியை. அழகிது என்றது இகழ்ச்சிக்குறிப்பு.

(பி - ம்.) 1. என்பன கேட்ட, என்பதைக் கேட்டு.
2. முன்பெற்ற; மேவினன் முடிவிலாத, மேவிலன் முடிவிலாத.
3. துடைத்து நின்றான்.
4. அன்பதற்கு. (43)

### பரதன் செயலும் சொல்லும்

1041. அவ்விடை யண்ண லானு மன்றரும் பொடியின் வைகித்
தெவ்விடை தரநின் றார்க்குஞ் செறிகழற் புளிஞர்கோமான்
இவ்விடைக் கங்கை யாற்றி னேற்றினை யாயி னெம்மை
வெவ்விடர்க் கடனின் றேற்றி வேந்தன்பால் விடுத்த தென்றான்.

அண்ணல் தானும் - பெருமையிற் சிறந்த பரதனும், அன்று - அன்றைப்பொழுது, அ இடை - அவ்விடத்தே, அரு பொடியின் வைகி - (படுத்தற்கு) அரிய புழுதியில் (புல்லுமின்றித்) தங்கி இருந்து, (பின்பு குகனை நோக்கி), தெவ் இடைதர - பகைவர் (அஞ்சி) வருந்தும் படி, நின்று ஆர்க்கும் - நிலைபெற்று ஒலிக்கின்ற, செறி கழல் - செறிந்த (கட்டிய) வீரக் கழலையுடைய, புளிஞர் கோமான் - வேடர்க்கரசே, இ இடை - இப்போது, எம்மை - எங்களை, கங்கை ஆற்றின் ஏற்றினை ஆயின் - கங்கை ஆற்றைக் கடந்து (தென்கரை) சேரச் செய்வாயானால், வெவ் இடர் கடல் நின்று ஏற்றி - கொடிய துன்பக்கடலினின்றும் கரையேற்றி, வேந்தன்பால் விடுத்தது என்றான் - எங்களரசனை இராமபிரானை அடைவித்தது போலாகும் என்றான்.

பரதன், இராமபிரான் துயின்ற இடத்தில் அன்றிரவு வெறும் தரையில் நித்திரையின்றி இருந்து, மறுநாட் காலையில், கங்கை ஆற்றைக் கடத்தற்கு உரியன செய்யுமாறு குகனை வேண்டினான்.

ஆறு கடக்கச் செய்தால், கடலையே கடப்பித்து, இராமபிரான் பால் எங்களைச் சேர்த்ததுபோல் ஆகும் என்று, தனது பேராவலையும், குகனது உதவியின் இன்றியமையாமையும் குறிப்பித்தான். அண்ணல்தானும்: தான், அசை. கோமான்: விளி. இராமபிரானை 'அரசன்' என்றே கூறுகின்றான். விடுத்தது என்றதன்பின், ஆகும் என வருவித்து முடிக்க.

(பி - ம்.) 1. அவ்வழி.
2. கோவே.
3. கங்கையாற்றை.
4. வெவ்வினைக்கடனின்றேற்றி; வேந்தர்பால், வீரன்பால், இராமன் பால்; விடுத்தியென்றான், விடுத்திடென்றான். (44)

### குகன் கட்டளையால் நாவாய்கள் வருதல்

1042. நன்றெனப் புளிஞர் வேந்த னண்ணினன் றமரை நாவாய்
சென்றினித் தருதி ரென்ன வந்தன சிவன்சேர் வெள்ளிக்
குன்றெனக் குனிக்கு மம்பொற் குவடெனக் குபேரன் மானம்
ஒன்றென நாணிப் பல்வே றுருவுகொண் டனைய வான.

புளிஞர் வேந்தன் - வேடர்க்கு அரசனான குகன், நன்று என - நல்லது என்று, தமரை நண்ணினன் - தன் இனத்தாரைச் சேர்ந்து, இனி சென்று நாவாய் தருதிர் என - இனி (நீங்கள்) போய்ப் படகு களைக் கொணருதிர் என்று கட்டளையிட, சிவன் சேர் வெள்ளி குன்று என - சிவபெருமான் எழுந்தருளிய வெள்ளி மலையும், குபேரன் மானம் - குபேரனது புட்பக விமானமும், ஒன்று எனல் நாணி - (தாம்) ஒவ்வொன்றாயிருத்தற்கு நாணி, பல வேறு உருவு கொண்ட அனைய ஆன - பல வேறு வடிவங்கள் கொண்டு வந்தன போன்றனவான (நாவாய்கள்), வந்தன - வந்து சேர்ந்தன.

குகன் கட்டளையால் வந்த ஓடங்களைச் சிறப்பித்துக் கூறுகின்றார். இடப்பரப்பாலும், பெருமையாலும், தோற்றத்தாலும் அவற்றிற்குக் கயிலை, மேரு, புட்பகம் ஆகியவற்றை உவமை கூறி, அவை ஒவ்வொன்றா யிருத்தற்கு நாணிப் பலபல ஓடமாக வடிவங் கொண்டு இங்கு வந்துள்ளன என்னும்படி இருந்தன அவை என்கின்றார்.

நன்று: உடன்பாட்டுக் குறிப்பு. நண்ணினன்: முற்றெச்சம். குன்றென, குவடென என்றவற்றுள் என என்பது எண்ணிடைச் சொல். இதனை மானத்தோடும் கூட்டுக. மானம்: முதற்குறை. நாவாய் என்பதனை, அனையவான என்றதன் பின்னும் கூட்டி, அனையவான

வந்தன என முடிக்க. குகன் முன்பு வேடரை, ஓடம் எதுவும் ஓட்டாமல் நெறியைக் காத்திருக்குமாறு பணித்து, பரதனது உட்கோளை அறியவந்தவன், அதனை அறிந்து தெளிந்தானுகலின், இப்போது, 'இனிச் சென்று நாவாய் தருதிர்' என்றுன்.

(பி - ம்.) 2. சென்றுநீர் தருதிர், கொணர்திர்.
3. குலவும்; அம்பொற்குழுவெனக், குன்றெனக், பூவெனக், அம்பி குழுமின, பைம்பொற்குவடெனக், மேகக்குழுவெனக், மேருக் குழுவெனக்; குபேரமானம்.
4. ஒன்றெனநாணிப், ஒன்றென்றேநாணிப்; கொண்டனையவொத்த, கொண்டினையவான. (45)

## நாவாய்களின் வருணனை

1043. நங்கையர் நடையி னன்ன நாணுறு செலவி னுவாய்
கங்கையு மிடமில் லாமை மிடைந்தன கலந்த வெங்கும்
அங்கொடிங் கிழித்தி யேற்று மமைதியா லமரர் வையத்
திங்கொடங் கிழித்தி யேற்று மிருவினை யென்ன லான.

நங்கையர் நடையின் - மங்கையரின் நடைபோலும் நடையினையும், அன்னம் நாண் உறு செலவின் - அன்னப்பறவையும் நாண முறத்தக்க செலவினையும் (உடையனவாகி), கங்கையும் இடம் இலாமை - கங்கையின் பரப்பும் இடம் போதாதவாறு, எங்கும் - எல்லா இடங்களிலும், மிடைந்தன கலந்த நாவாய் - நெருங்கிக் கலந்த ஓடங்கள், அங்கொடு இங்கு - அக்கரையிலும் இக்கரையிலுமாக, இழித்தி ஏற்றும் அமைதியின் - (மக்களை) இறக்கி ஏற்றும் தன்மையால், அமரர் வையத்து இங்கு - தேவருலகினின்றும் இவ்வுலகத்துக்கும், இங்கொடு அங்கு - இவ்வுலகினின்று தேவருல குக்கும், இழித்தி ஏற்றும் - (உயிர்களை) இறக்கி ஏற்றுகின்ற, இரு வினை என்னல் ஆன - (புண்ணியம் பாவம் என்னும்) இருவினைகள் என்னும்படி இருந்தன.

படகுகளின் தோற்றத்துக்கு மூன்று உவமைகள் கூறியவர், அவை நீரில் அசைந்து செல்லும் செலவுக்கு மகளிர் நடையையும் அன்ன நடையையும் உவமை கூறி, அத்தகைய படகுகள் அளவின்றி வந்து நெருங்கின என்றும், அவை ஒரு வகையில் புண்ணிய பாவங்களை ஒத்தன வென்றும் கூறுகின்றுர். ஏற்றுதல் புண்ணியத்தின் செயலும் இறக்குதல் பாவத்தின் செயலுமாக முறையே கொள்க. அங்கு, இங்கு என்பன அக்கரை, இக்கரை என்பவற்றைக் குறித்தன. வையத்திங்கு என்றதில் 'இங்கு' என்பது இடைநிலை விளக்காய், முன்னும் பின்னும் இயைத்துப் பொருள்கொள நின்றது. அன்னமும் என உயர்வு சிறப்பும்மை விரிக்க; கங்கையும் : உம்மை உயர்வு சிறப்பு. மிடைந்தன : முற்றெச்சம்.

(பி - ம்.) 1. நடையதென்ன; செவ்விநாவாய்.
2. வந்தவெங்கும்.
3. இழிச்சி; அமைதியாலமரர்வைகும், அமைதியிலும்பரிம்பர்.
4. இங்கொடங்கிழிச்சி; என்னலாய. (46)

## குகன் தெரிவிக்கப் பரதன் கூறுதல்

1044. வந்தன வரம்பி ஞவாய் வரிசிலைக் குரிசின் மைந்த
சிந்தனை யாவ தென்று சிருங்கிபே ரியர்கோன் செப்பச்
சுந்தர வரிவி லானுஞ் சுமந்திரன் றன்னை நோக்கி
எந்தையித் தானை தன்னையேற்றுதி விரைவினென்ருன்.

வரி சிலை குரிசில் மைந்த - கட்டமைந்த வில்லில் வல்ல சக்கர வர்த்தியின் குமாரனே, வரம்பு இல் நாவாய் வந்தன - அளவற்ற படகுகள் (சித்தமாக) வந்தன; சிந்தனை யாவது என்று - (உன்) நினைவு யாது என்று, சிருங்கிபேரியர் கோன் செப்ப - சிருங்கிபேரபுரத் துள்ளார்க்குத் தலைவனுன குகன் கேட்க, சுந்தரம் வரி வில்லானும் - அழகிய கட்டமைந்த வில்லையுடைய பரதனும், சுமந்திரன் தன்னை நோக்கி - சுமந்திரனைப் பார்த்து, எந்தை - எம் தந்தையே, இ தானை தன்னை - இந்தச் சேனைகளை, விரைவின் ஏற்றுதி - விரைவாக(ப் படகு களில்) ஏற்றி மறுகரை சேர்ப்பாயாக, என்ருன் - என்று கூறினுன்.

குரிசில் என்றது தயரதனை; குரிசில் மைந்த - சக்கரவர்த்தி குமார; அண்மை விளி. சிந்தனை யாவது என்றது, மேலே செய்யவேண்டி யதைத் தெரிவிக்க என்றவாறு. யாவது: யாது என்பதன் விரித்தல்; சிருங்கிபேரம் - ஊரின் பெயர்; சிருங்கிபேரியர் - அவ்வூரிலுள்ளார். "சிருங்கி பேர மெனத்திரைக் கங்கையின், மருங்கு தோன்றும் நகருறை வாழ்க்கையன்" (655). சுமந்திரனைத் தந்தை எனல்: 564- பார்க்க. தன் இரண்டும் சாரியை.

(பி - ம்.) 2. சிருங்கிவேரியர்.
4. எந்தையே தானை தன்னை, எந்தையித்தானையெல்லாம். (47)

## சேனைகள் படகில் ஏறி மறுகரை செல்லுதல்

1045. குரிசில தேவ லாலக் குரகதத் தேர்வ லானும்
வரிசையின் வழாமை நோக்கி மரபுளி வகையி னேற்றக்
கரிபரி யிரதங் காலாள் கணக்கறு கரையில் வேலை
எரிமணி திரையின் வீசுங் கங்கையா றேறிற் றன்றே.

குரிசிலது ஏவலால் - ஆடவரிற் சிறந்த பரதனது கட்டளையால், அ குரகதம் தேர் வல்லானும் - குதிரைகள் பூட்டிய தேரைச் செலுத்துதலில் வல்ல அச் சுமந்திரனும், வரிசையின் வழாமை நோக்கி - (ஏற்றுதற்கு உரிய) வரிசையில் தவருது பார்த்து, மரபுளி - முறைப்படி, வகையின் ஏற்ற - (அவை நன்கு அடங்கும்) வகையில் ஏற்ற, கரி-யானைகளும்,

பரி - குதிரைகளும், இரதம் - தேர்களும், காலாள் - காலாட்களும், கணக்கு அறு - தனித் தனியே எண்ணிப் பண்ணும் கணக்கு அற்றதும், கரை இல் வேலை - (தொகுதியாகப் பார்க்கும்போது பரப்புக்கு) எல்லை இல்லாததுமான அச்சேனைக் கடல், எரி மணி - ஒளிவிடும் மணிகளை, திரையின் வீசும் - அலைகளால் அள்ளி வீசுகின்ற, கங்கை ஆறு ஏறிற்று - கங்கை ஆற்றைக் கடந்தது. அன்று, ஏ : அசை.

இதனுள், படைகள் கங்கையைக் கடந்தமையைத் தொகுத்துக் கூறி, மேல் வரும் கவிகளில் அவற்றைத் தனித்தனியாக வகைப்படுத்தி விரித்துக் கூறுகின்றார். அத்தொகுதியைக் கடலாக உருவகித்து, கடல் ஆற்றைக் கடந்தது என்ற நயம் காணத்தகும்.

(பி - ம்.) 2. வழாமல்.
3. கணக்கில; கரையில் சேனை.
4. எரிமணித்திரைகள், எரிமணிக்கரையின். (48)

யானைகள் நீந்திச் செல்லுதல்

1046. இடிபடு முழக்கம் பொங்க வினமழை மகர நீரை
முடிவுற முகப்ப வூழி யிறுதியின் மொய்ப்ப போலக்
கொடியொடு வங்கம் வேலைக் கூம்பொடு படர்வ போல
நெடியகை யெடுத்து நீட்டி நீந்தின நெடுங்கை வேழம்.

நெடு கை வேழம் - நீண்ட வரிசையாக அமைந்த யானைகள், ஊழி இறுதியில் - யுகமுடிவில், இனம் மழை - (பெருங்) கூட்டமான மேகங்கள், மகரம் நீரை முடிவு உற முகப்ப - கடல் நீரை முற்றும் பருகுமாறு, இடிபடும் முழக்கம் பொங்க - இடியால் உண்டாகும் முழக்கம் மிக, மொய்ப்ப போல - (கடலில்) நெருங்குவனபோல (நெருங்கி), கொடியொடு கூம்போடு வங்கம் - கொடியோடும் பாய்மரத்தோடும் கூடிய கப்பல்கள், வேலை படர்வபோல - கடலில் செல்வனபோல, நெடிய கை - (தம்முடைய) நீண்ட துதிக்கைகளை, எடுத்து நீட்டி - உயர்த்தி நிறுத்திக்கொண்டு, நீந்தின - (ஆற்றில்) நீந்திச்சென்றன.

நெடுங்கை வேழம் நீந்தின என்க. கை - ஒழுங்கு, வரிசை; "கையமை விளக்கம்" (முல்லைப் : 49). யானைகள் பிளிற்றொலியோடு நெருங்கினமைக்கு, யுகமுடிவில் மேகத்திரள் இடியோசையோடு கடல் நீரைப் பருக நெருங்குதலையும், யானைகள் நீரில் நீந்திச் சென்றமைக்குக் கப்பல்கள் கடலிற் செல்லுதலையும் முறையே உவமையாகக் கொள்க. யானைகள் உருவத்தால் கப்பல் போன்றன. மகர நீர் - சுறாமீன்களை யுடைய நீர்; கடல். "அருங்கடை யுகந்தனில் அசனி மாமழை... கிளர்ந்தென" (1008) என்பது முதலிரண்டடிகளுடன் ஒப்பு நோக்கத் தகும்.

(பி - ம்.) 1. பொங்கவிண்மழை, ஏங்கவினமழை, ஏங்கவிண்மழை.
3. கொடியொடும் வங்கம், கூம்பொடும்.
4. நெடுங்கையானை, நெடிதியானை. (49)

1047. சங்கமு மகர மீனுந் தரளமு மணியுந் தள்ளி
வங்கநீர்க் கடலும் வந்து தன்வழிப் படர மானப்
பொங்குவெங் களிறு நூக்கக் கரையொரீஇப் போயிற் றம்மா
கங்கையு மிராமற் காணுங் காதலுற் றென்ன மாதோ.

மானம்-பெருமையையுடைய, பொங்கு வெம்களிறு-பெருந்திரளான கொடிய யானைகள், நூக்க - (நீந்துங்கால்) உந்தித் தள்ளுதலால், கங்கையும் - கங்கை நீரும், சங்கமும் - சங்குகளையும், மகரம் மீனும் - சுறுமீன்களையும், தரளமும் - முத்துக்களையும், மணியும் - (பிற) இரத்தினங்களையும், தள்ளி - தள்ளிக்கொண்டு, வங்கம் நீர் கடலும் - கப்பல்கள் செல்லும் நீர்ப்பரப்பையுடைய கடலும், தன் வழி வந்து படர - (நீர் குறைந்த) தன்னிடத்தில் வந்து பரவுமாறு, கரை ஒரீஇ - கரையைக் கடந்து, இராமன் காணும் காதல் உற்றது என்ன - இராமபிரானைக் காணும் ஆசை மிக்கெழுந்தது போல, போயிற்று - (தென்றிசை நோக்கி) ஓடிற்று.

அம்மா : வியப்பு. மாது, ஓ: அசை.

யானைகளின் மிகுதியால் கங்கை நீர் மேலெழுந்து கரைகடந்து தென்பால் ஓடியதனை, கங்கை இராமபிரானைக் காணும் ஆசையால் போவது போன்றிருந்தது எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார். கங்கைநீர் அவ்வாறு போதலால் அந்நீர் குறைந்த இடத்தில் கடல்நீர் வந்து பரவ ஏதுவாயிற்று. வங்கம், கடலுக்கு அடை. மகர மீன் : இரு பெயரொட்டு. பொங்குதல் - மிகுதல். ஒரீஇ - ஒருவி. கங்கையும் : உம்மை, உயர்வு சிறப்பு. உற்றென்ன : தொகுத்தல் விகாரம்.

கங்கையும், படர, போயிற்று என இயைக்க.

(பி - ம்.) 2. தன்வழிப்படர்வ, தனிவழிப் படர்வ.
4. காணுங்காதலதென்ன, காதலிற்றென்ன. (50)

1048. பாங்கினுத் தரிய மானப் படர்திரை தவழப் பாரின்
வீங்குநீ ரழுவந் தன்னுள் வீழ்மதக் கலுழி வெள்ளத்
தோங்கல்க டலைக டோன்ற வொளித்தவ னுயர்ந்த கும்பம்
பூங்குழற் கங்கை நங்கை முலையெனப் பொலிந்த மாதோ.

பாரின் வீங்கும் நீர் - கரை கடந்து மிக்கு ஓடும் கங்கை நீரின், அழுவம் தன்னுள் - ஆழமான பகுதியுள், வீழ் - விரும்பி நீந்திய, மதம் கலுழி வெள்ளத்து ஓங்கல்கள் - மதமாகிய கலங்கல் நீர்ப் பெருக்கை யுடைய யானைகளின், தலைகள் தோன்ற - தலைகள் (மட்டும்) மேலே

தெரிய, ஒளித்து - (உடல் முழுதும் நீரில்) மறைதலால், அவண் உயர்ந்த கும்பம் - அங்கே உயர்ந்து தோன்றிய (யானை) மத்தகங்கள், பாங்கின் உத்தரியம் மான - நல்ல மேலாடைபோல, படர்திரை தவழ - பரவிய அலைகள் (தம்மேல்) தவழ, பூ குழல் கங்கை நங்கை - பூச்சூடிய கூந்தலை உடைய கங்கையாகிய மங்கையின், முலை என பொலிந்த - தனங்களைப் போல விளங்கின.

மாது, ஓ : அசை.

ஆழமான நீர்ப்பகுதியுள் நீந்தின யானைகளின் தலைகள்மட்டும் மேலே தெரிய, அவை, கங்காதேவியின் தனங்கள் போலக் காணப் பட்டன; நீரலைகள் அவற்றின்மேல் பரவிப் படிவது, உத்தரியமிட்டது போன்றிருந்தது. பாங்கின் - பாங்கான; நல்ல. பார் - வரம்பு; கரை. அழுவம் - ஆழம். வீழ்தல் - விரும்புதல். ஒளித்து - ஒளித்தலால்; ஒளிக்க என்ற செயவென் எச்சத் திரிபு.

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை. சில அச்சுப் புத்தகங்களிலும் ஓலைச் சுவடிகளிலும் இது, 'ஊடுற நெருக்கி' (1051) என்றதன்பின் காணப்படுகின்றது.

(பி - ம்.) 2. விழுமதக்; கலுழிவேழத்து.
3. ஓங்கியதலைகடோன்ற; ஒளிபெறவுயர்ந்த கொன்றைப்.
4. கங்கைமங்கை; பொலிந்ததம்மா, பொலிந்ததன்றே. (51)

### தேர்கள் படகில் ஏற்றப்படுதல்

1049. கொடிஞ்சொடு தட்டு மச்சு மாழியும் கோத்த மொட்டும்
நெடுஞ்சுவர்க் கொடியும் யாவு நெறிவரு முறையி னீக்கி
விடுஞ்சுவற் புரவி யோடும் வேறுவே றேற்றிச் சென்ற
மடிஞ்சபி னுயிர்கள் கூட்டும் வினையென வயிரத்தேர்கள்.

கொடிஞ்கொடு - கொடிஞ்சி என்னும் உறுப்போடு, தட்டும்—, அச்சும்—, ஆழியும் - சக்கரமும், கோத்த மொட்டும் - கோக்கப்பட்டு உச்சியில் அமைந்த மொட்டுப் போன்ற உறுப்பும், நெடு சுவர் கொடியும் - உயர்ந்த இரு பக்கங்ளிலும் நாட்டிய கொடிகளும், யாவும் - பிற உறுப்புக்கள் யாவும், நெறிவரும் முறையின் - (முன்பு) அமைந்த முறையினின்றும், நீக்கி - (தனித்தனியே) பிரிக்கப்பெற, (அவற்றை) விடும் - பூட்டு விடப் பெற்ற, சுவல் புரவியோடும் - (அழகான) பிடரி மயிரையுடைய குதிரைகளுடனே, வேறு வேறு ஏற்றி - வேறு வேறாக ஏற்றிக்கொண்டு, உயிர்கள் மடிஞ்ச பின் - உயிர்கள் மாய்ந்த பிறகு, கூட்டும் - (அவ்வுயிர்களை மற்றோர் உடம்பில்) சேர்க்கின்ற, வினை என - இருவினைகளைப்போல, சென்ற - (நாவாய்கள்) சென்றன.

நாவாய் என்ற எழுவாய் வருவித்துரைக்கப் பெற்றது.

தேர்களை அப்படியே படகுகளில் ஏற்றுதல் ஆகாமையின், அவற்றின் உறுப்புக்களைத் தனித்தனியே பிரித்துத் தொகுத்து, அத்தொகுதிகளையும், குதிரைகளையும் வேறுவேருக ஏற்றினர். உறுப்புக்கள், பிரிக்கப்படாத நிலையில் தேர்கள் உயிரொடு கூடிய உடம்பு எனவும், பிரித்தபின் உயிரற்ற உடம்புகள் எனவும், மீண்டும் கோக்கப்படின் உயிர் பெற்ற புதிய உடம்பு எனவும் கொண்டு, ஓர் உடம்பின் நீங்கிய உயிரை வேருேர் உடம்பிற் புகுத்தும் இரு வினைகள் போல, நாவாய்கள் அமைந்தன என உவமையையும் பொருளையும் பொருத்திக் காண்க. மொட்டு - தேரின் கூம்பு; இது தேரின் உச்சியில் தாமரை மொட்டின் வடிவாகப் பண்ணி அமைக்கப் படுவது. கொடிஞ்சு - தேர்த்தட்டின் முன்னே, தட்டில் அமர்வோர் பிடித்துக்கொள்வதற்கு ஏற்றவாறு தாமரை மொட்டின் வடிவமாகப் பண்ணி நடுவது; இப்பெயர் கொடிஞ்சி, கொடுஞ்சி, கொடுஞ்சு எனவும் வழங்கும். தட்டு - அமரும் இடம். சுவர் - தட்டைச் சுற்றிலும் குத்துக்கால்களாக நடப்பெற்று, மேற் கூரையைத் தாங்கச் சுவர் போல அமைவது. அச்சும் ஆழியும் வெளிப்படை. ''கொடிஞ்சி நெடுந்தேர்'' (மதுரைக். 752); ''நெரிந்தன தடஞ்சுவர்'' (சுந்தர : 838); மடிஞ்ச - மடிந்த; போலி.

(பி - ம்.) 2. நெடுஞ்சுவற், நெடுஞ்சுடர்க்; முறையைநீக்கி, முறைமைநீக்கி.
4. மடிந்தபினுயிர்கள், மடிந்தமன்னுயிர்கள்; வினையன; மானத்தேர்கள்.

(52)

குதிரைகள் படகிற் சென்றமை

1050. நாலிரண் டாய கோடி நவையில நாவாய் மீதாச்
சேறிரண் டனைய வாய கதியொடு நிமிரச் சென்ற
பாறிரண் டனைய மெய்ய பயந்திரண் டனைய நெஞ்ச
காறிரண் டனைய கால கடுநடைக் கலினப் பாய்மா.

பால் திரண்டால் அனைய மெய்ய - பால் திரண்டு வடிவு கொண்டாற் போன்ற உடம்பினை உடையனவும், பயம் திரண்டால் அனைய நெஞ்சு-அச்சம் திரண்டாற்போன்ற மனம் உடையனவும், கால் திரண்டால் அனைய கால - காற்றுத் திரண்டாற்போன்ற கால்களை உடையனவும், கடு நடை - மிக விரைந்த செலவினையும், கலினம்- கடிவாளத்தையும் உடைய, பாய்மா - குதிரைகள், மீது ஆக - தம்மீது பொருந்த (ஏற்றப்பட), நால் இரண்டு ஆய கோடி நவை இல நாவாய் - எட்டுக் கோடியளவான குற்றமற்ற படகுகள், சேல் திரண்டால் அனைய ஆய கதியொடு - சேல் மீன்கள் திரண்டு சென்ருற் போன்ற செலவோடு, நிமிர சென்ற - நீளச் சென்றன.

வெண் குதிரைகளாதலால் 'பால் திரண்டனைய மேனி' என்ருர். குதிரைகள் இயல்பிலே மருட்சி உடையன; இங்கே படகில் ஏற்றப்

படுதலால் மேலும் மருட்சி மிகுவனவாயின; எனவே, 'பயம் திரண்டனைய நெஞ்ச' என்றார். நடையின் வேகம்பற்றி, 'கால் திரண்டனைய கால' என்றார். நாலிரண்டாய கோடி என்றது மிகுதி குறித்து நின்றது; இதனாற் குதிரைகளின் மிகுதியும் புலப்படும்; இவ்வெண்ணைக் குதிரைகளுக்காக்கினும் அமையும். மீதாக என்றதன் இறுதி தொக்கது. திரண்டால் அனைய என்பது திரண்டனைய என்றானதும் தொகுத்தல்.

(பி - ம்.) 1. நவையினாவாய்கண்மீதாச், நாவாய்கடண்ணீர்ச், நாவாய்கணன்னீர் நாவாய்தண்ணீர்ச், நன்னீர்ச்.
2. அனையவான; நதியிற், நீர்மேற்.
4. காலக்கடிநடைக். (53)

### பெண்கள் படகிற் செல்லுதல்

1051. ஊடுற நெருக்கி யோடத் தொருவர்முன் னொருவர் கிட்டிச்
சூடகத் தளிர்க்கை மாதர் தழுவினர்துவன்றித் தோன்ற
பாடியல் களிமால் யானைப் பந்தியங் கடையிற் குத்தும்
கோடுகள் மிடைந்த வென்ன மிடைந்தன குவவுக் கொங்கை.

சூடகம் தளிர் கை மாதர் - வளையல்களை அணிந்த தளிர்போலும் கைகளையுடைய மகளிர், ஓடத்து ஊடு - ஓடங்களில், ஒருவர் முன் ஒருவர் கிட்டி - ஒருவர்முன் ஒருவராகச் சேர்ந்து, உற நெருக்கி - மிகவும் நெருக்கி, தழுவினர் - (ஒருவரையொருவர்) தழுவிக்கொண்டு, துவன்றி தோன்ற - நிறைந்து நிற்க, பாடு இயல் - பெருமை பொருந்திய, களி - மதக்களிப்புடைய, மால் யானை பந்தி- பெரிய யானை வரிசைகளின், அம் கடையில் குத்தும் கோடுகள் - அழகிய நுனியால் குத்தத்தக்க கொம்புகள், மிடைந்த என்ன - நெருங்கினாற்போல, குவவுகொங்கை - (மாதர்களின்) திரண்ட தனங்கள், மிடைந்தன - நெருங்கின.

மாதர் கொங்கைக்கு யானைக் கொம்பை உவமை கூறுவதுண்டு; எனவே, திரண்டு நின்ற மகளிரின் நிமிர்ந்த தனங்கள் நெருங்கித் தோன்றிய காட்சி, ஒன்றையொன்று குத்துமாறு யானைக் கொம்புகள் முன்னிட்டு நின்றன போன்றது என்கின்றார். தழுவினர் : முற்றெச்சம்.

(பி - ம்.) 1. நெருங்கி; முன்பொருவர்; கிட்டச்.
2. மாதர் குழுமினர்; தோன்றி.
3. ஆடியல், ஆடிளம்; களிநல்யானை, களிமாயானைப்; கடையிற்குத்தக், பந்தியங்கெதிர்ந்துகுத்தக், அத்தியங்கடையிற்குத்தக்.
4. மிடைந்ததென்ன மிடைந்ததக்; குலாவு கொங்கை. (54)

1052. பொலங்குழை மகளிர் நாவாய் போக்கினென் றென்று தாக்க
மலங்கின ரிரண்டு பாலு மறுகினர் வெருவி நோக்க
அலங்குநீர் வெள்ளந் தள்ளி யழிதர வங்கு மிங்கும்
கலங்கின வெருவிப் பாயுங் கயற்குல நிகர்த்த கண்கள்.

நாவாய் - படகுகள், போக்கின் - தம் செலவின்கண், ஒன்று ஒன்று தாக்க - ஒன்றோடொன்று மோதுதலால், பொலம் குழை மகளிர் - (அவற்றிலுள்ள) பொன்னாலியன்ற குண்டலங்களை அணிந்த பெண்கள், வெருவி - அச்சங்கொண்டு, மலங்கினர் மறுகினர் - மனங் கலங்கி மறுக்கமுற்று, இரண்டு பாலும் நோக்க - இரண்டு பக்கமும் (மாறி மாறி மருண்டு) பார்க்க, கண்கள் - (அவர்களுடைய) கண்கள், அலங்கு நீர் வெள்ளம் தள்ளி அழிதர - அசையும் வெள்ளத்தால் தள்ளுண்டு வலிகெடுதலால், வெருவி கலங்கின - அஞ்சி நிலைகுலைந் தனவாகி, அங்கும் இங்கும் பாயும் - அங்கும் இங்குமாகத் துள்ளிப் பாய்கிற, கயல் குலம் நிகர்த்த - கயல்மீன் கூட்டத்தைப் போன்றன.

படகுகள் ஒன்றோடொன்று தாக்கும்போது உண்டாகும் அதிர்ச்சியால், அவற்றில் உள்ள மகளிர் அஞ்சிக் கலங்கி மருண்டு அங்கும் இங்கும் பார்க்க, அந்நிலையில் அவர் கண்கள், வெள்ளத்தால் அலைப்புண்ட கயல்மீன்கள் அங்குமிங்கும் துள்ளிப் பாய்வது போன்று இருந்தன. கண்கள் நிகர்த்த என்க. அழிதர : தர, துணைவினைப் பகுதி. அழிதல் - வலிகெடுதல். மலங்கினர், மறுகினர், கலங்கின: முற்றெச்சம்.

(பி - ம்.) 1. நாவாய்ப்போக்கின்.
2. வெருவிநோக்கி.
3. அலங்கனீர், இலங்குநீர்; வெள்ளந்தன்னில்; அழுந்தலால், எழுதலால்; இழிதர, வழிதர.
4. கலங்கலின்; நிகர்ப்ப. (55)

1053. இயல்வுறு செலவி னாவா யிருகையு மெயினர் தூண்டத்
துயல்வரு துடுப்பு வீசுந் துவலைகண் மகளிர் மென்றூ
சுயல்வுறு பரவை யல்கு லொளிபெறத் தளிப்பவுள்ளத்
தயர்வுறு மதுகை மைந்தர்க் கயாவுயிர்ப் பளித்த தன்றே.

இயல்வு உறு செலவில் நாவாய் - பொருந்திய விரைவான போக்கினையுடைய ஓடங்களை, இரு கையும் எயினர் தூண்ட - இரண்டு பக்கங்களிலும் (இருந்து ஓட்டும்) வேடர்கள் (துடுப்புக்களால்) செலுத்தலால், துயல்வரு துடுப்பு வீசும் துவலைகள் - (முன்னும் பின்னு மாக) அசையும் துடுப்புக்கள் (அள்ளி) வீசும் நீர்த்துளிகள், மகளிர் - பெண்களின், மென் தூசு உயல்வு உறு - மெல்லிய ஆடை அசையப் பெற்ற, பரவை அல்குல் ஒளி பெற தளிப்ப - பரந்த அல்குல் பார்வையிற் படும் வண்ணம் சிந்தி ஆடையை நனைக்க, (அது) உள்ளத்து அயர்வு உறு - மனத்தளர்ச்சி மிக்க, மதுகை மைந்தர்க்கு - வலிமையையுடைய வீர இளைஞருக்கு, அயா உயிர்ப்பு அளித்தது - நெடு மூச்சை உண்டாக்கிற்று.

அன்று, ஏ: அசை. மெல்லிய ஆடை நனைந்து உடம்போடு ஒட்டுதலால், மகளிரின் மறைந்த அங்கம் புலப்பட, அது கண்ட ஆடவர் சிலர், தாம் மகளிரோடு இன்புற மாட்டாத அவலம் வந்ததை

எண்ணி நெடுமுச்செறிந்தனர். இயல்பு - பொருந்துதல். உறு செலவு - மிக்க செலவு; விரைந்த போக்கு. கை - பக்கம். துவலை - திவலை. தளித்தல் - சிந்துதல்.

(பி - ம்.) 1. இயலுறு; செல்விநாவாய்; இருகையின்.
2. துயல்வன; திவலைகண் மகளிர்.
3. உயலுற. உயர்வுறு, இயல்புறு, இயல்பெறு; ஒளிப்பறத்தளிர்ப்ப, ஒளிபுறத்தளிப்ப, ஒளிபெறத் துளிப்ப; அளித்ததம்மா, ஒழிந்த தன்றே, ஒழிந்ததம்மா, ஒழிந்தவன்றே; அவாவுறப் பொலிந்த தன்றே.
4. மதுகை மைந்தர், மங்லக; மைந்தர்க்கு அயர்வுயிர்ப்பு. (56)

## நாவாய்களின் வருணனை

1054. இக்கரை யிரைத்த சேனை யெறிகடன் முகந்த வேகி
அக்கரை யடைய வீசி வறியன வணுகு நாவாய்
புக்கலை யாழி நன்னீர் பொறுத்தன பொழிந்து போக்கி
அக்கண முவரி மீளு மகன்மழை நிகர்த்த வம்மா.

இ கரை - (கங்கையின்) வடகரையில், இரைத்த - ஆரவாரித்த, சேனை எறி கடல் - சேனைத் திரளாகிற அலைமோதும் கடலை, முகந்த ஏகி - வாரிக்கொண்டு போய், அ கரை - தென்கரையில், அடைய வீசி- முழுதும் இறக்கிவிட்டு, வறியன அணுகும் - பாரம் அற்றனவாக (மீண்டு வடகரையைச்) சேர்கிற, நாவாய் - ஓடங்கள், அலை ஆழி புக்கு - அலைகிற கடலில் புகுந்து, பொறுத்தன நல் நீர் - (தாம் பருகித்) தாங்கிய நல்ல நீரை, பொழிந்து போக்கி-(உரிய இடங்களில்) மழையாகப் பொழிந்து தள்ளி (நீரற்றனவாகி), அ கணம் - அப்போதே, உவரி மீளும் - (மீண்டும் நீர் கொள்ளுதற்குக்) கடலினிடம் வருகின்ற, அகல் மழை நிகர்த்த - பெரிய மேகங்களை ஒத்திருந்தன.

அம்மா : அசை; வியப்பெனினுமாம்.

மேகங்களின் செயலைப் படகுகளின் செயலுக்கு ஒப்புக் கூறிய மைக்கு இயையப் படைத்திரளைக் கடலாக உருவகித்தார். கடல்நீர் உப்பாயினும், மேகங்கள் பொழிவது நல்ல நீரேயாகலின், நன்னீர் பொறுத்தன என்றார்.

(பி - ம்.) 1. இறுத்த சேனை; முகந்துவெஃகி, முகந்தவெஃகி; முழுதுமேற, இனிதினேற்றி.
2. கணுகு நாவாய்.
3. போக்கிப்போக்கி, போக்கிமீள, பொங்கப்போக்கி, பொங்கிக்கக்கி, பொங்கியேங்கி, பொங்கிப்பொங்கி, பொழிந்து பொங்கி.
4. அக்கணத்துவரி, கக்கினவுவரி; கனமழை, கணமழை; நிகர்த்த மாதோ. (57)

### படகுகள் கப்பல் போன்றமை

1055. அகிலிடு தூப மன்ன வாய்மயிற் பீலி யார்த்த
முகிழுடை முரண்மாத் தண்டு கூம்பென முகிலின் வண்ணத்
துகிலோடு தொடுத்த செம்பொற் றட்டிடைத் தொடுத்த முத்தின்
நகுகொடி நெடிய பாயா நவ்வெனச் சென்ற நாவாய்.

அகில் இடு தூபம் அன்ன-அகிற்கட்டையிட்டு எழுப்பும் புகை போன்ற, ஆய் மயில் பீலி ஆர்த்த - அழகிய மயிற்பீலி கட்டப்பெற்ற, முகிழ் உடை - (உச்சியில்) குமிழையுடைய, முரண் மா தண்டு - வலிய பெரிய தண்டு, கூம்பு என - பாய்மரமாகவும், முகிலின் வண்ணம் துகிலொடு தொடுத்த – வெண்முகில் போன்ற நிறமுடைய சீலை கட்டப்பட்டனவும், செம்பொன் தட்டிடை தொடுத்த - நல்ல பொன் தகட்டில் நடப்பட்டனவும் (ஆகி), முத்தின் நகு கொடி - (அலங்கரித்த) முத்துக்களோடு விளங்கும் கொடிகள், பாய் ஆக - பாயாகவும் கொண்டு, நாவாய் - (சில) படகுகள், நவ் என சென்ற - கப்பலைப் போலச் சென்றன.

சேனையின் விருதுப் பொருளான, மயிற்பீலிக் குடை, கொடி முதலியன ஏற்றிச்சென்ற படகுகள், நடுவில் நிறுத்திய மயிற்பீலிக் குடை பாய்மரம் போலாக, அதனோடு இணைந்த துகிற்கொடி பாய்ச் சீலைபோலாக, அவை பாய்க்கப்பல் போலச் சென்றன என்கின்றார்.

நவ் - நாவம்; கப்பல்; இது நவ்வி எனவும் வழங்கும்: யுத்த. 2282, பார்க்க. நாவாய் - படகு. இச்செய்யுளுக்கு வேறு வகையாகவும் பொருள் கூறுவர். 'குடைகளும், ஆலவட்டமும், மயிற்பிஞ்சங்களும், கொடிகள் முதலானவையும் ஓடத்தில் ஏற்றிக்கொண்டு போகிற படியினாலே, பாய்கள் கட்டினாற்போல அதிகச் சுருக்காய் நடந்தது' என்ற பழைய வசனம் இங்கு நோக்கத்தகும். 'அகிலிடு.........தண்டு' என்றது மயிற்பீலிக் குடையைக் குறிக்கும். வசனத்தில் மயிற்பிஞ்சம் என்பதும் அது.

(பி - ம்.) 1. தூபமென்ன; பீலியாத்த.
2. முகிலிடு, முகிலிடை, முகிழிடு.
3. செம்பொற்றகட்டிடைத், செம்பொன்றகட்டிடைத்; தொகுத்த முத்தம்.
4. பாயின்நவ்வெனச், நண்டெனச், இனமெனச், உடுவெனச், கலமெனச், மரமெனச்; பாயானவ்வெனச். (58)

### படகுகள் ஆகாய விமானம் போன்றமை

1056. ஆனனங் கமல மன்ன மின்னன வமுதச் செவ்வாய்த்
தேனவர் குழலா ரேறு மம்பிகள் சிதறு முத்தம்
மீனென விரிந்த கங்கை விண்ணெனப் பண்ணை முற்றி
வானவர் மகளி ரூரு மானமே நிகர்த்த மாதோ.

கமலம் அன்ன ஆனனம் - தாமரை மலரைப் போன்ற முகமும், அமுதம் செவ்வாய் - அமுதம் ஊறும் சிவந்த வாயும் உடைய, மின் அன்ன - மின்னற்கொடி போன்ற, தேன் அலர் குழலார் ஏறும் அம்பிகள் - (சூடிய பூக்களின்) தேன் பரவும் கூந்தலுடைய மகளிர் ஏறிச்சென்ற ஓடங்கள், கங்கை விண் என - கங்கையின் நீர்ப்பரப்பு ஆகாயம் போலவும், சிதறும் முத்தம் மீன் என - (அலைகளால்) சிதறும் முத்துக்கள் விண்மீன்கள் போலவும் (தோன்ற), வானவர் மகளிர் - தேவமங்கையர், பண்ணை முற்றி - நீர் விளையாட்டை முடித்துக் கொண்டு, ஊரும் - ஏறிச் செல்கிற, மானமே நிகர்த்த - விமானங் களையே போன்றன.

மாது, ஓ: அசை.

ஓடங்களில் சென்ற மகளிர், வடிவத்தால் தேவமங்கையர்களைப் போல விளங்க, அவர்களைத் தாங்கிய ஓடங்கள் தேவ விமானங்களைப் போல விளங்கின எனக் கற்பனை செய்து, அதற்கேற்பக் கங்கைநீர்ப் பரப்பு ஆகாயம் போன்றது எனவும் கூறுகின்றார். பண்ணை - விளையாட்டு; இங்கே நீர்விளையாட்டைக் குறித்தது: பால. 1005, பார்க்க. அம்பிகள் நிகர்த்த எனக் கூட்டுக.

பி-ம்.) 1. ஆனபொற் கமலத்தன்ன, மின்னென, இனமென, கமலத்தன்ன மினமென, கமலமன்ன மென்மலர், கமலத்தன்னத்தினமென.
2. தேனனை, தேனகு; சிந்துமுத்தம், சிறந்த முத்தம்.
4. வானரமகளிருரும்; விமானமே; நிகர்வமாதோ, போன்றதன்றே.

(59)

1057. துளிபடத் துழாவு திண்கோற் றுடுப்பிரு காலிற் றோன்ற
நளிர்புனற் கங்கை யாற்றி னண்டெனச் செல்லு நாவாய்
களியுடை மஞ்ஞை யன்ன கனங்குழைக் கயற்கண் மாதர்
ஒளிரடிக் கமலந் தீண்ட வுயிர்படைத் தனவே யொத்த.

துளி பட துழாவு - நீர்த்துளிகள் சிதறும்படி துழாவுகின்ற, திண் கோல் துடுப்பு - வலிய கோலாகிய துடுப்புக்கள், இரு காலில் தோன்ற - இரண்டு பக்கங்களிலும் (கால்களைப் போலத்) தோன்ற, நளிர் புனல் கங்கையாற்றில் - குளிர்ந்த நீரையுடைய கங்கையாற்றிலே, நண்டு என செல்லும் - நண்டுகளைப் போலச் செல்லுகிற, நாவாய் - ஓடங்கள், கனம் குழை - கனமான குண்டலங்களையும், கயல் கண் - கயல்மீனைப் போன்ற கண்களையும் உடைய, களி உடை(ய) மஞ்ஞை அன்ன - களிப்புள்ள மயில்களைப் போன்ற, மாதர் - பெண்களின், ஒளிர் அடி கமலம் தீண்ட - செவ்வொளி தரும் அடித்தாமரைகள் படுதலால், உயிர் படைத்தனவே - ஒத்த உயிரைப் பெற்றனவே போல இருந்தன.

"காலுடை நெடுஞெண்டிற் சென்றது" (681) என முன்னே ஓடத்துக்கு நண்டை உவமை கூறியவர், இங்கும் அதனைக் கூறி,

தேவமங்கையரையொத்த மகளிரின் பாதங்கள் படுதலால், ஓடமே உயிர்பெற்றுச் செல்வது போன்றிருந்தது எனத் தற்குறிப்பேற்றமாக்கு கின்ருர். இருகால் - இரண்டு பக்கம்; துடுப்புக்கள் இரண்டின்மேற் பலவாகலானும், நண்டுக்கும் கால்கள் அங்ஙனமாகலானும், இரண்டு கால்கள் எனல் பொருந்தாது.

(பி - ம்.) 1. துழவு; காலிற்ருேன்றும்.
2. நளிபுனற், நண்டெனச் சென்ற.
4. ஒளியடிக்; தீண்டி. (60)

## முனிவர் வான்வழியே செல்லுதல்

1058. மையறு விசும்பின் மண்ணின் மற்றுமோ ருலகின் முற்றும்
மெய்வினை தவமே யன்றி வேறுமொன் றுளதோ கீழோர்
செய்வினை நாவா யேறித் தீண்டலர் மனத்திற் செல்லும்
மொய்விசும் போட மாகத் தேவரின் முனிவர் போனுர்.

முனிவர் - (வசிட்டன் முதலிய) இருடிகள், கீழோர் வினை செய் நாவாய் - கீழோர் தொழில் செய்தற்குரிய ஓடங்களில், தீண்டி ஏறலர் - தொட்டு ஏருதவர்களாய், மனத்தில் செல்லும் - நினைத்த வளவில் (மனேவேகமாகச்) செல்லத்தக்க, மொய் விசும்பு ஓடம் ஆக - வலிய வான்வழிச் செலவே ஓடமாகக் கொண்டு, தேவரின் போனுர் - தேவர்களைப் போல (மறு கரைக்கு)ச் சென்ருர்கள்; (எனவே), மை அறு விசும்பில் - குற்றமற்ற விண்ணுலகிலும், மண்ணில் - மண் ணுலகிலும், மற்றும் ஓர் உலகில் - வேறும் ஓர் (எந்த) உலகத்திலும், முற்றும் மெய்வினை - முழுதும் உண்மையான (பொய்யின்றிப் பலித்தற் குரிய) செயல், தவமே அன்றி - தவமே அல்லாமல், வேறு ஒன்றும் உளதோ - (அதற்கு ஈடாக) வேறு ஏதேனும் உண்டோ? (இல்லை).

வேண்டிய வேண்டியாங்கு எய்துவித்தலில் தவருதது தவமாகலின், அதனை 'மெய்வினை' என்று சுட்டி அத்தவத்தைச் செய்து சித்தி பெற்ற முனிவர் நினைத்த மாத்திரத்தில் எழுந்து வான்வழியே செல்லும் ஆற்றல் படைத்தனர் என, அதன் பயன் கூறினுர். ஓடங்களைச் செய்தலும் கீழோர் தொழிலாகலின், அதனைத் தீண்ட மனம்பற்ருது வான்வழிச் சென்றனர் என்றது, முனிவரின் ஆசார மிகுதி கூறியவாறு. வேறும் ஒன்று என்றவிடத்து, உம்மை பிரித்துக் கூட்டப்பெற்றது. ஏறித் தீண்டலர் என்றவிடத்து, தீண்டி ஏறலர் என மாறி விகுதி பிரித்துக் கூட்டப் பெற்றது. உளதோ என்றதில் ஓ, எதிர்மறை.

(பி - ம்.) 1. மையுறு; மாறுமோருலகின்.
2. மேலுமொன்று.
3. தீண்டிலர், ஏறித்தீண்டிலாவகையிற், தீண்டிடாவகையிற்.
4. மொய்விசும்பூடேமாகத். (61)

பரிவாரங்கள் கங்கையைக் கடத்தல்
(கலிவிருத்தம்)

1059. அறுபதி ஞயிர மக்கு ரோணியென்
றிறுதிசெய் சேனையு மெல்லை தீர்நகர்
மறுவறு மைந்தரு மகளிர் வெள்ளமும்
செறிதிரைக் கங்கைபின் கிடக்கச் சென்றவே.

அறுபதினாயிரம் அக்குரோணி என்று—, இறுதி செய் - வரையறை செய்யப்பெற்ற, சேனையும் - படைத்திரளும், எல்லை தீர் நகர் - இறுதி யற்ற அயோத்தி நகரில் வாழும், மறு அறு மைந்தரும் - குற்றமற்ற ஆடவரும், மகளிர் வெள்ளமும் - பெண்களின் கூட்டமும், செறி திரை கங்கை பின் கிடக்க - செறிந்த அலைகளை உடைய கங்கை ஆறு பின்னே தங்குமாறு, சென்ற - (அதனைக் கடந்து) சென்றன.

ஏ ! ஈற்றசை.

இதுகாறும், பலரும் பலவும் ஆறுகடந்த செய்தியை வகைப் படுத்தி விரித்துக் கூறியவர், இறுதியில் அதனைத் தொகுத்துக் கூறி முடித்தார். சேனை அறுபது ஆயிரம் அக்குரோணி அளவு கொண்டது என்பது முன்னே (1002) கூறப்பெற்றது. அயோத்தி என்றும் அழியாத பெருமை உடையதாகலின், 'எல்லை தீர்நகர்' என்றார். மாந்தர் - ஆடவர். இச்செய்யுளுள் உயர்திணையும் அஃறிணையும் விரவி அஃறிணை முடிபேற்றன. மறுவறு என்றதனை மகளிர்க்கும் கூட்டுக.

(பி - ம்.) 1. அறுபதினாயிரமாமக்கோணியின்.
2. இறுதிசெல்.
3. மாந்தரும், மாக்களும். (62)

பரதன் படகு ஏறுதல்

1060. சுழித்துநீர் வருதுறை யாற்றைச் சூழ்படை
கழித்துநீங் கியதெனக் கள்ள வாசையை
அழித்துவே றவனிபண் டாண்ட வேந்தரை
இழித்துமே லேறினன் றானு மேறினன்.

சூழ் படை - (தன்னைச்) சூழ்ந்து வந்த சேனை முழுதும், நீர் சுழித்து வருதுறை - நீர் சுழித்துக்கொண்டு வரும் துறைகளையுடைய, ஆற்றை கழித்து நீங்கியது என - கங்கை ஆற்றைக் கடந்து சென்றதாக, கள்ளம் ஆசையை அறுத்து - வஞ்சனையை உடைய ஆசையை (முற்றும்) ஒழித்து, பண்டு அவனி ஆண்ட வேறு வேந்தரை இழித்து - முன்னே உலகை ஆண்ட (தன் குலத்துப்) பிற அரசரை எல்லாம் (தன் உயர் குணங்களால்) கீழ்ப்படுத்தி, மேல் ஏறினன் - புகழில் மேம்பட்டவனான பரதன், தானும் ஏறினன் - தானும் (ஓடத்தில்) ஏறினன்.

இறுதியில் பரதன் ஆற்றைக் கடத்தற்குப் படகேறினமை கூறும் இதில், 'தானும் ஏறினுன்' என்ற உம்மையால், முன்னே கூறப்படாத தாய்மார் முதலியோரும், சுமந்திரனும், சத்துருக்கனும் ஏறினமை பெறப்படும். இதனோடு, குகனும் உடன் இருந்தமை அடுத்த கவியால் அறியலாகும். நீங்கியது என - கடந்துசென்றது என்று படகு செலுத்துவோர் தெரிவிக்க என்றலுமாம்.

பல அச்சுப் புத்தகங்களில் இதன்பின் கீழ்க்காணும் பாடலொன்று உளது. அஃது இவ்விடத்திற்கு இயைபுடையதாகத் தோற்றினும், பல சுவடிகளிலும், ஐயரவர்களின் கையெழுத்துப் பிரதியிலும் அஃது இல்லாமையாலும், அதன் பின்பகுதி பலவாறு வலிந்து பொருள்கொள நிற்பதாலும், அப்பாடலின்றியே தொடர்பு உய்த்துணரப்படுதலானும் அது மிகைப்பாடலெனக்கொண்டு இங்கே காட்டப்பெறுகிறது:

"தன்னன தம்பியுந் தாயர் மூவரும்
சொன்னதேர் வலவனுந் தூய தோழனும்
துன்னின ரேறலுந் துழாந்து டுப்பெனும்
நன்னயக் காலிஞ னடத்தன் மேயினுன்."

இவ்விடத்து ஒரு பிரதியில் மற்றொரு பாட்டும், அதன்பின் 'கங்கை நீங்கு படலம் முற்றும்' என்ற தொடரும் காணப்படுகின்றன; அப் பாடல்,

"ஏறின ரிளவலோ டிரங்கு நெஞ்சுகொண்
டுறிய தாயரு முரிய சுற்றமும்
வேறுள பெருநதி நீங்கிப் பெட்பொடும்
கூறுதென் கரையிடைக் குழீஇய போதிலே"

என்பது. இதன்படி, அனைவரும் தென்கரை சேர்ந்தபின், குகன் தாய்மாரைப்பற்றிப் பரதனைக் கேட்டறிந்தானென்பதாகும்; இது படகிலேயே நிகழ்ந்ததாக மேலே பெறப்படுதலின், முன்னது பொருந்தாமை உணரலாகும்.

(பி - ம்.) 1. வருந்திரை, வரும்படை.
2. நீங்கியவெனக். 3. வென்றவனி.
4. அழித்துமேலேறினுன். (63)

## கோசலையைப் பரதன் குகனுக்கு அறிமுகப்படுத்துதல்
### (அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

1061. சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற கோசலையைத்
தொழுது நோக்கிக்
கொற்றத்தார்க் குருசிலிவ ராரென்று குகன்வினவக்
கோக்கள் வைகும்

முற்றத்தான் முதற்றேவி மூன்றுலகு மீன்ருனை
முன்னீன் ருனைப்
பெற்றத்தாற் பெறுஞ்செல்வம் யான்பிறத்தலாற்றுறந்த
பெரியா ளென்ருன்.

சுற்றத்தார் - சுற்றத்தினரும், தேவரொடும் - தேவர்களும், தொழ நின்ற - (தன்னை) வணங்கும்படி விளங்கிய, கோசலையை - கௌசல்யா தேவியை, குகன் நோக்கி - குகன் பார்த்து, (அவளைக் குறித்துப் பரதனிடம்), கொற்றம் தார் குருசில் - வெற்றிமாலையை யுடைய வீரனே, இவர் ஆர் என்று வினவ - இவர் யார் என்று கேட்க, (பரதன் கூறுவான் :) கோக்கள் வைகும் முற்றத்தான் - சிற்றரசர் பலரும் (செவ்வி பெருது தங்கிக்) காத்திருத்தற்கிடமான முன்றிலை யுடைய சக்கரவர்த்தியின், முதல் தேவி-மூத்த பட்டத்துத் தேவி;மூன்று உலகும் ஈன்ருனை - மூவுலகங்களையும் படைக்கும் பிரமனை, முன் ஈன்ருனை- முதலில் (தன்னிடமாகப்) படைத்த திருமாலான இராமபிரானை, பெற்றத்தால் - (தன் புதல்வனுகப்) பெற்றதனுல், பெறும் செல்வம் - அடைதற்கு உரிய பாக்கியத்தை, யான் பிறத்தலால் துறந்த - நான் ஒருவன் பிறந்ததனுல் இழந்த, பெரியாள் என்ருன் - பெரியவள் என்ருன்.

தாய்மார் மூவருள், பலர் தொழநின்ற கோசலையின் சிறப்பு அந்த நிலையில் புலப்படுதலால், அவளைக் குறித்துக் குகன் முதலில் வினவலானுன். வினவும்போதே 'இவர்' என மரியாதையோடு சுட்டுகின்ருன். கோசலை, சக்கரவர்த்தியின் முதல் பட்டத்துத் தேவியாகவின் சுற்றத்தார் அனைவரும் வணங்குதற்கு உரியள்; தேவர் காரியம் முடிக்கப் பிறந்த இராமபிரானைப் பெற்றதனுல் தேவரும் வணங்குதற்கு உரியவளானுள். திருமாவின் திருவுந்தியிலே முதலில் தோன்றினவன் பிரமனுகவின், 'மூவுலகு மீன்ருனை முன்னீன்ருன்' எனச் சிறப்பிக்கப்பெற்ருன் இராமபிரான். பரதன், ''யானென்றும் முடிவில்லாத துன்பத்துக் கேதுவானேன்'' (1040) எனத் தன்னை முன்பு நொந்துகொண்டதுபோல, இங்கும், 'யான்பிறத்தலால் செல்வம் துறந்த பெரியாள்' என்ருன். பெற்றதால் என்பது எதுகையின்பம் நோக்கிப் பெற்றத்தால் என விரிந்தது.

(பி - ம்.) 1. தொழுகின்ற.
2. வெற்றித்தார்க் குரிசில், வேந்தர்வைகும்.
3. மூவுலகும்; முன். (64)

வணங்கிய குகனைக் கோசலைக்கு அறிமுகப்படுத்துதல்

1062. என்றலுமே யடியின்மிசை நெடிதுவிழுந் தழுவானை
யிவனு ரென்று

கன்றுபிரி காராவின் றுயருடைய கொடிவினவக்
கழற்கால் மைந்தன்
இன்றுணைவ னிராகவனுக் கிலக்குவற்கு மிளையவற்கு
மெனக்கு மூத்தான்
குன்றனைய திருநெடுந்தோட் குகனென்பா னிந்நின்ற
குரிசி லென்றான்.

என்றலும் - (கோசலையைப்பற்றிக் குகனுக்குப் பரதன்) கூறிய அளவில், அடியின்மிசை - அவள் பாதங்களில், நெடிது விழுந்து - நெடிதாக (சாஷ்டாங்கமாக) விழுந்து, அழுவானை - அழுகின்ற குகனைக் குறித்து, கன்று பிரி கார் ஆவின் துயர் உடைய கொடி - இளங்கன்றைப் பிரிந்த புனிற்றுக் காராம் பசுவின் துயர் போன்ற துயரையுடைய கொடிபோல்வாளான கோசலை, இவனீ ஆர் என்று வினவ - (இவ்வாறு அழும்) இவன் யார் என்று (பரதனைக்) கேட்க, கழல் கால் மைந்தன் - வீரக்கழலை அணிந்த கால்களையுடைய பரதன், இ நின்ற குரிசில் - இந்நிலையிலுள்ள இவ்வீரன், இராகவனுக்கு இன் துணைவன் - இராகவனுக்கு இனிய உயிர்த்தோழன்; இலக்குவற்கும் - இலக்குமணனுக்கும், இளையவனுக்கும் - அவன் தம்பியான சத்துருக்க னுக்கும், எனக்கும் —, மூத்தான் - அண்ணனுவான்; குன்று அனைய திரு நெடு தோள் - மலைபோலும் அழகிய உயர்ந்த புயங்களையுடைய, குகன் என்பான் - குகன் என்று பெயர் சொல்லப்படுவான், என்றான் —.

பரதன் கூறியதைக் கேட்டும், கோசலையை நேரே கண்டும் துயர மிகுதியால் மெய்யன்பனான குகனுக்கு அழுகை பிறந்தது. கோசலையின் துயரநிலை அவளைக் காண்போர் எவர்க்கும் புலனாகும். "கன்று பிரிந்துழிக் கறவை யொப்பக் கரைந்து கலங்கினாள்" (309) என்பதும் அதன் விசேடக் குறிப்பும் காண்க. பரதன், "மன்முன்னே தழீஇக்கொண்ட மனக்கினிய துணைவனேல், என்முன்னே" (1024) என முன்னர்க் கூறியதற்கியைய இங்கும் குகனை 'மூத்தான்' என்றான்.

(பி - ம்.) 1. அடியிறைஞ்சி; நெடிதுவீழ்ந்து, வீழ்ந்து; யாரென்னக்.
2. துயருழந்த; கழற்கால்வேந்தன்.
3. இன்றுணையோன்; இராகவற்கவ்விலக்குவற்கும்.
4. குலநெடுந்தோட்; இவனின்ற. (65)

கோசலை மகிழ்ந்து வாழ்த்துதல்

1063. நைவீர லீர்மைந்தீ ரினித்துயரா னுடிறந்து
காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவு நலமாயிற் றாமன்றே
விலங்கற் றிண்டோட்

கைவீரக் களிறனைய காளையிவன் றன்னோடு
கலந்து நீங்கள்
ஐவீரு மொருவீரா யகலிடத்தை நெடுங்கால
மளித்தி ரென்றாள்.

(குகனை அறிந்த கோசலாதேவி), மைந்தீர் - குமாரர்களே, இனி துயரால் நைவீர் அல்லீர் - இனி (நீங்கள்) துன்பத்தால் வருந்துதற்குரியீ ரல்லீர்; மெய் வீரர் - உண்மையான வீரர்களாகிய இராம இலக்குவர், நாடு இறந்து - நாட்டை விட்டு, காடு நோக்கி பெயர்ந்ததுவும் - காட்டை நோக்கி வந்ததும், நலம் ஆயிற்று - நல்லதாயிற்று; ஆம் - இஃது உண்மையே; விலங்கல் திண்தோள் - மலைபோலும் வலிய புயங் களையும், கைவீரம் - (வில்தொழிலில் தேர்ந்த) கையின் வீரத்தையும் உடைய, களிறு அனைய - (அஞ்சாமையால்) ஆண் யானை போன்ற, காளை இவன் தன்னோடு கலந்து - காளைப் பருவத்தினனான இவனோடு சேர்ந்து, நீங்கள் ஐவீரும் ஒருவீர் ஆய் - நீங்கள் ஐந்து பேரும் (ஒருவரையொருவர்) பிரியாதவராகி (ஒன்றுபட்டு), அகல் இடத்தை - பரந்த இராச்சியத்தை, நெடு காலம் அளித்திர் - மிக நீண்ட காலம் காப்பீராக, என்றாள் - என்று வாழ்த்தினாள். அன்று, ஏ: அசை.

உயர்ந்த பண்புகளையுடைய கோசலை, குகன் செய்தியை அறிந்து, அவனையும் தன் புதல்வன் போலக் கருதி, 'இராம இலக்குவர் காடு போந்ததனால் மற்றொரு சகோதரன் கிடைத்தான்; இனி நீங்கள் ஐவரும் ஒன்றுபட்டு அரசாள்வீராக' என உண்மையுள்ளத்தோடு வாழ்த்தினாள். இராமபிரான் குகன்பால் கொண்ட அன்புரி மையும், குகனுடைய பண்புகளும் பரதனைக் கவர்ந்தது போலவே கோசலையையும் கவர்ந்தன. இராமன் நாடு கடந்து வந்ததும் ஒரு வகையில் நல்லதாயிற்று என்கின்றாள். குகனைப் பிரியுங்கால் அவனுக்கு இராமபிரான் கூறியனவும் (688–91), "குகனொடும் ஐவ ரானேம்...புதல்வராற் பொலிந்தா னுந்தை" (யுத்த. 449) என வீடணனுக்குக் கூறியதும் இங்கு நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. இனித்துயராய், வினைத்துயரால்; காடிழந்து; கானநோக்கி, காடே நோக்கி.
2. போந்ததுவும்; ஆயிற்றுமென்றே.
3. இவன்றன்னோடும்; கலந்துநீர்கள், நீவிர்; நீங்காது.
4. ஒருவீர்போல்; அகலிடத்தே; உலகனைத்தும்; அளித்தீர். (66)

சுமித்திரையை அறிமுகப்படுத்துதல்

1064. அறந்தானே யென்கின்ற வயனின்ற டனைநோக்கி
யைய வன்பின்
நிறைந்தானை யுரையென்ன நெறிதிறம்பாத் தன்மெய்யை
நிற்ப தாக்கி

இறந்தான்ற னிளந்தேவி யாவர்க்குந் தொழுகுலமா
மிராமன் பின்பு
பிறந்தானு முளனென்னப் பிரியாதான் றனைப்பயந்த
பெரியா ளென்ருன்.

அறம் தானே என்கின்ற - தருமத்தின் வடிவம் தானே என்பாள் போன்ற, அயல் நின்ருள் தன்னை நோக்கி - (கோசலையின்) பக்கத்தில் நின்ற சுமித்திரையை (குகன்) பார்த்து, (பரதனிடம்) ஐய - ஐயனே, அன்பின் நிறைந்தாளை உரை என்ன - அன்பினுல் நிறைந்த இவ்வம்மையை (யாரென்று) சொல்லுக என்று கேட்க, (பரதன்), நெறி திறம்பா - முறை வழுவாத, தன் மெய்யை - தனது வாய்மையை, நிற்பது ஆக்கி - என்றும் நிலைப்பதாகச் செய்து, இறந்தான் தன் - இறந்த சக்கரவர்த்தியின், இளம் தேவி - இளைய பட்டத்துத்தேவி; யாவர்க்கும் தொழுகுலம் ஆம் - எல்லார்க்கும் தெய்வமான, இராமன் - இராமனுக்கு, பின்பு பிறந்தானும் உளன் என்ன - பின்னே பிறந்த ஒருவனும் இருக்கின்ருன் என்று உலகோர் கூறும்வண்ணம், பிரியாதான் தனை பயந்த - (எக்காலத்தும் இராமனைப்) பிரியாதவனுன இலக்குவனைப் பெற்ற, பெரியாள் - பெருமை உடையவள், என்ருன் - என்று சொன்னுன்.

சுமித்திரையின் அறப் பண்பை 443--4ஆம் கவிகளிற் காண்க. அவள் இராமன்பாலுள்ள அன்பால் அவனை நினைந்து நினைந்து கண்ணீர் பெருக்கியவண்ணம் இருந்தமையின், 'அன்பின் நிறைந்தாள்' எனப்பட்டாள். தயரதன் வாய்மை காத்தற் சிறப்பு : 1093, 1126, 1129-பார்க்க.

(பி - ம்.) 1. என்கின்ருள், எனநின்ருன்; நின்ருட்கு; ஒக்கின்ருள்; அருகு நின்ருள்; தனைநோக்கியருகலனும் கற்புநாணும், தனைநோக்கியையனை| நோக்கியன்பின்.
2. சிறந்தாளை; தன்மேன்மை.
3. தொழுகுலமவ்விராமன். (67)

கைகேயியை யாரென்று குகன் கேட்கப் பரதன் கூறுதல்

1065. சுடுமயா னத்திடைதன் றுணையேகத் தோன்றறுயர்க்
கடலி னேகக்
கடுமையார் கானகத்துக் கருணையார் கவியேகக்
கழற்கான் மாயன்
நெடுமையா லன்றளந்த வுலகெல்லாந் தன்மனத்தே
நினைந்து செய்யும்
கொடுமையா லளந்தாளை யாரிவரென் றுரையென்னக்
குருசில் கூறும்.

தன் துணை - தன் நாயகன், சுடும் மயானத்திடை ஏக - (பிணங்களைச்) சுடுதற்கு உரிய மயானத்திற்குச் செல்லவும், தோன்றல் - தன் வயிற்றில் தோன்றிய பரதன், துயர் கடலின் ஏக - துன்பக் கடலுள் மூழ்கவும், கருணை ஆர்கலி - கருணைக் கடலான இராமபிரான், கடுமை ஆர் கானகத்து ஏக - கடுமைமிக்க காட்டிற் செல்லவும், கழல் கால் மாயன் - வீரக்கழல் அணிந்த திருவடிகளையுடைய திருமால், நெடுமையால் - திரிவிக்கிரம உருவத்தால், அன்று அளந்த உலகு எல்லாம் - முன்னே ஒருநாள் அளந்த உலகங்களை எல்லாம், தன் மனத்தே—, நினைந்து - சூழ்ந்து, செய்யும் கொடுமையால் - செய்த கொடுஞ் செயலால், அளந்தாளை - அளந்து கொண்டவளான கைகேயியைச் (சுட்டி), இவர் யார் என்று உரை என்ன - இவர் யார் என்று சொல்லுகவென்று (குகன்) கேட்க, குருசில் கூறும் - பரதன் கூறுவான்.

இதனுட் கைகேயியைப் பற்றியன கவிகூற்று; அவள் கொடுமையின் உச்ச நிலையைக் குறிக்கின்றார். அளக்கும் பொருள் அளவுகருவியாகிய மரக்கால் முதலியவற்றுள் புக்கு வருதல்போல, உலகுயிர்கள் இவள் செய்த கொடுமையிற் புக்கு வந்தனவாதலால், கொடுமையால் அளந்தாள் என்றார். அவன் நெடிய வடிவு கொண்டு அடிபெயர்த்து வைத்து அளந்தான்; இவள் இருந்த இடத்திலிருந்தே மனத்தால் அளந்து கொடுமையை விளைத்தாள் என இவற்றுள் வேற்றுமை காண்க.

துணை - துணைவன். ஆர்கலி - கடல். கடல் காட்டிற்குள் புகுந்தது என்ற நயம் காண்க. இராமபிரான் கருணைக் கடல்: "பற்றி, நீந்தலரிய நெடுங்கருணைக் கெல்லா நிலையமே" (ஆரணிய. 100), "கருணையங்கடல் கிடந்தது கருங்கடல் நோக்கி" (யுத்த : 535).

(பி. ம்.) 1. துணைபோகத்; கடலின்மூழ்கக், விழக்.
2. கானத்தில், கானத்துக்; கருணையார்கலியெய்தக்.
3. நெடுமையாய்முன்றளந்த, அன்றளந்த; உலகெலாம், தன்மனத்தால்; வசமாய், வயமாய்; நினைத்துச்செய்த.
4. யாரிவளென்று; உரைசெபெனக், உரைசெய்யக். (68)

1066. படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ்
செவிலியைத்தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலங் கிடந்தேற்கு முயிர்ப்பாரங்
குறைந்து தேய
உடரெலா முயிரிழந்த வெனத்தோன்று முலகத்தே
யொருத்தி யன்றே
இடரிலா முகத்தாளை யுணர்ந்திலையோ விந்நின்ற
ளென்னை யீன்றாள்.

படர் எல்லாம் படைத்தாளை - துன்பங்களையெல்லாம் தோற்றுவித்தவளும், பழிவளர்க்கும் செவிலியை - பழியை வளர்க்கும் செவிலித் தாயும், பாழ்த்த பாவி குடரிலே - பாழ்பட்ட பாவம் நிறைந்ததாகிய இவள் வயிற்றில், நெடு காலம் கிடந்தேற்கும் - நெடுங்காலம் தங்கிய எனக்கும், உயிர் பாரம் குறைந்து தேய - உயிராகிய சுமை (நாளுக்கு நாள்) குறைந்து மெலிய, உடல் எல்லாம் உயிர் இழந்த என தோன்றும் உலகத்தே - உடம்புகளெல்லாம் உயிரற்றன என்னுமாறு காணப்படும் இவ்வுலகத்தில், இடர் இல்லா முகத்தாளை - துன்பமே இல்லாத முகமுடையவளுமானவள், ஒருத்தி அன்றே - இவளொருத்தியே அன்ருே? உணர்ந்திலையோ - (இவளைப் பார்க்கும்போதே நீ) அறியவில்லையோ ? இ நின்ருள் - இவ்வாறு நிற்பவள் - என்னை ஈன்ருள் - என்னைப் பெற்றவள் (என்ருன்).

'உலகத்தில் வேறெங்கும் காணமுடியாத கொடுமை மிக்க பாவி இவள்; இவள் பெற்று வளர்த்தது துன்பங்களையும் பழிகளையுமே. இவள் வயிற்றில் கிடந்த தொடர்பால், இவளைப் போலக் கன்னெஞ்சமுடையவனுகத்தக்க நானும் அவ்வாருகவில்லை; உலகத்து உயிர்களெல்லாம் தவிக்கின்றன. இந்நிலையில் இவளொருத்தி மட்டும் துயர் இல்லாதவளென்பது இவள் முகத்ாலேயே தெரியும்; எனவே, இவள் யாரென்று நீ உணர்ந்திருக்கலாம்' என்கின்ருன். பழி - உலக நிந்தை; "வழியுடைத் தாய்வரு மரபை மாய்த்தொரு, பழியுடைத் தாக்கினமை" (869). 'உயிரே சுமை' என்று தன் நிலையைப் புலப்படுத்துகின்ருன். குடர், உடர் என்பன போலி. குடல், இங்கே வயிற்றைக் குறிக்கும்.

(பி - ம்.) 1. பழிவிளைக்கும்,
2. குடவிலே.
3. உடலெல்லாம்; உயிரிலாவென, உயிரிழந்ததெனநிற்கும், உயிரிழந்தவெனக்குன்றும், உயிர்பிரிந்தவெனத்தோன்றும், உயிர்வீய்ந்தாலெனத்தோன்றும்; ஒருத்தியன்றே.
4. அறிந்திலையேல்; எனமின்ருளென்னையீன்ருள். (69)

குகன் கைகேயியை வணங்குதலும் படகு செல்லுதலும்

(கலிவிருத்தம்)

1067. என்னக் கேட்டவ் விரக்கமி லாளையும்
தன்னற் கையின் வணங்கினன் ருயென
அன்னப் பேடை சிறையில தாய்க்கரை
துன்னிற் றென்னவும் வந்தது தோணியே.

என்ன கேட்டு - என்னை ஈன்ருள் இவள் என்று பரதன் சொல்லக் கேட்டு, (குகன்) அவ் இரக்கம் இல்லாளையும் - இரக்கமில்லாத அக் கைகேயியையும், தாய் என - தன் தாயைப் போல, தன் நல் கையின் வணங்கினன் - தன் நல்ல கைகளால் கும்பிட்டான்; (அப்போது)

தோணியும் - (அவர்கள் ஏறியிருந்த) தோணியும், அன்னம் பேடை- பெண் அன்னம் ஒன்று, சிறை இலது ஆய் - சிறகில்லாததாய், கரை துன்னிற்று என - (ஆற்றில் நீந்திக்) கரையை அடைந்ததுபோல, வந்தது - (தென் கரை) வந்து சேர்ந்தது. ஏ: ஈற்றசை.

என்ன என்றது, முன்பாட்டின் தொடர்பு. குகன் இராமபிரானுல் உடன்பிறப்புரிமை பெற்றவனுகலின், கைகேயியைத் தாய் என்று கருதி வணங்கினுன். இராமபிரானுக்குத் தொண்டு செய்யும் அவன் கை 'நல்கை' எனப்பட்டது. தோணியின் செலவுக்கு அன்னப் பறவையின் செலவை ஒப்புக் கூறுதலுண்டு; 680, 1043 பார்க்க. தோணிக்கு இறகில்லையாகலின், 'அன்னப் பேடை சிறை யிலதாய்' என்ருர். 'என்னவும்' என்றதில் உம்மை பிரித்துத் தோணி யோடு கூட்டப்பட்டது.

(பி - ம்.) 3. அன்னப்பேடு; சிறையிலகன்கரை; மு. அன்னற்போதத் தவன்வர வங்஦னம்.
4. சென்றதுதோணியே; மு. துன்னிற்றப்புறந் தோமறுமாக்களே. (70)

கரை அடைந்தபின் தாயர் சிவிகையில் செல்லப்
பரதனும் குகனும் நடந்து செல்லுதல்

1068. இழிந்த தாயர் சிவிகையி னேகத்தான்
பொழிந்த கண்ணீர்ப் புதுப்புனற் போயினுன்
ஒழிந் தி லன்குக னும்முட னேகினுன்
கழிந்த னன்பல காவதங் காலினே.

இழிந்த தாயர் - (தோணியினின்றும்) இறங்கிய தாய்மார், சிவிகையின் ஏக - பல்லக்கில் செல்ல, தான் - பரதன், பொழிந்த கண் நீர் புது புனல் - பெருக்கிய கண்ணீரான புதிய வெள்ளத்தில், போயினுன் - நடந்து, பல காவதம் - பல காத தூரத்தை, காலினே கழிந்தனன் - கால் நடையாகவே கடந்தான்; குகனும்—, ஒழிந்திலன் - (பரதனைப்) பிரியாதவனுய், உடன் ஏகினுன் - கூடவே சென்ருன்.

பரதன் கண்ணீர் விட்டு அழுதுகொண்டு, வாகனம் ஏதும் இன்றிக் கால் நடையாகவே சென்ருன். இயல்பான நீரின்மை யின் கண்ணீரைப் 'புதுப் புனல்' என்ருர். "பொழிந்த வுண்கணீர்ப் புதுப்புனல்" (513), "பொழியுங் கண்ணீர்ப் புதுப்புனல்" (633) என முன்னும் வந்தது. ஒரு வெள்ளத்தை, வேறு வகையின்றித் தோணி யேறிக் கடந்தான். சத்துருக்கனும் உடன் நடந்து சென்றமை சொல்லாமலே பெறப்படும். போயினுன், ஒழிந்திலன்: முற்றெச்சம்.

(பி - ம்.) 1. இழிந்துதாயர்; சிவிகையினேறத்தான்.
2. கண்ணின். (71)

### பரத்துவாசர் பரதனை எதிர்கொள்ளுதல்

1069. பரத்தி னிற்கும் பரத்துவ னென்னும்பேர்
வரத்தின் மிக்குயர் மாதவன் வைகிடம்
அருத்தி கூர வணுகின னுண்டவன்
விருத்தி வேதிய ரோடெதிர் மேவினன்.

(நடந்து சென்ற பரதன்), பரத்தின் நிற்கும் - பரம்பொருளிடத்தே மனம் ஊன்றி நிற்கின்ற, பரத்துவன் என்னும் பேர் - பரத்துவாசன் என்னும் பேருடைய, வரத்தின் மிக்கு உயர் — வரத்தால் மிக உயர்ந்த, மாதவன் வைகு இடம் — பெரிய முனிவன் வசிக்கும் ஆசிரமத்தை, அருத்தி கூர அணுகினன் - ஆசை மிக நெருங்கினன்; ஆண்டு - அப்போது, அவன் - அப் பரத்துவாச முனிவன், விருத்தி வேதியரோடு - தமக்குரிய அறுதொழிலில் தவருத வேதியர் பலருடன், எதிர் மேவினன் - (பரதனை) எதிர்கொண்டான்.

பரத்துவாச முனிவன் பெருமையையும், அவன் சித்திரகூடம் செல்லும் வழியிடை இருத்தலையும் பரதன் கேள்வியுற்றவனுதலால், அம் முனிவனைக் காண ஆவலுடன் சென்றான். முனிவனும் பரதன் வரவை அறிந்து எதிர்கொண்டான். ‘பரத்தின் நீங்கும்’ என்ற பாடத்துக்கு, இருவினைகளாலாகும் சுமையினின்றும் நீங்கிய என்க; பரத்துவன் - பரத்துவாசன் என்பதன் சிதைவு. விருத்தி - தொழில். அந்தணர்க்குரிய அறு தொழிலைக் கருதியது.

(பி - ம்.) 1. *பரத்தினீங்கும்; பரத்துவனென்னுமவ், பரத்துவசன்னெனும்.*
2. *மேதகு.*
3. *கூரவணங்கினன்.*
4. *விருத்த; எதிர்மேயினன், உடன்மேவினன்.* (72)

கங்கைகாண் படலம் முற்றும்.

# 13. திருவடி சூட்டு படலம்

திருவடி நிலைகளைச் சூட்டிக்கொண்டதைக் கூறும் படலம் என இதன் பொருள் விரியும். பரதன் இராமபிரானைச் சந்தித்து, மீண்டும் அயோத்திக்கு வந்து அரசை ஏற்று ஆளும்படி எவ்வளவு இரந்து வேண்டியும், வசிட்ட முனிவனும் எவ்வளவோ முயன்றும் இராம பிரான் இணங்காமையின், பரதன், இராமபிரானுடைய திருவடி நிலைகளைத் தருமாறு வேண்டிப் பெற்று, அவற்றை முடிபோலச் சிரசில் சூட்டிக்கொண்டு மிக்க வருத்தத்துடன் திரும்பிச் சென்று, அயோத்தி நகரின் அருகில் உள்ள நந்திக் கிராமம் என்னும் ஊரில் தங்கி, திருவடி நிலைகளை அரியணை ஏற்றிப் பூசித்து அரசாகப் பாவித்துத் தான் அவற்றின் ஏவலனாக இருந்து அரசாண்டு வந்தான் என்பது இப் படலத்தின் கதைச் சுருக்கமாகும்.

சில பழைய அச்சுப் புத்தகங்களிலும், சில சுவடிகளிலும் இப் படலத்தின் பெயர், 'கிளைகண்டு நீங்கு படலம்' என்று காண்கின்றது. ஒரு சுவடியில் இப் படலத்தின் முதல் இருபது பாடல்களும் அவற்றையடுத்து 'இன்னவாய' என்று தொடங்கும் ஓர் அதிகப் பாடலும் கொண்ட பகுதி, 'பரத்துவன் இருக்கை மேவு படலம்' எனவும், எஞ்சிய பகுதி, 'பரதன் காட்சி பெற்று மீள் படலம்' எனவும் இரண்டு பகுதிகளாக உள்ளது.

பரதனுக்குப் பரத்துவாசன் ஆசி கூறுதல்

(கலிவிருத்தம்)

1070. வந்த மாதவத் தோனையம் மைந்தனும்
தந்தை யாமெனத் தாழ்ந்து வணங்கினன்
இந்து மோலியன் னனு மிரங்கினன்
அந்த மின்னலத் தாசிகள் கூறினன்.

அ மைந்தனும் - அப்பரதனும், வந்த மாதவத்தோனை - தன் எதிர் வந்த பெருந்தவமுடைய அம்முனிவனை, தந்தை ஆம் என - தந்தையைப் போன்றவன் எனக்கருதி, தாழ்ந்து வணங்கினன் - அவனடி களில் விழுந்து வணங்கினன்; இந்து மோலி அன்னனும் - சந்திரனைச் சடைமுடியில் அணிந்த சிவபெருமானை யொத்த அம்முனிவனும், இரங்கினன் - (பரதன்பால்) பரிவு கொண்டவனாய், அந்தம் இல் நலத்து ஆசிமொழி கூறினன் - அழியாத நன்மைகளைத் தரவல்ல ஆசிகளைக் கூறினன்.

முனிவனது பெருமையைக் கருதி, அவனைச் சிவபெருமானோடு ஒப்பிட்டார். இரங்கினான்: முற்றெச்சம். அந்தம் - முடிவு; அழிவு. நலத்து - நலம் தருதற்குரிய.

(பி- ம்.) 1. வந்து; அவ்வள்ளலும்.
3. எதிர்கொளா.
4. அந்தமில் குணத்து. (1)

## பரத்துவாசன் வினா

1071. எடுத்த மாமுடி சூடிநின் பாலியைந்
தடுத்த பேரர சாண்டிலை யையநீ
முடித்த வார்சடை யோடு முனிவர்தூ
சுடுத்து நண்ணுதற் குற்றுள தியாவதே.

(பரத்துவாசன் பரதனை நோக்கி), ஐய - ஐயனே, நீ—, எடுத்த மா முடி சூடி - உயர்ந்த பெரிய மகுடத்தைச் சூட்டிக்கொண்டு, நின்பால் இயைந்து அடுத்த பேர் அரசு - உன்பால் (தானாக) வந்தடைந்த பெரிய இராச்சியத்தை, ஆண்டிலை - ஆளாமல், முடித்த வார் சடை யோடு - சடைமுடி கட்டி, முனிவர் தூசு உடுத்து - முனிவர்க்கு உரிய மரவுரி உடுத்து, நண்ணுதற்கு - (இங்கே) வருதற்கு, உற்று உளது யாவது - நேர்ந்துளது என்ன ? (என்று வினவினான்).

ஏ: ஈற்றசை. முடித்த வார் சடையோடு - கட்டப்பட்ட நீண்ட சடையுடன்; சடைமுடி கட்டி என்றவாறு.

(பி - ம்.) 1. தாதையன்பாலியைந்து.
2. பேரரசாள்கிலை, பாரரசாண்டிலை.
3. வார்சடைக்கற்றையை; முசுதூசு.
4. உற்றுளதியாதென்றான். (2)

## பரதனுடைய மறுமொழி

1072. சினக்க டுந்திறற் சீற்றவெந் தீயினால்
மனக்க டுப்பினன் மாதவத் தோங்கலை
எனக்க டுப்பது செய்திலெ னென்றசொல்
உனக்க டுப்பதன் றுரை வோயென்றான்.

(முனிவன் கூறியது கேட்ட பரதன்) கடு திறல் சினம் சீற்றம் வெம் தீயினால் - (அப்போது உண்டான) மிக்க வலியுடைய பெருஞ்சின மாகிய தீயினால், மனம் கடுப்பினன் - மனங் கொதித்தவனாகி, மாதவத்து ஓங்கலை - பெரிய தவத்தின் மலை போன்ற அம்முனிவனை (நோக்கி), உரவோய் - அறிவாற் பெரியோய், எனக்கு அடுப்பது செய்திலென் - எனக்குப் பொருந்தியதை (நான்) செய்யவில்லை, என்ற சொல் - என்று (நீ) சொன்ன வார்த்தை, உனக்கு அடுப்பது அன்று - உனக்குப் பொருந்தியதாகாது, என்றான் - என்று விடையிறுத்தான்.

'நீ முடிசூடி அரசாள்வதே முறை' என்ற கருத்துப்பட முனிவன் கூறிய சொல்லால் சினம் மூண்ட பரதன், 'நீர் சொன்ன வார்த்தை உம்முடைய தகுதிக்குத் தக்கதன்று' என முனிவனை வெகுண்டான். பரதன் அரசு கொள்ளுதலில் சிறிதும் பற்று இல்லாதவனாய், அது கொள்ளுதல் தனக்கு முறையன்று என்ற உறுதியுடையவனாதலால், பரத்துவாச முனிவனது சொல்லால் சினமுற்றான். முன்பு வசிட்ட முனிவனும் அரசவையினரும் தன்னை அரசாள வேண்டும் என்று வற்புறுத்தியபோது, பரதன், "இது கடைவருந் தீநெறிக் கலியி னாட்சியோ" (953) என்றதும் இங்கு நினைக்கத் தகும்.

சினம், சீற்றம்: ஒரு பொருட் பன்மொழி; முதலில் மனத்துள் எழுவது சினம் என்றும், அது வெளிப்படுவது சீற்றமென்றும் கொள்ளலாம்; "சினத்தாற்றிச் சீறிற் சிறுகுந் திரு" (குறள். 568) என்பது காண்க. ஓங்கல் - மலை; ஆகு பெயர்; முனிவனுக்காயிற்று. உரம் - அறிவு; தவவலிமை எனலுமாம்.

(பி - ம்.) 1. சினக்கொடுந்திறல்; கடுப்பின்வெம்; மு. சினக்குறும்பெறி செய்தவன் செப்புமுன்.
2. மாதவத்தையகேள்.
3. சினக்கு அடுத்தவியம்பிலே. (3)

1073. மறையின் கேள்வற்கு மன்னிளந் தோன்றல்பின்
முறையி னீங்கி முதுநிலங் கொள்கிலேன்
இறைவன் கொள்கில னாமெனி லாண்டெலாம்
உறைவென் கானத் தொருங்குட னேயென்றான்.

மறையின் கேள்வற்கு - வேதநாயகனான இராமபிரானுக்கு, மன் இளம் தோன்றல் - பொருந்திய தம்பியான பரதன், பின் - பின்னும் (முனிவனை நோக்கி), முறையின் நீங்கி - (மூத்தவனுக்குரியது அரசு என்ற) முறையினின்றும் விலகி, முதுநிலம் கொள்கிலேன் - பழமையாக வந்த நாட்டை(நான் அரசாள ஏற்று)க் கொள்ளமாட்டேன்; இறைவன் கொள்கிலன் ஆம் எனில் - (முறைப்படி) அரசனான இராமபிரான் ஏலானாகில், ஆண்டு எல்லாம் - (அவன் காட்டில் இருத்தற்குரிய பதினான்கு) ஆண்டுகள் முழுவதும், கானத்து - காட்டில், ஒருங்கு - ஒன்றாக, உடனே - அவனுடனே, உறைவென் – (நானும்) தங்குவேன் என்றான் —.

பரதன், தன் கருத்தைத் தெளிவாக உரைக்கிறான். 'இறைவன் கொள்கிலனாமெனில்' என்றதனால், கொள்ளுமாறு அவனை வேண்டவே செல்கின்றானென்பதும் கூறியவாயிற்று. இராமபிரானை அவன் எப்போதும் 'அரசன்' என்றே குறிப்பன்; 1030, 1041-பார்க்க. மறையின் கேள்வன் – வேதநாயகன்; திருமால்; இங்கே இராமபிரான்;

பால. 486-பார்க்க. 'வேதத்துரிமை பூண்டவன்' என்று பொருள் கொண்டு, பரத்துவாச முனிவனைக் குறித்ததென்பாரும் உளர்.

(பி - ம்.) 1. மு. மறைவலாளனை நோக்கி மனுநெறி, மறைசொன்மாதவ மன்னர்கடம்வழி. (4)

அங்கே இருந்த முனிவர்களின் மகிழ்ச்சி

1074. உரைத்த வாசகங் கேட்டலு முள்ளெழுந்
திரைத்த காத லிருந்தவத் தோர்க்கெலாம்
உரைத்த மேனியொ டுள்ளங் குளிர்ந்தவால்
அரைத்த சாந்துகொண் டப்பிய தென்னவே.

உரைத்த வாசகம் கேட்டலும் - (பரதன்) சொல்லிய வார்த்தையைக் கேட்டவளவில், உள் எழுந்து இரைத்த காதல் - (இராமபிரான் பக்கல்) மனத்தில் தோன்றிப் பெருகிய அன்பையுடைய, இரு தவத்தோர்க்கு எல்லாம் - பெரும் தவத்தினரான (அங்கிருந்த) முனிவர்களுக்கெல்லாம், உரைத்த மேனியொடு - பூரித்தலாகிய மெய்ப்பாட்டினுல் உவகையை வெளிப்படுத்திய உடம்போடு, உள்ளம் - மனமும், அரைத்த சாந்து கொண்டு அப்பியது என்ன - அரைத்த சந்தனத்தைப் பூசினற்போல், குளிர்ந்த - (ஒருங்கே) குளிர்ந்தன.

ஆல், ஏ: அசைகள்.

பரத்துவாசனும் உட்பட, அங்கிருந்த முனிவரெல்லாரும் பரதன் கூறியது கேட்டுப் பெருமகிழ்ச்சியுற்றனர். சந்தனம் புறத்தைக் குளிர்விக்கும்; பரதன் சொல் அகமும் புறமும் குளிர்வித்தது. உரைத்தல் - சொல்லுதல்; இங்கே மெய்ப்பாட்டினுல் வெளியிடலைக் குறித்தது.

இதன்பின், கீழ்க்காணும் பாடல் ஒன்று ஒரு பிரதியில் உள்ளது :—

"அன்ன காத லருந்தவ ராண்டகை
நின்னை யொப்பவர் யாருளர் நீயலால்
என்ன வாழ்த்திடு மேல்வை யிரவியும்
பொன்னின் மேருவிற் போய்மறைந் திட்டதே."

(பி - ம்.) 3. கரைத்த, உரைத்த; களித்தனர்.
4. சாந்துகொடு.

பரதனுடன் வந்தோர்க்குப் பரத்துவாசன் விருந்தளித்தல்

1075. ஆய காலையி லையனைக் கொண்டுதன்
தூய சாலை குறுகினன் றேமிலான்
மேய சேனைக் கமைப்பென் விருந்தெனுத்
தீயி னுவுதி செங்கையி னேக்கினுன்.

ஆய காலையில் - அந்தச் சமயத்தில், தோம் இலான் - குற்ற மற்றவனான பரத்துவாச முனிவன், ஐயனை கொண்டு - பரதனை அழைத்துக்கொண்டு, தன் தூய சாலை குறுகினன் - தனது தூய தவச் சாலையை அடைந்து, மேய சேனைக்கு - (பரதனுடன்) வந்த சேனை களுக்கெல்லாம், விருந்து அமைப்பென் என - விருந்து செய்விப்பே னென்று உட்கொண்டு, செம் கையின் - (தனது) செவ்விய கையால், தீயின் ஆவுதி ஒக்கினான் - ஓமத் தீயில் (அதற்குரிய) ஆகுதியைக் கொடுத்தான் (ஆகுதி செய்தானென்றபடி).

'ஆய காலை' என்றது, முன் பாட்டில் கூறியவாறு முனிவர் அனை வரும் உள்ளும் புறமும் குளிர்ந்து மகிழ்ந்தபோது என்பது குறித்தது. வசிட்ட முனிவன் கௌசிகனுக்குச் செய்தது போலப் பரத்துவாசனும் தவ ஆற்றலால் எண்ணிய எண்ணியாங்குச் செய்து முடிக்க வல்லவன் என்பது மேல்வரும் பாடல்களால் அறியப்படும். ஒக்குதல் - கொடுத் தல்; செய்தமைத்தல்; "நிணப் பலிப் யோக்குவன்" (திருக். 235) என்ற விடத்துக் காண்க. ஆவுதி : ஆஹுதி என்ற வடசொல் திரிபு.

பரத்துவாசன் அக்கினியில் ஓமஞ் செய்து தேவர்களை அழைத்து மந்திரத்தை உச்சரிக்க, விசுவகருமா ஐந்து யோசனை தூரம் பரப் புள்ள புல் தரையையும், அவரவர் தங்குவதற்கேற்ற மாடமாளிகை களையும் அமைக்க, பின்பு யமன், குபேரன், வருணன், சந்திரன் முதலிய தேவர்களைக் குறித்து ஆகுதி கொடுத்து, பலவகை உணவுப் பொருள்களையும், பற்பல உபசாரங்களைச் செய்தற்குரிய தேவ மாதரையும் அங்கே வருவித்தானென்று முதனூல் கூறுகின்றது. பரதன் தாய்மாரைப் பரத்துவாசனுக்கு அறிமுகப்படுத்தியதாகவும் அது கூறுகின்றது.

(பி - ம்.) 1. ஆயகாதலோடு, ஆயகாதலொடன்பனைக்; தம்.
2. உறைவிடந்துன்னினான்.
3. அளிப்பன்.
4. ஆகுதி; செங்கையிலாக்கினான்; ஓம்பினான், ஓச்சினான். (6)

### வந்தவர்கள் உபசரிக்கப் பெறுதல்

1076. துறந்த செல்வ னினையத் துறக்கந்தான்
பறந்து வந்து படிந்தது பல்சனம்
பிறந்து வேறொ ருலகுபெற் றாரென
மறந்து வைகினர் முன்னர்த்தம் வாழ்வெலாம்.

துறந்த செல்வன் - (பற்றைத்) துறந்த (தவச்) செல்வனான பரத்துவாசன், நினைய - நினைத்தவளவில், துறக்கம் பறந்து வந்து படிந்தது - சுவர்க்கபோகம் விரைந்து (அங்கே) வந்து அமைந்தது; பல் சனம் - (சேனையைச் சார்ந்த) பல மக்களும், பிறந்து - மாறிப்பிறந்து, வேறு ஒரு உலகு பெற்றார் என - வேறு ஓர் (புதிய) உலகத்தை

அடைந்தவரைப் போல, முன்னர் தம் வாழ்வு எல்லாம் மறந்து - முந்திய தம்முடைய (இன்னல் நிறைந்த) வாழ்க்கை முறைகளையெல்லாம் மறந்து, வைகினர் - (இன்பத்தில் திளைத்துத்) தங்குவாராயினர்.

தான் விரும்பின் இத்தகைய சுவர்க்க போகம் எய்துதல் எளிதாயினும், அதனை வேண்டாதவன் என்பார், 'துறந்த செல்வன்' என்றார். இங்கே முன்னைய வாழ்வை மறந்து வைகினோர், மீண்டும் முன்னை நிலையெய்தினமை, மேலே 1088-ஆம் பாடலில் காண்க. துறக்கந்தான் பறந்துவந்து படிந்தது: யுத்த. 4086-பார்க்க. இதுவும், இராமபிரான் வெற்றிகொண்டு சேனையோடு அயோத்திக்கு மீளுங்கால் இப்பரத்துவாச முனிவனால் உபசரிக்கப்பெற்றமை கூறுமிடத்து வருவது.

(பி - ம்.) 2. வந்துபரந்தது; பாரெலாம்.
3. வந்தொருலகு.
4. முன்னைத்தம்; மாண்பெலாம். (7)

1077. நந்த லில்லற நந்தின ராமென
அந்த ரத்தி னரம்பைய ரன்பினர்
வந்து வந்தெதி ரேற்றனர் மைந்தரை
இந்து விற்சுடர் கோயில்கொண் டேகினர்.

அந்தரத்தின் அரம்பையர் - தேவருலகத்திலுள்ள தேவ மாதர் பலர், நந்தல் இல் அறம் நந்தினர் ஆம் என - (இங்கே விருந்தெதிர் கோடலாகிய) கேடில்லாத அறத்தை மிகப் பெற்றவர்போல, மைந்தரை - (மறுவாழ்வு பெற்றவர்போல மகிழ்ந்திருந்த) ஆடவர்களை, எதிர்வந்து வந்து - (தனித்தனியே) ஒவ்வொருவர் முன்னும் சென்று, அன்பினர் ஏற்றனர் - அன்பையுடையராய் எதிரேற்று, இந்துவின் சுடர் கோயில் - சந்திரனைப்போல் ஒளிவிடும் மாளிகைக்கு, கொண்டு ஏகினர் - அழைத்துச் சென்றனர்.

இங்குள்ளாரை உபசரிக்கத் தேவமாதர் பலர் விருப்புடன் வந்து ஒவ்வொருவரையும் தனித்தனியே எதிர்கொண்டு, அவர்களுக்கென விசுவகருமாவினால் அமைக்கப்பெற்ற மாளிகைக்கு அழைத்துச் சென்றனர். வாழ்நாள் முழுதும் அறம் செய்து மறுமையிற் பெறத் தக்க சுவர்க்க போகத்தை இங்குள்ளார் இம்மையிலேயே பெற்றனர். அறம் நந்தினராமென என்றதனை மைந்தருக்கு விசேடணமாக்கி, அறப் பயன் தழைக்கப் பெற்றவர்போல இருந்த மைந்தரை என உரைத்தலுமாம். வந்து வந்து என்ற அடுக்கு, பன்மை கருதியது. வந்து உவந்து எனப் பிரித்துரைத்தலுமாம்.

(பி - ம்.) 1. நந்திலராமென.
2. அந்தரத்தரரம்பையரின் சொலார்.
3. வந்துவந்தெதிரேத்தினர், வந்தெதிர்ந்தன ரேத்தினர்.
4. கொண்டெய்தினர். (8)

1078. நான நன்குரைத் தார்நளிர் வானிடை
ஆன கங்கை யரும்புன லாட்டினர்
தான மாமணிக் கற்பகந் தாங்கிய
ஊன மின்மல ராடை யுடுத்தினர்.

(அரம்பையர், மைந்தரை) நானம் நன்கு உரைத்தார் - வாசனைப் பொடியை நன்கு தேய்த்து, நளிர் - குளிர்ந்த, வானிடை ஆன கங்கை அரு புனல் - ஆகாய கங்கையின் அரிய நீரால், ஆட்டினர் - குளிப்பாட்டி, தானம் ஆம் - கொடைக் குணம் அமைந்த, மணி - அழகிய, கற்பகம் தாங்கிய - கற்பக மரங்கள் ஏந்தியளித்த, ஊனம் இல் மலர் ஆடை உடுத்தினர் - குற்றமில்லாத பூப்போலும் மெல்லிய ஆடைகளை உடுத்தினர்.

இதுவும் அடுத்த கவியும் தேவ மங்கையர் உபசரித்த வகையினைக் கூறும். உணர்ந்தார், ஆட்டினர் என்பவற்றையும் முற்றுகவே கொண்டு உரைப்பினும் ஆம். நானம் - வாச நெய்யுமாம்; நானம் - நறுமணச் சுண்ணம் (சீவக. 92); வாச எண்ணெய் (சீவக. 2024).

(பி - ம்.) 1. ஈானமங்குரைத்தார்.
2. கங்கையகன்புனல், நறும்புனல்.
3. கானமாமணிக். (9)

1079. கொம்பி னின்று நுடங்குறு கொள்கையார்
செம்பொ னின்கல ராசி திருத்தினர்
அம்ப ரத்தி னரம்பைய ரன்பினர்
உம்பர் கோனுக ரின்னமு தூட்டினர்.

(மேலும் அந்த), கொம்பின் நின்று நுடங்கு உறு கொள்கையார் - பூங்கொம்புபோல நின்று ஒசியும் தன்மையுள்ள, அம்பரத்தின் அரம்பையர் - விண்ணுலகத்து அரம்பை மகளிர், செம்பொன் - நல்ல பொன்னாலான, இன் கலம் ராசி - கண்ணுக்கினிய உண்கல வகைகளை, திருத்தினர் - திருந்த அமைத்து, அன்பினர் - அன்போடு, உம்பர் கோன் நுகர் இன் அமுது - தேவராசனான இந்திரன் உண்ணுதற்குரிய இனிய அமிழ்தம் போன்ற உணவுகளை, ஊட்டினர் - (மைந்தரை) உண்பித்தனர்.

இவ்விரண்டு பாட்டாலும், தேவமகளிர் உபசரித்து நீராட்டி உண்பித்தமை கூறப்பெற்றது. கொள்கையாராகிய அரம்பையர் என இயைக்க. திருத்தினர், அன்பினர்: முற்றெச்சம். கலராசி திருத்தினர் - அணிகலன்களை அணிவித்தனர் என்றலுமாம்.

(பி - ம்.) 1. கொங்கையார்; நுடங்கிடைக் கோதையர்.
3. அன்பொடும்.
4. உம்பர்கோனகர். (10)

1080. அஞ்ச டுத்த வமளி யலத்தகப்
பஞ்ச டுத்த பரிபுரப் பல்லவ
நஞ்ச டுத்த நயனியர் நவ்வியின்
துஞ்ச வத்தனை மைந்தருந் துஞ்சினர்.

அஞ்சு அடுத்த அமளி - (மிருதுவான) ஐந்து பொருள்கள் உள்ளிட்ட மெத்தைகள் அமைந்த படுக்கையில், அலத்தகம் பஞ்சு அடுத்த - செம்பஞ்சூட்டப்பெற்ற, பரிபுரம் - சிலம்பணிந்த, பல்லவம்- தளிர்போன்ற பாதங்களையும், நஞ்சு அடுத்த நயனியர் - விடமொத்த நோக்கையும் உடைய தேவ மாதர், நவ்வியின் - பெண்மான்கள் போல, துஞ்ச - (உடன்) சயனிக்க, அத்தனை மைந்தரும் துஞ்சினர் - (முன்பு அவர்களால் உபசரிக்கப் பெற்ற) அத்தனை ஆடவரும் சயனித்தனர்.

'நந்தலில்' (1077) முதல் இதுகாறும் நான்கு பாடல்களால், தேவமாதர் வந்து மைந்தரை யேற்று, நீராட்டி, அமுதூட்டி அவ்விரவு அவர்களோடு உடன் சயனித்தமை கூறப்பெற்றது. இதனால், ஐம்புல நுகர்ச்சிக்குரிய எல்லா இன்பமும் அம்மாதர் தந்தனரென்றவாறு. இப் பாடலிற் சுட்டிய மகளிர், மைந்தருள் அவரவர்க்குரிய மனைவிமா ரெனலுமாம்.

அஞ்சடுத்த அமளி - பஞ்சசயனம் எனப்படும்; "மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி" (திருப்பாவை, 10); இவ்வமளிக்குரிய ஐந்து பொருள்களை, "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம், உறுதூவி சேக்கையோ ரைந்து: (கலி. 10. 18,ந; சீவக. 838,ந. மேற்.) என்பதனால் அறிக. பல்லவம், ஆகுபெயராய்ப் பாதத்தைக் குறித்தது. நயனியர் - கண்களையுடைய மாதர்.

(பா - ம்.) 1. அமளியரத்தகப்,
2. பஞ்சடுத்த பசுந்தளிர்ப் பாயலின்.
3. விழியினர்.
4. துஞ்ச அத்துணை; மற்புய. (11)

1081. ஏந்து செல்வத் திமையவ ராமெனக்
கூந்தற் றெய்வ மகளிர்கொண் டாடினர்
வேந்த ராதி சிவிகையின் வீங்குதோள்
மாந்தர் காறும் வரிசை வழாமலே.

கூந்தல் தெய்வ மகளிர் - கூந்தலழகிற் சிறந்த தேவ மாதர், வேந்தர் ஆதி - அரசர்கள் முதல், சிவிகையின் வீங்கு தோள் மாந்தர் காறும் - பல்லக்குச் சுமத்தலால் வீங்கிக் காய்ப்பேறிய ஆட்கள்வரை (யாவரையும்), வரிசை வழாமல் - முறைமை தவறாமல், ஏந்து செல்வத்து இமையவர் ஆம் என - மிக்க செல்வத்தையுடைய தேவரைப் போலவே, கொண்டாடினர் - உபசரித்தார்கள். ஏ: ஈற்றசை.

தேவமாதர், பல்லக்குச் சுமப்போர் முதலிய வேலையாட்களையும் உபசரித்தனர் என்று, சேனையைச் சார்ந்தார் அனைவரும் எந்தத் தாழ்வுமின்றிச் சிறப்புப் பெற்றமை கூறினர். ''அரசரே யாதி யாக அடியவ ரந்த மாகக், கரைசெல லரிய போகந் துய்க்குமா கண்டு'' என மீட்சிப் படலத்துள் (யுத்த. 4087) வருவதும், பால. 1237-ஆம் பாடலும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். இவற்றுள் முன்னது, இராமபிரான் வெற்றியோடு அயோத்திக்கு மீளுங்கால் இப்பரத்து வாசனுச்சிரமத்தில் தங்கி அவனால் உபசரிக்கப் பெற்றமை கூறுமிடத்து வருவதும் நினைக்கத்தகும்.

(பி - ம்.) 2. மகளிர் கொண்டிண்டினர். மு. போந்தவானத் தரம்பையர் போற்றினர்.
3. வேந்தர் வேதியர் மெல்லியர் வேறுள்ள.
4. மாந்தர்யார்க்கும்; வழாமலே. (12)

1082. மாதர் யாவரும் வானவர் தேவியர்
கோதில் செல்வத்து வைகினர் கொவ்வைவாய்த்
தீதி றெய்வ மடந்தையர் சேடியர்
தாதி மாரெனத் தம்பணி கேட்பவே.

கொவ்வை வாய் - கொவ்வைக் கனி போன்ற சிவந்த வாயை யுடைய, தீது இல் தெய்வ மடந்தையர் - குற்றமற்ற தேவமகளிர், சேடியர் தாதிமார் என - தோழிமாரும் பணிப் பெண்களும்போல, தம் பணி கேட்ப - தம் ஏவலைக் கேட்டுச் செய்ய, மாதர் யாவரும் - (சேனையில் இருந்த) மகளிரெல்லாரும், வானவர் தேவியர் கோது இல் செல்வத்து வைகினர் - தேவர்களின் தேவிமாரான (உயர்ந்த) தேவமகளிர்க் குரிய குற்றமற்ற இன்ப வாழ்க்கையில் தங்குவாராயினர். ஏ: ஈற்றசை.

ஆடவரெல்லாம் தேவ போகம் துய்த்தமை கூறியவர், மகளிரும் தமக்கு ஏற்ற வகையில் இன்பம் துய்த்தனரென இப்பாடலாற் கூறுகின்றார். சேடியர் - தோழிமார். தாதிமார் - குற்றேவல் மகளிர். செல்வம் - இன்ப வாழ்க்கை.

(பி - ம்.) 3. தேவர்மடந்தையர், செல்வமடந்தையர். (13)

1083. நந்த நந்த வனங்களி னுண்மலர்க்
கந்த முந்திய கற்பகக் காவினின்
றந்தர் வந்தென வந்திதன் கைதர
மந்த மந்த நடந்தது வாடையே.

நாள் மலர் கந்தம் முந்திய - அன்றலர்ந்தது போன்ற (வாடாத) மலர்களின் நறுமணம் மிக்க, கற்பகம் காவில் நின்று - (விண்ணுலகத்துக்) கற்பகச் சோலையினின்று, நந்து அம் நந்தவனங்களின் - (அங்கு வந்து புதிதாகத்) தழைத்த அழகிய பூந்தோட்டங்களினிடையே,

மந்தம் வாடை - மந்த மாருதமெனப்படும் தென்றல், அந்தர் வந்தால் என - குருடர் (பிறருதவி கொண்டு) மெல்ல நடந்து வருதல் போல, அந்தி தன் கைதர - அந்திப் பொழுது தனக்குக் கைகொடுத்து உதவ, மந்த மந்த நடந்தது - மெல்ல மெல்ல வீசுவதாயிற்று. ஏ: ஈற்றசை.

ஆடவரும் மகளிருமாகிய எல்லாரும் இன்பம் நுகர்தற்கேற்ற வாறு, மந்தமாருதமும் வந்து உதவியது என்கின்ருர். மெல்லென வீசும் அதற்குப் பிறருதவி கொண்டு மெல்ல நடக்கும் குருடர் செயலை ஒப்புக் கூறினர்; அதற்கிசைய, மாருதம் அந்தியின் உதவிகொண்டு நடந்தது என்ருர். அந்தி-இரவின் முதல் யாமம். சுவர்க்கமே வந்தது போன்று அமைந்த இடத்தில், புதிய நந்தவனமும் அமைந்ததென்றும், அதனிடையே மந்தமாருதம் வீசுவதாயிற்று எனவும் கொள்க. வாடை, திசை கருதாது காற்றென்பதைக் குறித்தது.

(பி - ம்.) 4. மந்தமாக; மணந்தது. (14)

யானைகளும் குதிரைகளும் உணவு கொள்ளுதல்

1084. மான்ற ளிக்குல மாமதம் வந்துணத்
தேன்ற ளிர்த்த கவளமுஞ் செங்கதிர்
கான்ற நெற்றழை கற்றையுங் கற்பகம்
ஈன்ற ளிக்க நுகர்ந்தன யானையே.

தேன் தளிர்த்த கவளமும் - தேன் மிகுதியாகக் கலந்த உணவுத் திரளையும், செம் கதிர் கான்ற- செவ்விய கதிர்விட்ட, நெல் தழை - நெல் மிகுந்த, கற்றையும் - அரித்தொகுதியையும், கற்பகம் ஈன்று அளிக்க - கற்பக விருட்சம் படைத்துத் தர, யானை - (சேனையிலுள்ள) யானைகள், அளி குலம் மான்று வந்து - வண்டுக் கூட்டம் மயங்கி வந்து, மா மதம் உண்ண - (தம்மிடமிருந்து பெருகும்) மிக்க மதநீரை உண்ணுமாறு, நுகர்ந்தன - (தாம்) உண்டன.

ஏ: ஈற்றசை.

வந்த மக்களெல்லாரும் இன்னமுதுண்டு துயில் கொண்டு இன்பத்துள் வைக, சேனை யானைகளும் தமக்குரிய உணவைக் கற்பக தருக்களால் பெற்று உண்டு மதம் பெருக்கின. இதுகாறும் வாடி யிருந்த யானைகளும், நல்லுணவு உண்டு பூரித்து மதம் பெருக்கலாயின. கவளம் - யானைக்குரிய உணவுத் திரளை. தழை கற்றை: வினைத் தொகை. மதநீரை வண்டுகள் உண்ணல்: கலி. 21 : 2; புறநா. 22:6, 93: 12.

(பி - ம்.) 1. வார்மதம்.
2. தேன்றளித்த.
3. நெற்றழைக் கற்றையும்.
4. ஈன்றளித்த. (15)

1085. நரக தர்க்கற நல்கு நலத்தினீர்
கரக தக்கரி காணிமிர்ந்து ண்டன
மரக தத்தின் கொழுந்தென வார்ந்தபுல்
குரக தத்தின் குழாங்களுங் கொண்டவே.

கரம் கதம் கரி – துதிக்கையையும் சினத்தையும் உடைய யானைகள் (உணவருந்திய பின்), நரகதர்க்கு (உம்) அறம் நல்கும் நலத்தின் - நரகத்தை அடையக்கூடியவர்களுக்கும் புண்ணியம் தரும் சிறப்புடைய, நீர் - தேவ கங்கை நீரை, கால் நிமிர்ந்து உண்டன- கால்களை நிமிர வைத்தவாறே உண்டன; குரகதத்தின் குழாங்களும் - குதிரைக் கூட்டங்களும், மரகதத்தின் கொழுந்து என-மரகதமணியின் ஒளிக்கதிர்போல, (மிக்க பசுமையோடு) வார்ந்த புல் - நீண்டு வளர்ந்த பசும் புல்லை, கொண்ட - (தமக்கு) உணவாகக் கொண்டன.

ஏ : ஈற்றசை.

யானைகள் உணவு கொண்ட பின் கங்கை நீரை இனிது பருக, குதிரைகளும் அப்போது புதிதாக வளர்ந்த பசும் புல்லைத் தமக்கு உணவாகக் கொண்டன.

புல்லின் செழுமையைக் குறிக்க, 'மரகதத்தின் கொழுந்தென வார்ந்த புல்' என்றார். வார் - நீட்சி. ஆர்ந்த எனப் பிரித்து, நிறைந்த என்றலுமாம். யானைகள் நீரைத் துதிக்கையால் எட்டி உண்ணுதற்கு முன்னங்கால்களை வளைக்கும் வருத்தமின்றி நிமிர்ந்து நின்றவாறே உண்டன என்பார் கால் நிமிர்ந்து, உண்டன என்றார். இதனால் நீரின் மிகுதி குறித்தவாறு. கங்கை என்பது வருவித்து உரைக்கப்பெற்றது. கங்கை நீர், தன்னில் மூழ்குவாருடைய பாவங்களைப் போக்கிப் புண்ணியப் பயன் தரவல்லதாகலின், 'நரக தர்க்கும்......நலத்தின் நீர்' என விசேடித்துக் கூறினர்; உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. பசும் புல்லுக்கு மரகதம் உவமையாதல்: "மணிவார்ந் தன்ன மாக்கொடி யறுகு" (குறுந். 256); அகநா. 136 : 11-13; நைடத. நகரம் 6.

(பி - ம்.) 1. நலத்துநீர்.
2. கரகதக்கிரி. (16)

பரதன் செயல்

1086. இன்ன ரின்னணம் யாவரு மிந்திரன்
துன்னு போகங்க டுய்த்தனர் தோன்றுரன்
அன்ன காயுங் கிழங்குமுண் டவ்விராப்
பொன்னின் மேனி பொடியுறப் போக்கினன்.

இன்னர் யாவரும் - இத்தன்மையரான (ஆடவரும் மகளிருமாகிய) எல்லாரும், இன்னணம் - இவ்வாறு, இந்திரன் துன்னு போகங்கள்

துய்த்தனர் - இந்திரன் எய்துதற்குரிய (சிறந்த) போகங்களை நுகர்ந்தனராக, தோன்றல் - பரதன், அன்ன காயும் கிழங்கும் உண்டு - (முன்பு இராமபிரான் உண்ட) அத்தன்மையவான காய்களையும் கிழங்குகளையும் உண்டு, அ இரா - அவ்விரவு முழுதும், பொன்னின் மேனி பொடி உற - பொன் போன்ற (தன்) திருமேனி புழுதியுற்ற தரையிற் கிடக்க, போக்கினுன் - (இரவைக்) கழித்தான்.

பரத்துவாச முனிவன் எவ்வளவு வற்புறுத்தி உபசரிக்கவும், பரதன் உயர்ந்த உணவுகளை விலக்கித் தவசியர்க்குரிய காய் கிழங்குகளையே உண்டு, தன் விரதத்தைக் காத்தான் என்றவாறு. அச்சிறப்புத் தோன்ற அவனைத் தோன்றல் என்று குறித்தார். தான்: அசை. பரதனும் விருந்துண்டு மகிழ்ந்தானென்று வான்மீகம் கூறுவதைக் கம்பர் பரதனுடைய பெருமையை மேலும் உயர்த்தும் வகையால் மாற்றிக்கொண்டார்.

(பி - ம்.) 1. இவ்வணம்; யாவையும்.
3. கிழங்குமுண்டப் பகல். (17)

கதிரவன் தோன்றுதல்

1087. நீல வல்லிரு ணீங்கலு நீங்குறும்
மூல மில்கன விற்றிரு முற்றுற
ஏலு நல்வினை துய்ப்பவர்க் கீறுசெல்
கால மென்னக் கதிரவன் றோன்றினுன்.

நீலம் வல் இருள் நீங்கலும் - கரிய வலிய இருள் (இராப்பொழுது) கழிந்தவுடன், நீங்கு உறும் - தோன்றி மறைகின்ற, மூலம் இல் கனவின் - (நிலைக்கும்) ஆதாரம் இல்லாத கனவைப்போல, திரு முற்று உற - (அங்கே அனைவரும் நுகர்ந்த) தேவ போகம் முடிவடைய, ஏலும் நல்வினை - (தமக்குப்) பொருந்திய புண்ணியத்தால், துய்ப்பவர்க்கு - (அதன் பயனுன இன்பத்தை) அநுபவிக்கிறவர்களுக்கு, ஈறு செல் காலம் என்ன - (அவ்வின்பம்) முடிவெய்துங் காலம் போல (காலத்தைக் குறிப்பவன்போல), கதிரவன் தோன்றினுன் - சூரியன் உதித்தான்.

இரவு முழுதும் கிடைத்தற்கரிய இன்பம் நுகர்ந்த அவ்வனைவர்க்கும், அந்நுகர்ச்சிக் காலம் முடிந்ததெனக் காட்டுவான்போலச் சூரியன் உதித்தான் என்கின்ருர். சிறிது பொழுதே நிலைத்த அவ்வின்பத்துக்குக் கனவை உவமித்தார். பெரும் புண்ணியம் செய்து உயர் நிலையுற்ருர்க்கும், அந்நிலைக்குக் கால வரம்பு உண்டென்ற நியதியை, 'ஏலுநல்வினை......காலம்' என்பதனுற் குறிப்பித்தார். இங்கே துன்னு போகங்கள் துய்த்தவர் யாவரும், மீண்டும் தம் பழைய நிலை எய்தினர் என்பது அடுத்த கவியிற் சொல்லப்படும். நீலம் - கருமை. நீல அல்லிருள் எனப் பிரித்து உரைத்தலுமாம்.

(பி . ம்.) 1. நல்விருள், நள்ளிருள்; நீங்கிய.
2. மூலகாரண மாமுனி; முந்துற, நல்குற.
3. ஏலுநற்பயன்; ஈறுசெய். (18)

### பரிவாரங்கள் பழைய நிலை எய்துதல்

1088. ஆறி நின்றற மாற்றலர் வாழ்வெனப்
பாறி வீந்தது செல்வம் பரிந்திலர்
தேறி முந்தைத்தஞ் சிந்தைய ராயினர்
மாறி வந்து பிறந்தன மாட்சியார்.

செல்வம் - (அங்கிருந்தோர் பெற்ற) இன்ப வாழ்வு, ஆறி நின்று - (புலனுசைகள்) அடங்கி நின்று, அறம் ஆற்றலர் வாழ்வு என - புண்ணியம் செய்யாதவர்களின் இன்ப வாழ்வு (கெடுதல்) போல, பாறி வீந்தது - கெட்டு அழிந்தது; (அவர் அனைவரும்) மாறி வந்து பிறந்த அன்ன மாட்சியார் — (விண்ணுலக) இன்ப நிலை மாறி (மீண்டும் மண்ணுலகில்) வந்து பிறந்தது போன்ற தன்மையுடையவர்களாய், பரிந்திலர் - (அந்நிலை குறித்து) வருந்தாதவர்களாய், தேறி, - (மனம்) தெளிந்து, தம் முந்தை சிந்தையர் ஆயினர் - தம்முடைய பழைய மனப் பாங்கு உடையவர்களானார்கள்.

மாயமாக வந்தவையெல்லாம் சூரியன் உதித்ததும் வந்தவழியே மறைந்து போக, இடையே இன்பம் நுகர்ந்த எல்லாரும், அது பெற்றிழந்த நினைவும் உணர்ச்சியும் இன்றித் தம்முடைய இயல்பான பழைய நிலையை மீண்டும் பெற்றிருந்தனர். முன்னர்த் தம் வாழ்வெலாம் மறந்து வைகினவர்கள் (1076), மீண்டும் அம்முன்னை நிலை யெய்தினர். புண்ணியம் செய்தோர் துறக்கம் புகுவதுண்மை யாயினும், அதனைச் செய்யுங்கால் புலனடக்கத்தோடு செய்தல் வேண்டுமென்ற முறையையுங் குறித்தார். பிறந்தன: தொகுத்தல்.

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணும் ஒரு பாட்டும் அதன் முடிவில், 'பரத்துவனிருக்கைமேவு படலம் முற்றும்' என்ற தொடரும் உள்ளன. மேலே, 'பரதன் காட்சி பெற்று மீள் படலம்' என்ற தலைப்போடு தொடங்குகின்றது. பாட்டு வருமாறு :

"இன்ன வாய எறிகடற் சேனையும்
மன்னர் யாவரும் மன்னிளந் தோன்றலும்
அன்ன மாமுனி யோடெழுந் தாண்டகை
துன்னு நீள்வரைக் கேகிய சொல்லுவாம்."

(பி . ம்.) 2. வீய்ந்தது, வீழ்ந்தது; பரித்திலர்.
4. பிறந்தனன். (19)

பரதன் சேனை பாலைவனத்தை அடைதல்

(வேறு)

1089. காலையென் றெழுந்தது கண்டு வானவர்
வேலையென் றனிகமென் றேங்கி விம்முறச்
சோலையுங் கிரிகளுஞ் சுண்ண மாயெழப்
பாலைசென் றடைந்தது பரதன் சேனையே.

காலை - காலையில், என்று எழுந்தது கண்டு - சூரியன் உதித்ததைக் கண்டு, பரதன் சேனை - பரதனுடன் வந்த சேனை எல்லாம், வானவர் - தேவர்கள், வேலை என்று - கடல் என்றும், அனிகம் என்று - சேனை என்றும் (தெளியாமல்), ஏங்கி விம்முற - (அச்சத்தால்) வருந்தித் தவிக்க, சோலையும் - (தாம் செல்லும் வழியில் உள்ள) சோலைகளும், கிரிகளும் - மலைகளும், சுண்ணம் ஆய் எழ - புழுதி மயமாகும்படி, சென்று - நடந்துபோய், பாலை அடைந்தது - (சித்திரகூடத்துக்கு முன்னே உள்ள) பாலை நிலத்தை அடைந்தது.

மீண்டும் முன்நிலை எய்தியிருந்த சேனை, சூரியோதயமானது கண்டு மேலே செலவைத் தொடங்க, அது கண்ட தேவர்கள் அது பிரளய காலக் கடலோ என்று கலங்கியும், புழுதி எழுதலால் சேனையோ என்று கருதியும் தெளிவுறுமல் தவிக்க, சேனை சென்று எதிர்ப்பட்ட பாலைநிலத்தை அடைந்தது என்றவாறு.

சோலையும் கிரிகளும் சுண்ணமாயெழ - சேனைகள் மிதித்தலால், சோலைகளும் மலைகளும் பொடிப்பொடியாகிப் புழுதியாய் மேலெழ என்று உரைத்தலுமாம். இராமபிரான் சித்திரகூடஞ் சேருமுன், இடை வழியில் இப்பாலையைக் கடந்தமை முன்னே (729 - 38) கூறியது காண்க.

(பி - ம்.) 2. வேலையன் றனிகமே யென்று.
3. கரிகளும்; சுண்ண மார்ப்புற. (20)

பாலை நல்லியல்பு அடைந்தமை

1090. எழுந்தது துகளதி னெரியும் வெய்யவன்
அழுந்தின னவிப்பரும் வெம்மை யாறினுன்
பொழிந்தன கரிமதம் பொடிவெங் கானகம்
இழிந்தன வழிநடந் தேறொ ணுமையே.

எழுந்தது துகள் அதின் - (சேனை செல்லுதலால்) எழுந்ததாகிய அப்புழுதியில், எரியும் வெய்யவன் அழுந்தினன் - கொதிக்கும் சூரியன் முழுகினவனுகி, அவிப்ப அரும் வெம்மை ஆறினுன் - தணித்தற்கரிய (தனது) வெப்பம் தணிந்தான்; பொடி வெம் கானகம் - (கொதிக்கும்) புழுதியையுடைய கொடிய அப்பாலையில், வழி நடந்து ஏற ஒண்ணுமை - வழி நடந்து கடக்க இயலாதவாறு, கரி பொழிந்தன

மதம் - யானைகள் சொரிந்த மதநீர்ப்பெருக்கு, இழிந்தன - (ஆறுகளாய்) ஓடின.

சேனையால் எழுந்த பெரும் புழுதியால் சூரியன் மறைப்புண்டு வெயிலின் கொடுமை தணிய, பாலையில் தரையின் வெப்பம் தணியுமாறு யானைகளின் மதநீர்ப்பெருக்கு ஆறாகி ஓடின என்றபடி.

(பி - ம்.) 1. எழுந்தவத்.
2. மாற்றினன்.
4. இழிந்தனவடி, அழுந்தினவடி. (21)

1091. வடியுடை யயிற்படை மன்னர் வெண்குடை
செடியுடை நெடுநிழல் செய்த தீப்பொதி
படியுடைப் பரலுறு பாலை மேலுயர்
கொடியுடைப் பந்தரிற் குளிர்ந்த தெங்குமே.

வடி உடை(ய) அயில் படை மன்னர் - கூர்மையை உடைய வேற்படை தாங்கிய அரசர்களின், செடி உடை(ய) வெண்குடை - நெருக்கமான வெள்ளைக் குடைகள், நெடு நிழல் செய்த - மிக்க நிழலைச் செய்தன; தீ பொதி படி உடை(ய) - அனலைக் கொண்ட வடிவத்தை உடைய, பரல் உறு - பருக்கைக் கற்கள் மிக்க, பாலை எங்கும் - அப்பாலைவனம் எங்கும், மேல் உயர் கொடி உடை(ய) பந்தரின் - மேலே உயர்த்திய சீலைக் கொடிகளாலான பந்தலால், குளிர்ந்தது - குளிர்ச்சி பெற்றது.

ஏ : ஈற்றசை.

படையோடு வந்த அரசர்களின் வெண்குடைகளாலும், படையில் உள்ள துவசங்களின் மிகுதியாலும் அப்பாலைவனம் எங்கும் பந்த லிட்டதுபோல நிழல்படுதலால், கொடிய வெப்பமுடைய அந்நிலமும் குளிர்ந்தது.

செடி - நெருக்கம்; "செடிகொள் வான்பொழில் சூழ் (திருவா. 29 : 5); செடியுடை நிழல் - மரங்களின் நிழல் போன்ற நிழல் எனலுமாம். படி - வடிவம்; தரையுமாம்; படிதலுமாம். கொடியுடைப் பந்தர் - கொடிகள் படர்ந்த பந்தல் எனினும் அமையும். மேலுயர் கொடியுடைப் பந்தரில் - மேலே உயர்த்திய கொடிகளாகிய பந்தலினால் என்பது பழைய வசனம். பந்தர் : இறுதிப்போலி.

(பி - ம்.) 2. செடியிடை, செடிமிடை; செய்த தீப்பொறி.
3. படிமிடைப், படையுடைப். (22)

1092. பெருகிய செல்வநீ பிடியென் றுள்வயின்
திருகிய சீற்றத்தாற் செம்மை யானிறம்
கருகிய வண்ணலைக் கண்டு காதலின்
உருகிய தளிர்த்தன வுலவை யீட்டமே.

பெருகிய செல்வம் நீ பிடி - மிகப் பெரிய அரசச் செல்வத்தை நீ ஏற்றுக்கொள், என்றுள் வயின் - என்று கூறிய கைகேயி இடத்தில், திருகிய சீற்றத்தால் - மாறுபட்ட வெகுளியாலான, செம்மையால் - செந்நிறத்தோடு, நிறம் கருகிய - (வடிவம் இயல்பாகக்) கருநிறம் அமைந்த, அண்ணலை கண்டு - பரதனைப் பார்த்து, உலவை ஈட்டம் - (அங்கிருந்த) பட்ட மரங்கள், காதலின் - (அவன்பால் உண்டான) அன்பினால், உருகிய தளிர்த்தன - நெகிழ்ந்தனவாகித் தளிர்த்தன.

ஏ : ஈற்றசை.

"தாவர சங்கமம் என்னுந் தன்மைய, யாவையு மிரங்கிட" (998) எனவும், "கற்கனியக் கனிகின்ற துயரானை" (1026) எனவும் பரதனது துயரநிலை முன்னே கூறப்பட்டதனால், அவனைக் கண்டு பாலையிலுள்ள பட்ட மரங்களும் தளிர்த்தன என்றார்.

உலவை - உலர்ந்த மரம். உலவையீட்டம் தளிர்த்தல் : 730, பார்க்க. செம்மையால் : ஆலுருபு ஒடு உருபின் பொருளில் வந்தது.

(பி - ம்.) 1. செல்வனீ.
4. உருகின.

(23)

சேனை சித்திரகூடம் அடைதல்

1093. வன்றெறு பாலையின் மருத மாமெனச்
சென்றது சித்திர கூடஞ் சேர்ந்ததால்
ஒன்றுரைத் துயிரினு மொழுக்க நன்றெனப்
பொன்றிய புரவலன் பொருவில் சேனையே.

உயிரினும் ஒழுக்கம் நன்று என - உயிரினும் ஒழுக்கமே சிறந்தது என்று கொண்டு, ஒன்று உரைத்து - ஒன்றாகிய வாய்மையையே சொல்லி, பொன்றிய - (வாய்மையில் வழுவாது) உயிர் நீத்த, புரவலன் - சக்கரவர்த்தியின், பொரு இல் சேனை - தனக்கொப்பில்லாத சேனை, வல் தெறு பாலையில் - வலிய சுடுந்தன்மையுடைய அப்பாலை நிலத்தில், மருதம் என சென்றது - மருத நிலம்போல (வருத்தமின்றி) நடந்து சென்று, சித்திரகூடம் சேர்ந்தது - சித்திரகூடத்தை அடைந்தது.

ஏ : ஈற்றசை.

பரதன் தன்னை ஒருபோதும் அரசனாகக் கருதவில்லையாதலால், 'பொன்றிய புரவலன் சேனை' என்றார். சேனை சென்றது சேர்ந்தது என இயையும். சென்றது : முற்றெச்சம். இராமபிரானுக்கும் பிராட்டிக்குமாக இப்பாலை குளிர்ந்த வகையை முன்பு விரித்துக் கூறியதும் (730 - 37), அதனிடையே, "சீலமே தவம்போல எண்ணிய தெய்துவிக்கும்" (735) என்றதும் இங்கு நோக்கத்தகும். தெறுதல் - சுடுதல்; எரித்தல். ஆம், ஆல்: அசை.

(பி - ம்.) 1. வன்றறு; பாலையை.
2. சேர்ந்தது.

(24)

### சேனையின் வரவை இலக்குவன் அறிதல்

1094, தூளியின் படலையுந் துரக தத்தொடு
மூளிருஞ் சினக்கரி முழங்கு மோதையும்
ஆளியின் குழுவினோ ரார வாரமும்
கோளிரும் படையிதென் றுணரக் கூறவே.

(சேனை சித்திரகூடத்தை அணுகியபோது), தூளியின் படலையும் - (சேனையில் எழுந்த) புழுதித் திரளும், துரகதத்தொடு - குதிரைகளும், மூள் இரு சினம் கரி - மூண்டெழும் பெருஞ் சினமுடைய யானைகளும், முழங்கும் - ஒலித்தலால் ஆன, ஓதையும் - பேரொலியும், ஆளியின் குழுவினோர் ஆரவாரமும் - சிங்கத்தைப் போன்ற படைவீரர்களின் பேரிரைச்சலும், கோள் இரும் படை இது என்று - வலிய பெரிய படையின் வருகை இது என்று, உணர கூறவே - தெரியுமாறு அறிவிக்கவே.

இஃது, 'எழுந்தன னிளையவன்' என வருங் கவியோடு தொடரும். கோள் - வலிமை; (பகைவருயிரைக்) கொள்ளுதலுடைய எனவுமாம்.

(பி - ம்.) 1. துரகக்தேரொடு, துரகத்தேரொடு. துரகத்தேர்களும்.
2. மூளிரு மதகரி.
3. ஆளிரும், ஆள்களின்குழுவினர், ஆக்குமோசையும்,
4. உரைத்த கொள்கையான். (25)

### இலக்குவன் செயல்

1095. எழுந்தன னிளையவ னேறி னனிலம்
கொழுந்துயர்ந் தனையதோர் நெடிய குன்றின்மேல்
செழுந்திரைப் பரவையைச் சிறுமை செய்தவக்
கழுந்துடை வரிசிலைக் கடலை நோக்கினன்.

(படையின் வருகையை அறிந்த) இளையவன் - இலக்குவன், எழுந்தனன் - எழுந்து, நிலம் கொழுந்து உயர்ந்தது அனையது - நிலம் கொழுந்துவிட்டு உயர்ந்தாற்போன்றதான, ஓர் நெடிய குன்றின்மேல் ஏறினன் - உயர்ந்த தொரு சிகரத்தின்மேல் ஏறி, செழு திரை பரவையை - மிக்க அலைகளையுடைய கடலையும், சிறுமை செய்த - (தன் பரப்பால்) சிறியதாக்கிய, அ - அந்த, கழுந்து உடை(ய) வரி சிலை - தேய்ந்து வழுவழுப்பான கைப்பிடியை உடைய கட்டமைந்த வில்லை ஏந்திய, கடலை - கடல் போன்ற சேனையின் பரப்பை, நோக்கினன் - பார்த்தான்.

உயர்ந்த மலைச்சிகரத்தை நிலத்தின் கொழுந்தென்றார். கழுந்து - வில்லில் அடிக்கடி கை பிடித்தலால் தேய்ந்து வழுவழுப்பான பகுதி; வழுவழுப்பான நுனிப்பகுதி எனவும் உரைப்பர். கடல்; படைப்

பரப்புக்கு ஆகுபெயர். சிலைக்கடல் என்றது, படை வீரரின் விற்றொழில் திறனைச் சிறப்பித்தவாறு. எழுந்தனன், ஏறினான்: முற்றெச்சம். உயர்ந்தனையது: தொகுத்தல் விகாரம்.

இவ்விடத்தில் வான்மீகம், விலங்குகளும் பறவைகளும் அஞ்சி யோடுதலையும், தூளியையும், பேரிரைச்சலையும் இராமபிரான் கண்டும் கேட்டும் பெருஞ்சேனை ஒன்று வருவதை ஊகித்து, மரமேறி விஷயத்தை அறியுமாறு இலக்குவனைப் பணித்ததாகக் கூறும்.

(பி - ம்.) 2. குடுமிக் குன்றிலே, குன்றமேல், கொடிய குன்றின்மேல்.
3. பரவையும்; சிறுமையாக்கிய. (26)

1096. பரதனிப் படைகொடு பார்கொண் டாண்மறம்
கருதியுட் கிடந்ததோர் கறுவு காந்தலால்
விரதமுற் றிருந்தவன் மேல்வந் தானிது
சரதமற் றிலதெனத் தழங்கு சீற்றத்தான்.

(சேனையைப் பார்த்த இலக்குவன்), பரதன் - பரதனானவன், உள் கிடந்தது ஓர் கறுவு காந்தலால் - தன் மனத்துள் தங்கிய தணியாத கோபம் வெதுப்புதலால், பார் கொண்டு ஆள் மறம் கருதி - நாட்டைத் தானே கைக் கொண்டு ஆளும் கொடுமையைக் கருதி, விரதம் உற்று இருந்தவன் மேல் - (தந்தை சொல் காக்கத்) தவவிரதம் கொண்டுள்ள இராமபிரான்மேல், இ படை கொடு வந்தான் - இப்படை எடுத்து வந்திருக்கிறான்; இது சரதம் - இது நிச்சயம்; மற்று இலது என - வேறில்லை என்று எண்ணி, தழங்கு சீற்றத்தான் - மிகுகின்ற சினமுடையவனாய்.

இது, குதித்தனன் என மேல் வருவதனோடு தொடரும்.

நாடு பெற்ற பரதன், உரிய பதினான்கு ஆண்டுகள் கழிந்த பின்னும் இராமபிரான் வந்து ஆட்சியைக் கொள்ளாதவாறு அவனை அழித்துத் தானே என்றும் ஆளவேண்டும் என்ற கொடிய எண்ணத்துடன் இராமபிரான்மேல் படையெடுத்து வருகின்றான் என்று இலக்குவன் தவறாகக் கருதிக் கடுஞ் சினங்கொண்டான் என்றவாறு.

தழங்குதல் - முழங்குதல்; இங்கே மிகுதி குறித்து நின்றது. பார் கொண்டாள் மறம் - நாட்டை (வரத்தால்) பெற்றுக்கொண்டவளுடைய கொடுமை என்று கொண்டு, அக்கொடுமையைத் தானும் கருதி என் உரைத்தலுமாம்.

(பி - ம்.) 1. இப்படையுடன்.
2. காயும்; காந்தலான்.
4. மாற்றின்றெனத்; தழங்கும், தயங்கும், தணப்பில். (27)

1097. குதித்தனன் பாரிடைக் குவடு நீறெழ
மிதித்தன னிராமனை விரைவி னெய்தினன்
மதித்திலன் பரதனின் மேல்வந் தான்மதிற்
பதிப்பெருஞ் சேனையின் பரப்பி னேனென.

(சினமிக்க இலக்குவன்), குவடு நீறு எழ மிதித்தனன் - (தான் ஏறிப் பார்த்த) மலைச் சிகரம் தூளாகும்படி (காலால்) மிதித்துக்கொண்டு, பார் இடை குதித்தனன் - (கீழே) தரையில் குதித்து, விரைவின் இராமனை எய்தினன் - விரைவாக இராமபிரானைக் கிட்டி, பரதன்—, மதித்திலன் - (உன்னை) மதியாதவனாய், மதில் பதி பெரு சேனையின் பரப்பினோடு - (வலிய) மதில் சூழ்ந்த அயோத்தியில் உள்ள பெரிய சேனைப் பரப்புடன், நின்மேல் வந்தான் என - உன்மேல் (போர் கருதி) வந்து உள்ளான் என்று சொல்லி.

இதுவும் மேல் கவியோடு தொடரும். குதித்தனன், மிதித்தனன், எய்தினன் என்பன முற்றெச்சங்கள்.

(பி - ம்.) 4. சேனையைப்; பரப்பினனென்றான். மு. எதிர்த்திடுஞ் சேனையோடிவ னெனன்றேதியே. (28)

### இலக்குவன் போர்க்கோலம்

1098. கட்டினன் சுரிகையுங் கழலும் பல்கணைப்
புட்டிலும் பொறுத்தனன் கவசம் பூட்டமைத்
திட்டன னெடுத்தனன் வரிவி லேந்தலைத்
தொட்டடி வணங்கிநின் றினைய சொல்லினன்.

(பின்பு இலக்குவன் விரைந்து), சுரிகையும் - (இடுப்பில்) உடைவாளையும், கழலும் - (காலில்) வீரக் கழலையும், கட்டினன் - கட்டிக் கொண்டான்; பல் கணை புட்டிலும் பொறுத்தனன் - மிக்க அம்புகள் நிறைந்த அம்பறாத் தூணியையும் (முதுகில்) தாங்கினான்; கவசம் — போர்க் கவசத்தையும், பூட்டு அமைத்து இட்டனன் - பூட்டை மாட்டி (உடம்பில்) இட்டுக்கொண்டான்; வரி வில் எடுத்தனன் - கட்டமைந்த வில்லையும் (கையில்) எடுத்துக்கொண்டான்; ஏந்தலை - இராமபிரானை அடி தொட்டு வணங்கி நின்று - திருவடியைத் தொட்டு வணங்கி (எழுந்து) நின்று, இனைய சொல்லினன் - (பின்வரும்) இவற்றைச் சொல்லலானான்.

அவன் சொல்லியன மேலே பன்னிரண்டு கவிகளால் கூறப்படும்.

பரதன் படையெடுத்து வருகின்றானென்று இராமபிரானிடம் கூறிய இலக்குவன், உடனே போர்க்கோலம் பூண்டு, வீரவார்த்தைகள் கூறலானான். இப் பாடலுள், இறுதிய தொழிந்த ஏனைய முற்றுக்களை எச்சமாக்கிக் கூறினும் அமையும்.

(பி - ம்.) 1. கட்டிய.
4. வணங்கினன்; சொல்லுவான். (29)

இலக்குவன் கூற்று

1099. இருமையு மிழந்தவப் பரத னேந்துதோட்
பருமையு மன்னவன் படைத்த சேனையின்
பெருமையு நின்னொரு பின்பு வந்தவென்
ஒருமையுங் கண்டினி துவத்தி யுள்ள நீ.

(போர்க்கோலம் பூண்ட இலக்குவன் இராமபிரானை நோக்கி), இருமையும் இழந்த அ பரதன் - (இம்மை மறுமை ஆகிய) இரண்டிலும் பெறுதற்குரிய நற்பயன்களை இழந்த அந்தப் பரத னுடைய, ஏந்து தோள் பருமையும் - உயர்ந்த தோள்களின் கதிப்பையும், அன்னவன் படைத்த சேனையின் பெருமை யும் - அவன் பெற்றுள்ள சேனையின் பெருமையையும், ஒரு நின் பின்பு வந்த — ஒப்பற்ற உன் பின்னே (தொடர்ந்து) வந்துள்ள, என் ஒருமையும் - எனது (துணை வேண்டாத) தனித் தன்மையையும், நீ இனிது கண்டு உள்ளம் உவத்தி - நீ நன்கு பார்த்து மனம் மகிழ் வாயாக.

பரதனை இருமையும் இழந்தவன் என்றது, இம்மையில் தான் ஆசை கொண்ட நாடாட்சியையும் இழந்து, உனக்குத் தீங்கு நினைத்துச் செய்யும் தீமையால் மறுமைப் பயனையும் இழப்பான் என்றவாறு. பின்பு வந்த - பின்னே பிறந்த என்றலுமாம்.

(பி - ம்.) 1. இழந்தகோன், இகழ்ந்தவப் பரதனெந்தைகேள்.
2. அருமையும்.
3. நின்னெடு.
4. கண்டினி; உகத்தி. (30)

1100. படரெலாம் படப்படும் பரும யானையின்
திடரெலா முருட்டின தேரு மீர்த்தன
குடரெலாந் திரைத்தன குருதி யாறுகள்
கடரெலா மடுப்பன பலவுங் காண்டியால்.

படர் எலாம் பட - (பாகரும், குத்துக்கோற்காரரும், பரிக்கோற் காரருமான) வீரர்களெல்லாம் அழிய, படும் - அழிகின்ற, பருமம் யானையின் திடர் எலாம் - பருத்த யானைகள் குவிந்த மேடுகளை யெல்லாம், உருட்டின - உருட்டிக்கொண்டும், தேரும் ஈர்த்தன - தேர்களை இழுத்துக்கொண்டும், குடர் எலாம் திரைத்தன - குடல்களையெல்லாம் அலைத்துக்கொண்டும் (ஓடி), கடர் எலாம் மடுப்பன - கடல் முழுதும் மடுத்துத் தூர்ப்பனவான, குருதி ஆறுகள் பலவும் காண்டி - இரத்த வெள்ளமாகிய ஆறுகள் பலவற்றையும் நீ காண்பாய்.

இலக்குவன், தான் ஒருவனாகவே பரதனுடன் வந்துள்ள சேனை முழுவதையும் அழித்து இராமபிரானுக்குத் தீங்கு நேராதவாறு காப்பதாகக் கூறும் வீரவுரைகளில் சில இதனுட் கூறப்படுகின்றன. படர் - வீரர்; துன்பம் எனவும், பரதனுடைய படர்ந்த எண்ணங்கள் எனவும் உரைத்தலும் ஆம். பருமம் - யானைக்கு மேலிடும் தவிசுமாம்: 2; சீவக. 410, 2211. குடர், கடர்; இறுதிப்போலி.

(பி - ம்.) 1. அடிபடப், இடிபடப், துனிபடப்.
2. உருட்டிகல்.
3. நிரைத்தன, நிரைத்தெழு.
4. இரைப்பன, நிறைப்பன, மடுத்தன. (31)

1101. கருவியுங் கைகளுங் கவச மார்பமும்
உருவின வுயிரினோ டுதிரந் தோய்வில
தெரிவன சுடர்க்கணை திசைக்கண் யானைகள்
வெருவரச் செல்வன காண்டி வீரநீ.

வீர - வீரனே, தெரிவன சுடர் கணை - (நான்) தேர்ந்து செலுத்தும் ஒளியுடைய அம்புகள், கருவியும் - (பகைவரின்) கைத்தளமென்னும் கேடயங்களையும், கைகளும் - (அவற்றைப் பிடிக்கும்) கைகளையும், கவசம் மார்பமும் - கவசமணிந்த மார்புகளையும், உருவின - ஊடுருவினவாய், உயிரினோடு - அவர்கள் உயிரோடு, உதிரம் தோய்வு இல - (விரைவினால்) இரத்தக்கறை படியாதனவாகி, திசை கண் யானைகள் வெருவர - (எட்டுத்) திக்குகளிலுமுள்ள யானைகளும் அஞ்சும் வண்ணம், செல்வன - (விரைந்து) பாய்கின்றவற்றை, நீ காண்டி - நீ காண்பாயாக.

கருவி - ஆயுதங்களுமாம். கைத்தளம்: சீவக. 1561, 1606: தஞ்சை, 118.

(பி - ம்.) 1. கருவியுங் கசைகளும், கருவியங் கைகளும்; கவச மாரமும்.
2. உருவினவுயிரொடும்; உதிரந்தோய்வன, உதிரத்தோடும்போய்த்.
3. திரிவன; சுடுங்கணைத்; திசைக்கையானைகள்; திரள்கடேவரும்.
4. வெருவரச் செய்வன, வெருவுறப் பறப்பன; வீரகாண்டிநீ. (32)

1102. கோடகத் தேர்படு குதிரை தாவிய
ஆடகத் தட்டிடை யலகை யற்றுகு
கேட்கத் தடக்கைகள் கவ்விக் கீதத்தின்
நாடக நடிப்பன காண்டி நாதநீ.

தாவிய குதிரை படு - தாவிச் செல்லுவனவாகிய குதிரைகள் அழியப்பெற்ற, கோடகம் தேர் - புதிய தேர்களின், ஆடகம் தட்டை - பொன்னாலான தட்டுக்களின்மேல், அலகை - பேய்கள், அற்று உகு கேடகம் தட கைகள் கவ்வி - அறுந்து விழுந்த கேடகம் பற்றிய (வீரர்களின்) பெரிய கைகளைக் கவ்விக்கொண்டு, கீதத்தின் - பாட

லோடு, நாடகம் நடிப்பன - கூத்தாடுவனவற்றை, நாத - தலைவனே, நீ காண்டி - நீ காண்பாயாக.

இப்பாடல், பேய்க் குரவை என்னும் புறத்துறை கொண்டது. கோடகம் - புதுமை; தேர்முடி எனவும் கூறுவர். கோடு அகம் தேர் எனப் பிரித்து, யானைக் கொம்பாலாகிய வேலைப்பாட்டைத் தன்னகத்தே கொண்ட தேர் என்பாருமுளர்.

(பி - ம்.) 1. தேர்ப்படும், தேர்பரி; குருதிதாவிய.
2. ஆடகத்தகட்டிடை; அலகையுற்றுகு.
3. கேடில்பேய்; கவ்விச் சிந்தின,
4. நாடகத் தொழில்பல. (33)

1103. பண்முதிர் களிற்றொடு பரந்த சேனையின்
எண்முத லறுத்துநா னிமைப்பி னீக்கலால்
விண்முது குளுக்கவும் வேலை யாடையின்
மண்முது காற்றவுங் காண்டி மன்னநீ.

மன்ன - அரசே, நான்—, பண் முதிர் களிற்றொடு - பண்ணுதல் மிக்க யானைகளுடனே, பரந்த சேனையின் - மிகப் பரந்துள்ள இப்படையின், எண் - தொகுதியை, இமைப்பின் - இமைப் பொழுதில், முதல் அறுத்து - வேரோடு அழித்து, நீக்கலால் - ஒழித்தலால், விண்- வீர சுவர்க்கம், முதுகு உளுக்கவும் - (சுமை தாங்காமல்) முதுகை நெளிக்கவும், வேலை ஆடையின் மண் - கடலை ஆடையாகக்கொண்ட மண்ணுலகம், முதுகு ஆற்றவும் - (பாரம் நீங்குதலால்) முதுகை இளைப்பாற்றிக்கொள்ளவும், நீ காண்டி - நீ காண்பாயாக.

பண் - பண்ணுதல்; அலங்கரித்தல். எண் - பல அக்குரோணிகள் எண்ணிக்கை கொண்ட தொகுதி. உளுக்குதல் "நிலமுது குளுக்கிக் கீழுற" (பால. 751); "உயிர்சுமந் துளுக்கிய தும்பர்" (ஆரணிய. 448); "நிலமுது குளுக்குநீ" (பாகவத:544). முதுகாற்றல்: "வங்கநெடு முதுகாற்றும்" (பால: 54); "நெடுநில மகண் முதுகாற்ற' (பால. 745).

(பி - ம்.) 1. பண்முதுகளிற்றொடு; பரதன் சேனையின்.
2. இறுத்துநான்.
3. வேலையாடையாள்.
4. மண்முது குளுக்கவும்; காண்டிவள்ளனீ. (34)

1104. நிவந்தவான் குருதியி னீத்த நீந்திமெய்
சிவந்தசா தகரொடு சிறுகட் கூளியும்
கவந்தமு முலகுநின் கைய தாயதென்
றுவந்தன குனிப்பன காண்டி யும்பர்போய்.

நிவந்த வான் குருதியின் நீத்தம் நீந்தி - பொங்கி எழுந்த பெரிய இரத்த வெள்ளத்தில் நீந்துதலால், மெய் சிவந்த - உடல் சிவப்பான, சாதகரொடு - பூதங்களும், சிறு கண் கூளியும் - சிறிய கண்களையுடைய பேய்களும், கவந்தமும் - தலையற்ற உடல்களும், உலகு நின் கையது ஆயது என்று - நாடு உன் வயப்பட்டதாகியது என்று, உம்பர்போல் - தேவர்கள் (மகிழ்வது) போல, உவந்தன - (தாமும்) மகிழ்ந்தனவாகி, குனிப்பன காண்டி - கூத்தாடுவனவற்றைக் காண்பாயாக.

இராச்சியம் உன் வயத்ததானால் தேவர்கள் மகிழ்வார்கள். அவர்களைப் போலவே பூதங்களும் பேய்களும் மகிழ்ந்து களத்திலேயே கூத்தாடுவதை நீ காணலாம் என்கின்றான். உலகு - இராச்சியம். கூளி - சிறுபேயுமாம். உவந்தன: முற்றெச்சம். சாதகம் - பூதம் (பால. 518).

(பி - ம்.) 1. நீந்தி நீந்திமெய், நீந்தி நீந்திமேல், நீந்தி மெய்யெலாம்.
2. சாரதரொடு.
3. உலகமுன், கவந்த மூவுலகுநின்.
4. களிப்பன; உள்ளம் போல். (35)

1105. சூழிவெங் கடகரி துரக ராசிகள்
பாழிவன் புயத்திகல் வயவர் பட்டற
ஆழிவெங் குருதியா றளைந்து வேலைகள்
ஏழுமொன் றாகிநின் றிரைப்பக் காண்டியால்.

சூழி வெம் கடம் கரி - முகபடாமணிந்த கொடிய மத யானைகளும், துரகம் ராசிகள் - குதிரைக் கூட்டங்களும், பாழி - பெருமை தங்கிய, வல் புயத்து - வலிய தோள்களையுடைய, இகல் வயவர் - போர் வீரர்களும், பட்டு அற - அழிந்தொழிதலால் (உண்டாகிற), ஆழி வெம் குருதி யாறு அளைந்து - ஆழமான வெப்பமுடைய இரத்த ஆறுகள் (ஓடிக்) கலக்கப் பெற்று, வேலைகள் ஏழும் ஒன்று ஆகி நின்று - ஏழு வகைக் கடல்களும் ஒன்றாகிச் சேர்ந்து நின்று, இரைப்ப - பேரொலி செய்ய, காண்டி - நீ காண்பாய். ஆல் : அசை.

உப்பு, பால், கருப்பஞ்சாறு முதலியனவாக வேறுபட்ட ஏழு கடல்களும், இரத்தம் கலத்தலால் சிவப்பாகி ஒன்று கூடிப் பேரிரைச்சலிடும் என உயர்வு நவிற்சியாக்குகின்றான்.

(பி - ம்.) 1. துரங்க ராசிகள்.
2. பட்டிட, பட்டுகும். (36)

1106. தழைத்தவான் சிறையன தசையுங் கவ்வின
அழைத்தவான் பறவைக ளலங்கு பொன்வடிம்
பிழைத்தவான் பகழிபுக் கீரு மார்பிடைப்
புழைத்தவான் பெருவழி போவ காண்டியால்.

அலங்கு - விளங்குகின்ற, பொன் வடிம்பு இழைத்த - கரும் பொன்னால் விளிம்பு அமைக்கப் பெற்ற, வான் பகழி – (நான் விடும்) பெரிய அம்புகள், புக்கு ஈரும் மார்பு இடை - பாய்ந்து கிழிக்கும் (வீரர் களுடைய) மார்பிலே, புழைத்த - (அவ்வம்புகள்) துளைத்து உண்டாக்கிய, வான் பெரு வழி - மிகப் பெரிய வழியிலே, தழைத்த வான் சிறையன - அடர்ந்த பெரிய சிறகுகளையுடையனவான, வான் பறவைகள் - பெரிய (கழுகு முதலிய) பறவைகள், அழைத்த - தம் இனத்தையும் கூவி அழைத்தனவாய், தசையும் கவ்வின - (வீரர் உடம் பின்) தசையையும் கொத்திக் கௌவிக்கொண்டு, போவ - போவன வற்றை, காண்டி - காண்பாய். ஆல் : அசை.

தன் அம்புகள் சென்று பாயும் வீரர்களின் மார்பில் அவை பெருந் தொளைசெய்துவிட, போர்க்களத்தில் பழகுதலையுடைய கழுகு, பருந்து, காக்கை முதலியன அவர்களுடம்பில் சதையைக் கொத்திக்கொண்டு மார்பிற் பட்ட தொளை வழியே புகுந்து வெளியே சென்று பறத்தலை நீ காண்பாய் என்கின்றான். வீரர் மார்பில் சதையைப் பற்றிக்கொண்டு, அங்கு உண்டான தொளைவழியே ஊடுருவி அப்பாற் செல்வன சிறகம்புகள் என, முழுதும் அம்புகளின் தொழிலாக்கியும், இருவர் மார்பிடை என்ற பாடங்கொண்டு, பரத சத்துருக்கனராகிய இருவர் மார்பிலும் எனவும் பிறவாறும் இப்பாடலுக்குப் பொருள் உரைப்பர். "பொன்வடிம் பிழைத்தவான் பகழி", "பொன்னின்ற வடிம்பின் வாளி" (ஆரணிய. 422), "பொன்றெரி வடிம்புடையப் பொருவில் வாளி" (ஷ 491). பொன்; கரும் பொன் - இரும்பு. அம்புகளுக்குச் சிறகு செறித்தலும் உண்டு. வான் பெரு : ஒருபொருட் பன்மொழி.

முந்திய அச்சுப் புத்தகங்களிலும் சில சுவடிகளிலும் இப்பாடலும் அடுத்ததும் முன் பின்னாக உள்ளன.

(பி - ம்.) 2. வயங்கு.
3. இருவர் மார்பிடைப், இரவிமார்பிடைப், ஈர்ந்து மார்பிடைப், பகழிகளீரு மார்பிடைப். (37)

1107. ஆளற வலங்குதே ரழிய வாடவர்
வாளற வரிசிலை துணிய மாக்கரி
தாளறத் தலையறப் புரவி தாரொடும்
தோளற வடிக்கணை தொடுப்பக் காண்டியால்.

ஆள் அற - காலாட் படை வீரர் அறுபடவும், அலங்கு தேர் அழிய - அசைந்து செல்லுகிற தேர்கள் அழியவும், ஆடவர் - (தேரில் உள்ள) வீரர்களின், வாள் அற - வாட்கள் துணிபடவும், வரி சிலை துணிய - கட்டமைந்த விற்களும் துணிபடவும், மா கரி - பெரிய யானை களும், தாரொடும் புரவி - கிண்கிணி மாலையணிந்த குதிரைகளும், தாள் அற - கால்கள் அறுபடவும், தலை அற - தலைகள் அறுபடவும்,

தோள் அற - (யானை, குதிரைகளின்மேல் ஏறிய வீரர்களின்) தோள்கள் அறுபடவும், வடி கணை தொடுப்ப காண்டி - (நான்) கூரிய அம்புகளைச் செலுத்தக் காண்பாய்.

ஆல் : அசை.

ஆடவர் என்பதனைத் தோளற என்பதன் முன்னும் கூட்டிப் பொருளுரைக்கப் பெற்றது.

(பி - ம்.) 1. வயங்குதேர், வழங்குதேர்.
3. புரவிதாளொடும்.
4. தொடுப்பன், துரப்பக். (38)

1108. ஒருமகள் காதலி னுலகை நோய்செய்த
பெருமக னேவலிற் பரதன் றான்பெறும்
இருநில மாள்கைவிட் டின்றென் னேவலால்
அருநர காள்வது காண்டி யாழியாய்.

ஆழியாய் - சக்கரமேந்தியவனே, ஒரு மகள் காதலின் - ஒரு பெண்ணின்மேல் கொண்ட காதலால், உலகை நோய் செய்த - உலக முழுவதையும் துன்புறச் செய்த, பெருமகன் ஏவலின் - சக்கரவர்த்தியின் ஆணையால், பரதன் —, தான் பெறும் இரு நிலம் ஆள்கை விட்டு - தான் பெற்ற பெரிய இராச்சியத்தை ஆளுதலை விட்டு, இன்று - இப்போது, என் ஏவலால் - என் பணியால், அரு நரகு ஆள்வது காண்டி - மீளுதற்கரிய நரகத்தை ஆள இருப்பதை நீ காண்பாய்.

ஆழியாய் என்றது, திருமாலின் அமிசமானவனே யென்றபடி; ஆணைச் சக்கரம் ஏந்துதற்குரியவனே எனவுமாம். தந்தை செய்தது தவறே என்ற கருத்துடையவனாதலால், 'ஒரு மகள் காதலின் உலகை நோய் செய்த பெருமகன்' என்றான். பெருமகன் - அரசன்; 1114; சீவக : 183.

(பி - ம்.) 2. பெருமகள்.
3. ஆள்தல் விட்டு, வாழ்தல் விட்டு.
4. ஆளுதல்; ஐயகாண்டியால். (39)

1109. வையகந் துறந்துவந் தடவி வைகுதல்
எய்திய துனக்கென நின்னை யீன்றவள்
நைதல்கண் டுவந்தவ ளவையி னேங்கிய
கைகயன் மகள்விழுந் தாற்றக் காண்டியால்.

உனக்கு—, வையகம் துறந்து வந்து - இராச்சியத்தைக் கைவிட்டு வந்து, அடவி வைகுதல் எய்தியது என - காட்டில் வாழ நேர்ந்ததே யென்று, நின்னை ஈன்றவள் நைதல் கண்டு - உன்னைப் பெற்றவள் மனம் நோதலைக் கண்டு, உவந்தவள் - மகிழ்ந்தவளும், நவையின்

ஓங்கிய - குற்றத்தில் மேம்பட்டவளுமான, கைகயன் மகள் - கைகேயி, விழுந்து அரற்ற காண்டி - (பரதனது அழிவு கண்டு தரையில்) விழுந்து அழுது புலம்பக் காண்பாய்.

ஆல் : அசை.

(பி - ம்.) 1. துறந்துபோய்.
2. உன்னையீன்றவள்.
3. நகையினீங்கிய, நன்மை நீங்கிய.
4. விழுந்தலறக், கிடந்தரற்றக். (40)

1110. அரஞ்சுட வழனிமி ரலங்கல் வேலினாய்
விரைஞ்சொரு நொடியிலிவ் வனிக வேலையை
உரஞ்சுடு வடிக்கணை யொன்றில் வென்றுமுப்
புரஞ்சுடு மொருவனிற் பொலிவென் யானென்றான்.

அரம் சுட - அரம் (அராவி) வருத்துதலால், அழல் நிமிர் - ஒளி மிகுகின்ற, அலங்கல் வேலினாய் - வெற்றிமாலை சூடிய வேலை உடையவனே, விரைஞ்சு ஒரு நொடியில் - மிக விரைந்து ஒரு நொடிப் பொழுதில், இவ் அனிகம் வேலையை - இந்தச் சேனைக் கடலை, உரம் சுடு - (முழுதும்) வலியழிக்கத் தக்க, வடி கணை ஒன்றில் - கூரிய ஓரம்பினாலேயே, வென்று - வென்றழித்து, முப்புரம் சுடும் ஒருவனின் - திரிபுரங்களை அழித்த ஒப்பற்ற சிவபெருமானைப்போல. பொலிவென் யான் - விளங்குவேன் நான், என்றான் - என்று கூறி முடித்தான்.

தனதாற்றலைப் பல படியாகக் கூறி வந்த இலக்குவன் இறுதியில், சிவபெருமான் மிக எளிதாகத் திரிபுரமெரித்தது போல நான் ஒருவனே இப்படை முழுதும் அழித்து விடுவேன் என்று கூறி முடித்தான். சுடுதல் - வருத்துதல்; ''சுடச்சுட நோற்கிற் பவர்க்கு'' (குறள் : 267). அழல் - ஒளி; 'மணிவிளக் கழலும் பாயலுள்' (பால. 1303). விரைஞ்சு - விரைந்து; போலி.

(பி - ம்.) 2. விரைந்து,
3. உரஞ்சுட; வெல்லுமுப், வென்றி சேர்.
4. காண்டியால். (41)

இராமன் பரதனுடைய இயல்பை விளக்குதல்

1111. இலக்குவ வுலகமோ ரேழொ டேழுநீ
கலக்குவெ னென்பது கருதி னாலது
விலக்குவ தரிதது விளம்ப வேண்டுமோ
புலக்குரித் தொருபொருள் புகலக் கேட்டியால்.

இலக்குவ - இலக்குவனே, உலகம் ஓர் ஏழொடு ஏழும் - பதினான்கு உலகங்களையும், கலக்குவென் என்பது - நான் அழிப்பேன்

என்பதை, நீ கருதினால் - நீ எண்ணிச் செய்யத் தொடங்கினால், அது விலக்குவது அரிது - அதைத் தடுப்பது (எவர்க்கும்) அரிதாகும்; அது விளம்ப வேண்டுமோ - அதைச் சொல்லவும் வேண்டுமோ? (ஆயினும்) புலக்கு உரித்து ஒரு பொருள் - அறிவுறுத்தற்குரிய ஒரு செய்தியை, புகல - (நான்) சொல்ல, கேட்டி - கேட்பாயாக.

ஆல் : அசை.

'இலக்குவா, உனது ஆற்றல் அளவிடற்கரியது; நீ கருதியது முடித்தே தீர்வாய்; ஆயினும், நான் தெரிவிக்க வேண்டியது ஒன்றுண்டு; அதனைக் கேட்பாயாக' என்று இராமபிரான் அறிவுரை கூறலுற்றான். ஏழொடு ஏழு - கீழ் ஏழும் மேல் ஏழும் ஆகிய பதினான்கு. புலக்கு : அத்துச்சாரியை தொக்கது. இராமபிரான் அறிவுறுத்தியவை இது முதல் ஆறு கவிகளில் கூறப்படும்.

(பி - ம்.) 1. ஏழோடேழுநீ, உலகமீரெழும்.
2. கலக்குவையென்பது.
3. அரிது நீ; விளம்பல். (42)

1112. நங்குலத் துதித்தவர் நவையி னீங்கினர்
எங்குலப் புறுவர்க ளெண்ணின் யாவரே
தங்குலத் தொருவருந் தரும நீங்கினர்
பொங்குலத் திரளொடும் பொருத தோளினாய்.

பொங்கு உலம் திரளொடும் பொருத தோளினாய் - பெரிய கற்றூண்களை யொத்த தோள்களையுடையவனே, நம் குலத்து உதித்தவர் - நம் குலத்தில் தோன்றியவராய், நவையின் நீங்கினர் - குற்றங்களின் நீங்கிய அரசர்கள், எங்கு உலப்புறுவர்கள் - எவ்வாறு எண்ணி முடிவுறுவர்? எண்ணின் - ஆலோசிக்குமிடத்து, தம் குலத்து ஒருவு அரும் தருமம் நீங்கினர் யாவர் - தம் குலத்தில் கை விடுதற்கரிய தருமத்தினின்றும் தவறினவர் (அவருள்) யாவர் உளர்? (ஒருவருமில்லை).

'நம் குலத்து முன்னோர்களுள், குல தருமத்தைக் கைவிட்டவர் எவருமில்லை' என்று தொடங்குகின்றது இராமபிரானது அறிவுரை. இப்பாடலின் அமைப்பு: 17-ஆம் பாடலை நோக்குக. நம் குலத்தில் தோன்றிய பரதனும் தவறு செய்யான் என்பது கருத்து.

(பி - ம்.) 1. நங்குலத்துற்றவர்; நவைகணீங்கினர்.
2. எங்குலப்புறுவரென்று.
3. நீங்கலார். (43)

1113. எனைத்துள மறையவை யியம்பற் பாலன
பனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே
அனைத்திற மல்லன வல்ல வன்னது
நினைத்திலை யென்வயி னேய நெஞ்சினால்.

மறை எனைத்து உள–வேதங்கள் எவ்வளவு உள்ளனவோ, அவை - அவையெல்லாம், இயம்பல் பாலன - சொல்லத்தக்கவை, பணைதிரள் கரம் கரி பரதன் செய்கையே - பணைபோலும் திரண்ட துதிக்கையை யுடைய யானைச் சேனையையுடைய பரதனது ஒழுக்கமே; அனை திறம் அல்லன - அத்தன்மைய அல்லாதன, அல்ல - வேதங்களுட் சொல்லப் படுவன அல்ல (பரதனுடைய ஒழுக்கங்களுமல்ல); என்வயின் நேயம் நெஞ்சினால் - என்பால் அன்புமிக்க (உன்) மனத்தினால், அன்னது நினைத்திலை - அவ்வுண்மையை நீ நினைத்தாயில்லை.

'இலக்குவ, என்பால் வைத்த அன்பு மிகுதியால் நீ பரதனது இயல்பை உணராமல் பேசுகின்றாய்; அவன் செயல்கள் எல்லாம் வேத நெறியிற் சிறிதும் பிறழ்வன அல்ல; இதனை நீ பின்பு உணர் வாய்' என்கின்றான் இராமபிரான்.

அனை திறம் - (அவன் சேனையோடு வந்துள்ள) அத்தன்மை; அல்லன அல்ல - (நீ எண்ணுவதுபோல்) தகாத செயல்கள் கருதிய தன்று என உரைத்தலுமாம்.

(பி - ம்.) 2. கரகரிப், கடகரிப், கைக்கரிப்.
3. அனைத்தற மல்லன, வினைத்திற மல்லன; அல்லனன்னது, ஐயவன்னது.
4. நினைக்கிலையென்; நேயநெஞ்சினாய். (44)

1114. பெருமக னேவலிற் பிறந்த காதலின்
வருமென நினைகையு மண்ணை யென்வயின்
தருமென நினைகையுந் தவிர்த்துத் தானையால்
பொருமென நினைகையும் புலமைப் பாலதோ.

பெருமகன் ஏவலின் - சக்கரவர்த்தியின் ஏவலாலும், பிறந்த காதலின் – என்பால் அவனுக்கு உண்டான அன்பினாலும், வரும் என நினைகையும் - (அவன்) வருகின்றான் என்று நினைப்பதும், மண்ணை என்வயின் தரும் என நினைகையும் - இராச்சியத்தை என்னிடம் ஒப்பிப்பான் என்று நினைப்பதும், தவிர்த்து - கைவிட்டு, தானையால் (தான் கொண்டு வந்துள்ள) சேனையால், பொரும் என நினைகையும் - (என்னோடு) போர் செய்வானென்று நினைப்பதும், புலமை பாலதோ - அறிவுடைமையாகுமோ? (ஆகாது).

'பரதன் உன்னைப் போலவே என்பால் அன்பு மிக்கவன்; அவன் அரசை ஏற்க விரும்பியிரான்; ஆதலால், என்னை அழைத்து வருமாறு தந்தை அவனை ஏவ அதனாலும், தனது இயல்பான அன்பு மிகுதியாலும், இராச்சியத்தை என்பால் தந்து என்னை அழைத்துப் போகவே அவன் வருகின்றான் என்பதைத் தவிர, வேறுவிதமாக எண்ணுவது அறிவுடைமையன்று' என இடித்துரைக்கின்றான் இராமபிரான். தந்தை இறந்தமையை இராமபிரான் அறியாததனால்,

அவன் பரதனை ஏவியிருத்தல் கூடுமென்று நினைத்தான். பிறந்த - உடன் பிறந்த எனவுமாம். பெருமகன் : 1108 பார்க்க.

(பி - ம்.) 1. பெருமகனென்வயின்; பிரிந்ததுன்பினல்.
3. தவிரத்தானையால், தருமத்தானையால், அன்றித்தானையால்.
4. புகலற்பாலதோ. (45)

1115. பொன்னொடும் பொருகழற் பரதன் போந்துதான்
நன்னெடும் பெரும்படை நல்க லன்றியே
என்னொடும் பொருமென வியம்பற் பாலதோ
மின்னொடும் பொருவுற விளங்கும் வேலினாய்.

மின்னொடும் பொருவு உற விளங்கும் வேலினால் - மின்னலோடொப்ப விளங்கும் வேலையுடையவனே, பொரு கழல் பரதன் - போருக்குரிய வீரக் கழலை அணிந்த பரதன், போந்து - (இங்கே) வந்து, பொன்னொடும் - அரசச் செல்வத்துடனே, நல் நெடு பெரு படை - நல்ல மிகப் பெரிய சேனையை, நல்கல் அன்றி - (எனக்குக்) கொடுப்பதையன்றி, என்னொடும் பொரும் என - என்னோடு போர் செய்வானென்று, இயம்பல் பாலதோ - சொல்லத் தகுமோ? (தகாது).

'பரதன் என்னோடு போர் செய்வானென்று நினைத்தலும் அறிவுடைமையன்று' என முன் பாட்டிற் கூறியதையொட்டி, அவன் படையோடு வந்தது அப்படையினை என்பாற் சேர்ப்பித்தற்கேயன்றிப் பிறிதன்று என்கின்றான் இராமபிரான்.

பொன்னொடும் பொருகழல் என இயைத்து, பொன்னால் இயன்ற வீரக் கழல் என்று உரைத்தலுமாம். இப்பொருளுக்கு, ஒடு, ஆலுருபின் பொருளில் வந்ததெனக் கொள்க. தான், ஏ : அசை.

(பி - ம்.) 1. போந்தனன்.
2. பெரும்புவி, பெருநிலம்; படைகளை, வயப்படை; மு. அந்நெடுந்திரு வெலா மருள்வதன்றியே.
4. பொருவிறல்; இலங்கு, வாளினாய். (46)

1116. சேணுயர் தருமத்தின் றேவைச் செம்மையின்
ஆணியை யன்னது நினைக்க லாகுமோ
பூணியல் மொய்ம்பினாய் போந்த தீண்டெனைக்
காணிய நீயது பின்னுங் காண்டியால்.

பூண் இயல் மொய்ம்பினாய் - அணிகலன்கள் பூண்ட தோள்களை உடையவனே, சேண் உயர் தருமத்தின் தேவை - மிக உயர்ந்த தருமதேவதையே போன்றவனும், செம்மையின் ஆணியை - நன்மைக் குணத்திற்கு உரையாணி போன்றவனுமான பரதனை, அன்னது நினைக்கல் ஆகுமோ - (நீ கூறியவாறு) அத்தன்மையாக நினைத்தல் தகுமா? (தகாது); போந்தது - (அவன்) வந்தது, ஈண்டு எனை காணிய - இங்கே என்னைக் காண்பதன்பொருட்டேயாகும்; அது - அவ்வாறு

வதை, நீ பின்னும் காண்டி - நீ பின்னும் (நேரே) காண்பாய். ஆல்: அசை.

இராமபிரான், 'பரதன் என்னைக் காண்பதற்கே வருகின்றான்; நான் இப்போது சொல்வது உண்மையாதலை நீ நேரே அவன் இங்கு வந்தவுடன் உணர்வாய்' என்று கூறி முடிக்கின்றான். வேதவிதிகளே பரதன் செயல்கள் (1113) என முன்னே கூறியதற்கியைய, இங்கே அவனை, 'தருமத்தின் தேவு' 'செம்மையின் ஆணி' என உயர்த்துக் கூறினான். இலக்குவன் எண்ணுவது தவறு என்பதனை மீண்டும் மீண்டும் வற்புறுத்துகின்றான். மொய்ம்பு - தோள்.

(பி - ம்.) 1. கோவைச்.
3. பூணுயர்.
4. அன்னது; பின்னைக். (47)

பரதன் சத்துருக்கனுடன் முற்பட்டு வருதல்

1117. என்றன னிளவலுக் கிசைத்தங் கேந்தலும்
நின்றனன் பரதனு நிமிர்ந்த சேனையைப்
பின்றரு கென்றுதன் பிரிவில் காதலின்
தன்றுணைத் தம்பியுந் தானு முந்தினான்.

ஏந்தலும் - பெருமையிற் சிறந்த இராமபிரானும், என்றனன் இளவலுக்கு இசைத்து - என்றிவ்வாறாகத் தம்பிக்குக் கூறி, நின்றனன் - (பரதன் வருகையை எதிர்நோக்கி) நின்றான்; பரதனும்—, நிமிர்ந்த சேனையை - மிகப் பரந்த தன் சேனையை, பின் தருக என்று - பிற்பட நடத்தி வருக என்று (தலைவர்களுக்குக்) கட்டளையிட்டு, தன் பிளவு இல் காதலின் - (இராமபிரான்பால் என்றும்) நீங்குதல் இல்லாத் தனது அன்போடும், தன் துணை தம்பியும் தானும் - தன்னையே போன்ற துணைவனான தம்பி சத்துருக்கனும் தானுமாக, முந்தினான் - முற்பட்டு (இராமபிரான்பால்) வந்தான்.

'என்றனன்' என்றது முன்னே 1112-16 ஆகிய ஐந்து பாடல்களிற் கூறியவற்றைக் குறித்து நின்றது. என்றனன்: முற்றெச்சம். இளவல் - இலக்குவன்.

பரதனது வன்மையை நம்மால் வெல்ல முடியாதென்றும், அத்தகையவனை நாம் வென்றழித்தாலும் அரசின் ஆசையால் ஆகியது நம் செயல் என்ற பழிக்கிடமாகுமென்றும், அவன் வருகை தனது அன்பின் காரணமாகவேயிருக்கும், ஒருவேளை தந்தை ஏவியும் இருக்கலாம் என்றும் இராமபிரான் இலக்குவனுக்குச் சொன்னதாக வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. இளவலை நோக்கி.
2. நிவந்த தானையைப்.
4. தன்றனித். (48

**பரதனது நிலையை இராமன் காணுதல்**

1118. தொழுதுயர் கையினன் றுவண்ட மேனியன்
அழுதழி கண்ணின னவல மீதென
எழுதிய படிவமொத் தெய்து வான்றனை
முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினுன்.

தொழுது உயர் கையினன் - வணங்கித் தலைமேல் குவித்த கைகளையுடையவனும், துவண்ட மேனியன் - வாடித் துவளும் திருமேனியுடையவனும், அழுது அழி கண்ணினன் - (இடைவிடாது) அழுது நீர் சோரும் கண்களையுடையவனும் (ஆகி), அவலம் ஈது என - துயரத்தின் வடிவம் இதுதான் என்று, எழுதிய படிவம் ஒத்து - (சித்திரத்தில்) எழுதிக்காட்டிய உருவம் போன்று, எய்துவானை - வருகின்ற பரதனை, முழுது உணர் சிந்தையான் - எல்லாம் உணர்ந்த திருவுள்ளமுடைய இராமபிரான், முடிய நோக்கினுன் - (தலைமுதல் கால்வரை) முழுதும் (கூர்ந்து) பார்த்தான்.

பரதனது தோற்றமே, இலக்குவன் எண்ணியது தவறு என்பதனைக் காட்டும் என்பார், அதனை நன்கு எடுத்துக் கூறினுர். தன்; சாரியை ; ''பிரிவெ னுந்துய ருருவுகொண் டாலன்ன பிணியாள்'' (சுந்தர. 336) என்பது ஈண்டு ஒப்பு நோக்கத் தகும்.

(பி - ம்.) 2. அழுதிழி.
3. வடிவமொத்து;
4. முழுதுயர், முழுதும். (49)

**பரதனது தன்மையை இராமன் இலக்குவனுக்குக் காட்டுதல்**

1119. கார்ப்பொரு மேனியக் கண்ணன் காட்டினுன்
ஆர்ப்புறு வரிசிலை யிளைய வையநீ
தேர்ப்பெருந் தானையப் பரதன் சீறிய
போர்ப்பெருங் கோலத்தைப் பொருந்த நோக்கெனு.

கார் பொரு மேனி - கருமேகம் போன்ற திருமேனியுடைய, அ கண்ணன் - அவ்விராமபிரான் (இலக்குவனை நோக்கி), ஆர்ப்பு உறு வரி சிலை - நாணொலிமிக்க கட்டமைந்த வில்லினையுடைய, இளைய ஐய - இளையவனே, தேர் பெரும் தானை - மிக்க தேர்களைக் கொண்ட பெரும் படையையுடைய, அ பரதன் - அந்தப் பரதனது, சீறிய - நம்மேல் சினங்கொண்ட, பெரும் போர்க் கோலத்தை—, நீ பொருந்த நோக்கு எனு - நீ நன்ருகப் பார் என்று சொல்லி, காட்டினுன் - (பரதனைச் சுட்டிக்) காட்டினுன்.

பரதன் வருகையில் களங்கம் கருதாத இராமபிரான், 'பரதன் போர்க் கோலங்கொண்டு வருகின்ருனு என்பதை நீயே நன்கு பார்' என்று தம்பிக்குக் கூறிக் காட்டினுன்.

இராமபிரானைக் கண்ணன் எனல் : 659-ஆம் பாடலின் விசேடக் குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. *கார்ப்பெரு; மேனியன்; கண்ணிற் காட்டினன்.*
2. *ஐயனே.*
3. *ஏர்ப்பெரும்.*
4. *நோக்கென்றான்.* (50)

### இலக்குவன் தன் செயலுக்கு வருந்தி நிற்றல்

1120. எல்லொடுங் கியமுகத் திளவ னின்றனன்
மல்லொடுங் கியபுயத் தவனை வைதெழும்
சொல்லொடுஞ் சினத்தொடு முணர்வு சோர்தர
வில்லொடுங் கண்ணநீர் நிலத்து வீழவே.

இளவல் - (பரதனைப் பார்த்த) இலக்குவன், மல் ஒடுங்கிய புயத்தவனை - வலிமை குன்றிய தோள்களையுடைய அப்பரதனை, வைது - ஏசி, எழும் சொல்லொடும் - (தன்பால்) எழுந்த சொற்களும், சினத்தொடும் - கோபமும், உணர்வும் - அறிவும், சோர்தர - தளர்ந்தொழியவும், வில்லொடும் - (கையில் பிடித்த) வில்லோடு, கண்ணநீர் – கண்களிலிருந்து பெருகிய நீர், நிலத்து வீழ - தரையில் விழவும், எல் ஒடுங்கிய முகத்து - ஒளி மழுங்கிய முகத்தோடு, நின்றனன் - (பிரமித்து) நின்றான். ஏ : ஈற்றசை.

அருகில் வந்த பரதனது தோற்றத்தை நன்கு கண்ட இலக்குவன், தன் குற்றத்தை உணர்ந்து நாணி, வருத்த மிகுதியோடு செயலற்று நின்றுவிட்டான். 'போர்ப்பெருங் கோலத்தைப் பொருந்த நோக்கு' என்ற தமையன் சொல், தம்பியின் மனத்துள் முள்ளைப் போலத் தைத்தது; வில் கைப்பிடியினின்றும் நழுவியதையும் உணராமல் கண்ணீர் பெருக்கி நின்றான் என்பதனோடு, "விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்" (1026) என்ற குகன் செயல் ஒப்பிடத்தகும்.

(பி - ம்.) 3. *சோர்ந்து சோர்தர.*
4. *கண்ணினீர்.* (51)

### பரதன் செயல்

1121. கோதறத் தவஞ்செய்து குறிப்பி னெய்திய
நாதனைப் பிரிந்துதன் னலத்தி னீங்கிய
மேதினித் திருமகள் மெலிகின் றாள்விடு
தூதெனப் பரதனுந் தொழுது துன்னினான்.

கோது அற தவம் செய்து - குற்றமறத் தவத்தைச் செய்து, குறிப்பின் எய்திய - தன் கருத்தின்படி அடையப்பெற்ற, நாதனை

பிரிந்து - தலைவனை இராமபிரானைப் பிரிந்ததனால், தன் நலத்தின் நீங்கிய - தான் எய்துதற்குரிய நலங்களின் நீங்கியவளான, மேதினி திருமகள் - இராச்சிய லட்சுமி, மெலிகின்றாள் - மிக வருந்துவாளாய், விடு தூது என - (இராமபிரான்பால்) அனுப்பிய தூதுபோல, பரதனும்—, தொழுது - (தன்னை எதிர்நோக்கும் இராமபிரானைத்) தொழுதவாறே, துன்னினான் - அணுகினான்.

பரதன் வந்தது இராமபிரானை அழைத்துப் போதற்கே யாகலின், அவனை இராச்சிய லட்சுமி அனுப்பிய தூதுபோல எனத் தற்குறிப் பேற்றமாக்கிக் கூறுகின்றார்.

(பி - ம்.) 2. பிரிந்தனள் நலத்து நீங்கினாள்; மு, நாதனை யல்லுநன் பகலு நீங்கினாள்.
3. வேதனைத் திருமகள்; புவிமகள், பூமகள்.
4. தொழுது தோன்றினான். (52)

1122. அறந்தனை நினைந்திலை யருளு நீத்தனை
துறந்தனை முறைமையு மென்னுஞ் சொல்லினான்
மறந்தனன் மலரடி வந்து வீழ்ந்தனன்
இறந்ததன் றாதையை யெதிர்கண் டென்னவே.

(அணுகி வந்த பரதன்), அறம் தனை நினைந்திலை - (உனக்குரிய கடமையான) தருமத்தை நீ நினைந்தாயில்லை; அருளும் நீத்தனை - (உனது இயல்பான) அருட்குணத்தையும் கைவிட்டாய்; முறைமையும் துறந்தனை - நம் குல முறையையும் விட்டாய்; என்னும் சொல்லினான் - என்ற வார்த்தைகளுடனே, இறந்த தன் தாதையை எதிர்கண்டால் என்ன - இறந்துபோன தன் தந்தையான சக்கரவர்த்தியை (மீண்டும் உயிரோடு) எதிரில் கண்டாற்போல, மறந்தனன் - தன்னை மறந்த வனாய், வந்து மலர் அடி வீழ்ந்தனன் - வந்து (இராமபிரானுடைய) தாமரை மலரை போன்ற திருவடிகளிலே விழுந்தான்.

ஏ : ஈற்றசை.

'அரசர்க்குரிய அறம் நாடாளுகை; அதனை விட்டதனால், உயிர்களெல்லாம் அல்லலுறுதல் கண்டும் இரங்கவில்லை; மூத்தவற்குரியது அரசு என்ற நம் குல முறையையும் விட்டுவிட்டாய்' என்று குறைப் படுகின்றான் பரதன். "அறந்தனை வேரறுத் தருளைக் கொன்றனை" (843) என்று அவன் தந்தையைக் குறித்துக் கூறியது இங்கே ஒப்பு நோக்கத் தகும்.

(பி - ம்.) 2. இறந்தனை.
4. நற்றாதையை; எதிர்கண்டானென. (53)

### இராமனுடைய செயல்

1123. உண்டுகொ லுயிரென வொடுங்கி னுருக்
கண்டன னின்றனன் கண்ணன் கண்ணெனும்
புண்டரீ கம்பொழி புனல வன்சடா
மண்டல நிறைந்துபோய் வழிந்து சோரவே.

கண்ணன் - இராமபிரான், உயிர் உண்டு கொல் என - உயிர் உண்டோ இல்லையோ என்னுமாறு, ஒடுங்கினன் உரு கண்டனன் - வாடி மெலிந்த பரதனது உருவத்தைக் கண்டு, கண் எனும் புண்டரீகம் பொழி புனல் - (தன்) கண்களாகிற தாமரை மலர்கள் பொழிந்த நீர்ப்பெருக்கு, அவன் சடா மண்டலம் நிறைந்துபோய் - அப்பரதனுடைய சடை முழுதும் நிரம்பி, வழிந்து சோர- வழிந்து (தரையில்) பெருகுமாறு, நின்றனன் - (கண்ணீர் பெருக்கி) நின்றான்.

ஏ: ஈற்றசை.

கண்டாரெவரும் மனமுருகிக் கரையுமாறு உருவழிந்திருந்த பரதனது தோற்றம், இராமபிரானையும் அவ்வாருக்கியது. கண்ணன் : 1119 குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. உயிரெனவுருகக் கண்டவன்.
3. புனலின்வன்சடா.
4. பாயவே. (54)

1124. அயாவுயிர்த் தழுகணீ ரருவி மார்பிடை
உயாவுறத் திருமன முருகப் புல்லினன்
நியாயமத் தனைக்குமோர் நிலைய மாயினன்
தயாமுத லறத்தினைத் தழீஇய தென்னவே.

நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலையம் ஆயினன் - நீதிகள் எல்லா வற்றிற்கும் ஓர் இருப்பிடமான இராமபிரான், அயா உயிர்த்து - பெருமூச்செறிந்து, அழு கண் நீர் அருவி - அழுகின்ற கண்களி னின்றும் பெருகும் நீரருவியானது, மார்பு இடை உயா உற - (தனது) மார்பிலே பெருகியோடவும், திருமனம் உருக - தனது அழகிய மனம் நெகிழ்ந்து உருகவும், தயா முதல் - கருணை வடிவாகிய முதற்பொருள் (முதற் கடவுள்), அறத்தினை தழீஇயது என்ன - அறக் கடவுளைத் தழுவிக் கொண்டாற்போல, புல்லினன் - (பரதனை எடுத்துத்) தழுவிக் கொண்டான்.

ஏ : ஈற்றசை.

இராமபிரானை நீதிகளுக்கு எல்லாம் நிலைக்களமானவன் என விசேடித்து, அதனோடு கருணையே வடிவு கொண்டவன் என்றும், பரதன் அறத்தின் வடிவானவன் என்றும் கூறி, கருணை அறத்தைத் தழுவியதுபோல என உவமித்தார். தருமத்திற்கு மூலம் தயை

யாகலின், தயா முதல் - தயையாகிய மூலம் என்றலுமாம். "தயா மூலதன்மம்" என்பது அப்பர் திருவாக்கு. அயா உயிர்த்து - சோகம் சிறிது தணிந்து எனவுமாம். உயா அற என்ற பாடத்துக்கு, பரதனது வருத்தந் தீர என்று பொருள் கொண்டு, அருவி பாயும் மார்பிடைப் புல்லினன் என இயைத்து உரைத்தலுமாம்.

(பி - ம்.) 1. அழிகணீர்.
2. திருவுளம்.
4. தழுவியென்னவே. (55)

### தசரதனைப்பற்றி இராமன் வினவுதல்

1125. புல்லின னின்றவன் புனைந்த வேடத்தைப்
பல்விதம் நோக்கினன் பலவு முன்னினன்
அல்லலி னழுங்கினை யைய வாளுடை
மல்லுயர் தோளவன் வலிய னேவென்றான்.

புல்லினன் நின்று - (இராமபிரான் பரதனைத்) தழுவி நின்று, அவன் புனைந்த வேடத்தை - அப்பரதன் கொண்டிருந்த தவக்கோலத்தை, பல்விதம் நோக்கினன் - பலபடியாகப் பார்த்து, பலவும் உன்னினன் - பல வகையாக எண்ணி, ஐய - ஐயனே, அல்லலின் அழுங்கினை - (நீ மிகவும்) துன்பத்தால் வருந்துகின்றாய் (அதற்குக் காரணம் என்னவோ?); ஆள் உடை(ய) - (உலகத்தை) ஆளுதலுடைய, மல் உயர் தோளவன் - வலிமையால் உயர்ந்த தோள்களை உடைய சக்கரவர்த்தி, வலியனே - திடமாக உள்ளானோ? என்றான் - என்று வினவினான்.

ஆட்சியை மேற்கொள்ள வேண்டியவன் தவக்கோலங் கொண்டிருத்தற்கும், அவனுடைய சோகம் அளவு கடந்திருத்தற்கும் காரணம் புலப்படாமையின், இராமபிரான் பலவாறு எண்ணி, இறுதியில் தந்தையின் நலத்தை விசாரித்தான்.

வலியன்: 798 - பார்க்க. ஆளுடை - நம்மை ஆளுதலுடைய எனலுமாம். நோக்கினன், உன்னினன்: முற்றெச்சம்.

(பி - ம்.) 2. பன்முறை உன்னுவான்.
3. அழுந்தினை, ஒடுங்கினை.
4. மல்லலம். (56)

### தந்தை இறந்தமையைப் பரதன் கூறுதல்

1126. அரியவ னுரைசெயப் பரத னையநின்
பிரிவெனும் பிணியினா லென்னைப் பெற்றவக்
கரியவள் வரமெனுங் கால னுற்றனக்
குரியமெய் நிறுவிப்போ யும்ப ரானென்றான்.

அரியவன் உரைசெய - (எல்லா வகையாலும்) அருமையையுடைய வனான இராமபிரான் (அவ்வாறு) கேட்க, பரதன்—, ஐய - ஐயனே, நின் பிரிவு எனும் பிணியினால் - உன் பிரிவாகிய நோயினாலும், என்னை பெற்ற அ கரியவள் - என்னைப் பெற்ற உள்ளம் கரியவளான கைகேயியின், வரம் எனும் காலனால் - வரம் என்ற யமனாலும், தனக்கு உரிய மெய் நிறுவி போய் - தனக்கு இயல்பாகவுள்ள வாய்மையை நிலை நிறுத்திவிட்டுச் சென்று, உம்பரான் - மேலுலகு அடைந்த வனானான், என்றான் - என்று விடை கூறினான்.

கரியவள் என்பது மூதேவிக்கு உரிய பெயர்; இங்கே களங்கமும் கொடுமையுங்கொண்ட மனமுடையவள் எனக் கைகேயியைக் குறித்தது. தந்தை இறந்ததற்குக் காரணமாக நோய், எமன் என இரண்டும் கூறினான். உம்பர் - மேல் உலகம்; சுவர்க்கம். தயரதன் மெய் நிறுவினமை : 1064, 1093, 1129; ஆரணிய. 195; கிட்கிந்தா. 305, பார்க்க.

(பி - ம்.) 2. பிரிவெனுந்துயரினால்,
3. உரையெனும்.
4. உம்பரெய்தினான். (57)

## இராமன் துயருறுதல்

1127. விண்ணிடை யடைந்தன னென்ற வெய்யசொல்
புண்ணிடை யயிலெனச் செவிபு காமுனம்
கண்ணொடு மனஞ்சுழல் கறங்கு போலவல்
மண்ணிடை விழுந்தனன் வானி னும்பரான்.

விண் இடை அடைந்தனன் என்ற - (தந்தை) சுவர்க்கம் அடைந்தான் என்று பரதன் சொல்லிய, வெய்ய சொல் - கொடிய வார்த்தை, புண் இடை அயில் என - புண்ணில் (பாய்ந்த) வேல்போல, செவிபுகா முன்னம் - செவிவழியே நுழைந்தவுடனே, வானின் உம்பரான் - சுவர்க்கத்தினும் மேலான பரமபதத்துக்கு உரியவனான இராமபிரான், கண்ணொடு மனம் - கண்ணும் மனமும், சுழல் கறங்கு போல - சுழலும் காற்றாடிபோல (ஆக), வல் மண் இடை விழுந்தனன் - வலிய தரையில் (சோகம் மிக்கு) விழுந்தான்.

இராமபிரான், வானின் உம்பரானாயினும், தான் கொண்ட மானிட வேடத்திற்கியையத் தந்தையின் பிரிவுக்காற்றாது சோகமுற்றான்.

புகாமுனம் : விரைவு குறித்தது. போல - போலாக. வானின் உம்பரான் மண்ணிடை விழுந்தனன் என்றது ஒரு நயம். இராமபிரான் மனம் பரதனது நிலைகண்டு, காரணம் அறியாது வருந்திப் புண்பட்டிருந்ததாகலின், அப்புண்ணிடை வேல்போலப் புகுந்தது பரதன் சொல்; புண்ணிடை வேல் : 205 விசேடக் குறிப்புப் பார்க்க.

பி - ம்.) 2. புண்ணிடைக் கோலெனச், புண்ணுழையயிலெனச். (58)

1128. இருநிலஞ் சேர்ந்தன னிறையு யிர்த்திலன்
உருமெறி யரவென வுணர்வு நீங்கினன்
அருமையி னுயிர்வர வயாவு யிர்த்தகம்
பொருமினன் பன்முறை புலம்பி னனரோ.

இரு நிலம் சேர்ந்தனன் - தரையில் விழுந்த இராமபிரான், இறை உயிர்த்து இலன் - சிறிதும் மூச்சு இல்லாதவனாகி, உரும் எறி அரவு என - இடி தாக்கிய நாகம்போல, உணர்வும் நீங்கினன் - நினைவும் இழந்தவனானன்; (பின்பு), அருமையின் - அருமையாக,(சைத்தியோபசாரங்களால்), உயிர் வர - மூச்சு (உணர்வுடன்) வர, அயா உயிர்த்து - பெருமூச்செறிந்து, அகம் பொருமினன் - (துக்கத்தால்) மனம் பொருமலுற்று, பல் முறை புலம்பினன் - பலவாறு புலம்பலானான்.

அரோ : அசை.

இறை என்றதன் ஈற்றில் இழிவு சிறப்பும்மை தொக்கது. இறை - தலைவன் என்று கொண்டு எழுவாயாக்கினும் அமையும். சேர்ந்தனன் : வினையாலணையும் பெயர். உயிர்த்திலன் : முற்றெச்சம். பாம்பு இடியோசைக்கு அஞ்சி நடுங்குதல் : 558 குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. சேர்ந்தவன்.
2. உணர்வினீங்கினன்.
4. பலமுறை. (59)

இராமபிரான் புலம்பல்
(தரவு கொச்சகக் கலிப்பா)

1129. நந்தா விளக்கனைய நாயகனே நானிலத்தோர்
தந்தாய் தனியறத்தின் றாயே தயாநிலையே
எந்தா யிகல்வேந்த ரேறே யிறந்தனையோ
அந்தோ வினிவாய்மைக் காருளரே மெய்யுற்றார்.

நந்தா விளக்கு அனைய நாயகனே - அணையாத விளக்குப் போன்ற தலைவனே, நால் நிலத்தோர் தந்தாய் - உலகிலுள்ளார்க்கெல்லாம் தந்தை போன்றவனே, அறத்தின் தாயே - தருமத்தின் தாய் போன்றவனே, தயா நிலையே - தயைக்கு நிலைக்களமானவனே, எந்தாய் - எம் தந்தையே, இகல் வேந்தர் ஏறே - பகையரசராகிய யானைகளுக்குச் சிங்கம் போன்றவனே, இறந்தனையோ - நீ இறந்து விட்டாயோ! அந்தோ - ஐயோ, இனி—, வாய்மைக்கு மெய் உற்றார் ஆர் உளர் - உண்மைக்கு உண்மையான உறவினர் (உன்னைப்போல வேறு) யாவர் இருக்கின்றனர்!

இதுமுதல் ஏழு கவிகளால் இராமபிரான் தந்தையைக் குறித்துப் பலவாறு புலம்பினமை கூறப்படும். தசரதன் குடிகளுக்கு எல்லாம் தந்தை போன்றவன் : "உலகுளோர் தந்தையே யனையவத்

தகவினுன்'' (பால. 1121). தந்தாய்: விளி. ஏறு - ஆண்சிங்கம்; ஏகதேச உருவகம்; இதற்கு இயையப் பகை அரசராகிய யானைகள் என்பது வருவித்து உரைக்கப்பெற்றது. வாய்மைக்கு மெய்யுற்றுர் ஆருளர் என்றது, தசரதனது வாய்மைகாத்தற் சிறப்பைக் குறித்தது; 1126, விசேடக் குறிப்புப் பார்க்க; ''என்னே மன்னு யாருளர் வாய்மைக் கினி' (215) என்றதும் காண்க.

(பி - ம்.) 1. நாயகமே.
3. இறந்தனையே.
4. ஆருளரோ; மற்றென்றுன். (60)

1130. சொற்பெற்ற நோன்பின் றுறையோ னருள்வேண்டி
நற்பெற்ற வேள்வி நவைநீங்க நீயியற்றி
எற்பெற்ற நீபெற்ற தின்னுயிர்போய் நீங்கவோ
கொற்பெற்ற வெற்றிக் கொலைபெற்ற கூர்வேலோய்.

கொல் பெற்ற - கொல்லுத் தொழிலால் பெற்ற, வெற்றி - வெற்றிக்கு உரிய, கொலை பெற்ற - கொலைத்தொழிலை யுடைய, கூர்வேலோய் - கூரிய வேலை உடையவனே, நீ—, சொல் பெற்ற - புகழைப்பெற்ற, நோன்பின் துறையோன் - தவத்துறையில் மிக்க கலைக்கோட்டு முனிவனது, அருள் வேண்டி - அருளை இரந்து பெற்று, நவை நீங்க - குற்றங்கள் நீங்குமாறு, நல் பெற்ற வேள்வி இயற்றி - நன்மையுடைய (பரிவேள்வியும், மகவருள் வேள்வியுமான) வேள்விகளைச் செய்து, என் பெற்ற நீ - என்னைப் (புதல்வனுகப்) பெற்ற நீ, பெற்றது - (அதனுற்) பெற்ற பயன், இன் உயிர் போய் நீங்கவோ - இனிய உயிர் போகப் பெற்று (இவ்வுலகைவிட்டே) நீங்குவதுதானே?

'நீ எவ்வளவோ சிரமப்பட்டு என்னை மகனுகப் பெற்றது, என்னுலே நீ உயிர் இழத்தற்காகத்தானே? இதற்கு நான் காரணன் ஆனேனே!' என்கின்றுன். சொல் - புகழ்; 'கொற்பெற்ற' என்பதனை, கொன் பெற்ற எனப் பிரித்து, பகைவர்க்கு அச்சந் தருதலைப் பெற்ற என உரைத்தலுமாம்.

(பி - ம்.) 2. நீங்கத்தானியற்றி, நீங்கி நீயியற்றி, தீர்தவமியற்றி.
3. எற்பெற்று; உன்னுயிர்போய். (61)

1131. மன்னுயிர்க்கு நல்குரிமை மண்பார நான்சுமக்கப்
பொன்னுயிர்க்குந் தாரோய் பொறையுயிர்த்த வாறிதுவோ
உன்னுயிர்க்குக் கூற்ருயுலகாளப் பிறந்தேனே
மின்னுயிர்க்குந் தீவாய் வெயிலுயிர்க்கும் வெள்வேலோய்.

மின் உயிர்க்கும் - மின்னலும் (ஒப்பாகாமையால்) பெருமூச் செறிதற்குக் காரணமான, வெயில் உயிர்க்கும் - ஒளி விடுகிற, தீவாய் - கொடிய முனையை உடைய, வெள்வேலோய் - வெள்ளிய வேற்படை

உடையவனே, பொன் உயிர்க்கும் தாரோய் - பொன்னாலான மாலை அணிந்தவனே, மன் உயிர்க்கு நல்கு உரிமை - நிலைபெற்ற உயிர்களுக்கெல்லாம் அருள் செய்யும் உரிமை பூண்ட, மண்பாரம் - இராச்சிய பாரத்தை, நான் சுமக்க—, பொறை உயிர்த்த ஆறு இதுவோ - அந்தப் பாரம் நீங்கப்பெற்ற வகை இதுதானோ? உன் உயிர்க்கு கூற்று ஆய் - உனது உயிருக்கு யமனாகி, உலகு ஆள பிறந்தேனோ - உலகத்தை ஆள்வதற்கு நான் பிறந்தேனோ?

'இராச்சிய பாரத்தை நான் ஏற்றலும் நீ அதைத் தவிர்தலும் முறையேயானாலும், நீ இருக்க அது நிகழ்தலின்றி, உனது உயிருக்கு யமனாகியா நான் அதனைப் பெறவேண்டும்? அதற்காகவோ நான் பிறந்தேன்? இஃதிருந்தவாறு என்னே!' என இரங்குகின்றான். அரசாட்சியின் அருமை கருதி, 'மண்பாரம் நான் சுமக்க' என்றான்; 62–பார்க்க. பொன் உயிர்க்கும் - பொன் போன்ற; மின் என்றதன் பின் உயர்வு சிறப்பும்மை விரிக்க.

(பி - ம்.) 1. நல்லுரிமை.
2. பொன்னுரைக்கும்.
3. அரசாளவுற்றேனோ, உலகாளவுற்றேனோ.
4. வெவ்வேலாய். (62)

1132. எம்பரத்த தாக்கி யரசுரிமை யிந்தியங்கள்
தம்பரத்த வாக்கித் தவமிழைத்த வாறிதுவோ
சம்பரப்பேர்த் தானவனைத் தள்ளிச் சதமகற்கன்
றம்பரத்தி னீங்கா வரசளித்த வாதியாய்.

அன்று - முன்னொரு நாள், சம்பரன் பேர் தானவனை தள்ளி - சம்பரன் என்ற பேருடைய அசுரனை அழித்து, சதமகற்கு - இந்திரனுக்கு, அம்பரத்தின் நீங்கா அரசு அளித்த - சுவர்க்கத்தினின்றும் நீங்காத ஆட்சியை அளித்த, ஆழியாய் - ஆணைச்சக்கரமுடையவனே, அரசு உரிமை - அரசாளும் உரிமையை, எம் பரத்தது ஆக்கி - எங்கள் வசமாகச் செய்து, இந்தியங்கள் - ஐம்பொறிகளையும், தம் பரத்த ஆக்கி - தம் வசமாகும்படி செய்து, தவம் இழைத்த ஆறு இதுவோ - (நீ) தவம் செய்த விதம் இதுதானோ?

தசரதன் முன்னே இராமபிரானை அரசு ஏற்குமாறு கூறிய விடத்தில், முன்னோர் செய்த முறைப்படி அரசை அவன்பால் ஒப்புவித்துத் தான் தவஞ் செய்யும் கருத்தினன் (64) என்றமையின், தவம் இழைத்தவாறிதுவோ என்கின்றான் இராமபிரான். பரதனையும் உளப்படுத்தி 'எம்' என்றான். இந்திரியங்கள் தம் பரத்த ஆக்கல் - இந்திரியங்கள் தம் மட்டோடு நிற்பதன்றித் தன்னை வசப்படுத்த இயலாமற்செய்தல்; அடக்குதல். இந்தியம் : இந்திரியம் என்பதன் சிதைவு. சதமகன் - நூறு யாகங்கள் செய்தவன்; இந்திரன். தசரதன் சம்பரனை அழித்து இந்திரனுக்கு அரசளித்தமை : பால. 323-பார்க்க.

(பி-ம்.) 2. தம்பரத்தில் வீழாத்; வீழ்த்தித்; வீயத்.
4. அரசிந்த. (63)

1133. வேண்டுந் திறத்தாரும் வேண்டா வரசாட்சி
பூண்டிவ் வுலகுக் கிடர்கொடுத்த புல்லனேன்
மாண்டு முடிவதல்லால் மாயா வுடம்பிதுகொண்
டாண்டு வருவதினி யார்முகத்தே நோக்கவோ.

வேண்டும் திறத்தாரும் - (பலவற்றையும்) விரும்பும் தன்மை உடையவர்களும், வேண்டா - (ஏற்க) விரும்பாத, அரசு ஆட்சி பூண்டு - அரசாட்சியை (உன் சொல்லால்) மேற்கொண்டு, (அதன் விளைவாக) இவ் உலகுக்கு இடர் கொடுத்த - இவ்வுலகத்தாருக்குத் துன்பத்தை விளைத்த, புல்லனேன் - அற்பனான நான், மாண்டு முடிவது அல்லால் - (இங்கே) இறந்தொழிவதன்றி, மாயா உடம்பு இது கொண்டு - இறவாத இவ்வுடம்போடு, ஆண்டு வருவது - அங்கே (அயோத்திக்கு) நான் வருவது, இனி யார் முகத்தே நோக்கவே - வேறு யார் முகத்தில் விழிப்பதற்கோ?

'அரசாளுதல் எளிதன்றாகலின் அதனைப் பலரும் விரும்ப மாட்டார்கள்; உன் சொல்லை மறுது நான் அதனை ஏற்றது, அரசின்றி நாடு துயருறுதற்குக் காரணமாயிற்று' என்கின்றான். 'யார் முகத்தில் விழிப்பது' என்றது உலக வழக்கு.

(பி-ம்.) 2. இடரிழைத்த.
4. யார்முகத்தை நோக்கவே. (64)

1134. தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக்
கானடைந்தே னென்னத் தரியாது காவலநீ
வானடைந்தா யின்ன மிருந்தேனான் வாழ்வுகந்தே
ஊனடைந்த தெவ்வ ருயிரடைந்த வொள்வேலோய்.

ஊன் அடைந்த தெவ்வர் - உடல் தடித்த பகைவருடைய, உயிர் அடைந்த - உயிரைக் கவர்ந்த, ஒள் வேலோய் - ஒளி மிக்க வேற்படையை உடையவனே, காவல - உலகு காத்தல் வல்லவனே, தேன் அடைந்த சோலை - தேன் நிறைந்த சோலைகளையுடைய, திரு நாடு கைவிட்டு - செல்வச் சிறப்பையுடைய நாட்டைக் கைவிட்டு, கான் அடைந்தேன் என்ன - (நான்) காட்டை அடைந்தேன் என்று, தரியாது - அதைப் பொறுக்காமல், நீ வான் அடைந்தாய் - நீ (இவ்வுலகை விட்டே சென்று) சுவர்க்கம் அடைந்துவிட்டாய்; நான் - நானோவென்னில், (நீ வேற்று உலகு சென்றதை அறிந்த பின்னும்), வாழ்வு உகந்து - இவ்வுலக வாழ்க்கையை விரும்பி, இன்னம் இருந்தேன் - இன்னமும் உயிரோடு இருந்தேன் (என் நிலை இருந்தவாறு என்னே!)

'நான் நாடு துறந்து வந்ததைத் தரியாது நீ உயிரையே விட்டாய்; நானோ, நீ உயிர் துறந்ததை அறிந்தும் உடனே உயிர் துறவாமல் இன்னும் இருக்கின்றேன்! இஃதென்ன கொடுமை! எனது அன்புடைமையை என்ன என்பது!' என இரங்குகின்றான்.

(பி - ம்.) 2. தரியாது கைவிட்டு.
3. இன்னுமிருந்தேனன், இன்னமுயிர் சுமந்து.
4. வெல்வேலோய், வெள்வேலோய். (65)

1135. வண்மையு மானமும் வானவர்க்கும் பேர்க்ககிலாத்
திண்மையுஞ் செங்கோ னெறியுந் திறம்பாத
உண்மையு மெல்லா முடனேகொண் டேகினையே
தண்மை தகைமதிக்கு மீந்த தனிக்குடையோய்.

தகை மதிக்கும் - பெருமையை உடைய நிறை மதிக்கும், தண்மை ஈந்த - குளிர்ச்சியை அளித்த, தனி குடையோய் - ஒப்பற்ற வெண் குடையை உடையவனே, வண்மையும் - (உனது) வள்ளன்மையையும், மானமும் - மானத்தையும், வானவர்க்கும் பேர்க்ககில்லா(த) - தேவர்களுக்கும் நீக்க முடியாத, திண்மையும் - வலிமையையும், செங்கோல் நெறியும் - நீதி தவறாத ஆட்சி முறையையும், திறம்பாத உண்மையும் - மாறுபடாத வாய்மையையும், எல்லாம் - மற்றும் எல்லா நலன்களையும், உடனே கொண்டு - உன்னுடனே எடுத்துக்கொண்டு, ஏகினையே - (இவ்வுலகை விட்டுச்) சென்றுவிட்டாயே!

இவ்வளவு நற்குண நற்செயல்கள் அமைந்தவர்களை இனிக் காண முடியாது என்றவாறு. மானம் - நிலையில் தாழாமையும், ஊழ் வினையால் தாழ்வு வரின் உயிர் வாழாமையுமாம். தகை - அழகு; விளக்கம் எனலுமாம். இவன் குடை மதியின் தண்மையை விடச் சிறந்தது என்றபடி; தண்மை - குடிமக்களுக்கு உள்ளக் குளிர்ச்சியைத் தரும் தகைமை. தசரதனது குடையின் சிறப்பு: பால. 177-பார்க்க.

(பி - ம்.) 2. செங்கோனிறையும்.
3. ஒண்மையும்; ஏகினேயோ.
4. நகைமதிக்கும்; தகவுடையோய். (66)

இராமனைப் பலரும் தேற்றுதல்

1136. என்றெடுத்துப் பற்பலவும் பன்னி யிடருழக்கும்
குன்றெடுத்த போலுங் குவவுத்தோட் கோளரியை
வன்றடக்கைத் தம்பியரும் வந்தடைந்த மன்னவரும்
சென்றெடுத்துத் தாங்கினார் மாவசிட்டன் றேற்றினான்.

என்று - என்று இவ்வாறாக, பல பலவும் எடுத்து பன்னி - பலவற்றையும் எடுத்துப் பலகாற் சொல்லிப் புலம்பி, இடர் உழக்கும் - துயருற்று வருந்திய, குன்று எடுத்த போலும் குவவு தோள் கோள்

அரியை - மலை உருவெடுத்தாற் போன்ற திரண்ட தோள்களை உடைய ஆண் சிங்கம் போன்ற இராமபிரானை, வல் தட கை தம்பியரும் - வலிய பெரிய கைகளையுடைய தம்பிமார் மூவரும், வந்து அடைந்த மன்னவரும் - (அப்போது அங்கே) வந்து சேர்ந்த அரசர்களும், சென்று எடுத்து தாங்கினர் - ஓடிப்போய்த் தூக்கித் தாங்கிக் கொண்டனர்; மா வசிட்டன் - (அப்போது வந்து சேர்ந்த) பெருமை மிக்க வசிட்ட முனிவன், தேற்றினன் - (நீதிகளைக் கூறித்) தேற்றலானன்.

பரதனோடு வந்த அரசர் பலரும், வசிட்ட முனிவனும், இராமபிரான் புலம்பிக்கொண்டிருந்தபோது அங்கே வந்து சேர்ந்தனர் என்பது இதனுல் பெறப்படும். 'என்று' என்றது, முன்னே 1129–35இல் சொல்லியவற்றை.

(பி - ம்.) 2. எடுத்தவொக்கும்; குருமணித்தோட், குவிமணித்தோட்.
3. மற்றுள்ள மன்னவரும். (67)

பலரும் அங்கே வருதல்

1137. பன்னரிய நோன்பிற் பரத்துவனே யாதியாம்
பின்னு சடையோரும் பேருலக மோரேழின்
மன்னவரு மந்திரிய ரெல்லாரும் வந்தடைந்தார்
தன்னுரிமைச் சேனைத் தலைவோருந் தாமடைந்தார்.

பன்ன அரிய நோன்பின் - (அளவிட்டுச்) சொல்லுதற்கு உரிய தவ விரதங்களையுடைய, பரத்துவன் ஆதி ஆம் - பரத்துவாசன் முதலான, பின்னு சடையோரும் - திரித்த சடை முடியையுடைய முனிவர் பலரும், ஓர் ஏழு பேர் உலக மன்னவரும் - ஏழு தீவுகளாக உள்ள பெரிய உலகத்தில் உள்ள பற்பல அரசர்களும், மந்திரியர் எல்லாரும் - எல்லா மந்திரிமார்களும், வந்து அடைந்தார் - (அங்கே) வந்து சேர்ந்தனர்; தன் உரிமை - தன்பால் அன்பு உரிமை பூண்ட, சேனை தலைவோர் தாமும் - சேனுதிபதிகளும், அடைந்தார் - வந்து சேர்ந்தனர்.

வசிட்ட முனிவனும், அரசர் சிலரும் வந்தமை முந்திய பாடலிற் கூறினர்; இங்கே, முனிவர்கள், எஞ்சிய அரசர்கள், மந்திரிமார், சேனைத் தலைவர் ஆகியோர் வந்தமை கூறி, 'மற்றும் வரற்பாலர் எல்லாரும் வந்தனர்' என அடுத்த பாடலிற் கூறுகின்றார்.

பன்னரிய : அகரம் தொகுத்தல்; பன் அரிய எனப் பிரித்து, பன் என்பதனை முதனிலைத் தொழிற் பெயராக்கி உரைப்பினுமாம். தன் என்றது இராமபிரானை. பரத்துவாச முனிவன் வந்தமை வான்மீகத்துள் இல்லை.

(பி - ம்.) 1. பிறப்பறுத்துப் பார்த்துயர்ந்த.
4. வந்தடைந்தார். (68)

### வசிட்டன் பேசத் தொடங்குதல்

1138. மற்றும் வரற்பால ரெல்லாரும் வந்தடைந்து
சுற்று மிருந்த வமைதியினிற் றுன்புழக்கும்
கொற்றக் குரிசின் முகநோக்கிக் கோமலரோன்
பெற்ற பெருமைத் தவமுனிவன் பேசுவான்.

மற்றும் - இன்னும், வரல் பாலர் எல்லாரும் வந்து அடைந்து - வரத்தக்கவர்கள் எல்லாரும் வந்து சேர்ந்து, சுற்றும் இருந்த அமைதியினில் - இராமபிரானைச் சுற்றிலும் சூழ்ந்திருந்த சமயத்தில், துன்பு உழக்கும் - (தந்தை இறந்த) துன்பத்தால் வருந்துகிற, கொற்றம் குரிசில் முகம் நோக்கி - வெற்றியுடைய தலைவனை இராமபிரானைப் பார்த்து, கோ மலரோன் பெற்ற - பிரமன் பெற்றெடுத்த, பெரு தவம் முனிவன் - பெருமை பொருந்திய தவத்திற் சிறந்த வசிட்ட முனிவன், பேசுவான் - சொல்லலானான்.

வசிட்ட முனிவன் கூறியவை மேலே பத்துக் கவிகளால் பேசப் படும். முகம் நோக்கிப் பேசுதல் மரபு; பால. 324 பார்க்க. வசிட்டன் பிரமன் புதல்வனென்பது: 34, 1195; பால. 185. மலர்களுட் சிறந்தது தாமரை மலராகலின், கோமலர் எனப் பெற்றது; கோமலரோன் - தலைமையுடைய தாமரைப் பூவில் தங்குபவன்; பிரமன்.

(பி - ம்.) 1. வந்தடைந்தார்.
2. சுற்றுமிருக்கும்; மு. சுற்றிருக்கு மமைதியினிற்றுன்புழக்கு மன்ன வனும், சுற்றுமிருந்தாவலித்துச் சோரவே துன்புழக்கும்.
4. திருமுனிவன். (69)

### வசிட்டன் கூற்று

(கலிவிருத்தம்)

1139. துறத்தலு நல்லறத் துறையு மல்லது
புறத்தொரு துணையிலை பொருந்து மன்னுயிர்க்
கிறத்தலும் பிறத்தலு மியற்கை யென்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்டநீ.

பொருந்தும் மன் உயிர்க்கு - (இவ்வுலகில்) தோன்றும் நிலை பேறுடைய உயிர்களுக்கெல்லாம், இறத்தலும் பிறத்தலும் இயற்கை - இறப்பதும் பிறப்பதும் இயல்பேயாகும்; (அவ்வாறாகிய உயிர்களுக்கு), துறத்தலும் - (உலகத்து ஆசைகளை) விடுதலும், நல் அறம் துறையும் - நல்ல தரும வழியிலே நிற்றலும், அல்லது - அல்லாமல், புறத்து ஒரு துணை இல்லை - வேறு ஒரு பற்றுக்கோடும் இல்லை, என்பதை - என்ற உண்மையை, மறைகளின் வரம்பு கண்ட நீ மறத்தியோ - வேதங்களின் எல்லையைக் கண்டறிந்த நீ மறந்துவிட்டாயோ?

'இராமா, நீ தந்தைக்காக வருந்துதலை விட்டுத் தந்தைக்குச் செய்யவேண்டிய நீர்க் கடனை முதலிற் செய்க' என்று வசிட்ட முனிவன் பல நியாயங்களோடு எடுத்துரைத்தமை இதுமுதல் பத்துக் கவிகளால் கூறப்படும். 'மறைகளின் வரம்பு கண்ட நீ' என்றது, வேதங்களைக் கசடற ஓதி உணர்ந்த நீ என்பதனோடு, இராமபிரானது அவதாரத்தையும் குறித்தவாறும். "சாதலும் பிறத்த லுநுந் தம்வினைப் பயத்தி னாகும்,ஆதலு மழிவு மெல்லா மவைபொருட் கியல்பு கண்டாய்" (சீவக. 269) என்பது ஈண்டு ஒப்புநோக்கத் தகும். முன்னே 21, 108-ஆம் பாடல்களும் நோக்குக.

(பி - ம்.) 1. நல்லறத்தொழிலும்.
2. நிலையிலைப். (70)

1140. உண்மையில் பிறவிக ளுலப்பில் கோடிகள்
தண்மையில் வெம்மையிற் றழுவி னவ்வெனும்
வண்மையை நோக்கிய வலிய கூற்றின்பால்
கண்மையு முண்டெனக் கருதற் பாலதோ.

உலப்பு இல் கோடிகள் - அளவு இல்லாத கோடிக்கணக்கான, உண்மை இல் பிறவிகள் - பொய்ம்மையான (நிலைத்தலில்லாத) பிறப்புக்களைப் பெற்ற உயிர்கள், தண்மையில் வெம்மையில் தழுவின - (அவையவை செய்த நல்வினை தீவினைகட்கு இயைய) இன்பத்திலும் துன்பத்திலும் பொருந்தி நிற்கின்றன, எனும் வண்மையை - என்று நூல்களில் மிகுதியாகக் கூறப்படும் உண்மையை, நோக்கிய - (எப்போதும்) பார்த்து நிற்கின்ற, வலிய கூற்றின் பால்-(காலம் நோக்கி உடலினின்றும் உயிரைப் பிரித்தலில்) வல்லமை உடைய கூற்றுவனிடம், கண்மை உண்டு என கருதல் பாலதோ - கண்ணோட்டம் உண்டு எனக் கருதுவதும் தக்கதாமோ? (ஆகாது).

'வினைப் பயனுக்கு ஏற்றவாறு உலகில் பிறந்து இன்ப துன்பங்களை நுகரும் உயிர்கள், அந்நுகர்ச்சிக்கு உரிய காலம் முடிந்தவுடன் அவற்றை உடலினின்றும் பிரித்தற்குச் சிறிதும் அயராது விழிப்புடன் பார்த்து நிற்கும் யமன், அவ்வாறு பிரித்தலில் நல்லுயிர் தீயுயிர் என்ற பாகுபாடு கொண்டு, நல்லுயிர் மாட்டுக் கண்ணோட்டத்தால் கால நீட்டித்தலைச் செய்யானாதலால், எவ்வுயிரும் உரிய காலத்தில் முடிவெய்துதலே முறை' என்பது கூறியவாறு. தழுவினவ்வெனும்: விரித்தல் விகாரம். கண்மை - கண்ணோட்டம்; "கால னென்னுங் கண்ணிலி" (புறநா. 240: 5).

(பி - ம்.) 2. தழுவினரெனும்.
4. உளதெனக்; கருதலாகுமோ. (71)

1141. பெறுவதன் முன்னுயிர் பிரிதல் காண்டியால்
மறுவறு கற்பினில் வையம் யாவையும்
அறுபதி னுயிர மாண்டு மாண்டவன்
இறுவது கண்டவற் கிரங்கல் வேண்டுமோ.

பெறுவதன் முன் - (தாய்) பெறுவதற்கு முன்னம், உயிர் பிரிதல் - (சில சீவர்களின்) உயிர் நீங்குதலை, காண்டி - (பூமியில்) காண்கின்ருய்; (அவ்விதம் இருக்க), மறு அறு - குற்றம் நீங்கிய, கற்பினில் - கல்வியினுல், வையம் யாவையும் - உலகம் முழுவதையும், அறுபதினுயிரம் ஆண்டும் - அறுபதாயிரம் வருஷங்கள், ஆண்டவன் - அரசு செலுத்திய சக்கரவர்த்தி, இறுவது - இறத்தலை, கண்டு - அறிந்து, அவற்கு - அவனுக்காக, இரங்கல் வேண்டுமோ - மனம் வருந்துதல் தகுதியோ? (அன்று என்றவாறு).

பிறந்ததும் பிறவாததுமாக இருக்கும்போதே உயிர் பிரிந்து போதலைக் கண்களாற் கண்டுவரும் நாம் அறுபதினுயிரம் ஆண்டுகள் சிறப்புற அரசாண்ட பிறகு இறந்த சக்கரவர்த்தியின் பொருட்டு இரங்குவது தகுதியன்று என்றவாறு. 'மறுவறு கற்பினில் வையம் யாவையும்' என்ற அடிக்குக் குற்றமற்ற பதிவிரதா தருமத்தையுடைய பூமி முழுவதையும் என்றும் கூறலாம். வையத்துக்குக் கற்பு, பல அரசர்களுக்குப் பொதுவாகாமல் தசரதன் ஒருவனுக்கே உரியதாதல். முன்னர் மந்திரப் படலத்தும் "கன்னியர்க் கமைவருங் கற்பின் மாதிலம்" (1 : 15) என்று வந்துள்ளமை காண்க. காண்டியால் : ஆல், அசை.

(பி - ம்.) 1. கண்டியால்.
2. மறுவரு; கற்பினின், சிறப்பினில், பிறப்பினில்.
3. அறுபதினுயிரமாண்டும்; ஆண்டரசு.
4. கண்டதற்கு, கண்டிதற்கு, கண்டிவற்கு; இரங்க வேண்டுமோ, இரங்கலாகுமோ, இரங்கவொண்ணுமோ. (72)

1142. சீலமுந் தருமமுஞ் சிதைவில் செய்கையாய்
சூலமுந் திகிரியுஞ் சொல்லுந் தாங்கிய
மூலம்வந் துதவிய மூவர்க் காயினும்
காலமென் றொருவலை கடக்க லாகுமோ.

சீலமும் - நல்லொழுக்கமும், தருமமும் —, சிதைவு இல் - கெடுதல் இல்லாத, செய்கையாய் - செயல்களை உடையவனே, மூலம் வந்து - மூலமாகிய பரம்பொருளினின்றும் தோன்றி, உதவிய - (தம் முத்தொழில் களால் உலகுக்கு) உதவுகின்ற, சூலமும் திகிரியும் சொல்லும் தாங்கிய - முத்தலைச் சூலத்தையும் சக்கரத்தையும் கலைமகளையும் கொண்ட, மூவர்க்கு ஆயினும் - (முறையே உருத்திரனும் திருமாலும் பிரமனும் ஆன) மூவர்க்குமே யானுலும், காலம் என்ற ஒரு வலை-

காலம் என்று சொல்லப்பட்ட (அவர்களையும் பிணிக்கவல்ல) ஒரு வலையை (அகப்படாது), கடக்கல் ஆகுமோ - தப்புதல் கூடுமோ?

காலத்தை வெல்லுதல் திரிமூர்த்திகளுக்கும் ஆகாது என்கின்றான். மூவர்க்கும் எனற்பால உம்மை தொக்கது. சொல் - கலைமகள். "காலம் உலகம்" (தொல். கிளவி: 57) என்ற சூத்திரத்தில் வரும் சொல் என்பதற்கு, 'நாமகளாகிய தெய்வம்' என்று சேனாவரையர் கூறிய உரையைக் காண்க. "உருளு நேமியும் ஒண்கவ ரெஃகமும், மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்கும்" (108); "முப்பரம் பொருளுக்கும் முதலை மூலத்தை" (பால. 1304). என்றொரு: அகரம் தொகுத்தல்.

(பி - ம்.) 2. தாங்கினார்.
3. முதல்வர்ங்காயினும்.
4. காலமென்றொரு பொருள்; கடக்கவொண்ணுமோ. (73)

1143. கண்முதற் காட்சிய கரையி லாதன
உண்முதற் பொருட்கெலா மூற்ற மாவன
மண்முதற் பூதமு மாயு மென்றபோ
தெண்முத லுயிர்க்கெலா மியம்ப வேண்டுமோ.

கண் முதல் காட்சிய - கண் முதலிய ஐம்பொறிகளுக்கும் புலனாவனவும், கரை இலாதன - அளவில்லாதனவும் ஆன, உள் முதல் பொருட்கு எல்லாம் - (அண்டங்களின்) உள்ளிடத்தேயுள்ள எல்லாப் பொருள்களுக்கும், ஊற்றம் ஆவன - (அவை தோன்றுதற்கு) ஆதாரமாகின்ற, மண் முதல் பூதமும் - மண் முதலிய ஐம்பூதங்களுமே, மாயும் என்றபோது - அழியும் என்று இருக்கும்போது, எண் முதல் உயிர்க்கு எல்லாம் - வரையறுக்கப்பட்ட வாழ்நாளைக் கொண்ட சீவராசிகளுக்கு எல்லாம், இயம்பவேண்டுமோ - (அழிவுபற்றிச்) சொல்லவேண்டுமோ?

'உலகமே பஞ்ச பூதங்களின் சேர்க்கையாலாவது; அத்தகைய பூதங்களுக்கே அழிவு உண்டு என்னும்போது, அவற்றால் தோன்றி, ஆயுளும் வரையறுக்கப்பட்ட சீவராசிகள் அழிவது வியப்போ? எனவே, அந்தச் சீவராசிகளுள் ஒருவனான உன் தந்தையின் அழிவு குறித்துப் பேரறிவாளனான நீ வருந்துதல் தகாது' என்பது கூறியவாறு. உள் முதல்: முதல், ஏழனுருபு. ஊற்றம் - ஊறுமிடம்; ஆதாரம். எண் முதல் உயிர் - (வாழ்நாளின் வரையறுத்த) எண்ணைத் தம்மிடத்தே கொண்ட உயிர்கள்.

(பி - ம்.) 1. காட்சியாற்; கரையினீளத்த.
2. ஊற்றமாயின.
3. பூதங்கண்மாயும்.
4. உயிர்க்கினி; எண் முதலவற்கு நீ, எண் முதலிவற்கு நீ; இரங்க, இயம்பல். (74)

1144. புண்ணிய நறுநெயிற் பொருவில் காலமாம்
திண்ணிய திரியினில் விதியென் றீயினில்
எண்ணிய விளக்கவை யிரண்டு மெஞ்சினுல்
அண்ணலே வீவதற் கையம் யாவதோ.

அண்ணலே - பெருமையிற் சிறந்தவனே, புண்ணியம் - புண்ணியமாகிற, நறு நெய்யில் - நல்ல நெய்யாலும், பொருவு இல் - ஒப்பில்லாத, காலம் ஆம் - காலமாகிற, திண்ணிய திரியினில் - வலிய திரியாலும், விதி என் தீயினில் - ஊழ் எனப்படும் தீயாலும், எண்ணிய - (ஒளியுடையதாகத்) தோற்றுகிற, விளக்கு - (உயிர்வாழ்வாகிய) விளக்கு, அவை இரண்டும் எஞ்சினுல் - (நெய்யும் திரியுமாகிற) அவை இரண்டும் அற்ருல், வீவதற்கு - அணைந்து போவதற்கு, ஐயம் யாவதோ - ஐயம் யாதோ? (ஐயமில்லை).

உயிர் வாழ்க்கை என்பது, சில காலம் ஒளிவிடும் ஒரு விளக்கு; அவ்விளக்கு எரிவதற்கு வேண்டிய நெய்யும், திரியும், தீயுமாக வினை, காலம், ஊழ் என்பன முறையே அமைகின்றன; நெய்யும் திரியும் அற்ருல் விளக்கு அணைவது திண்ணமாவது போல, வினைப் பயனும், காலமும், ஊழும் முடிந்தால் வாழ்க்கையாகிய விளக்கும் அணைவது திண்ணம் என, உருவகத்தாலும் உவமையாலும் விளக்கி, இந்த நியதியின்படியே சக்கரவர்த்தியின் வாழ்நாளும் முடிந்ததாகலின் இதற்கு நீ வருந்துதல் தகாது என்பதனைக் குறிப்பித்தவாறு. புண்ணியம் என்ருரேனும், உபலட்சணத்தால் பாவமும் கொள்ளத்தகும். இங்கே தசரதன் புண்ணியப் பயனுன இன்ப வாழ்வே வாழ்ந்தமையின் அதனைக் குறித்தார். எண்ணிய - எண்பித்த; தோற்றிய. உயிர் வாழ்க்கையை விளக்கென்றதற்கேற்ப, அவ்விளக்கு எரிதற்கேற்ற கலம் உடம்பு என்க. நெய்யும் திரியும் உவமை: சீவக. 2316. ஓகாரம், எதிர்மறை உணர்த்தியது.

(பி - ம்.) 1. நெய்யினிற்: பொருவு காலமாம்.
2. விதியின், விதிதன், விதித்த தெளியும், சிந்தையில்.
3. விளக்கிவை.
4. அவிவதற்கு, வீழ்வதற்கு; ஐயம் யாவதே, யாவையோ. இல்லையே ஆவதோ, அழிவுண்டாகுமோ. (75)

1145. இவ்வுல கத்தினு மிடரு ளேகிடந்
தவ்வுல கத்தரு நரகி லாழ்ந்துதம்
வெவ்வினை துய்ப்பன விரிந்த யோனிகள்
எவ்வுல கிற்செலு மென்ன லாகுமோ.

இ உலகத்தினும் - இம்மையிலும், இடர் உள்ளே கிடந்து - துன்பத்துள்ளே மூழ்கிக் கிடந்தும், அ உலகத்து - மறுமையில், அரு நரகில் ஆழ்ந்து - தாங்குதற்கரிய நரகத் துன்பத்தில் மூழ்கியும், தம்

வெம் வினை துய்ப்பன - தம்முடைய கொடுவினைப் பயனை நுகர்வனவான, விரிந்த யோனிகள் - மிகப் பலவான பிறப்புக்களையுடைய உயிர்கள், எவ் உலகில் செல்லும் என்னல் ஆகுமோ - எவ்வுலகத்திற் செல்லுமென்று சொல்லுதல் கூடுமோ?

தீவினை செய்து, அதன் பயனாக இம்மை மறுமை இரண்டிலும் துன்பத்தையே நுகரும் உயிர்கள் அளவிறந்தன என்ற இது, வருஞ் செய்யுளில் சொல்லப்புகும் செய்திக்குத் தோற்றுவாயாக அமைந்தது. யோனிகள் - யோனி பேதங்களில் தோன்றிய உயிர்கள்; அவை அளவிலவாகலின் 'விரிந்த' என விசேடிக்கப்பட்டன.

(பி - ம்.) 1. இடரிலே, இடரினே.
2. அவ்வுலகத்தினும்.
3. வெவ்வினையறுப்பன.
4. எவ்வளவிற்செலும்; எண்ணல் ஆகுமே. (76)

1146. உண்டுகொ லிதுவல துதவிநீ செய்வ
தெண்டகு குணத்தினாய் தாதை யென்றலால்
புண்டரி கத்தனி முதற்கும் போக்கரும்
விண்டுவி னுலகிடை விளங்கி னானரோ.

எண் தகு குணத்தினாய் - மதிக்கத்தக்க சிறந்த குணங்களை உடையவனே, தாதை என்றலால் - (தசரதன்) உன் தந்தை என்ற காரணத்தால், புண்டரிகம் தனி முதற்கும் - திருவுந்தித் தாமரையில் தோன்றும் ஒப்பற்ற முதல்வனான பிரமனுக்கும், போக்கு அரும் - செல்லுதலரிய, விண்டுவின் உலகிடை விளங்கினான் - திருமாலின் உலகமான பரமபதத்திலே (சேர்ந்து) விளங்குபவனானான்; இது அலது - (மிகச் சிறந்த) இதனையன்றி, நீ செய்வது உதவி உண்டு கொல் - நீ (தந்தைக்குச்) செய்யத்தக்க (வேறு சிறந்த) உதவியும் உண்டோ?

அரோ : அசை.

'உன் தந்தை முன் செய்த நல்வினையால் இம்மையில் இன்ப வாழ்வே பெற்று, உன்னையும் மகனாகப் பெற்றான்; அதன் பயனாக, மீட்சி இல்லாததும் எவற்றிலும் மேலானதுமான பரமபதத்தை அடைந்து சிறந்து விளங்குகின்றான். இதனால், தந்தையை நற்கதி அடையச் செய்தலாகிய நன்மகனது கடமையை நீ நன்கு செய்தவனாகின்றாய்; இதனினும் மேலாக நீ செய்யத்தக்கது யாதுளது?' என்றது, தந்தையைக் குறித்து வருந்துதல் ஒழிக என்றபடி. முன் பாடலுக்கும் இதற்கும் உள்ள பொருளியைபு நோக்கற்பாலது.

எண் தகு குணம் - எண்ணி இன்புறுதற்குரிய கல்யாண குணங்கள்; எட்டாகிய சிறந்த குணங்கள் என்றலுமாம். தசரதன் செய்த நல்வினைப் பயனினும் மேலாக, இராமன் தந்தை என்றது

அவன் பரமபதம் அடையச் செய்தது என்ற சிறப்பு இதனால் பெறப்பட்டது.

(பி - ம்.) 1. ஈதலது.
2. எண்டகும், எண்டரு, எண்டபு; குணத்தினன்; என்றுதான்; ஏவலால்.
3. புண்டரீகத்தனிமுதற்குப், புண்டரீகத்தினன் முகற்கும்; போக்கவும்.
4. மேவினனரோ. (77)

நீர்க்கடனைச் செய்யுமாறு வசிட்டன் கூறுதல்

1147. ஐயநீ யாதொன்று மவலிப் பாயலை
உய்திற மவற்கினி யிதனி னூங்குண்டோ
செய்வன வரன்முறை திருத்திச் சேந்தநின்
கையினு லொழுக்குதி கடனெ லாமென்றான்.

ஐய - ஐயனே, நீ யாது ஒன்றும் அவலிப்பாய் அல்லை - நீ சிறிதும் கவலைப்பட வேண்டா; செய்வன - (தந்தைக்குச்) செய்தற்குரியனவான கடன்களை, வரல் முறை திருத்தி - (நூல்களில் சொல்லிய) ஒழுங்கு முறைப்படி செய்து, சேந்த நின் கையினால் - சிவந்த உன் கையால், கடன் எல்லாம் ஒழுக்குதி - நீர்க்கடனை எல்லாம் செலுத்துவாயாக; அவற்கு-அத்தந்தைக்கு, உய் திறம் - ஈடேறும் வகை, இதனின் ஊங்கு உண்டோ - இதன்மேலாக (வேறு) உண்டோ? (இல்லை), என்றான் - என்று கூறி முடித்தான் (வசிட்டன்).

'இராமா, நீ கவலைப்படுவதை விட்டுத் தந்தைக்குரிய கடன்களை எல்லாம் செய்து முடிப்பதே இப்போது உன் முதற் கடமையாகும்' என்று கூறிமுடித்தான் வசிட்டன்.

செய்வன வரன்முறை திருத்திச் சேந்த நின் கை - (அவ்வப்போது) செய்தற்குரியவற்றை முறையாகச் செய்து பழகி அதனால் சிவந்த உன் கை என்றலுமாம்.

ஒரு பிரதியில் இப்பாடல் இல்லை.

(பி - ம்.) 1. ஐயனீ.
2. இதனின் வேறுண்டோ, இதனின் மேலுண்டோ.
3. சேர்ந்தநின், சேர்த்துநின், செய்கநின்.
4. கைகளால்; உகுக்குதி, ஓம்புதி, ஓங்குதி. (78)

1148. விண்ணினீர் மொக்குளின் விளியும் யாக்கையை
எண்ணினீ யழுங்குத லிழுதைப் பாலதால்
கண்ணினீ ருகுத்தலிற் கண்ட தில்லைபோய்
மண்ணுநீ ருகுத்திநின் மலர்க்கை யாலென்றான்.

விண்ணின் நீர் மொக்குளின் - வானினின்று பெய்யும் மழை நீரில் தோன்றும் குமிழிபோல, விளியும் - (விரைவில்) அழிகிற, யாக்கையை

எண்ணின் - உடம்பின் தன்மையை ஆராயுமிடத்து, நீ அழுங்குதல் இழுதை பாலது - நீ வருந்துவது அறியாமையின்பாற் பட்டதாகும்; கண்ணின் நீர் உகுத்தலில் - (நீ அழுது) கண்ணீர் சிந்துவதால், கண்டது இல்லை - கண்ட பயன் ஒன்றும் இல்லை; (ஆதலால்), போய் - நீ எழுந்து சென்று, நின் மலர் கையால் - உன்னுடைய தாமரை மலர் போன்ற கைகளால், மண்ணும் நீர் உகுத்தி - தருப்பண நீரைச் செலுத்துவாயாக, என்றான் - என்று (மீண்டும்) கூறினான்.

ஆல் : அசை.

இராமபிரான் கலக்கம் நீங்கி, மேலே செய்யவேண்டியவற்றை விரைந்து செய்தற்பொருட்டு மீண்டும் வற்புறுத்திக் கூறினான் முனிவன். 'நின் தந்தையின் நல்லுயிர் மிகவும் மேலான நிலையை அடைந்துவிட்டது. அதைக் குறித்து நீ வருந்தவேண்டியதில்லை' என்று முன்பு கூறியவன், 'உடம்பின் தன்மையும் நீ அறியாததன்று; எனவே, அதற்காக வருந்துதலும் அழகன்று' என்பான், 'யாக்கையை எண்ணின்...இழுதைப் பாலது' என்றான்.

மண்ணும் நீர் - தூய்மைப்படுத்தும் நீர்; தருப்பண நீர். யாக்கைக்கு நீர் மொக்குள் உவமை: "மீதெழு மொக்கு என்ன யாக்கையை" (யுத்த. 3059); "மழை மொக்கு என்ன யாக்கையை" (யுத்த : 3059); "மழை மொக்குளில்...தோன்றிக் கெடுமிதோர்யாக்கை" (நாலடி. 27); "மாரி மொக்குளின் மாய்ந்து" (சீவக. 409); அழுதலால் பயனின்மை: "இருந்தழு தியாவ ருய்ந்தார்" (சீவக. 509); "ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலும், மாண்டார் வருவரோ" (நல்வழி. 10).

(பி - ம்.) 1. விரியும் ஆக்கையை, வாழ்க்கையை.
2. எண்ணிநீ அழுங்குதல்; இகழ்கைப்பாலதால்.
3. இல்லையால்.
4. உகுத்திநீ, உகுத்தியுன், உகுக்கநின்; உகுத்திதாமரைக்கையால்.
(79)

இராமன் கடன்களைச் செய்ய ஆற்றை அடைதல்

1149. என்றபி னேந்தலை யேந்தி வேந்தரும்
பொன்றிணிந் தனசடைப் புனித னோடும்போய்ச்
சென்றனர் செறிதிரைப் புனலிற் செய்கென
நின்றன னிராமனு நெறியை நோக்கினான்.

என்ற பின் - என்று வசிட்ட முனிவன் கூறியபின், வேந்தரும் - (சூழ்ந்து நின்ற) அரசர்களும், ஏந்தலை ஏந்தி - இராமபிரானைத் தாங்கிப் பற்றிக்கொள்ள, பொன் திணிந்த அன்ன சடை புனிதனோடும் - பொன்னைத் திணித்து வைத்தாற்போன்ற சடையை உடைய தூயவனான முனிவனுடன், போய் - (அனைவரும் அங்கிருந்து) போய்,

செறி திரை புனலில் சென்றனர் - செறிந்த அலைகளையுடைய நீர்த் துறையை அடைந்தனர்; (அதன் மேல்) செய்க என - (கடன்களைச்) செய்யத் தொடங்குக என்று (எல்லோரும்) கூற, நின்றனன் இராமனும் - (அவர்கள் வசப்பட்டு) நின்ற இராமாபிரானும், நெறியை நோக்கினன் - (செய்தற்குரிய) முறையைக் கருதி முற்பட்டான்.

நீராடிக் கடன்கள் கழித்தற்குரிய நீர்த்துறைக்கு இராமபிரானை எல்லாரும் கூடித் தாங்கி அழைத்துச் சென்று கடமையைத் தொடங்குமாறு கூற, இராமபிரானும் தெளிவடைந்து, அதனைச் செய்ய முற்பட்டான். இது நிகழ்ந்தவிடம் கங்கைத்துறை என்பர்.

ஏந்தல் : ஆண்பாற் சிறப்புப் பெயர். ஏந்தி : எச்சத்திரிபு. நின்றனன் : முற்றெச்சம்.

(பி - ம்.) 1. ஏந்தலையெய்தி வேந்தரும், ஏந்தலு மெழுந்து நான்மறைப், நான்மலர்ப்.
2. பொன்றணிந்தன; புனிதரோடும்.
3. சென்றனன்; சென்றுரை; திரைசெறி; புனலிற் செல்கென, புனலுட் செய்கென. (80)

கடன்களைச் செய்தல்

1150. புக்கனன் புனலிடை முழுகிப் போந்தனன்
தக்கநன் மறையவன் சடங்கு காட்டத்தான்
முக்கைநீர் விதியது முறையி னீந்தனன்
ஒக்கநின் றுயிர்தொறு முணர்வு நல்குவான்.

உயிர்தொறும் - ஒவ்வோருயிரிடத்தும், ஒக்க நின்று - ஒரு தன்மை யாக அமைந்து, உணர்வு நல்குவான் - (அவற்றிற்கு) அறிவைத் தந்து நடத்தும் (திருமாலின் அமிசமான) இராமபிரான், புனலிடை புக்கனன் - நீரில் இறங்கி, முழுகி போந்தனன் - (முறைப்படி) நீராடி வந்து, தக்க நல் மறையவன் - தகுதி வாய்ந்த நல்ல வேதங்களில் வல்ல வசிட்ட முனிவன், சடங்கு காட்ட - கிரியைகளைச் செய்விக்க (அதன்படி), தான் —, மு கை நீர் - (ஒவ்வொரு முறையும் மும்மூன்றுகச் செய்யப்படும்) தருப்பண நீரை, விதி அது முறையின் - நூல்களில் விதித்த அம்முறைப்படி, ஈந்தனன் - (மந்திரத்தோடு) கொடுத்தான்.

இறுதி அடியால் இராமபிரானது அவதாரப் பெருமை கூறப் பெற்றது. அத்தகையவன், தான் கொண்ட மானிடக் கோலத்துக்கு இயையத் தந்தைக்குச் செய்யவேண்டிய கிரியைகளை முனிவன் மொழிப்படி செய்தான். புக்கனன், போந்தனன் : முற்றெச்சம்.

(பி - ம்.) 1. புனலினில்; மூழ்கிப், நோக்கிப்.
2. நான்மறையவன்.
3. முக்கையினீர்விதி, முக்கைகன்னீர்விதி, முக்கைநீர் மறைவிதி.
4. உணர்வை, உணவு, உணவை; நல்கினன், நண்ணிவான், நண்ணினன். (81)

### இராமபிரான் பிராட்டி இருந்த சாலைக்குச் செல்லுதல்

1151, ஆனவன் செய்கடன் பிறவு மாற்றிப்பின்
மானமந் திரத்தவர் மன்னர் மாதவர்
ஏனையர் பிறர்களுஞ் சுற்ற வேகினன்
சானகி யிருந்தவச் சாலை யெய்தினான்.

ஆனவன் - நீர்க்கடன் இறுத்தவனான அவ்விராமபிரான், செய் கடன் பிறவும் ஆற்றி - செய்தற்குரிய கிரியைகள் பிறவற்றையும் செய்து, பின் - அதன்பின், மானம் மந்திரத்தவர் - பெருமையுடைய மந்திரச் சுற்றத்தவரும், மன்னர் - அரசர்களும், மா தவர் - சிறந்த முனிவர்களும், ஏனையர் பிறர்களும் - மற்றவர் எல்லாரும், சுற்ற ஏகினன் - தன்னைச் சூழ்ந்துவரச் சென்று, சானகி இருந்த - சானகிப் பிராட்டி தங்கியிருந்த, அ சாலை எய்தினான் - அந்தப் பன்ன சாலையை அடைந்தான்.

நீர்க் கரையில் செய்தற்குரிய சடங்குகளை எல்லாம் செய்து முடித்தபின் இராமபிரான், பரதனுடன் வந்திருந்த பரிவாரம் முழுதும் தன்னைச் சூழ்ந்துவரச் சென்று தனது பன்னசாலை சேர்ந்தான்.

மான மந்திரத்தவர்: "மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்" (7). கடனாற்றச் சென்ற இராமபிரானுடன் பிராட்டியும் சென்றதாக வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. செய்கடன் யாவுமாற்றினான், பிறவு மாற்றினன், பிறரு மாற்றினான், பிறவு மாற்றிய, முறையினாற்றிப்பின், ஆனவன் பிறவுளயாவு மாற்றிப்பின்.
2. மானமந்திரத்தலை மன்னர், மந்திரித் தலைவர்; மன்னவர்.
4. இருந்த நற்சாலை. (82)

### பரதன் வருந்துதல்

1152. எய்திய வேலையிற் றமிய ளெய்திய
தையலை நோக்கியச் சாலை நோக்கினான்
கைகளிற் கண்மலர் புடைத்துக் கான்மிசை
ஐயனப் பரதன்வீழ்ந் தரற்றி னானரோ.

எய்திய வேலையில் - (பன்னசாலையை எல்லாரும்) அடைந்த போது, ஐயன் அ பரதன் - (குணங்களில்) சிறந்தவனான அப்பரதன், தமியள் எய்திய தையலை நோக்கி - (பாங்கியர் முதலிய ஒருவரும் துணையின்றித்) தனியே வந்த சீதாபிராட்டியைப் பார்த்தும், அ சாலை நோக்கினான் - (எளியதான) அப்பன்னசாலையைப் பார்த்தும், கண் மலர் கைகளில் புடைத்து - தாமரை மலர் போன்ற (தன்) கண்களைக் கைகளால் பொத்திக்கொண்டு, கால்மிசை வீழ்ந்து - (பிராட்டியின்) கால்களில் விழுந்து, அரற்றினான் - புலம்பலானான். அரோ: அசை.

பல பெருஞ் சிறப்புக்களுடன் அரண்மனையில் வாழவேண்டிய வர்கள் இங்கே எளிய குடிலில் தங்க நேர்ந்ததையும், பல பரிவாரங் களுடன் இருத்தற்குரிய பிராட்டி தனியளாய் வந்திருத்தலையும் கண்ட பரதனுக்கு, சிறிது அடங்கியிருந்த துயரம் மீண்டும் தலைதூக்கி எழவே, துயராற்றுமல் பிராட்டியின் பாதங்களில் விழுந்து புலம்ப லானுன். இக்காட்சியைக் காண நேர்ந்த கண்களை மோதிக் கொண்டான்.

(பி - ம்.) 1. எய்திய வெல்லையில், எய்தியவேல்வையில்; தமியனேக்திய.
2. தையலை நோக்கினன். (83)

1153. வெந்துயர் தொடர்ந்தெழ விம்மி விம்மிநீர்
உந்திய நிரந்தர மூற்று மாற்றில
சிந்திய குருதியச் செம்மல் சேந்தகண்
இந்தியங் களிலெறி கடலுண் டென்னவே.

வெம் துயர் தொடர்ந்து எழ - கொடிய துயரம் தொடர்ந்து மேலிடுதலால், அ செம்மல் - அந்தப் பரதனுடைய, சேந்த கண் - சிவந்த கண்கள், விம்மி விம்மி - அழுதழுது, இந்தியங்களில் - (கண் களாகிற) பொறிகளிலும், எறி கடல் உண்டு என்ன - அலைமோதும் கடல் உள்ளது போலும் என்னும்படி, நீர் ஊற்று மாற்றில - நீர் சுரத்தலை மாற்றுதனவாகி, நிரந்தரம் உந்திய - இடைவிடாமல் (நீரை) வெளிப்படுத்தின; குருதி சிந்திய - (நீரோடு கலந்து) இரத்தத்தையும் சிந்தின.

ஏ ! ஈற்றசை.

கடல் என்பது தரையில் இருத்தலோடு, புதிதாக இவன் கண் களிலும் அது வந்துள்ளது என்னும்படி இருந்தது, அவன் கண்ணீர் பெருக்கிய வகை என உயர்வுநவிற்சி யாக்குகிருர். இதனல் பரதனது துயர மிகுதி புலப்படுத்தியவாறும்.

எழ - எழுதலால்; செயவென் எச்சம் காரணப் பொருளில் வந்தது. மாற்றில - முற்றெச்சம். செம்மல் : ஆண்பாற் சிறப்புப் பெயர்.

(பி - ம்.) 1. தொடர்தர; விம்மல் விம்மநீர்.
2. உந்தின; ஊற்று மாற்றல, நிரந்தரமுற்று மாறிலா; நிரந்தரமுற்று மாற்றில, நிரந்தனவூற்றுவற்றில.
3. சிந்தின; குரிசிலச், குருதியைச்.
4. இந்தியங்களினெறி; கடலுமென்னவே. (84)

சீதைக்கு அறிவித்தல்

1154. அந்நெடுந் துயருறு மரிய வீரனைத்
தன்னெடுத் தடக்கையா லிராமன் ருங்கினுன்
நன்னெடுங் கூந்தலை நோக்கி நாயகன்
என்னெடும் பிரிவினற் றுஞ்சி ஞனென்ருன்.

அ நெடு துயர் உறும் - அத்தகைய பெருந்துயருற்ற, அரிய வீரனை - (பகைவரால் வெல்லுதற்கு) அரிய வீரனுன பரதனை, இராமன் - இராமபிராமன், தன் நெடு தட கையால் தாங்கினுன் - தன்னுடைய நீண்ட பெரிய கைகளால் (எடுத்துத்) தாங்கிக் கொண்டு, நல் நெடு கூந்தலை நோக்கி - நல்ல நீண்ட கூந்தலையுடைய பிராட்டியைப் பார்த்து, நாயகன் - (நம்) தலைவனுன சக்கரவர்த்தி, என் நெடும் பிரிவினுல் - எனது நீண்ட பிரிவுத் துயர் காரணமாக, துஞ்சினுன் - இறந்துவிட்டான், என்ருன் - என்று கூறினுன்.

நன்னெடுங் கூந்தல்! பன்மொழித் தொடரால் வந்த அன்மொழித் தொகை. நெடுந்தடக்கை - தாள்தோய் தடக்கை. பிரிவுக் காலம் பதினுன்கு ஆண்டுகளாகலின், 'நெடும் பிரிவு' என்ருன்.

(பி - ம்.) 2. தடக்கையின், கரத்தினுல்.
4. பிரிவினிலிறந்திட்டான். (85)

சீதையின் துயரம்

1155. துண்ணெனு நெஞ்சின டுளங்கி ஞடுணைக்
கண்ணெனு நெடுங்கடல் கலுழி கான்றிட
மண்ணெனுஞ் செவிலிமேல் வைத்த கையினுள்
பண்ணெனுங் கிளவியாற் பன்னி யேங்கினுள்.

(சக்கரவர்த்தி இறந்தமை கேட்ட பிராட்டி), துண் எனும் நெஞ்சினள் - திடுக்கிட்ட மனமுடையவளாய், துளங்கினுள் - நடுங்கி, துணை கண் எனும் நெடு கடல் - இரண்டு கண்களாகிற பெரிய கடல்கள், கலுழி கான்றிட - நீர்ப் பெருக்கைச் சொரிய, மண் எனும் - பூமியாகிற, செவிலிமேல் வைத்த கையினுள் - செவிலித்தாயின் மேல் ஊன்றிய கைகளை உடையவளாய், பண் எனும் கிளவியால் - இன்னிசை போன்ற (தன்) சொற்களால், பன்னி - பலவும் சொல்லி, ஏங்கினுள் - அழலானுள்.

பெருந்துக்கம் உண்டானபோது, கைகளைத் தரையில் ஊன்றிக் கொண்டு அழுதல் மகளிர் இயல்பு. பிராட்டி அயோனிஜையாய்ப் பூமியில் தோன்றியவளாகலின், 'மண்ணெனுஞ் செவிலி' என்ருர். இங்கும் கண்ணைக் கடல் என்ருர்.

(பி - ம்.) 1. துளங்கி மைத்துணைக், ஏங்கினுடுணைக், நோக்கினுடுணைக்.
2. கண்ணெனுங்கடனெடுங், கண்ணெனு நெடுங்கயல்.
4. கிளவியிற். (86)

1156. கன்னகு திரள்புயக் கணவன் பின்செல
நன்னக ரொத்தது நடந்த கானமும்
மன்னவன் றுஞ்சின னென்ற மாற்றத்தால்
அன்னமுந் துயர்க்கட லடிவைத் தாளரோ.

கல் நகு-(தம் சிறப்பால்) மலையையும் இகழ்கிற, திரள் புயம்-திரண்ட தோள்களையுடைய, கணவன் பின் செல-கணவனுன இராமபிரானைத் தொடர்ந்து செல்லுதலால் (பிராட்டிக்கு), நடந்த கானமும்-(அவள்) நடந்து சென்ற (கொடிய) காடும், நல் நகர் ஒத்தது-நல்ல அயோத்தி நகரம்போலவே இருந்தது; மன்னவன் துஞ்சினன் என்ற மாற்றத்தால்-சக்கரவர்த்தி இறந்தான் என்ற வார்த்தையால், அன்னமும்-(அதுகாறும் துன்பத்தை உணராத) அன்னம் போன்றவளான பிராட்டியும், துயர் கடல் அடிவைத்தாள்-துன்பக்கடலுள் (மூழ்குதற்கு) அடி பெயர்த்து வைத்தவளானுள்.

அரோ: அசை.

"நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு" என்று கேட்டுக் கணவனைப் பிரியாமை பெற்ற பிராட்டி, அதுகாறும் துன்ப உணர்ச்சியே கொண்டிலள்; இப்போது சக்கரவர்த்தி இறந்த செய்தியைக் கேட்டது தான் முதன்முதலாக அவளையும் துயரத்திற்கு உள்ளாக்கியது. இது, மேலே அவள் அடைய இருக்கும் அளவிலாத் துயரின் தொடக்கமாக அமைந்தது என்பார், 'துயர்க்கடல் அடி வைத்தாள்' என்றுர். பிராட்டியை அன்னம் எனப் பலவிடத்தும் கூறுவார் கம்பர். அடிவைத்தல்: "கவ்வையின் பெருங்கடல் முனியுங் கால்வைத்தான்" (454); "ஆரு வெள்ளத் துன்புற வன்றே யடியிட்டாள்" (வி. பா. நான்காம் போர்: 41).

(பி-ம்.) 4. துயர்க்கடற்கு. (87)

முனிவர்தம் பத்தினிகளின் செயல்

1157. ஆயவ டன்னைநேர்ந் தங்கை யேந்தினர்
தாயரின் முனிவர்தந் தருமப் பன்னியர்
தூயநீ ராட்டினுர் துயர நீக்கினுர்
நாயகற் சேர்த்தினுர் நவையி னீங்கினுர்.

ஆயவள் தன்னை-அவ்வாறு துயருற்றவளான சீதா பிராட்டியை, நவையின் நீங்கினுர்-குற்றமற்றவர்களான, முனிவர்தம் தருமம் பன்னியர்-முனிவர்களின் தரும பத்தினிமார், தாயரின்-பெற்ற தாயரைப் போல, நேர்ந்து-அணுகி வந்து, அம் கை ஏந்தினர்-தம் அழகிய கைகளில் தாங்கிப் பிடித்துக்கொண்டு (கங்கைக்கு நடத்திச் சென்று), தூய நீர் ஆட்டினுர்-தூய நீரில் முழுகுவித்து, துயரம்

**நீக்கினர் - (அவள்) துயரத்தை ஆற்றி, நாயகன் சேர்த்தினர் - (மீண்டு) தலைவனிடத்துச் சேர்த்தனர்.**

வாலாமை நீக்கற் பொருட்டுப் பிராட்டியும் நீராடவேண்டியவளாதலால், முனிபத்தினிமார் அவளை நீராட்டித் தேற்றி மீண்டும் பன்னசாலைக்குக் கொண்டு சேர்த்தனர்.

(பி - ம்.) 2. முனிவரர், முனைவர்தம்; பன்னிமார்.
3. துயரந்தீர்த்தனர், துயரினீக்கினர்.
4. சார்த்தினர்; நவையுணீங்கினர்; நீக்கினர். (88)

சுமந்திரன் வருதல்

1158. தேன்றருந் தெரியலச் செம்மனல்வரை
ஈன்றவர் மூவரோ டிருமை நோக்குறும்
சான்றவர் குழாத்தொடுந் தரும நோக்கிய
தோன்றல்பாற் சுமந்திரன் றொழுது தோன்றினன்.

தேன் தரும் தெரியல் - தேன் துளிக்கும் பூமாலையை அணிந்த, அ செம்மல் நால்வரை - பெருமை மிக்க அக்குமரர் நால்வரையும், ஈன்றவர் மூவரோடு - பெற்ற தாய்மாரான (கோசலை முதலிய) மூவரோடும், இருமை நோக்கு உறும் - பிறப்பு வீடு என்னும் இரண்டின் தன்மைகளையும் ஆராயும் தன்மையை உடைய, சான்றவர் குழாத்தொடும்-பெரியோர் கூட்டத்துடனும், சுமந்திரன் —, தருமம் நோக்கிய தோன்றல்பால் - (எப்போதும்) தருமத்தையே கருதும் இராமபிரான் பால், தொழுது - அவனை வணங்கிக்கொண்டே, தோன்றினன் - வந்தான்.

செம்மல் - பெருமைக் குணம். இருமை - பிறப்பு, வீடு என்னும் இரண்டின் தன்மை; "இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்" (குறள். 23); இம்மை மறுமைப் பயன்கள் எனலுமாம்.

இப்பாடல் 'சொல்லுவான்' என்று முடியும் பிரதியில், பின்வரும் அதிகப் பாடல் ஒன்று காணப்படுகிறது :

"ஐய நின்னுடை யன்னை மூவரும்
வைய மன்னரு மற்று மாக்களும்
துய்ய நாடொரீஇத் தோன்றி னரவர்க்
குய்ய நல்லரு ளுதவு வாயென்றான்."

(பி - ம்.) 1. தருதெரியலச்; செம்மை நால்வரை, செல்வர் நால்வரை.
2. ஈன்றவம் மூவரோடு, ஈன்றவர்தம்மொடும்; இனிமை நோக்குறும்;
3. தரும நோக்குறு.
4. தொழுது சொல்லுவான். (89)

இராமபிரான் தாய்மாரை வணங்கி வருந்துதல்

(வேறு)

1159. எந்தை யாண்டையா னியம்பு வீரெனு
வந்த தாயர்தம் வயங்கு சேவடிச்
சிந்தி நின்றனன் சேந்த கண்ணினீர்
முந்தை நான்முகத் தவற்கு முந்தையான்.

முந்தை - (படைப்புக்கு எல்லாம்) முற்பட்ட, நான்முகத்தவற்கும் - நான்கு முகங்களை உடைய பிரமனுக்கும், முந்தையான் - முற்பட்டவனை (திருமாலான) இராமபிரான் (தாய்மாரைக் கண்டவுடன்), எந்தை யாண்டையான் - என் தந்தை எங்குள்ளான்? இயம்புவீர் - சொல்லுங்கள், எனு - என்று கதறிக்கொண்டு, வந்த தாயர்தம் - (தன் அருகே) வந்த தாய்மார்களின், வயங்கு சேவடி - விளங்குகின்ற சிவந்த பாதங்களில், சேந்த கண்ணின் நீர் சிந்தி நின்றனன் - சிவந்த (தன்) கண்களினின்றும் பெருகிய நீரைச் சொரிந்து நின்றான்.

ஈற்றடியால், இராமபிரானது அவதாரப் பெருமை கூறினர். 'சேவடிகளில் கண்ணீர் சிந்தி நின்றனன்' என்றது, அவர்களடிகளில் வீழ்ந்தவாறே கதறினனென்றவாறு.

(பி - ம்.) 1. இயம்புநீரெனு, இயம்புநீரென.
3. சிந்தினன்மிகச், சிந்தினன்றன, சிந்த நின்றனன்; கண்ணநீர்.
4. முந்தைமாவத்தவற்கும். (90)

1160. தாய ருந்தலைப் பெய்து தாந்தழீஇ
ஓய்வி றுன்பினு லுரற லோங்கினர்
ஆய சேனையு மணங்க னர்களும்
தீயில் வீழ்ந்துதீ மெழுகிற் றேம்பினர்.

தாயரும் - தாய்மார்களும், தலை பெய்து - ஒருங்கு கூடி, தாம் தழீஇ - அவரவர் தனித்தனியே இராமனைத் தழுவிக்கொண்டு, ஓய்வு இல் துன்பினால் - தணிதலில்லாத துன்பத்தால், உரறல் ஓங்கினர் - கதறுதல் மிக்கனர்; ஆய சேனையும் - அங்கு வந்த சேனையிலுள்ள ஆடவரும், அணங்கு அன்னர்களும் - திருமகளைப் போன்ற மகளிரும், தீயில் வீழ்ந்து தீ மெழுகில் - நெருப்பில் விழுந்து கருகி உருகும் மெழுகு போல, தேம்பினர் - மனம் உருகி வருந்தினர்.

இராமபிரானது நிலையைக் கண்ட மாத்திரத்தில் அனைவர் உள்ளத்தும் அடங்கி இருந்த வருத்தம் கிளர்ந்தெழுதலால் எல்லோரும் துன்பம் மேலிட்டு அழுதனர்.

உரறல் - முழங்குதல்; கதறுதல். அணங்கனர் என எடுத்துக் கூறினமையின், சேனை என்பது, சேனையிலுள்ள ஆடவரைக் குறித்தது. தீ மெழுகில்; வினைத்தொகை.

(பி - ம்.) 1. தாழ்ந்தெழீஇ, தாமும் வீழ்ந்து, தாரின் வீழ்ந்து, பாரின் வீழ்ந்து.
2. ஒய்வில் துன்பினர், ஒய்வில் அன்பினல், ஏயவன்பினர், ஏயுமன்பினர்; உரறியேங்கினர், உரற்றியேங்கினர், உரற்றியோங்கினர், உதறியேங்கினர், உலறியேங்கினர், அலறியேங்கினர், அரற்றியேங்கினர்.
4. தீயின் வீழ்ந்து; வீழ்ந்துகுமெழுகில், வீழ்ந்த செம்மெழுகில், வீழ்ந்தன மெழுகில், வீழ்ந்திடுமெழுகில். (91)

### தாய்மார் சீதையைத் தழுவிக்கொண்டு வருந்துதல்

1161. பின்னர் வீரரைப் பெற்ற பெற்றியப்
பொன்ன னூர்களுஞ் சனகன் பூவையைத்
துன்னி மார்புறத் தொடர்ந்து புல்லினர்
இன்னல் வேலைபுக் கிழிந்த ழுங்கினர்.

பின்னர் - பின்பு, வீரரை பெற்ற பெற்றி அ பொன் அன்னார்களும் - இராமபிரான் முதலிய நால்வரையும் பெற்ற பெருமையை உடைய திருமகள் போல்வாரான அத் தாய்மார்கள், சனகன் பூவையை துன்னி - சனகன் மகளான சீதாபிராட்டியை அடைந்து, தொடர்ந்து மார்பு உற புல்லினர் - ஒவ்வொருவராய் (வரிசையாக) மார்போடு பொருந்த (அவளை) அணைத்துக்கொண்டு, இன்னல் வேலை புக்கு - துன்பக்கடலுள் இறங்கி, இழிந்து - ஆழ்ந்து, அழுங்கினர் - துயருற்றனர்.

வீரர் என்றது இராமபிரான் முதலிய நால்வரையும். புல்லினர்: முற்றெச்சம்.

(பி - ம்.) 1. பின்னவ், பின்னும், பின்னை; பெற்றியார்.
3. தொடர்ந்து சுற்றினர், தழுவிச் சுற்றினர்.
4. இழிந்தழுந்துவார், இழிந்தழுங்குவார், இழிந்திரங்குவார், இழிந்திரங்கினர், இடைந்தழுங்குவார், இடைந்தழுந்துவார். (92)

### சேனைவீரர் முதலியவர்கள் இராமனை அடைதல்

1162. சேனை வீரருந் திருநன் மாநகர்
மான மாந்தரு மற்று ளோர்களும்
ஏனை வேந்தரும் பிறரும் யாவரும்
கோனை யெய்தினர் குறையுஞ் சிந்தையார்.

(பின்னர்), சேனை வீரரும் - சேனையில் உள்ள நால்வகைப் படைகட்கும் உரிய வீரர்களும், திரு நல் மாநகர் - செல்வமிக்க நல்ல பெரிய அயோத்தி நகரிலுள்ள, மானம் மாந்தரும் - பெரிய மனிதர்களும், மற்று உள்ளோர்களும் - (நகரிலிருந்து வந்த) மற்றும் உள்ளவர்களும், ஏனை - இவர்கள் அல்லாத, வேந்தரும் - அரசர்களும், யாவரும் - (எஞ்சிய) எல்லோருமாக, குறையும் சிந்தையார் - வருந்தும் மனமுடையவர்களாய், கோனை எய்தினர் - இராமபிரானை அணுகினர்.

பலரையும் எடுத்துச் சொல்லியதன் மேலும் யாவரும் என்றது, மகளிரையும் உளப்படுத்தற்கு என்னலாம். இவர்க ளெல்லாம் இராமபிரான்பால் உள்ள அன்பு மிகுதியால், சேனையைத் தொடர்ந்து வந்தவர்கள்.

(பி-ம்.) 1. திருவின்மாநகர், திருவன்னூர்களும்.
2. மானமைந்தரும், மானமாதரும்.
4. குழையும். (93)

சூரியன் மறைவு

1163. படஞ்செய் நாகணைப் பள்ளி நீங்கினுன்
இடஞ்செய் தொல்குலத் திறைவ ஞுதலால்
தடஞ்செய் தேரினுன் ருனு நீரினுல்
கடஞ்செய் வானெனக் கடலில் மூழ்கினுன்.

தடம் செய் தேரினுன் - பெரிதான ஒற்றையாழித் தேரையுடைய சூரியன், படம் செய் - படம் விரிக்கின்ற, நாகம் அணை பள்ளி நீங்கினுன் - பாம்பணையில் பள்ளி கொள்ளுதலை விட்டு வந்த (திருமாலான) இராமபிரான், இடம் செய் - (தான் பிறத்தற்கு) இடமாகக் கொண்ட, தொல் குலத்து இறைவன் ஆதலால் - பழமை யான குலத்து முதல்வனுதலால், தானும் நீரினுல் கடம் செய்வான் என - தானும் நீரினுல் (தசரதனுக்குச் செய்தற்குரிய) கடனை ஆற்று வான்போல, கடலில் மூழ்கினுன் - மேல் கடலில் மூழ்கி மறைந்தான்.

அன்றைப் பொழுது சாய்ந்ததை, சூரியனும் தசரதனுக்கு நீர்க் கடன் செலுத்துவான் போலக் கடலில் மூழ்கினுன் என்று, இடத்தொடு பொருந்தத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்ருர். நாகணை - பாம்புப் படுக்கை; தொகுத்தல். நாகணைப் பள்ளி நீங்கினுன்: "அராவணை துறந்துபோந் தயோத்தி நண்ணிய, இராகவன்" (பால. 1283).

இதன்பின் ஒரு பிரதியில், கீழ்வரும் பாடல் காணப் படுகிறது:

"கங்குல் வந்திடக் கண்டி யாவரும்
அங்க ணேதுயி லமைய வாரிருட்
பொங்கு வெம்பகை போக மற்றைநாட்
செங்க திர்குண திசையிற் ருேன்றினுன்."

(பி-ம்.) 2. தங்குலத்து, தன்குலத்து. (94)

### மறுநாள் இராமன் கூறத் தொடங்குதல்

1164. அன்று தீர்ந்தபின் னரச வேலையும்
துன்று செஞ்சடைத் தவருஞ் சுற்றமும்
தன்று ணைத்திருத் தம்பி மாரொடும்
சென்று சூழவாண் டிருந்த செம்மருன்.

அன்று தீர்ந்தபின் - அற்றைநாள் கழிந்தபின் (மறுநாட் காலையில்), அரசர் வேலையும் - கடல் போன்ற அரசர் கூட்டமும், துன்று செம் சடை தவரும் - அடர்ந்த செம்மையான சடையை உடைய தவசியர் பலரும், சுற்றமும் - (பலவகையான) சுற்றத்தாரும், தன் துணை திரு தம்பிமாரொடும் - தனக்குத் துணையான சிறந்த தம்பிமார் மூவரோடும், சென்று சூழ - வந்து (தன்னைச்) சூழ்ந்திருக்க, ஆண்டு இருந்த - அவர்களிடையே இருந்த, செம்மல் - இராமபிரான்.

தான் : அசை.

செம்மல், பரிந்து கூறினன் என அடுத்த கவியில் வருவதனோடு முடியும். பரதன் வந்து சேர்ந்த நாள் முழுதும் துக்ககரமாகக் கழிய, மறுநாட் காலை அனைவரும் கூடியிருந்த பேரவையில், இராமபிரான் பரதன் வந்த காரியத்தைக் கேட்கலானான். அரசர்களின் மிகுதிபற்றி 'அரச வேலை' என்றார்.

தன்றுணை - தன்னை யொத்த என்றலுமாம்.

(பி - ம்.) 1. தீர்ந்த பின்னரசர்.
2. தவருஞ் சுற்றுறத்.
3. தன்றிருத்துணைத்; தம்பிமார்களும். (95)

### இராமபிரான் பரதனை வினவுதல்

1165. வரதன் றுஞ்சினன் வைய மாணையால்
சரத நின்னதே மகுடந் தாங்கலாய்
விரத வேடநீ யென்கொன் மேவினய்
பரத கூறெனப் பரிந்து கூறினன்.

(இராமபிரான் பரதனை நோக்கி), பரத - பரதா, வரதன் துஞ்சினன் - வள்ளலான சக்கரவர்த்தி இறந்துவிட்டான்; ஆணையால் - அவன் கட்டளைப்படி, வையம் - நாடு (காத்தல்), சரதம் நின்னதே - உண்மையாக உன்னுடையதே; (அங்ஙனமாகவும்) நீ—, மகுடம் தாங்கலாய் - முடி சூடாமல், விரதம் வேடம் மேவினய் - தவவேடம் கொண்டுள்ளாய்; என்கொல் - (காரணம்) என்ன? கூறு என - சொல் என்று, பரிந்து கூறினன் - (அவன்பால்) அன்பு கொண்டு சொன்னன்.

முன் பாட்டின் இறுதியில் வந்த 'செம்மல்' என்றது எழுவாய். செம்மல், பரிந்து கூறினன் என முடிக்க.

(பி - ம்.) 3. என்கொல் வேண்டுவான், வேண்டுவாய், வேண்டினய்.
4. பணிந்து கூறுவான். (96)

பரதன் கூற்று

1166. என்ற லும்பதைத் தெழுந்து கைதொழா
நின்று தோன்றலை நெடிது நோக்கிநீ
அன்றி யாவரே யறத்து ளோரதில்
பின்று வாய்கொலா மென்னப் பேசுவான்.

என்றலும் - என்று இராமபிரான் கேட்டவுடன், பதைத்து எழுந்து - (பரதன்) மனம் துடித்து எழுந்து, தோன்றலை கை தொழா நின்று - இராமபிரானைக் கைகூப்பி வணங்கி நின்று, நெடிது நோக்கி - (அவன் முகத்தை) நெடும்பொழுது பார்த்து, நீ அன்றி அறத்து உள்ளோர் யாவர் - உன்னைத் தவிர (எப்போதும்) தரும நெறியில் ஊன்றி உள்ளவர் யாவருளர்? அதில் பின்றுவாய்கொல் - (நீயே) அதில் பின்வாங்குவாயோ? என்ன - என்று சொல்லி, பேசுவான் - மேலும் சொல்லலானன்.

ஏ, ஆம் : அசை.

இராமபிராமன் அரசேற்று ஆளாதது தவறு என்று கருதி, அதனை நீக்க அவனை மீண்டும் நகருக்கு அழைத்துச் செல்ல வந்த பரதனை, எடுத்த எடுப்பிலேயே இராமபிரான் கேட்ட கேள்வி நடுங்கச் செய்ததனல், அவன் நடுங்கி ஒன்றும் தோன்றுமல் நெடுநேரம் இராமபிரானது முகத்தை உற்று நோக்கி நின்று, பின்னர்ச் சற்றுத் தெளிந்து பேசலானன். அவன் அவ்வாறு பேசினமை மேலே ஆறு கவிகளில் வரும்.

(பி - ம்.) 2. நின்ற தோன்றலை.
3. அறத்துளோரதற், அதைப்;
4. பின்றுவாய்கொலோ, பின்றுவார்கொலாம்; என்னப்பேசினன், என்று பேசுவான். (97)

1167. மனக்கொன் றுதன வரத்தி னின்னையும்
நினக்கொன் றுநிலை நிறுத்தி நேமியான்
தனைக்கொன் றுடருந் தனைய னுதலால்
எனக்கொன் றுதவ மடுப்ப தெண்ணினல்.

மனக்கு ஒன்றுதன வரத்தின் - (பெரியோர்) மனத்துக்குப் பொருந்தாத வரங்களால், நின்னையும் நினக்கு ஒன்று(த) நிலை நிறுத்தி - உன்னையும் உனக்குப் பொருந்தாத தவநிலையில் நிறுத்தி, நேமியான்

தன்னை கொன்ருள் - சக்கரவர்த்தியையும் உயிரிழக்கச் செய்தவளான கைகேயி, தரும் - பெற்ற, தனயன் ஆதலால் - புதல்வன் (நான்) ஆதலால், எண்ணினுல் - ஆலோசிக்கும் இடத்து, எனக்கு அடுப்பது தவம் ஒன்ரு - எனக்குப் பொருந்துவது தவம் என்ற ஒன்ருகுமா?

'நல்ல புண்ணியசாலிகளுக்குப் பொருந்துவது தவம்; நான் கொடிய பாவியின் வயிற்றிற் பிறந்ததனுல் பாவியானவன்; எனக்குத் தவம் மேற்கொள்ளல் பொருந்தாது' எனத் தன்னைக் குறைத்துக் கூறுகின்ருன் பரதன். 'நான் கெட்ட கேட்டுக்கு, எனக்குத் தவம் ஒன்ரு!' என்ற நாட்டு வழக்கின் தொனியை இறுதியடியிற் காணலாம். எனக் கொன்ரு என்பதனை ஒன்ருது என்பதன் இறுதி தொக்கதென்றேனும், தவவொழுக்கங்கள் எனக்கு ஒன்ரு எனப் பன்மைப் பொருளதென் றேனும் கொண்டு உரைத்தலுமாம். அன்றி, 'தவம்' என்பதை வருவித்துக்கொண்டு, தவம் எனக்கு ஒன்ருது; அதனை நான் அடுப்பது எண்ணினுல், அவம் என்று உரைத்தலும் ஒன்று. மனக்கு என்பதில் அத்துச் சாரியை தொக்கது.

(பி - ம்.) 1. மனக்கொன்ருதவள், மனைக்கொன்ருதவள்; வனத்தினின்னையும், நினைத்து நின்னையும், நினைந்து மண்ணையும், விளைத்து நின்னையும், இழைத்துவல்லையில், இழைத்து வாய்மையால்.
2. நினைக்கொன்ருதன, நினக்கொன்ருவகை, நினைக்கொன்ருநிலம், கொன்ரு நிலை; நிருவி, நிறுத்தும்.
3. தனக்கொன்ருடரும், தனைக்கொன்ருளரும்; புதல்வனுதலால்.
4. எனக்கன்றே, எனக்கன்ரே; அடுப்பதெண்ணினுய், பெறுவதெண்ணினுல். (98)

1168. நோவ தாகவிவ் வுலகை நோய்செய்த
பாவ காரியிற் பிறந்த பாவியேன்
சாவ தோர்கிலேன் றவஞ்செய் வேனலேன்
யாவ தாகவிப் பழிநின் றேறுவேன்.

இ உலகை - இந்த உலக முழுவதையும், நோவது ஆக - வருந்துவதாகும்படி, நோய் செய்த - பெருந்துன்பத்தை உண்டாக்கிய, பாவகாரியில் பிறந்த - பெரும் பாவியிடத்துப் பிறந்த, பாவியேன் - பாவியாகிய நான், தவம் செய்வேன் அல்லேன் - தவஞ் செய்தற்குரியவனல்லேன்; சாவது ஓர்கிலேன் - இறக்கவும் துணிந்தேனில்லை; இ பழி நின்று யாவது ஆக ஏறுவேன் - (எனக்கு உண்டாகியுள்ள) இப்பழியினின்றும் எவ்வாறு மீள்வேன்?

'தவம் எனக்குப் பொருந்தாதது; உயிர் விடுவதே பொருந்துவதாகும்; அதனை நான் செய்யாதிருக்கின்றேன்; இப்பழியினின்றும் விடுபடுவது எவ்வாறு என்பது எனக்குப் புலனுகவில்லை' என்கின்ருன். பழி என்றது, தன் தாயின் செயலுக்குத் தானும் உடந்தையானவன் என உலகோர் எண்ணத்தகும் என்பதனை;

அப்பழி எவ்வகையிலும் தன்னை விடாதென்கின்றான். பாவகாரி - பாவம் செய்தவள்; பாவகாரியில் - பாவம் செய்தோர் வரிசையில் என்பாரும் உளர். பாவகாரி: சுந்தர. 1099; திருநாவுக். திருப்பூவனூர்த் திருக் குறுந்தொகை: 9; பெரியாழ்வார் திருமொழி. "நாவகாரியம்"; தக்க. 249, உரை.

(பி - ம்.) 1. நோவதாக்கி; உலகம்.
2. பாவியான்.
3. சாவநேர்கிலேன்; செய்தேனலேன்.
4. பழிசின்றேறுகேன்; பழிநன்றேறுவேன். (99)

1169. நிறையி னீங்கிய மகளிர் நீர்மையும்
பொறையி னீங்கிய தவமும் பொங்கருள்
துறையி னீங்கிய வறமுந் தொல்லையோர்
முறையி னீங்கிய வரசு முந்துமோ.

நிறையின் நீங்கிய - கற்பொழுக்கத்தினின்றும் நீங்கிய, மகளிர் நீர்மையும் - பெண்களின் குணமும், பொறையின் நீங்கிய தவமும் - பொறுமையினின்றும் விலகிய தவவொழுக்கமும், பொங்கு அருள் துறையின் நீங்கிய அறமும் - (மேன்மேலும்) எழுகின்ற அருள் நெறியின் நீங்கிய தருமமும், தொல்லையோர் முறையின் நீங்கிய அரசும் - பழமையாக வந்த மரபினர் முறையினின்றும் மாறுபட்ட அரசாட்சியும், முந்துமோ - முன்னேறுமோ? (முன்னேறா).

'நீ முடி சூடாமல் தவவேடங் கொண்டு இங்கே ஏன் வந்தாய்?' என்ற இராமபிரான் வினவுக்கு விடையாக, தான் அரசு மேற் கொள்வது மரபின் முறைக்குப் பொருந்தாதது என்கின்றான்; அதற்கு எடுத்துக்காட்டாக மூன்று செய்திகள் கூறினான். தவத்துக்குப் பொறுமை இன்றியமையாதது; "உற்றநோய் நோன்றல்...அற்றே தவத்திற் குரு" (குறள். 261); அறத்திற்கு அருள் அவசியம்: "தங்குபே ரருளுந் தருமமுந் துணையா" (பால. 99).

(பி - ம்.) 4. அரசின் முந்துமோ, அரசுமுந்துமே. (100)

1170. பிறந்து நீயுடைப் பிரிவி றொல்பதம்
துறந்து மாதவந் தொடங்கு வாயென்றால்
மறந்து நீதியிற் றிறம்பி வாளிற்கொன்
றறந்தின் றானென யானஃ தாள்வெனோ.

பிறந்து - மூத்த மகனாகப் பிறந்து, நீ உடை(ய) - நீ (உனக்கே உரிமையாக) உடைய, பிரிவு இல் - உன்னை விட்டுப் பிரிக்கமுடியாத, தொல் பதம் துறந்து - பழமையாக வந்த அரச பதவியைக் கைவிட்டு, மா தவம் தொடங்குவாய் என்றால் - (நீ) பெரிய தவத்தைச் செய்யத் தொடங்குவாயானால், மறந்தும் - நினைவு தப்பியும், நீதியில் திறம்பி -

நியாயத்தில் தவறி, அறம் - தருமத்தை, வாளில் கொன்று தின்ருன் என - வாளால் வெட்டித் தின்றுவிட்டான் என்று (உலகோர்) கூறும்படி, யான் அஃது ஆள்வெனே - நான் அந்த அரசை ஆள்வேனே?

'இராமபிரான் அரசாட்சியைக் கைவிட்டதும் தவறு; நான் அதை ஏற்பதும் தவறு' என்பதே பரதன் துணிபாகலின், 'பிறந்து...துறந்து' என்கின்ருன். அவன் இராமபிரானை அணுகி வந்தபோதே, "துறந்தனை முறைமையும்" (1122) என்றதும் நோக்கற்பாலது. அரசாட்சி இராம பிரானது பிறப்புரிமை; "பெற்றுடைய மண்ணவளுக் கீந்து" (404); "முழுவ தேபிறந் துலகுடைய மொய்ம்பினேன்" (484).

(பி - ம்.) 1. பிறந்து நின்னுடைப்; தொல்லறம்.
2. இறந்து; தொடங்குவாயெனின்.
3. நீதியைத்; திறம்புவாளிற்கொன்று, திறம்பவாளிற்கொன்று.
4. தின்ருலென, தின்ருளென; அரசதாள்வெனே, அரசையாள் வெனே, யானஃதாள்வனே, யானஃதாள்வனே, யானதாள்வதோ, யானரசாள்வெனே. (101)

1171. தொகையி லன்பினு லிறைவன் றுஞ்சநீ
புகையும் வெஞ்சுரம் புகுதப் புந்தியால்
வகையில் வஞ்சனு யரசு வவ்வயான்
பகைவ னேகொலா மிறவு பார்க்கின்றேன்.

நீ புகையும் வெம் சுரம் புகுத - நீ தீப் புகையும் கொடிய காட்டிற்கு வர, இறைவன் - சக்கரவர்த்தி, தொகை இல் அன்பினுல் துஞ்ச - உன் பால் வைத்த அளவற்ற அன்பால் இறக்கவும், யான் - நான், புந்தியால் - மனத்தில், வகை இல் வஞ்சன் ஆய் - வகுத்தலரிய வஞ்சனை உடையவனுய், அரசு வவ்வ - அரசைக் கைக்கொள்ள, இறவு பார்க்கின்றேன் பகைவனே கொல் - சோர்விடம் பார்க்கும் பகைவனேயோ?

'நீ முறையின்றி அரசைக் கைவிட்டுக் காட்டுக்கு வரவும், அதனுல் உன் பிரிவாற்ருமல் தந்தை இறக்கவும், அந்தத் தருணம் பார்த்து நான் அரசைக் கைக்கொண்டு ஆள்வதென்ருல், சோர்விடம் பார்த்து நாட்டைக் கொள்ளும் பகைவனுக்கும் எனக்கும் வேறுபாடில்லை யன்ருே?' என்கின்ருன். இறவு - அற்றம்; நீக்கம் என்றலுமாம்; "இளையவ னேகலு மிறவு பார்க்கின்ற, வளையெயிற் றிராவணன்" (ஆரணிய. 826).

(பி - ம்.) 1. அன்பினன்.
4. இறவு பார்த்துயான், பார்த்தியான், இறவும் பார்க்கின்றேன், பிறவும் பார்க்கின்றேன், அதுவும் பார்க்கின்றேன். (102)

1172. உந்தை தீமையு முலகு ருதநோய்
தந்த தீவினைத் தாய்செய் தீமையும்
எந்தை நீங்கமீண் டரசு செய்கெனச்
சிந்தை யாவதுந் தெரியக் கூறினான்.

உந்தை தீமையும் - உன் தந்தை செய்த தீங்கும், உலகு - உலகுக்கு, உருத நோய் தந்த - (இதுவரை) நேர்ந்திராத அரிய துன்பத்தைக் கொடுத்த, தீவினை தாய் - கொடுவினையையுடைய (என்) தாய் கைகேயி, செய் தீமையும் - செய்த தீங்கும், நீங்க - நீங்குமாறு, எந்தை மீண்டு அரசு செய்க - எம் தந்தையாகிய நீ (நாட்டுக்கு) மீண்டு வந்து அரசாட்சி செய்வாயாக, என - என்று, சிந்தை யாவதும் தெரிய - தன் மனக்கருத்து முழுதும் (அங்குள்ளார் அனைவருக்கும்) தெரியுமாறு, கூறினான் - எடுத்துச் சொன்னான் (பரதன்).

'தந்தை உன்னைக் காட்டுக்கு அனுப்பி, அதனால் தானும் இறந்து உலகமும் துன்புறச் செய்தமையால், அவன் தீமை செய்தவனாகின்றான்; அதற்குக் காரணமானவள் என் தாயாதலால் அவளைப் பற்றிச் சொல்லவேண்டியதில்லை; எனவே, நீ நாட்டுக்குத் திரும்பி வந்து அரசை மேற்கொண்டு ஆளுதலே முறையாகும்' என்று தன் கருத்தைத் தெளிவாகக் கூறி முடித்தான் பரதன். 'பரதன் எனக்கு மகனல்லன்' என்று கூறி அவனைத் துறந்துவிட்டமையாலும், தகாத முறையில் அரசைக் கைக்கொள்ள வகைசெய்து அதனால் பழிக்கு ஆளாக்கினமையாலும், வெறுப்பால் 'உந்தை' என்றான். இனி எனக்குத் தந்தை நீயே என்பான் 'எந்தை' என இராமபிரானைக் கூறினான்.

(பி - ம்.) 1. திமை மூவுலகு.
2. தரைசெய்திமையும்.
3. திரமீண்டு, திரவீண்டு, எந்தை நீங்கநோன்பிபற்றுவன்னெனச்.
4. சிந்தை செய்வதும்; தெரியச் செப்பினான். (103)

இராமன் கூறுதல்

1173. சொற்ற வாசகத் துணிவு ணர்ந்தபின்
இற்ற தோவிவன் மனமென் றெண்ணுவான்
வெற்றி வீரயான் விளம்பக் கேளென
முற்ற நோக்கினான் மொழிதன் மேயினான்.

முற்ற நோக்கினான் - எல்லாவற்றையும் உணர்ந்த இராமபிரான், சொற்ற வாசகம் துணிவு உணர்ந்தபின் - பரதன் சொன்ன வார்த்தைகளின் உறுதியை உணர்ந்த பிறகு, இவன் மனம் இற்றதோ என்று எண்ணுவான் - இவன் சிந்தனை இத்தகையதோ என்று நினைத்தவனாகி, (பரதனை நோக்கி), வெற்றி வீர - வெற்றியை உடைய வீரனே, யான்

விளம்ப கேள் எனு - நான் சொல்ல அதைக் கேட்பாயாகவென்று, மொழிதல் மேயினுன் - சொல்லத் தொடங்கினுன்.

இற்றதோ - இவ்வளவுதானு என்பது பழைய வசனம்.

இராமபிரான் பரதனுக்கு நீதி கூறியவை அடுத்த பாடல் முதல் ஏழு பாடல்களிற் கூறப்படும்.

(பி - ம்.) 1. வாசகத்துணிபு.
2. மனமென்றுன்னுவான், அறிவென்றெண்ணுவான்.
3. வீரநான்.
4. முற்றுநோக்கினுன்; மொழிதன்மேற்கொண்டான். (104)

1174. முறையும் வாய்மையு முயலு நீதியும்
அறையு மேன்மையோ டறமு மாதியாம்
துறையுள் யாவையுஞ் சுருதி நூல்விடா
இறைவ ரேவலா லியைவ காண்டியால்.

முறையும் - நன்னெறிகளும், வாய்மையும் - சத்தியமும், முயலும் நீதியும் - (யாவரும் அடைதற்கு) முயலும் நியாயங்களும், அறையும் மேன்மையோடு - (சிறப்பித்துச்) சொல்லப்படும் மேன்மையும், அறமும் ஆதி ஆம் - தருமமும் முதலான, துறையுள் யாவையும் - நல்ல வழிகளாகவுள்ள எல்லாம், சுருதி நூல் விடா - வேத சாத்திரங்கள் கூறும் முறைகளைக் கைவிடாத, இறைவர் ஏவலால் - அரசர்களுடைய கட்டளையாலே, இயைவ - (உலகத்தில்) பொருந்துவனவாகும்; காண்டி - (இதனை நீ) அறிவாய். ஆல் : அசை.

பழைய வசனத்தில், 'இறைவர் - மகரிஷிகளான பிராமணர்' என்று காணப்படுகிறது. எல்லா நலனும் இறைவர் ஏவலால் இயைவன என்று இராமபிரான் கூறத்தொடங்கியது, அத்தகைய இறைவனுன நம் சக்கரவர்த்தியின் ஏவலை நான் மேற்கொண்டேன் என்பதை உணர்த்தற் பொருட்டாகும். இதுமுதல் ஏழு பாடல்களால் இராமபிரான் பரதனுக்கு உணர்த்தியன கூறப்படும்.

(பி - ம்.) 1. முறையின்வாய்மையும்; முயலுந் தூய்மையும்.
2. அறையுமெய்மையோடு; நீதியாம், ஞானமும், வேள்வியும் அறமுநீதியும், அறையுநீதியும்.
3. துறையும்யாவையும்; நூல்விடாது.
4. இறைவனேவலால்; இயைவகாணையா, தானையா, இயைவதாமையா, இயைவதாணையால். (105)

## பெற்றோரின் மேன்மையை விளக்குதல்

1175. பரவு கேள்வியும் பழுதின் ஞானமும்
விரவு சீலமும் வினையின் மேன்மையும்
உரவி லோய்தொழற் குரிய தேவரும்
குரவ ரேயெனப் பெரிது கோடியால்.

உரம் வில்லோய் - வலிய வில்லை உடையவனே, பரவு கேள்வியும் - புகழப்படுகிற நூற் கேள்வியறிவும், பழுது இல் ஞானமும் - குற்றம் இல்லாத ஞானமும், விரவு சீலமும் - (யாவர்க்கும்) பொருந்திய நல்லொழுக்கமும், வினையின் மேன்மையும் - செயல்களின் உயர்வும் (செயல் தூய்மையும்), தொழற்கு உரிய தேவரும் - வணங்குதற்குரிய கடவுளரும், குரவரே என - பெரியோர்களே என்று, பெரிது கோடி - மிகவும் (மனத்துட்) கொள்வாயாக. ஆல் : அசை.

கேள்வி முதலிய எல்லாம் குரவரே என்றது, அவை எல்லாம் குரவரால் உண்டாவன என்றபடி; அதனால் அவர்கள் தேவரைப் போலத் தொழுதற்கு உரியவர் என்பான், 'தேவரும் குரவரே' என்றான்; ''அரச னுவாத்தியான் தாய்தந்தை தம்முன், நிகரில் குரவ ரிவரிவரைத், தேவரைப் போலத் தொழுதெழுக'' (ஆசாரக்கோவை). இவ்வைம் பெருங் குரவருள், 'அரசன், தந்தை' என்ற இருவரு மாகின்றான் தசதரன்.

ஒரு பிரதியில் இப்பாடல் இல்லை.

(பி - ம்.) 1. உலகின் ஞானமும், பகருஞானமும்.
2. வினையுமேன்மையும், வினையுமெய்மையும், வினையுமேன்மையும், வினைவு மேன்மையும். (106)

1176. அந்த நற்பெருங் குரவ ராரெனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினால்
தந்தை தாயரென் றிவர்க டாமலால்
எந்தை கூறவே றெவரு மில்லையால்.

அந்த நல் பெரும் குரவர் ஆர் என - அந்த நல்ல பெருமையை யுடைய பெரியோர் யாவரென்று, சிந்தை தேர்வு உற - மனம் தெளிவுற, தெரிய நோக்கினால் - நன்கு எண்ணிப் பார்த்தால், எந்தை - என் அப்பனே, தந்தை தாயர் என்ற இவர்கள் தாம் அல்லால் - தந்தையும் தாயுமாகிய இவர்களையன்றி, கூற - (சிறப்பாக எடுத்துச்) சொல்வதற்கு, வேறு எவரும் இல்லை —, ஆல் : அசை.

'எல்லாம் குரவரே' என முன் கூறிய இராமபிரான், அக் குரவருள் முதற்கண் வைத்து எண்ணத்தக்கவர் தந்தை தாயரே என்கின்றான். அந்த என்றது, முன்பாடலிற் கூறியதனைச் சுட்டியது. என்றிவர்கள் : தொகுத்தல் விகாரம். பரதனை எந்தை என்றது அன்பினால்; எந்தை : அண்மை விளி.

(பி - ம்.) 1. அந்தமில்பெருங். குரவராரெனிற்; குரவர் யாரெனிற்.
2. நேர்வுறத்; நோக்கினர், எண்ணினால்.
3. அவர்கடாமலால்.
4. கூறவேறையம், கூறவேதெய்வம், கூறவேறியைவது, கூறில் வேறெவரும்; இல்லையே. (107)

1177. தாய்வ ரங்கொளத் தந்தை யேவலால்
மேய நங்குலத் தரும மேவினேன்
நீவ ரங்கொளத் தீர்த னீர்மையோ
ஆய்வ ரும்புலத் தறிவு மேவினாய்.

ஆய்வு அரும் புலத்து அறிவு மேவினாய் - ஆராய்தற்கரிய நூல்களில் அறிவு மிக்கவனே, தாய் வரம் கொள்ள தாய் வரமாகப் பெற்றுக்கொள்ள, தந்தை ஏவலால் - (அதன்படி) தந்தை கட்டளை இட்டதனால், மேய - (நமக்குப்) பொருந்திய, நம் குலம் தருமம் மேவினேன் - நம் குல தருமத்தை விரும்பி மேற்கொண்டேன்; நீ வரம் கொள - நீ (என்பால்) வரம்போல வேண்டுதலால், தீர்தல் நீர்மையோ - (நான் மேற்கொண்டதனை) விடுதல் முறையாகுமோ? (ஆகாது).

பரதன் வேத சாத்திரங்களின் நீதிகளெல்லாம் அறிந்தவன் என்பான், 'ஆய்வரும் புலத்தறிவு மேவினாய்' என்று விளித்து, 'அத்தகைய நீ, நான் மேற்கொண்ட தருமத்தைக் கைவிடுமாறு கூறுவது தகாது' என்கின்றான். புலம் - அறிவு நூல்கள்; "புலந் தொகுத் தோனே" (தொல். பாயிரம்). "மறையவை யியம்பற் பாலன், பணைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே" என (1113) முன்னர் இலக்குவனுக்குக் கூறியதும் இங்கு நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. தாதையேவலால்,
2. மேவருங்குலத், மேவவெங்குலத்; தருமமெய்தினேன்.
3. தவிர்தல், தாழ்தல், தேர்தல்; நீர்மையே, நீதியோ, நேர்மையோ.
4. மேயினாய். (108)

புதல்வர் பெற்றோர்க்குச் செய்யும் உதவியைக் கூறல்

1178. தனைய ராயினார் தந்தை தாயரை
வினையி னல்லதோ ரிசையை வேய்தலோ
நினைத லோவிடா நெடிய வன்பழி
புனைத லோவையா புதல்வ ராதரான்.

ஐயா - ஐயனே, தனையர் ஆயினார் - (பெற்றோர்க்குப்) புதல்வராகத் தோன்றியவர்கள், புதல்வர் ஆதல் - புதல்வர் என்ற பெயருக்கு உரியவராதல், வினையின் - (தம்) செயல்களால், தந்தை தாயரை - தந்தையையும் தாயையும், நல்லது ஓர் இசையை வேய்தலோ - சிறந்ததொரு புகழைத் தரிக்கச் செய்தலோ, (அன்றி) நினைதல் ஓவிடா - நினைத்தல் ஓயாத (என்றும் மறையாத), நெடிய வன் பழி புனைதலோ - நெடிய வலிய பழியைச் சூடச் செய்தலோ? (நீயே நினைத்துப் பார்).

தான் : அசை.

தான் தந்தை சொல்லைத் தட்டியிருந்தால், தந்தைக்குளதாகும் பழி இன்னதென்பதை அடுத்துக் கூறுகின்றான்.

(பி - ம்.) 1. தாதை; தாயர்தம்.
2. வினையநல்லதொல், வினையினல்லதொல்; இசைமைமேவலோ, இசையவெய்தலோ, இசையை யெய்தலோ, மேவவைத்தலோ, விசையவெய்தவே, விரும்பிமேவலோ, விளம்பிமேவலோ.
3. நினையவோவிடா, நினையலாவிடர், நினைதலோவிட, நினையலோ விடா.
4. புனைவதோவைய; புதல்வராதலே, புதல்வராயினர். (109)

தசரதன் நரகமுறத் தான் ஆளுதல் தகாது என்றல்

1179. இம்மை பொய்யுரைத் திவறி யெந்தையார்
அம்மை வெம்மைசேர் நரக மாளயான்
கொம்மை நன்னிதிக் குவையில் வைகிவாழ்
செம்மை சேர்நிலத் தரசு செய்வதோ.

இவறி - (நான்) இராச்சிய ஆசை கொள்வதனால், எந்தையார் - என் தந்தையார், இம்மை பொய் உரைத்து - இம்மையில் (கைகேயிக் குக் கொடுத்த வரத்தை நிறைவேற்றாது) பொய் சொன்னவராகி, அம்மை - மறுமையில், வெம்மை சேர் நரகம் ஆள - கொடுமையை யுடைய நரகத்தை அடைய, யான்—, கொம்மை - திரண்ட, நல்நிதி குவையில் வைகி வாழ் - நல்ல செல்வக் குவியலில் தங்கி வாழ்வதற் குரிய, செம்மை சேர் — இன்பம் அமைந்த, நிலத்து அரசு செய்வதோ - நாடாட்சியைச் செய்வதோ? (அது முறையாகுமோ?)

புதல்வர் கடமை முந்திய பாடலிற் கூறப்பெற்றது. 'நான் தந்தை சொல்லை மீறியிருந்தால், அவர் பொய்த்த பாவத்துக்குள்ளாகி, அதனால் இம்மையில் பழியையும், மறுமையில் நரகத்தையும் அடையக் காரணனாவேன். அது தகுமா? அது புதல்வன் கடமையாகுமா?' என்கின்றான். கைகேயி வரம் பெற்றவுடன், பரதன் நாடாள, நீ பதினான்காண்டுகள் காடாளவேண்டுமென்பது மன்னவன் கட்டளை' என்று அவள் இராமபிரானுக்குக் கூறியபோது, "மன்னவன் பணி யன்றாகில் நும்பணி மறுப்பனோ ..கானம் இன்றே போகின்றேன், விடையும் கொண்டேன்" (295)என்று அவளுக்கு இசைவு கூறினவன், அதன்படி நடவாவிடின் இராமனும் பொய்யுரைத்தவனாதலால், 'பொய்யுரைத்து' என்பதனை, அவனுக்கு ஏற்றி உரைத்தலுமாம். இவறல் - உலோபித்தல். இவறி - இவற.

(பி - ம்.) 1. இம்மைமெய்யுரை தவறி.
2. வெய்யசேர்; ஆளநான், ஆள்கநான், ஆள்வதோ.
3. கொம்மை வெம்முலைக் குவையின்,நன்னிதிக்குவையின்; வைகவாழ்.
4. செம்மைநேர்நிலத்து, செம்மைசேர் நலத்து, செம்மை சேர்நிலா; செய்வெனோ, செய்வனோ. (110)

### 'அரசு நின்னதே நீயே ஆள்க' என்றல்

1180. வரனி லுந்தைசொன் மரபி னுலுடைத்
தரணி நின்னதென் றியைந்த தன்மையால்
உரனி னீபிறந் துரிமை யாதலால்
அரசு நின்னதே யாள்க வென்னவே.

வரன் நில் - (கைகேயிக்குக் கொடுத்த) வரத்தில் ஊன்றி நின்ற, உந்தை சொல் மரபினுல் - உன் தந்தை சொல்லிய முறைப்படி, உடை(ய) தரணி - அவனுடையதான இராச்சியம், நின்னது என்று - உன்னுடையதேயென்று, இயைந்த தன்மையால் - பொருந்திய தன்மையினுலும், நீ உரனில் பிறந்து - நீ (அரசாளுதற்கேற்ற) வலிமையோடு பிறந்து, உரிமை ஆதலால் - உரிமை பெற்றுள்ளதனுலும், அரசு நின்னதே - இராச்சியம் உன்னுடையதேயாகும்; ஆள்க - (அதனை நீ மறுக்காது) ஆள்வாயாக, என்னவே - என்று இராமபிரான் கூறி முடிக்கவே.

இது மேல் இரண்டு கவிகளோடு தொடர்ந்து முடியும். 1174 முதல் இதுகாறும் ஏழு கவிகளால் இராமபிரான், தான் கொண்ட விரதம் தவறுதல் கூடாதென்பதையும், அரசாளுதற்கு உரியவன் பரதனே யென்பதையும் காரணங் காட்டிக் கூறினமை பெறப்பட்டது. 'நீ பிறந்துரிமையாதலால்' என்றது, கைகேயியைத் தயரதன் மணந்தபோது, அவளுக்குப் பிறக்கும் மகனுக்கு அரசு தருவதாக அவன் கேகயராசனுக்கு வாக்களித்தானென்று வான்மீகம் 107-ஆம் சர்க்கத்தில் காணப்படும் செய்தியை உட்கொண்டு கூறியதென்பாரும் உளர்.

இப் பாடல் மூன்று பிரதிகளில் கீழ்வருமாறு காண்கின்றது:

"வானி னுந்தைசொன் மரபி னுலுடைத்
தான நின்னதென் றியைந்த தன்மையால்
ஊனி னிற்பிறந் துரிமை யாகையின்
யான தாள்கிலே னெனவ வன்சொல்வான்."

(பி - ம்.) 1. வரனினுந்தை, வரனுளுந்தை, வரத்தினுலுடைத்.
2. தரணி தன்னதென்று; இசைந்த தன்மையான்.
3. உரனினிற்பிறந்து, உரனினிற்பின் வந்து, உரனினேன் பிறந்து, உரிமையாகலால், ஆகையால், உண்மையின்.
4. ஆள்தியைய நீ. (111)

### பரதன் வேண்டுதல்

1181. முன்னர் வந்துதித் துலக மூன்றிலும்
நின்னை யொப்பிலா நீபி றந்தபார்
என்ன தாகின்யா னின்று தந்தனென்
மன்ன போந்துநீ மகுடஞ் சூடென.

முன்னர் வந்து உதித்து - (எனக்கு) முன்னே (மூத்தவனாக) வந்து பிறந்து, உலகம் மூன்றிலும் - மூவுலகங்களிலும், நின்னை ஒப்பு இலா நீ - உன்னையொப்பார் ஒருவரும் இல்லாது விளங்கும் நீ, பிறந்த பார் - பிறந்ததனால் பெற்ற இராச்சியம், என்னது ஆகின் - (நீ சொல்லுகிறபடி) என்னுடையதானால், இன்று தந்தனென் - இப்போது (நான் அதனை உனக்குக்) கொடுத்துவிட்டேன்; மன்ன - அரசே, நீ போந்து மகுடம் சூடு - நீ (நாட்டுக்கு) வந்து முடி சூடிக்கொள்வாயாக, எனா - என்று சொல்லி.

இது அடுத்த பாட்டின் இறுதியில் வரும் வேண்டினான் என்பதனோடு முடியும். இராமபிரான் எவ்வளவு மறுத்தாலும், உண்மையில் அரசாளும் உரிமை அவனுடையதே என்பது பரதனுடைய தீர்ந்த துணிபாகலின், 'மன்ன, நீ போந்து மகுடம் சூடு' என்கின்றான்.

(பி - ம்). 1. மூன்றினும், மூன்றினில்,
2. நீபிடித்த.
3. என்னதாக்கினலின்று. ஆக்கினனின்று, என்னதாகநானின்று, ஆகவியாளின்று, ஆகில்நானின்று, என்னதாகலின்றுயானிற்கு, என்னதாகியானுனக்கின்று; ஈந்தனன்.
4. போந்தினி, போதிநீ, போகுதி; சூடென்றான். (112)

1182. மலங்கி வையகம் வருந்தி வைகநீ
உலங்கொ டோளுனக் குறுவ செய்தியோ
கலங்கு றுவணங் காத்தி போந்தெனப்
பொலங்கு லாவுதாள் பூண்டு வேண்டினான்.

வையகம் - உலகம் முழுதும், மலங்கி வருந்தி வைக - மனங் கலங்கி வருத்தமுற்றிருக்க, நீ—, உலம் கொள் தோள் உனக்கு உறுவ- திரண்ட கல்லின் தன்மையைக் கொண்ட தோள்களையுடைய உனக்குப் பொருத்தமானவற்றை, செய்தியோ - செய்துகொண்டிருப் பாயோ? (அவ்வாறிருத்தல் கூடாது); கலங்கு உரு வண்ணம் - (உலகம்) கலக்கம் அடையாதவாறு, போந்து – (நாட்டுக்குத் திரும்பி) வந்து, காத்தி - பாதுகாப்பாயாக, எனா - என்று, பொலம் குலாவு தாள் பூண்டு - (இராமபிரானுடைய) அழகு விளங்கும் திருவடிகளைப் பற்றிக்கொண்டு, வேண்டினான் —.

'உன் சொற்படி நாடு என்னுடையதானாலும், நான் அதனை உனக்குத் தருகின்றேன்; நீதான் வந்து முடிசூடவேண்டும்' என்றவன், மீண்டும் அதனை வற்புறுத்தி, 'நாடு அரசனின்றித் தவித்தலால், நீ வந்து முடிசூடி நாட்டைக் காப்பது நின் கடமையே' என்கின்றான். 'உனக்குறுவ செய்தியே' என்றது, உனக்குப் பொருத்தமாகத் தோன்றுமவற்றை உலகம் அவ்வாறு கொள்

ளாது என்ற குறிப்பையுடையது. பொலம் குலாவு - பொன் போல விளங்குகின்ற எனலுமாம். கலங்கு: முதனிலைத் தொழிற் பெயர். ''நீயொழி காலை நின்னுடெல்லாம், தாயொழி குழவி போலக் கூஉம்'' (மணி - 25 : 110 -11) என்பதை இங்கே ஒப்பு நோக்குக.

(பி - ம்.) 1. வருந்த வைகனீ, வைகினீ, ஐயநீ.
2. உலங்கு தோளுனக்கு, இலங்குதோளுனக்கு; மூ. நலங்கொணற்ற வஞ் செயநயப்பதோ.
3. கலங்குருவகை; போங்தெனப், போதெனப்.
4. பொலன்குலாவுதாள். (113)

இராமபிரான் மறுத்துரைத்தல்

1183. பசைந்த சிந்தைநீ பரிவில் வையமென்
வசஞ்செய் தாலது முறைமை யோவசைக்
கசைந்த வெந்தையா ரருள வன்றுநான்
இசைந்த வாண்டெலா மின்றொ டேறுமோ.

(இராமன் பரதனை நோக்கி), பசைந்த சிந்தை நீ - (என்பால்) அன்புகொண்ட மனமுடைய நீ, பரிவில் - அந்த அன்பு காரணமாக, வையம் என் வசம் செய்தால் - நாட்டை என் வசமாக்கினால், அது முறைமையோ - அது நியாயமாகுமோ? வசைக்கு அசைந்த - பழிக்கு அஞ்சிய, எந்தையார் அருள - என் தந்தையார் கட்டளையிட, அன்று நான் இசைந்த ஆண்டு எல்லாம் - அன்று நான் (வனத்தில் இருப்ப தாக) ஒப்புக்கொண்ட ஆண்டுகளெல்லாம், இன்றொடு ஏறுமோ - இன்றோடு முடிந்துவிடுமோ?

'உன் விருப்பத்தின்படி, இன்று நான் நாட்டுக்குத் திரும்பினால், நான் அன்று ஒப்புக்கொண்ட வனவாச காலமான பதினான்காண்டு களும் இன்றோடு முடிந்துவிடுமோ?' என்றதனால், அக்கால முடிவுவரை நான் மீளேன் என்பதாயிற்று.

(பி - ம்.) 1. பசந்த; பரிவின் வம்மென.
2. முறைமையே.
3. அசந்த; அருளவென்று, அருளவந்து, அருளாண்டு. அருளவேண்டி.
4. இசைந்த காளெலாம்; இன்றொடானதோ, இன்றொடொன்றுமோ, இன்று தேயுமோ. (114)

1184. வாய்மை யென்னுமீ தன்றி வையகம்
தூய்மை வேறுமுண் டென்று சொல்லுமோ
தீமை தானதிற் றீர்த லன்றியே
ஆய்மெய் யாகவே றறைய லாவதே.

வாய்மை என்னும் ஈது அன்றி - சத்தியமென்று சொல்லப்படும் இதனையன்றி, தூய்மை வேறும் உண்டு என்று - தூய்மை

யுடையது வேறொன்றும் உண்டு என்று, வையகம் சொல்லுமோ - உயர்ந்தோர் சொல்லுவார்களோ? அதில் தீர்தல் தீமைதான் - அவ்வாய்மையினின்றுந் தவறுதல் தீமையே யாகும்; அன்றி - அவ்வாறன்றி, வேறு அறையல் ஆவதே - வேறு வகையாகச் சொல்லலாகுமோ? (ஆகாது;) மெய்யாக ஆய் - (இதனை) உண்மையாக ஆராய்ந்து பார்.

'வாய்மை காத்தலினும் சிறந்தது வேறில்லையென்பது உனக்குத் தெரியாததன்று; அதனை நீ நன்கு சிந்தித்துப் பார்' என்கின்றான். "யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும், வாய்மையி னல்ல பிற" (300), "அகந்தூய்மை வாய்மையாற் காணப்படும்" (298) என்ற குறட்பாக்களின் கருத்து இப் பாடலில் அமைந்துள்ளமை காண்க.

(பி ௳ ம்.) 1. தூய்மையென்னு மொன்றுண்மை, அன்றி வேறொன்று, வேறு மோருண்மை.
3. தீர்தலின்றியே, தீர்வதன்றியே, தெரியலன்றியே, தீதிலின்றியே.
4. ஆய்மெய்யாகவென்று, மெய்யாகவொன்று, மெய்யாதலென்று; அறையலாவதோ, எண்ணலாவதே, எண்ணம் யாவதோ, மு. ஆமெய்யாகவே றெண்ணலாகுமோ. (115)

'என் ஆணையால் நீ ஆள்க' என்று இராமன் கூறுதல்

1185. எந்தை யேவவாண் டேழொ டேழெனு
வந்த கால நான் வனத்துள் வைகநீ
தந்த பாரகந் தன்னை மெய்ம்மையால்
அந்த நாளெலா மாளென் னாணையால்.

எந்தை ஏவ - என் தந்தை கட்டளையிட, ஏழொடு ஏழ் எனு வந்த ஆண்டு காலம் - ஏழோடு ஏழு (பதினான்கு) என்று வந்த வருடங்கள் முழுதும், நான் வனத்துள் வைக - நான் காட்டில் வாழ, நீ—, அந்த நாள் எலாம் - அந்தக் காலம் முழுதும், தந்த பார் அகம் தன்னை - (தந்தை உனக்குக்) கொடுத்த நாட்டை, என் ஆணையால் - என் கட்டளையின்படி, மெய்ம்மையால் ஆள் - உண்மையாக ஆளக் கடவாய்.

'தந்தையார், பதினான்காண்டுகள் காட்டில் வாழும்படி எனக்குக் கட்டளை தந்து, அந்தக் காலம்வரை நாட்டை ஆளும்படி அதனை உனக்குத் தந்தார்; எனக்குத் தந்த கட்டளையை நான் நிறைவேற்றுவதுபோல, உனக்குத் தந்த நாடாட்சியை நீ மேற்கொள்ளுதலே முறையாகும்; அதனை நீயாக வேண்டாவிடினும், இப்போது என் கட்டளையால் அதனை மேற்கொள்' என்றான் இராமபிரான். தந்தை என்பது வருவித்து உரைக்கப்பெற்றது. நீ தந்த பாரகம் எனக் கூட்டி, நீ எனக்குக் கொடுத்த நாடு என்று உரைத்தலுமாம்.

(பி - ம்.) 1. ஏவயாண்டு, ஏயவாண்டு; ஏமொடேமென்று.
2. வந்தகாலநாள்; வனத்து; வைககான்.
3. தாங்கமெய்ம்மையால், மேன்மையால், தாங்கல் மெய்ம்மையால், தாங்குமெய்ம்மையால்.
4. தாங்கென்னுணையால். (116)

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

1186. மன்னவ னிருக்க வேயு மணியணி மகுடஞ் சூடு
கென்னயா னியைந்த தன்னு னேயது மறுக்க வஞ்சி
அன்னது நினைந்து நீயென் னுணையை மறுக்க லாமோ
சொன்னது செய்தி யைய துயருழந் தயர லென்றான்.

ஐய - என் ஐயனே, மன்னவன் இருக்கவேயும் - சக்கரவர்த்தி (உயிரோடு) இருக்கும்போதே, மணி அணி மகுடம் சூடுக என்ன - மணிகளால் அழகு செய்யப்பெற்ற முடியை நீ தரிக்க என்று (என்னைச்) சொல்ல, யான் இயைந்தது - நான் அதற்கு உடன்பட்டது, அன்னுன் ஏயது மறுக்க அஞ்சி - அவர் ஏவியதை மறுத்தற்கு அஞ்சியே யாகும்; (அங்ஙனமாக), நீ என் ஆணையை மறுக்கல் ஆமோ - நீ என் கட்டளையை மறுப்பது தகுதியாகுமோ? (ஆகாது); அன்னது நினைந்து - அதனை நன்கு சிந்தித்து, சொன்னது செய்தி - நான் சொன்னதைச் செய்; துயர் உழந்து அயரேல் - துயரால் வருந்திச் சோராதே! என்றான் - என்று கூறி முடித்தான் (இராமபிரான்).

'தந்தை முதலில் என்னை முடி சூடுக என்றபோது, அவ்வாணையை மறுத்தற்கஞ்சி நான் அதற்கிசைந்தேனேயன்றி, அரசாளும் ஆசையா லன்று. அதுபோல, நீ தந்தையாகக் கருதும் என் கட்டளையை நீ மீறுதலும் தகாது; ஆதலால், உடனே திரும்பிச் சென்று நாடு காத்தலை மேற்கொள்' என்று உறுதியாகக் கூறினன் இராமபிரான். பரதன் இராமபிரானைத் தந்தையாகக் கருதினமை: 853, 1172-பார்க்க. தந்தை முடி சூடுக என்றதற்கு, இராமபிரான் இசைந்தமை : 70, பார்க்க.

(பி - ம்.) 1. இருக்கவே நீ, இருக்கும்போது; மகுட நீ சூ (டு).
2. யானிசைந்தது, நானியைந்து, அன்னுனேவிய; மு. என்னயானிசைந் தேன் பின்னுமது மறுத்தவன் சொல்லேவேல்.
3. அன்னது நினைந்தே, நினைத்தி, தெரிந்தாய்.
4. செய்தியையா, புரிதியைய; துயருழன்று அயரேல். (117)

வசிட்டன் கூறத் தொடங்கல்

1187. ஒள்ளியோ னினைய வெல்லா முரைத்தலு முரைக்கலுற்ற
பள்ளநீர் வெள்ள மன்ன பரதனை விலக்கிப் பண்டு
தெள்ளிய குலத்தோர் செய்கை சிக்கறச் சிந்தைநோக்கி
வள்ளியோய் கேட்டி யென்னு வசிட்டமா முனிவன் கூறும்.

ஒள்ளியோன் - ஒளியையுடைய இராமபிரான், இனைய எல்லாம் உரைத்தலும் - இத்தகைய நியாயங்களையெல்லாம் எடுத்துச் சொன்ன அளவில், உரைக்கல் உற்ற - (அவனுக்கு மறுமொழி) கூறத் தொடங்கின, பள்ளம் நீர் வெள்ளம் அன்ன - பள்ளத்திற் பாயும் நீர்ப் பெருக்கைப் போன்ற (விரைதலையுடைய), பரதனை —, வசிட்ட மாமுனிவன் விலக்கி - பெருமை மிக்க வசிட்ட முனிவன் தடுத்து, (இராமபிரானை நோக்கி), வள்ளியோய் - வண்மைக் குணம் உடைய வனே, பண்டு - முன்பு இருந்த, தெள்ளிய குலத்தோர் செய்கை - (எவற்றிலும்) தெளிவுடைய (உன்) குல முன்னோரின் செயல்களை, சிக்கு அற - சிக்கலின்றி, சிந்தை நோக்கி - உன் மனத்துட்கொண்டு, கேட்டி என்னு - (நான் சொல்வதைக்) கேட்பாயாக என்று, கூறும் - சொல்லலானான்.

தன் கருத்து நிறைவேருதது கண்ட பரதன், இராமபிரானுக்கு மேலும் ஏதோ கூற விரைந்தமையை வசிட்ட முனிவன் பார்த்து, அவனை விலக்கி, தன் சொல்லுக்கு இராமன் ஒருகால் இணங்குதல் கூடுமென்ற நோக்கத்தோடு அவனுக்குச் சொல்லலானான். முனிவன் கூறுவன மேல் ஆறு பாடல்களில் வரும். தன் கருத்துக்கு இராமபிரானை இணங்கச் செய்தலில் பரதனுக்கு இருந்த பேராவல் கருதி, 'பள்ள நீர் வெள்ளமன்ன பரதன்' என்ருர். இராமபிரானுக்கு வடிவு, அறிவு, குணம், புகழ் ஆகிய எல்லாவற்ருலும் ஒளி இயைவது. வள்ளியோய், சிந்தை நோக்கிக் கேட்டி என இயைக்க; முனிவன் சிந்தையில் நோக்கி எனலுமாம்.

(பி - ம்.) 1. உரைக்கலும், உரைக்கலுற்றே, இசைக்கலுற்ற, இசையலுற்ற.
2. வேலையன்ன.
3. தெள்ளியகுலத்துச், தெள்ளியநலத்தோர்; சிக்கெனச்சிந்தை; சிக்குறத்தெருட்டிச் சிந்தை.
4. கேட்டி என்று சொன்னன், சொல்வான். (118)

பூமியின் தோற்றம்

(கலிவிருத்தம்)

1188. கிளரகன் புனலினின் றரியொர் கேழலாய்
இளையெனுந் திருவினை யேந்தி னைரோ
உளைவரும் பெருமையோ ரெயிற்றி னுட்புரை
வளரிளம் பிறையிடை மறுவிற் ருேன்றவே.

அரி - திருமால், ஓர் கேழல் ஆய் - ஒப்பற்ற ஆதிவராக மூர்த்தி யாகி, உளைவு அரும் பெருமை - (தாங்குதலில்) வருத்தமில்லாத பெருமையுடைய, ஓர் எயிற்றின் உள்புரை - (தனது) ஒரு கோரப் பல்லின் (வளைவான) உள்ளிடத்தில், வளர் இளம்பிறை இடை மறுவில் தோன்ற - வளரும் பிறைச் சந்திரனிடத்துள்ள (சிறு) களங்கம்போலக்

காணும்படி, இளை எனும் திருவினை - இளை என்னும் பெயருடைய பூமி தேவியை, கிளர் அகன் புனலில் நின்று - பொங்குகிற பரந்த கடலினின்றும், ஏந்தினன் - (எடுத்துத்) தாங்கி நின்றான்.

அரோ: அசை.

இப்பொழுது நடக்கிற சுவேதவராக கல்பத்துக்கு முந்தியதான பாத்ம கல்பத்தின் முடிவில், எங்கும் பரந்த பிரளய வெள்ளத்தினின்று பூமிதேவியைத் திருமால் வராக மூர்த்தியாகித் தனதொரு கோட்டால் எடுத்து எளிதில் தாங்கி வெளிக் கொணர்ந்தானென்ற புராணவரலாறு இதிற் குறிக்கப்பெற்றது. வான்மீகம், 110-ஆம் சருக்கத்தும் காண்க. "நிறக்குஞ் செழுஞ்சுடர்க் கோடுமிப் பாரு நிசாமுகத்துச், சிறக்கும் பிறையுங் களங்கமும் போலும்" (திருவரங்கத்துமாலை, 128). உளைவு - வருத்தம்; சிரமம்.

ஒரு பிரதியில் இச் செய்யுள்,

"கிளரகன் புனலினவ் வரியொர் கேழலாய்
இளையெனுந் திருவினே டிசைந்தங் கீறிலா
வளரிளம் பிறையென வயங்கெ யிற்றினல்
உளபெரும் புவனங்க ளுதவி யும்பரான்"

என்று காணப்படுகின்றது.

(பி. ம.) 1. புனலினின்று; புனலிலினீண்டு; கேழலால்.
2. ஏந்தியெய்தினன்.
3. உளையரும், உளருறும்; உட்பொறை, உட்புரை.
4. வளரிளம் பிடியிடை. (119)

திருமால் பிரளயத்தில் யோக நித்திரை கொண்டது

1189. ஆதிய வமைதியி னிறுதி யைப்பெரும்
பூதமும் வெளியொழித் தெவையும் புக்கபின்
நாதனவ் வகன்புன னல்கி நண்ணரும்
சோதியாந் தன்மையிற் றுயிறன் மேயினன்.

ஆதிய அமைதியின் இறுதி - முன்பு நடந்ததான அந்தக் கல்பத்தின் முடிவில், ஐம் பெரும் பூதமும் - பஞ்சமகா பூதங்களும், வெளி ஒழித்து - வெளிப்படுதலின்றி, எவையும் - எல்லாத் தத்துவங்களும், புக்கபின் - (இறைவனை தன் வடிவினுள்ளே) புகுந்து அடங்கியபின், (இலயமான பிறகு), நாதன் - இறைவனை திருமால், அவ் அகன் புனல் நல்கி - அந்தப் பரந்த நீரைப் படைத்து, நண்ண அரும் சோதி ஆம் தன்மையின் - (பிறர்க்குப்) பொருந்துதற்கரிய ஒளிவடிவான தன்மையோடு, துயிறல் மேயினன் - (அந்நீரில்) அறிதுயில் கொள்ளுதலைப் பொருந்தினன்.

ஐம்பெரும் பூதமாகிற தத்துவங்கள் முதலில் தோன்றும்போது, ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து அப்புவும், அப்புவிலிருந்து பிருதிவியும் முறையே தோன்றுமெனவும், ஒடுங்கும்போது அவை முறையே பிருதிவியிலிருந்து ஒன்றினுளொன்று ஒடுங்க, இறுதியில் எல்லாம் பரம புருஷனான நாராயணனுள் அடங்குமெனவும், அப்போது நாராயணன் தன்னுள் அடங்கிய எல்லாவற்றோடும் சிறு குழவியாய்த் தான் படைத்துக் கொண்ட பிரளய வெள்ளத்தில் ஓர் ஆலிலையின்மேல் அறிதுயிலமர்வான் எனவும் கூறுவர்.

(பி - ம்.) 1. ஆதியவமைதியின், ஆதியினமைதியின்.
2. வெளியொழிந்து, வெளியொளித்து, அவையொழிந்து.
3. நாதனிவ்; நண்ணி.
4. சோதியான்றன்மையின், சோதியாந்தவையின். (120)

நான்முகனைப் படைத்தது

1190. ஏற்றவித் தன்மையி னமரர்க் கின்னமு
தூற்றுமக் கடவுட னுந்தி யுந்திய
நூற்றிதழ்க் கமலத்தி னெய்தின் யாவையும்
தோற்றுவித் துதவிட முதல்வன் றோன்றினான்.

ஏற்றஇ தன்மையின் - (அறிதுயிலை) ஏற்றுக்கொண்ட இத்தன்மையினையுடைய, அமரர்க்கு இன் அமுது ஊற்றும் அ கடவுள் தன் - தேவர்களுக்கு இனிய அமிழ்தத்தை (மோகினியாகி) வார்த்த அந்த நாராயணனுடைய, உந்தி உந்திய - கொப்பூழானது தோற்றுவித்த, நூறு இதழ் கமலத்தின் - நூறு இதழ்களையுடைய தாமரை மலரில், யாவையும் - (அண்ட சராசரங்கள்) எல்லாவற்றையும், நொய்தின் தோற்றுவித்து உதவிட - எளிதில் படைத்து உதவும் பொருட்டு, முதல்வன் தோன்றினான் - (படைப்புக்கு) முதல்வனான பிரமன் தோன்றினான்.

நாராயணனது சங்கற்பத்தால் இவையெல்லாம் நிகழ்கின்றன என்றவாறு. நூற்றிதழ்க் கமலம்: "நூற்றிதழ்த் தாமரைப்பூ". (ஐங். 20); "சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ், நூற்றித ழலரி னிரைகண் டன்ன" (புறநா. 27 : 1 - 2); "தன்னிகர் பரிதி யாலுஞ் சதவித ழாலுஞ் செம்பொற், கன்னிகை யாலுஞ் சோதி கலந்தசெங் கமலம் போன்றாள்" (வி. பா. சம்பவச். 81).

(பி - ம்.) 1. தன்மையால், தன்மையான், தன்மையன்.
2. ஊற்றுடைக்; கடல்வணன், கமலவன்.
4. தோற்றுவித்துதவிய; முனிவன். (121)

**இராமனுடைய முன்னோர் எவரும் குலமுறை தவிரவில்லை எனல்**

1191. அன்றவ னுலகினை யளிக்க வாகிய
துன்றனிக் குலமுத லுள்ள வேந்தர்கள்
இன்றள வினுமுறை யிகந்து ளாரிலை
ஒன்றுள துரையின முணரக் கேட்டியால்.

அன்று - அக்காலத்தில், அவன் - அப்பிரமன், உலகினை அளிக்க-உலகத்தைப் படைக்கத் தொடங்க, ஆகியது - (அப்போதே) உண்டானது, உன் தனி குலம் - உன்னுடையதான ஒப்பற்ற (சூரிய) குலமாகும்; முதல் உள்ள வேந்தர்கள் - (இக்குலத்தில்) அது முதலாகத் தோன்றியுள்ள அரசர்களுள், முறை இகந்து உள்ளார் - (மூத்தவனே முடிசூடுதல் என்ற) முறையைக் கடந்தவர்கள், இன்று அளவினும் இலை - இற்றைநாள்வரையில் (ஒருவரும்) இல்லை; இன்னம் உரை ஒன்று உளது - இன்னமும் (நான்) சொல்ல வேண்டியதொன்று உண்டு; உணர கேட்டி - மனத்திற் பொருந்தக் கேட்பாயாக. ஆல் : அசை.

சூரியகுலத்தின் தோற்றத்தை, "ஆதிமாலமல னுபிகமலத் தய னுதித் தயன்மரீசியெனு மண்ணலை யளித்த பரிசுங், காதல் கூர்தரு மரீசிமக னுகிவளருங்காசி பன்கதி ரருக்கனை யளித்த பரிசும்" (தா. 186) எனக் கலிங்கத்துப்பரணி கூறுதலும் காண்க.

(பி - ம்.) 1. ஆக்கிய, ஆக்கியது.
2. உன்றனிக் குலத்தினில்,
3. இன்றளவினமுறை; இகழ்ந்துள்ளோர்.
4. ஒன்றுளதின்னமும், ஒன்றுளதினமுறை; உணர்த்தக், உரைக்கக், உரைப்பக், (122)

**ஆசாரியனே குரவரில் சிறந்தோன் என்றல்**

1192. இதவிய லியற்றிய குரவர் யாரினும்
மதவியல் களிற்றினுய் மறுவில் விஞ்சைகள்
பதவிய விருமையும் பயக்கப் பண்பினல்
உதவிய வொருவனே யுயரு மென்பரால்.

மத இயல் களிற்றினுய் - வலிமைமிக்க ஆண் யானை போன்ற இராமா, இதம் இயல் இயற்றிய - நன்மையான செயல்களைச் செய்கிற, குரவர் யாரினும் - பெரியோரனைவருள்ளும், பதவிய இருமையும் பயக்க - பதவிகளான (இம்மை மறுமை யென்ற) இரண்டின் நற்பயன்களையும் தருமாறு, மறு இல் - குற்றமில்லாத, விஞ்சைகள் உதவிய ஒருவனே - வித்தைகளை அளித்த (ஆசாரியனுகிற) ஒருவனே, உயரும் என்பர் - (மற்றவரினும்) உயர்ந்தவன் என்பர் பெரியோர். ஆல் : அசை.

குரவர் - ஐம்பெருங்குரவர்; 1175 - பார்க்க. குரவருட் சிறந்தோர் தந்தையும் தாயும் என முன்பு இராமபிரான் கூறியதனை (1176) மறுத்து, ஆசாரியனே சிறந்தவன் என்று வலியுறுத்துகின்றான் வசிட்டன். மத - வலிமை; உரிச்சொல்.

(பி. ம்.) 1. இதவியவியற்றிய; குரவராயினும்,
2. மதவிய; சிந்தைகள்.
3. பதவியல்; பண்டுதான், பண்டுநான், பண்டைநான். (123)

நாட்டை ஆள்க என்றல்

1193. என்றலால் யானுனை யெடுத்து விஞ்சைகள்
ஒன்றலா தனபல வுதவிற் றுண்மையால்
அன்றென தின்றென தாணை யையநீ
நன்றுபோந் தளியுனக் குரிய நாடென்றான்.

என்றலால் -(குரவர் யாரினும் குருவே சிறந்தவன்) என்பதனாலும், யான் உனை எடுத்து - நான் உன்னை (இளமை முதலே) எடுத்து வளர்த்து,ஒன்று அல்லாதன பல விஞ்சைகள் - மிகப் பல வித்தைகளை, உதவிற்று உண்மையால் - அளித்திருப்பதனாலும், ஐய - ஐயனே, நீ—, இன்று எனது ஆணை - இப்போது என்னுடைய கட்டளையை, அன்று எனாது - மறுக்காமல், போந்து - (நாட்டுக்கு) வந்து, உனக்கு உரிய நாடு - உனக்கு உரிமையான இராச்சியத்தை, நன்று அளி - நன்கு காப்பாயாக, என்றான் —.

என்றலால் என்றது முந்திய பாட்டை அநுவதித்தது.

(பி. ம்.) 1. எடுத்தவிஞ்சைகள்.
2. உண்மையாம்,
3. அன்றெனதின்றெனது.
4. நன்று போந்தருளுனக்கு, போந்தளித்திநிற்கு, நன்றிபோந்தளியுனக்கு, நின்று போந்தளியுனக்கு, இன்று போந்தருளுனக்கு. (124)

இராமன் வசிட்டனுக்கு மறுமொழி கூறுதல்

1194. கூறிய முனிவனைக் குவிந்த தாமரை
சீறிய கைகளாற் றொழுது செங்கணான்
ஆறிய சிந்தனை யறிஞ வொன்றுரை
கூறுவ துளதெனக் கூறன் மேயினான்.

கூறிய முனிவனை - (முன் கண்டவாறு) எடுத்துச் சொன்ன வசிட்ட முனிவனை, செங்கணான் - இராமபிரான், குவிந்த தாமரை சீறிய கைகளால் - குவிந்த தாமரை மலரை(த் தன் அழகால்) வென்ற கைகளால், தொழுது - அஞ்சலி செய்து, ஆறிய சிந்தனை அறிஞ - அடங்கிய மனமுடைய அறிவாற் பெரியோய், ஒன்று உரை - (என் மனத்துக்குப்) பொருந்திய வார்த்தையை, கூறுவது உளது - நான்

சொல்ல வேண்டுவதுள்ளது, என - என்று, கூறல் மேயினன்-சொல்லத் தொடங்கினன்.

இராமபிரான் இயல்பாகவே செந்தாமரையிதழ் போலும் கண்களுடையவனாதலால் 'செங்கணான்' எனப்படுவான். இங்கே அது வசிட்ட முனிவன் சொல்லாற் சிறிது சினங் கொண்டமையையுங் குறிப்பதான நயம்பட அமைந்தது. அஞ்சலியாகக் குவித்த கைகளாகலின், 'குவிந்த தாமரை சிறிய கைகள்' என்றார். சீறுதல் - நீ எனக் கொப்பாகாய் என்று கடிதல். குருவையும் மீறியே இங்கே தன் கொள்கையை நிலை நிறுத்துகின்றான் இராமபிரான்.

இவ்விடத்தில், ஜாபாலி என்ற முனிவன் நாத்திக வாதம் பேசி இராமபிரானை நாடாளும்படி கூற, அவன்பால் மிக்க சினங்கொண்ட அண்ணலை வசிட்ட முனிவன் சாந்தப்படுத்தி, ஆசாரிய வசனத்தின் பெருமையை எடுத்துக்கூறித் தன் உரையின்படி வந்து அரசாளச் சொன்னதாகவும், அப்போது, உலகத்தின் உற்பத்தி, சூரிய வமிச வரலாறு முதலியவற்றைக் கூறியதாகவும் வான்மீகம் (சருக்கம், 110) கூறுகின்றது.

(பி - ம்.) 1. கூறின,
2. சீறின.
3. ஆறின என்னுரை, வேற்றுரை, அறிவவேறுரை, அறியவேறுள, அறிகவொன்றுரை.
4. கூறுவதிதுவெனக், கூறுவதெனகனி. (125)

1195. சான்றவ ராகதன் குரவ ராகதாய்
போன்றவ ராகபொற் புதல்வ ராகதான்
தேன்றரு மலருளான் சிறுவ செய்வெனென்
றேன்றபி னவ்வுரை மறுக்கு மீட்டதோ.

தேன் தரு - தேனைச் சிந்துகிற, மலர் உளான் சிறுவ - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் புதல்வனே, சான்றவர் ஆக - சால்புடைய பெரியோராகட்டும், தன் குரவர் ஆக - தன் ஆசிரியராகட்டும், தாய் போன்றவர் ஆக - (முன்னறி தெய்வமான) தாய் போன்ற சிறப்புடையவராகட்டும், பொன் புதல்வர் ஆக - பொன்போன்ற புதல்வராகட்டும், தான் செய்வென் என்று ஏன்றபின் - தான் (ஒன்றைச்) செய்வேன் என்று ஒருவன் மேற்கொண்டபின், அ உரை - (மேற்கொண்டதான) அச்சொல், மறுக்கும் ஈட்டதோ - மறுக்கும் தகுதி உடையதாகுமோ? (ஆகாது).

நேர்மையானதொன்றை நான் செய்வேன் என்று ஒருவன் பிரதிக்கினை பண்ணிய பின், அதனை மீறுதல் அவனுக்கும் தகாது; எத்துணைப் பெரியவர் ஆயினும், உரிமை உடையவர் ஆயினும் அவனை மீறச் சொல்லுதலும் தகாது என்றபடி. 'சிறுவ' என்றது,

வசிட்டனும் இந்த விஷயத்தில் சிறிது சிறுமையுற்ருன் என்ற குறிப்பு என்பாரும் உளர். குரவருட் சிறந்தோன் ஆசிரியனே என்ற வசிட்ட முனிவர் வார்த்தைக்கியைய, குரவர் என்றது இங்கே ஆசிரியரைக் குறித்ததெனவும், 'தாய் போன்றவர்' என்றது மற்ற நால்வரையும் குறித்ததெனவும் கொள்க. பொற் புதல்வர்: ''பொன்போற் புதல்வர்ப் பெருஅ தீரும்'' (புறநா. 9 : 4).

(பி - ம்.) 1. தன்குரவர் தந்தை, நன்குரவராக.
2. மெய்ப்புதல்வராக, மெய்ப்புலவராக, பொய்ப்புலையராக, ஓர் புலவராகத்.
3. மலருளோன்; செய்வனென்று, செய்குவன்.
4. ஈட்டதே, ஈடதோ. (126)

1196. தாய்பணித் துவந்தன தந்தை செய்கென
ஏயவெப் பொருள்களு மிறைஞ்சி மேற்கொளாத்
தீயவப் புலையனிற் செய்கை தேர்கிலா
நாயெனத் திரிவது நல்ல தல்லதோ.

தாய் உவந்து பணித்தன - தாய் விரும்பிக் கட்டளை இட்டனவும், தந்தை செய்க என ஏய - தந்தை செய் என்று ஏவினவும் (ஆன), எ பொருள்களும் - எந்தச் செயல்களையும், இறைஞ்சி மேல் கொள்ளா(த) - பணிந்து ஏற்றுக் கொள்ளாத, அ தீய புலையனின் - அத்தகைய கொடிய புலையனாக (ஒருவன்) இருத்தலினும், செய்கை தேர்கிலா - செய்யத்தக்கதை அறியமாட்டாத, நாய் என திரிவது - நாயாகப் பிறந்து அலைவது, நல்லது அல்லதோ - நல்லதன்ருே?

'பெற்ருேர் ஏவியது எதுவாயினும், நல்லதன்ருயினும், அதனைப் பணிந்து சிரமேற் கொண்டு செய்வதே ஆறறிவு படைத்த மானிடன் கடமையாகும்; அது செய்யாதவன் நல்லறிவற்ற புலையனேயாவன்; 'பகுத்துணர்விருந்தும் கடமையைச் செய்யாத அக்கீழ்மகனைவிட, பகுத்துணர்வில்லாத நாய்ப் பிறப்பே மேலானது' என்று, தான் கடமையில் ஊன்றி நிற்றலைக் குறிக்கின்ருன். 'பணித்து வந்தன' என்றதை, 'உவந்து பணித்தன' என்று மாறியும், விகுதி பிரித்துக் கூட்டியும் உரைகூறலாயிற்று. செய்கென: தொகுத்தல் விகாரம். பொருள் - செயல்.

(பி - ம்.) 1. பணித்துவந்தது, உரைத்ததும்; செய்கென, சொன்னதும்.
2. ஏயவப்பொருள்களும், மேய நற்பொருள்களும்.
3. புலையரிற், செய்கைதேர்கிலார், தேர்கலா, செவ்விபொய்ச்சிறு செவ்வியோய்.
4. நல்லதாகுமே, நல்லதாகுமோ, தவத்தினன்றரோ. (127)

1197. முன்னுறப் பணித்தவர் மொழியை யானென
சென்னியிற் கொண்டது செய்வெ னென்றதன்
பின்னுறப் பணித்தனை பெருமை யோயெனக்
கென்னினிச் செய்வகை யுரைசெ யீங்கென்ருன்.

முன்னுற பணித்தவர் மொழியை - முன்னதாக (எனக்குக்) கட்டளை இட்ட பெற்றோருடைய வார்த்தைகளை, யான் என சென்னியில் கொண்டு - நான் என்னுடைய சிரசின்மேல் ஏற்றுக் கொண்டு, அது செய்வென் என்றதன் பின்னுற - அதைச் செய்வேன் என்று ஒப்புக்கொண்டதன் பின்னாக, பணித்தனை - (நீ வேறு வகையாகக்) கட்டளையிட்டாய்; பெருமையோய் - பெருமை உடையவனே, எனக்கு- (இந்நிலையில் உள்ள) எனக்கு, இனி செய்வகை என் - இனிச் செய்யத்தக்கது யாது? ஈங்கு உரை செய் - இப்போது (நீயே அதனைச்) சொல்வாயாக, என்றான்—.

'இப்போது செய்யத் தக்கதை நீயே சொல்' என்று கேட்கு முகத்தால், 'முதலில் மேற்கொண்டதைக் கைவிடுதல் தக்கதன்று' என்ற தன் கொள்கையை உறுதியாக்குகின்றான் இராமபிரான். பின், உறப் பணித்தனை என்றியைத்து, பின்னே, (அரசாளுகையில்) பொருந்தப் பணிக்கின்றாய் என உரைத்தலுமாம்.

(பி - ம்.) 1. பிணித்தவர்; மொழிய யானது,
2. கொண்டனன்; செய்வன், செய்வல்; என்றபின்.
3. பின்னுமப் பணிதனைப்; பெருமையோவெனக்.
4. செய்வதை, செய்வதினின்று, செய்வதென்று, செய்வதொன்று.
(128)

பரதன் தானும் காட்டிலேயே இருப்பதாகக் கூறல்

1198. முனிவனு முரைப்பதோர் முறைமை கண்டிலெம்
இனியென விருந்தன னிளைய மைந்தனும்
அனையதே லாள்பவ ராள்க நாடுநான்
பனிபடர் காடுடன் படர்தன் மெய்யென்றான்.

முனிவனும் - (இராமபிரான் உரை கேட்ட) வசிட்ட முனிவனும், இனி - இனிமேலே, உரைப்பது ஓர் முறைமை கண்டிலெம் என - சொல்லத்தக்கதொரு நீதியைக் காணோம் என்று, இருந்தனன் - வாளா இருந்தானாக, இளைய மைந்தனும் - இளையவனான பரதனும், அனையதேல் - அப்படியானால், நாடு - நாட்டை, ஆள்பவர் ஆள்க - ஆள்பவர் ஆளட்டும், நான்—, பனி படர் காடு - நடுக்கம் மிக்க காட்டில், உடன் படர்தல் மெய் - இராமனுடன் செல்லுதல் உண்மை, என்றான் - என்று (உறுதியாகச்) சொன்னான்.

இராமபிரானைத் தன் கொள்கையினின்றும் நழுவச் செய்தல் வசிட்டனாலும் ஆகாமையின் பரதன், 'நாடு எங்ஙனமாயினுமாகுக; நான் இராமனுடன் காட்டிற்கே செல்வேன்' என்று தன் துணிபைக் கூறினான். பனி - அச்சமும் ஆம்.

(பி - ம்.) 1. முனியவன; கண்டிலம், கண்டிலன்.
2. இனிதென.
3. அனையதேழாண்டிரண்டு; ஆள்கநாடுதான், நாடெனு.
4. பனிபடு; காட்டுடன். காடுநான். (129)

### தேவர்கள் வந்து கூறுதல்

1199. அவ்வழி யிமையவ ரறிந்து கூடினர்
இவ்வழி யிராமனை யிவன்கொண் டேகுமேற்
செவ்வழித் தன்றுநஞ் செயலென் றெண்ணினர்
கவ்வையர் விசும்பிடைக் கழறி னரரோ.

அவ்வழி - அப்போது, இமையவர் - தேவர்கள், அறிந்து - (இங்கே நடந்தவற்றை எல்லாம்) அறிந்து, இ வழி - இப்போது, இராமனை இவன் கொண்டு ஏகுமேல் - இராமனை இப்பரதன் (நாடாள) அழைத்துச் செல்வானாகில், நம் செயல் - நம்முடைய காரியம், செம்மை வழித்து அன்று என்று எண்ணினர் - நேராக நடைபெறுவ தன்று என்றெண்ணி, கவ்வையர் - கவலையுற்றவர்களாய், விசும்பிடை கூடினர் - ஆகாயத்திலே (தம்முட்) கூடி, கழறினர் - கட்டுரை சொல்லலானார்கள். அரோ : அசை.

தேவர்கள் கூறியது அடுத்த பாடலில் வரும். 'நம் செயல்' என்றது, இராவணன் அழிவால் தாம் அடைய இருக்கும் நன்மையை. இராமபிரான் அதற்கெனவே அவதரித்தவனாதலால், அவனை நாட்டுக்குத் திரும்பவிடுதல் தம் காரியத்துக்கு இடையூறாகுமே என்று கவலையுற்றுக் கூறலானார். முன்பு தேவர்கள் சூழ்ச்சியினால் கைகேயி கூனியின் வசப்பட்டு மனம் திரிந்தமை 174-5-ஆம் பாடல்களிற் காண்க.

கூடினர், எண்ணினர், கவ்வையர் : முற்றெச்சங்கள்.

(பா ம்.) 1. அறியக்கூடினர்,
2. இவன்கொண்டேகினல்,
4. கழறன்மேயினர். (130)

1200. ஏத்தரும் பெருங்குணத் திராம னிவ்வழிப்
போத்தருந் தாதைசொற் புரக்கும் பூட்சியான்
ஆத்தவாண் டேழினோ டேழு மந்நிலம்
காத்தலுன் கடனிவை கடமை யென்றனர்.

(ஆகாயத்தில் கூடின தேவர்கள்), ஏத்த அரும் பெரும் குணத்து இராமன் - புகழ்தற்கரிய பெருங் குணங்களை உடைய இராமன், தாதை சொல் புரக்கும் பூட்சியான் - தந்தையின் சொல்லைக் காக்கும் உறுதியுடையவனாய்,இ வழி போதரும் - இப்போது செல்லும் வழியிலே போதல் செய்வான்; ஆத்த ஆண்டு ஏழினோடு ஏழும் - (அவன் காடாளவும், நீ நாடாளவும்) நியமித்த பதினான்கு ஆண்டுகளும், அ நிலம் காத்தல் - அந்த நாட்டைக் காத்தல், உன் கடன் - உன் பொறுப் பாகும்; இவை கடமை - இவை (முறையே உங்களிருவர்க்கும்) கடமை யாகும், என்றனர் - என்று கூறினர்கள்.

'இராமன் தான் செய்த பிரதிக்ஞையைக் கைவிடுதலும், நீ உனக்குரிய நாடாட்சியை மறுத்தலும் தருமமன்று; ஆதலால், நீவிர் இருவீரும் உங்களுக்குரிய கடமைகளைத் தவுருது செய்தலே முறை' என்றனர் தேவர். போதரும் எனற்பாலது, போத்தரும் என எதுகை நோக்கி விகாரப்பட்டது. ஆத்த - யாத்த; கட்டிய; நியமித்த.

இவ்விடத்து வான்மீகம் கூறுவது: இராமன் எவ்வகையிலும் இணங்காதது கண்ட பரதன், 'இராமன் நாடாள இணங்கும் வரையில் நான் இப்பன்னசாலையின் முன் தருப்பையைப் பரப்பி அதன்மேற் கிடந்து உண்ணுவிரதம் இருப்பேன்' என்று சொல்லி, தருப்பையைப் பரப்புமாறு சுமந்திரனுக்குச் சொல்ல, அவன் சோர்ந்து நின்றது கண்டு, தானே தருப்பையைக் கொணர்ந்து பரப்பி அதன்மீது படுத்தான். அப்போது இராமன் அவனைத் தடுத்து, 'இவ்வாறு நோன்பு கிடத்தல் அந்தணருக்கன்றி ஏனையோர்க்கு உரியதன்று; நீ இது செய்தல் கூடாது' என, பரதன் அங்கிருந்தோரை இராமனிடம் தனக்காகப் பரிந்து பேசும்படி வேண்ட, அவர்கள் இராமனது விரதத்தை ஒருவராலும் தடுக்க முடியாதென்றனராக, 'அவர்கள் நியாயத்தையே கூறுகின்றனர்; நீ அரசாள இணங்கவே வேண்டும்' என இராமன் மீண்டும் பரதனுக்குக் கூறவும், அவன் இணங்காமல், 'வனவாசம் செய்தற்குரியவன் நானே' என்றான். இவற்றை எல்லாம் அங்கே கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து கூடி நின்ற சித்தர், தேவரிஷிகள் முதலாயினோர் கண்டு மயிர் சிலிர்த்து, இராவண வதத்தையும் மனத்துட்கொண்டு, அவர்கள் முன் தோன்றிப் பரதனை நோக்கி, 'நீ இராமன் மொழிப்படி செய்து தந்தையைச் சத்தியம் தவுருதவனுக்குக' என்று சொல்லிச் சென்றனர்.

(பி - ம்.) 1. அவ்வழி.
2. போய்த்தரும், பூத்தரும்; பூட்சியின்.
3. ஆத்தயாண்டு, ஆர்த்தவாண்டு.
4. காத்தனின்; கடனிது; கடமைத்தென்றனர். (131)

இராமன் பரதனை அரசாளும்படி கூறுதல்

1201. வானவ ருரைத்தலு மறுக்கற் பாலதன்
றியானுனை யிரந்தனெ னினியெ னாணையால்
ஆனதோ ரமைதியி னளித்தி பாரெனத்
தானவன் றுணைமலர்த் தடக்கை பற்றினான்.

வானவர் உரைத்தலும் - தேவர்கள் (இவ்வாறு) கூறியவுடன், (இராமபிரான் பரதனை நோக்கி), மறுக்கல் பாலது அன்று - (தேவர் கட்டளை) மறுக்கத் தக்கதன்று; யான் உனை இரந்தனென் - நானும் உன்னை வேண்டுகின்றேன்; இனி - இப்போதாயினும், என் ஆணையால் - என் கட்டளைப்படி, ஆனது ஓர் அமைதியின் - நியமித்ததான கால

வரையறையளவும், பார் அளித்தி - நாட்டைக் காப்பாயாக, எனு - என்று சொல்லி, தான் - இராமபிரான், அவன் - அப்பரதனுடைய, துணை மலர் தட கை பற்றினுன் - தாமரை மலரைப் போன்ற இரண்டு பெரிய கைகளையும் பிடித்துக்கொண்டான்.

தேவர்கள் கூறியவுடன், இராமபிரான் பரதனுடைய கைகளைப் பிடித்துக்கொண்டு, 'தேவவாக்கியம் நம் இருவராலும் தள்ளத்தக்க தன்று; ஆதலால் நானும் உன்னை வேண்டுகிறேன்; இனியேனும், என் கட்டளைப்படி நீ திரும்பிச் சென்று நாட்டை முறைப்படி காப்பாயாக' என்று குறையிரந்து கூறினுன். பெரியோனுதலால் இராமபிரான் பரதன் கையைப்பற்றி வேண்டினுன்.

இப்பாடல் ஒரு சுவடியில் இல்லை.

(பி - ம்.) 1. உரைத்தது.
2. யானினே; இரந்தனனீயென், இனிதென்.
3. அளித்தியாலெனத்.
4. தானவன் நறுமலர்த். (132)

### பரதன் செய்த பிரதிஞ்ஞை

1202. ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ
நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலம்
கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரிச்
சாமிது சரதநின் னுணை சாற்றினேன்.

ஆம் எனில் - அங்ஙனமாயின், ஐய - ஐயனே, நீ—, ஏழ் இரண்டு ஆண்டில் - பதினுன்கு ஆண்டு எல்லை (சிறிதும்) கடவாமல், நாமம் நீர் நெடு நகர் நண்ணி - (பகைவர்க்கு) அச்சந் தரும் அகழிநீர் சூழ்ந்த பெரிய அயோத்தி நகரை அடைந்து, நால் நிலம் - பூமியை, கோமுறை புரிகிலை என்னின் - அரசாட்சி செய்யத் தவறினையெனின், கூர் எரி சாம் இது சரதம் - (நான்) மிக்க தீயில் விழுந்து சாகும் இது நிச்சயம்; நின் ஆணை சாற்றினேன் - உன்மேல் ஆணையிட்டுச் சொன்னேன்.

இது, 'என்பது சொல்லிய பரதன்' என வரும் அடுத்த பாடலின் முதலோடு தொடரும். பதினுன்கு ஆண்டு முடிவுக்கு மேல், ஒரு நாள் கூடத் தாழ்த்தலாகாது என்பது பரதன் கருத்து.

முந்திய பாடல் இல்லாத ஒரு சுவடியில், இப்பாடலும் இல்லை.

(பி - ம்.) 1. ஆமெனின்.
2. நாமநீரயோத்தியை.
3. கோன்முறை; புரிகலை.
4. சாமது. (133)

### இராமன் பரதனுடைய பிரதிஞ்ஞைக்கு உடன்படல்

1203. என்பது சொல்லிய பரதன் யாதுமோர்
துன்பில னவனது துணிவை நோக்கினான்
அன்பினி னுருகின னன்ன தாகென்றான்
தன்புகழ் தன்னினும் பெரிய தன்மையான்.

என்பது சொல்லிய பரதன் - என்ற இதனைச் சொன்ன பரதன், யாதும் ஓர் துன்பு இலன் அவனது துணிவை - துன்பம் சிறிதும் இல்லாதவனான அவ்விராமபிரான் கூறும் முடிவை, நோக்கினான் - எதிர்பார்த்து நின்றான்; தன் புகழ் தன்னினும் - தனது கீர்த்தியினும், பெரிய தன்மையான் - மிகச் சிறந்த குணங்களையுடைய இராமபிரான், அன்பினின் - (பரதன்பால் உண்டான) பேரன்பினால், உருகினன் - மன முருகி, அன்னது ஆக என்றான் - அப்படியே ஆகட்டும் என்றான்.

'என்பது' என்றது, முன்பாட்டிற் கூறிய செய்தியை. இராம பிரான், தன் விரதத்துக்கும் தந்தை சொல்லுக்கும் பங்கம் நேராதவாறு பரதனை இணங்குவித்தலில் துன்புற்றவன் இப்போது பரதன் ஒருவாறு இணங்கியதனால், அத்துன்பமிலனானான். 'துணிவை' என்றது, தன் வார்த்தைக்கு இராமபிரான் கூறும் முடிவான விடையை என்றபடி. 'அன்னது ஆக' என்றது, 'உன் விருப்பத்தின்படி நான் அக்கால எல்லைக்குமேல் சிறிதும் தாழாது வந்து சேருவேன்' என்பது குறித்தது. ஈற்றடி, இராமபிரானுடைய விசேட குணங்கள், எவ்வளவு புகழ்ந்தாலும் அதனுள் அடங்கா என்ற கருத் துடையது.

(பி - ம்.) 1. என்பன சொல்லிய.
2. துன்பிலனன்னது, துன்பிலனன்னவன், துன்பிலாமென்னவன்.
3. அன்பின னுருகினன், அன்பினினுருகினான்; அன்னதாமென்றான், அழுதுசோர்கின்றான், சோர்ந்தனன்.
4. தன்புகழதனினும். (134)

### இராமனுடைய பாதுகைகளைப் பரதன் பெற்றுக்கொள்ளுதல்

1204 விம்மினன் பரதனும் வேறு செய்வதொன்
றின்மையி னரிதென வெண்ணி யேங்குவான்
செம்மனின் றிருவடித் தலந்தந் தீகென
எம்மையுந் தருவன விரண்டு நல்கினான்.

('அன்னதாக' என்று இராமபிரான் கூறியது கேட்ட) பரதனும்—, செய்வது வேறு ஒன்று இன்மையின் - (அப்போது) செய்யத்தக்கது வேறொன்றும் இல்லாமையால், அரிது என எண்ணி - (இராமபிரானைப் பிரிந்து போய் அரசாளுதல்) கடினமென்று கருதி, விம்மினன் ஏங்குவான் - அழுது ஏங்குகின்றவனாய் (இராமபிரானை நோக்கி),

செம்மல் - பெரியோய், நின் திருவடி தலம் தந்தீக என - உன் திருவடி நிலைகளைத் தந்தருள்க என்று வேண்ட, (இராமபிரான்), எம்மையும் தருவன இரண்டும் - இம்மை மறுமையென்னும் இரண்டின் நற்பயன் களையும் தரவல்ல திருவடி நிலைகள் இரண்டையும், நல்கினன் - (பரதனுக்குக்) கொடுத்தான்.

பரதன் இராமபிரானுடைய திருவடி நிலைகளை வேண்டிப் பெற்றுக் கொண்டதன் நோக்கம் பின்பு புலப்படும். 'சுவாமீ, பொன்னால் அலங்கரிக்கப்பெற்ற பாதுகைகளில் ஏறியருள்வீராக. இவை எல்லா உலகங்களின் யோக க்ஷேமங்களையும் நடத்தவல்லவை' என்று சொல்லிப் பாதுகைகளை முன் வைக்க, இராமபிரான் பாதுகைகளில் ஏறி இறங்கி அவற்றைப் பரதனுக்கு அளித்தானென்று வான்மீகத்திற் கூறப்படுகின்றது. விம்மினன், ஏங்குவான்: முற்றெச்சம். செம்மல்: அண்மை விளி. தந்தீக - தருக.

(பி - ம்.) 2. இன்மையதரிதென, இம்மையினரிதென, இம்முறையிலதென; ஏங்கினன்.
3. செம்மையின், செம்மறன். (135)

பாதுகைகளுடன் பரதன் நாடு திரும்புதல்

1205. அடித்தல மிரண்டையு மழுத கண்ணினன்
முடித்தல மிவையென முறையிற் சூடினன்
படித்தலத் திறைஞ்சினன் பரதன் போயினன்
பொடித்தல மிலங்குறு பொலங்கொண் மேனியான்.

அழுத கண்ணினன் - அழுத கண்களையுடையவனும், பொடி தலம் இலங்கு உறு பொலம் கொள் மேனியான் - புழுதி தன்னிடம் (படிந்து) விளங்கும் அழகைக் கொண்ட திருமேனியுடையவனுமான, பரதன் —, அடிதலம் இரண்டையும் - திருவடிநிலை இரண்டையும் (பெற்று), இவை முடிதலம் என - இவையே (எனக்குக்) கிரீடம் என்று சொல்லி, முறையின் - முறைப்படி, சூடினன் - (தலையில்) சூடிக் கொண்டு, படி தலத்து இறைஞ்சினன் போயினன் - தரையில் விழுந்து (இராமபிரானை) வணங்கி எழுந்து செல்லலானன்.

கண்ணினன், மேனியான் (ஆன) பரதன், சூடினன், இறைஞ் சினன், போயினன் எனக் கூட்டி முடிக்க. பரதனைக் குகன் கண்ட போதே, 'மாசடைந்த மெய்யா'னைக் கண்டான். அதற்கு முன்னும் பின்னும் பரதன் நீராடுதலும் நல்லுணவு கொள்ளுதலுமின்றியே இருந்தானாகலின், 'பொடித்தல மிலங்குறு பொலங்கொள் மேனியான்' என்றார்.

(பி - ம்.) 2. முத்தலமீமிசை; முறையிற்சூடியிப்.
3. படித்தலத்திறைஞ்சிய.
4. இலங்குறப். (136)

### முனிவர் முதலியோர் புறப்படுதல்

1206. ஈன்றவர் முதலிய வெண்ணில் சுற்றமும்
சான்றவர் குழுவொடு தவத்து ளோர்களும்
வான்றரு சேனையு மற்றுஞ் சுற்றுற
மூன்றுநூல் கிடந்ததோண் முனியும் போயினன்.

ஈன்றவர் முதலிய - பெற்ற தாய்மார் முதலான, எண் இல் சுற்றமும் — அளவற்ற சுற்றத்தாரும், சான்றவர் குழுவொடு - பெரியோர் கூட்டமும், தவத்து உள்ளோர்களும் - தவநெறியிலுள்ள முனிவர் களும், வான்தரு சேனையும் - பெருமையுடைய சேனைகளும், மற்றும் - மற்றும் உள்ள அரசர் முதலியோரும், சுற்றுஉற - சூழ்ந்துவர, மூன்று நூல் கிடந்த தோள் முனியும் - முப்புரி நூல் தங்கிய தோளையுடைய வசிட்ட முனிவனும், போயினன் - (புறப்பட்டுச்) சென்றான்.

பரதன் புறப்பட்டமையை முன்கவியிற் கூறி, உடன் வந்தவருள் முதன்மையுடையவர்கள் புறப்பட்டமையை இக் கவியாற் கூறினர்.

(பி-ம்.) 2. தவஞ்செய்மாக்களும்.
3. வான்றனிச், மான்றரு.
4. கிடக்ததொல், கடக்ததோள்; முனியுமெய்தினன். (137)

1207. பண்டைநூ றெரிபரத் துவனும் போயினன்
மண்டுநீர் நெடுநகர் மாந்தர் போயினர்
விண்டுறை தேவரும் விரைவிற் போயினர்
கொண்டற ஞணையாற் குகனும் போயினன்.

பண்டை நூல் தெரி - பழமையான வேதம் முதலிய நூல்களெல்லாம் அறிந்த, பரத்துவனும் போயினன் - பரத்துவாச முனிவனும் (புறப்பட்டுப்) போனான்; மண்டுநீர் - மிக்க (அகழி) நீர் சூழ்ந்த, நெடு நகர் மாந்தர் - பெரிய அயோத்தி நகரிலிருந்து வந்த மக்களெல்லாரும், போயினர் - போனார்கள்; விண்டு உறை தேவரும் - ஆகாயத்தில் கூடியிருந்த தேவர்களும், விரைவில் போயினர் - விரைவாக (தம்தம் இடம் நோக்கி)ப் போனார்கள்; கொண்டல் தன் ஆணையால் - காளமேகம் போன்ற இராமபிரானது கட்டளையால், குகனும் போயினன் - குகனும் திரும்பிப் போனான்.

குகனை இறுதியில் வைத்து, அவனும் இராமபிரான் கட்டளையாற் போனான் என்றதனால், அவன் விட்டுப் பிரிய மனமின்றித் தயங்கி நின்று இராமபிரான் வற்புறுத்தியதனால் திரும்பிச் சென்றான் என்பது பெறப்படும்.

விண்டு - ஆகாயம்; "விண்டு வாய்நிமிர் கிரவுஞ்சகிரி" (கந்த. தாரகன் வதைப். 2).

சில பிரதிகளில், இப் பாடலின் 3, 4-ஆம் அடிகள் முன்பின்னாக மாறிக் காண்கின்றன.

(பி - ம்.) 1. பரத்துவசன், மு. பண்டுடை நூல்தெரிபரத்துவாசனும்.
2. மண்டுநீர்நகருறை; மைந்தர்.
3. எண்டிசையரசரும், எண்டிசை வாழ்நரும், எண்டிசை வேந்தரும்; விலகிப், இரங்கிப், நெருங்கிப்.
4. கொண்டலதாணையிற். (138)

பரதன் செயல்

1208. பாதுகந் தலைக்கொடு பரதன் பைம்புனல்
மோதுகங் கையின்கரை கடந்து முந்தினன்
போதுகுங் கடிபொழி லயோத்தி புக்கிலன்
ஓதுகங் குலினெடி துறக்க நீங்கினன்.

பரதன்—, பாதுகம் தலைகொடு-(இராமபிரானுடைய) பாதுகைகளைத் தலைமேல் தாங்கிக்கொண்டு, பைம் புனல் மோது-பசுமையான (குளிர்ந்த) நீர் வந்து மோதுகிற, கங்கையின் கரை கடந்து-கங்கையாற்றின் கரையைக் கடந்து, முந்தினன்-முற்பட்டு, போது உகும்-மலர்கள் சிந்துகிற, கடி பொழில்-மணம் மிக்க சோலைகள் சூழ்ந்த, அயோத்தி புக்கிலன்-அயோத்தி நகருட் புகாதவனாய், ஓது கங்குலின் நெடிது உறக்கம் நீங்கினன்-சொல்லப்பட்ட இராப் பொழுதிலும் மிகவும் தூக்கமில்லாதவனானன்.

பரதன் நகருட் புகுந்து, அரண்மனை சேர்ந்து, அரியணையில் வீற்றிருந்து அரசாள மனங்கொண்டிலனாகலின், அதற்கு வேறு வகையைச் சிந்தித்திருந்தான் என்றவாறு. அவன் மேலே செய்தது அடுத்த பாடலில் கூறப்படும்.

(பி - ம்.) 1. தலைக்கொண்டு, தனைக்கொடு.
2. கரைகடந்து.
4. ஓதுறுமுணவினேடுறக்க நீக்கினன். (139)

1209. நந்தியம் பதியிடை நாதன் பாதுகம்
செந்தனிக் கோன்முறை செலுத்தச் சிந்தையான்
இந்தியங் களையவித் திருத்தன் மேயினன்
அந்தியும் பகலுநீ ரருத கண்ணினன்.

நந்தி அம்பதியிடை-நந்திக் கிராமம் என்னும் இடத்தில், நாதன் பாதுகம்-தலைவனான இராமபிரானுடைய பாதுகைகள், தனி செம் கோல் முறை செலுத்த-ஒப்பற்ற செங்கோலை முறையாகச் செலுத்த, (தான்) சிந்தையான்-(இராமபிரானைப்பற்றிய) எண்ணம் மேலிட்டவனாய், இந்தியங்களை அவித்து-ஐம்பொறிகளையும் அடக்கி, அந்தியும் பகலும்-இரவும் பகலுமாக, நீர் அருத கண்ணினன்-நீர்

சிந்துதலை விடாத கண்களோடு, இருத்தல் மேயினான் - (அங்கே) தங்கியிருத்தலைப் பொருந்தினான்.

அயோத்தி நகரினுட் செல்ல மனங் கொள்ளாத பரதன் அதன் அருகில் உள்ள நந்திக் கிராமம் என்னும் ஊரைச் சேர்ந்து அங்கே தக்கதோர் இடத்தில் பாதுகைகளை அரசாக இருத்தி, தான் பிரதிநிதிபோல இருந்து, இரவும் பகலும் இராமபிரானையும், அவன் திரும்பி வருவதற்குரிய நாளையும் எண்ணியெண்ணி ஏங்கி, புலனடக்கத்தோடு தவசிபோலக் காலங்கழித்தான். சிந்தையான், கண்ணினான்: முற்றெச்சம். நந்தியம்பதி என்றதில் 'அம்' சாரியை. பரதன் முதலில் அயோத்தி நகருட் புகுந்து, பரிவாரங்களை அங்கே விட்டு விட்டுப் பின்பு தான் அங்கே இருக்க மனம் பற்றாது நந்திக்கிராமம் சேர்ந்தான் என்று வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 2. கோன்மிசை; செலுத்திச். (140)

### இராமன் முதலிய மூவரும் தென்றிசைச் செல்லல்

1210. குன்றினி லிருந்தன னென்னுங் கொள்கையால்
நின்றவர் நலிவரா னேசத் தாலெனாத்
தன்றுணைத் தம்பியுந் தானுந் தையலும்
தென்றிசை நெறியினைச் சேறன் மேயினான்.

குன்றினில் இருந்தனன் என்னும் கொள்கையால் - (இராமன்) சித்திரகூட மலையில் தங்கியுள்ளான் என்ற எண்ணத்தால், நின்றவர் - (அயோத்தி நகரிலும் பிற இடங்களிலும்) உள்ளவர்கள், நேசத்தால் (என்பால் வைத்த) அன்பினால், நலிவர் எனா - (அடிக்கடி வந்து) துன்புறுத்துவர் என்று கருதி, தன் துணை தம்பியும்-தனக்கு எப் போதும் துணையாகவுள்ள தம்பி இலக்குவனும், தானும்—, தையலும் - சீதாபிராட்டியுமாக, தென் திசை நெறியினை - தெற்குத் திக்கிற் செல்லும் வழியிலே, சேறல் மேயினான் - செல்லலுற்றான் (இராமபிரான்).

இனிச் சித்திரகூட மலையில் தங்கினால், பலரும் அடிக்கடி வந்து தொந்தரவு செய்வதற்கிடமாகும் என்று கருதி, இராமபிரான், மற்ற இருவரோடும் அங்கிருந்து புறப்பட்டுத் தெற்கு நோக்கி வழிக்கொள்ளலானான். தம்பியும், தானும், தையலும் என்பன சிறப்பினால் 'மேயினான்' என்னும் ஒருமை முடிபேற்றன; தன்றுணைத் தம்பி: "தன்று ணைத்திருத் தம்பிமார்" (1164).

(பி - ம்) 2. நின்றவர் நலிவராம், நெருக்குவர், நின்றது நலிவரால், நேயத்தாலெனத்.
4. தென்றிசை நோக்கியே, தென்றிசையிராமனும் சேறன்மேயினர். (141)

திருவடிசூட்டு படலம் முற்றும்

## அயோத்தியா காண்டம் முற்றுப் பெற்றது

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

## (எண்—செய்யுள் எண்)

# அரும்பத முதலியவற்றின் அகராதி

## (எண்—பாட்டின் எண்)